உ

சிவமயம்.

# ஸிவஜ்ஞாநபோதம்

இதற்கு
சமஸ்கிருத சுலோகத்திற்கு
ப்ரம்மஸ்ரீ அவதூம்ரக்ஷேத்திரநிவாசி
விஸ்வேஸ்வர சாஸ்திரியாரவர்கள்
பதவுரையும்,
மெய்கண்டதேவர்
இயற்றிய தமிழ்ச்சூத்திரமும்,
வார்த்திகப்பொழிப்புரையும்,
பாண்டிப்பெருமாள் விருத்தியும்.

இவை
கோ-சண்முகசுந்தர முதலியாரவர்களால்
சிவஞானபோதயந்திரசாலையிற்
பதிப்பிக்கப்பட்டன.

சர்வஜித் ௵ ஆவணி ௴
சென்னை, சிந்தாதிரிப்பேட்டை.

இப்புத்தகம்-காபிரைட்-என்னும் ஸ்வதந்தரம் பெறப்பட்டது.

சிவமயம்.

# சிவஞானபோதோற்பத்தி.



உலகங்களுக்குநடுவா யிலக்ஷம்யோசனையுந்தமு முப்பத்
திராயிரம்யோசனை விஸ்தீர்ணமுமுடைத்தாய், பசும்பொன்
னிறமாயிருக்கும் மஹாமேருவினுச்சியினடுவே சோதிசிகரமெ
ன்னும் பெயரையுடைத்தாய், இருபதினாயிரம் யோசனையுந்தத்
தையும் விஸ்த்தீர்ணத்தையுமுடைத்தாய்,இரசிதம்போலும் படி
... லுநிர்மலமையாயிருக்கிற மஹாகைலாசத்தினடுவே; சுத்
... ஸ்வரூபமாகிய வடவிருக்ஷமூலத்திலே சுத்தவித்தி
... ன மந்திரசிம்மாசனத்தின்மீது பக்குவான்மாக்களு
... சசங்காரநிமித்தமாக தக்ஷணாபிமுகமாக வெழுந்தரு
... ரீ கண்டபரமேஸ்வரனை, பிரமவிஷ்ணு இந்திராதி
... ம சர்வருஷிகணங்களுஞ் சேவித்திருக்க, பரமகிரு
பாளுவான ஸ்ரீ நந்திகேஸ்வரநாயனார் சுவாமியைப் பிரதக்ஷண
க்கிர ... வாதசவாரஞ் சாஷ்டாங்கமாகநமஸ்கரித்
துக் ... கி,சுவாமீ? சர்வாநுக்கிரகார்த்தமாகத்
தக ... சாஸ்திரவியாக்கியாந முத்திராசகிதமாக
வடியேங்களுக்கு ... வப்பிரசாதித்ததால் கிருதார்த்தரானோ
ம். சிருஷ்டிகாலத்திலே சுவாமியநுக்கிரகம்பண்ணிய வேதாகம
ங்கள் வெகுவிஸ்தாரமாகையால்,அவையெல்லாமோதியுணருஞ்
சத்தியில்லாமையால், சமுத்திரகலசநியாயமாக வவரவர்களறி
ந்தமாத்திரங்கொண்டு பூர்வபக்ஷமுஞ் சித்தாந்தமுமாக வநே
கசாஸ்திரங்கள்பண்ணினார்கள்; அதனாற்சமயங்களுமநேகமா
யிற்று: அச்சந்தேகங்களெல்லா நிவிர்த்தியாகிப் பரமப்பிரயோ
சனமாகிய மோக்ஷத்தையடைவதற்கு சங்கிரகமாகவுபதேசி
க்க வேண்டுமென்று விண்ணப்பஞ்செய்த பிரஶ்னையாவன?

(க) சகத்தானது.—அநாதியோ-ஆதியோ.

(உ) சகத்து,சுவாபிகமோ - ஏதுவுள்ளதோ.

(ங) ஏதுவானது, காலகன்மாதிமாத்திரமோ - சேதநவேதுவோ.

(ச) சேதநன்றான், சமுசாரியோ - சத்தற்கற்பாந்தமுத்தனோ - அநாதிமுத்தனோ.

(ரு) அநாதிமுத்தன்றான், அநேகனோ - ஏகனோ.

(சு) அவன்றனக்குத்தான் இலக்ஷணமேது.

(எ) அந்தக்கத்தாவினுடைய சத் பாவத்திலே பிரமாணமேது.

(அ) அவன்நாமமேது.

(கூ) அப்படியொருவன்சித்தித்துள்ளளவில், சகத்து நிருபாதாநமோ - சோபாதாநமோ - சூந்நியோபாதாநமோ - பரமாணுபாதாநமோ - பிரதாநோபாதாநமோ - கேவலம் பிரமோபாதாநமோ - கேவலம் மாயோபாதாநமோ - ஈஸ்வரசத்தியதிஷ்டிதமாயோபாதாநமோ.

(க0) சகத்துற்பத்தி, சங்காதரூபமோ-ஆரம்பரூபமோ-விவர்த்தரூபமோ - பரிணாமரூபமோ - காரணசமூகரூபமோ -விர்த்திரூபமோ.

(கக) ஈஸ்வரன் சகத்சிருஷ்டியைப்பண்ணுகிறது, கன்மநிரபேக்ஷையோ - சன்மசாபேக்ஷையோ.

(கஉ) கிருத்தியம்பண்ணுவது,லீலையோ-பிரயோசநத்தையுத்தேசித்தோ.

(கங) உத்தேசம், ஸ்வப்பிரயோசநமோ - பரப்பிரயோசநமோ.

(கச) கிருத்தியங்கள் பண்ணுமிடத்து, கரணநிராபே க்ஷையோ கரணசாபேக்ஷையோ.

(கரு) கரணந்தான், தேகவியாபாரமோ - பஞ்சேந்திரியங்களோ - அந்தக்கரணங்களோ - விந்துவோ - சத்தியோ.

(கசு) சத்தியாகில், அந்தச்சத்தி அநேகையோ - ஏகையோ - சிவனுக்குச் சம்யுக்தையோ - சமவேதையோ - சடரூபையோ - சித்ரூபையோ.

(கஎ) சிவனுக்கு பின்னலக்ஷண லக்ஷியமானஜீவன், [illegible] தேகமோ - இந்திரியசமஷ்டியோ - பிராணவாயுவோ - [illegible]தக்கரணவர்க்கமோ - ஆலயவிஞ்ஞானமோ - இவைகி[illegible]மோ.

[illegible] அந்நியமாகில், சடமோ - சித்தோ - அகர்த்தாவோ - [illegible] - அணுவோ - மத்தியமபரிமாணமோ - விபுவோ.

(கக) ஆன்[illegible] ஏகனோ - அநேகனோ - கிஞ்சிஞ்ஞனோ - சர்வஞ்[illegible] பஞ்சகோற்பத்திஞானோ பாவமோ - மித்[illegible]ன்வாசனையோ - அநிர்வசநியா வித்தைக[illegible]மோ.

([illegible]) அந்த ஆணவமலம், அதிரவ்வியரூபமோ - திரவியரூபமோ.

(உக) திரவியரூபமாகில், ஜந்நியமோ - அஜந்நியமோ.

(உஉ) இந்தமலத்திற்கு மான்மாவிற்குஞ் சம்பந்தம், சமவாயமோ - சம்யோகமோ. (சையோகம்=சமயோகம்.)

(உங) இந்தமலம், பிரதிபுருஷபிந்நமோ - சர்வஜீவசாதாரணமோ - விசித்திரசத்தியுடையதோ - விசித்திரசத்தியில்லாததோ - அநித்தியமோ - நித்தியமோ.

(உச) இந்தமலத்தையுடைய ஜீவன், சுவதந்திரனே - பரதந்திரனே.

(உரு) பரதந்திரனுகில் தன்நிர்வாகமாயிருக்கிற ஈஸ்வரவியாபாரமானது, கரணுதிரூபமோ-சந்நிதிமாத்திரமோ.

(உசு) சந்நிதியாவது, சமீபமாயிருக்கையோ-சக்திசமீபமோ - காரியோன்முக்கிய விசிஷ்டசத்தியோ.

(உஎ) இப்படிச்சந்நிதிமாத்திரத்திலே ஆன்மாக்களைப்பிரேரிக்கிறஈஸ்வரன்,பிரமாணவிர்த்திப்பிரகாசியனே-ஞானசொரூபனே - சர்வப்பிரகாரத்திஞலுமதிர்ஸ்ஸியனே-சொரூபஞானப்பிரகாசனே - ஞானஸ்வரூபமாத்திரமோ-ஞானந்தஸ்வரூபியோ - விர்த்திஞானப்பிரகாசியனே- ஆன்மஸ்வரூபஞானப்பிரகாசியனே.

(உஅ) அந்தஈஸ்வரசத்பாவத்திலே, ஆகமம் பிரமாணமோ - ஆகமும் பாரிசேஷமும் பிரமாணமோ.

(உகூ) இந்தப்பிரமாணத்தினுடைய பிரமாண்ணியமானது, பரதோவா-ஸ்வதோவா.

(௩0) இந்தப்பதிக்கு, அந்நியமாகச்சொல்லப்பட்ட பசுவிற்கும் பாசத்திற்கும் இலக்ஷணமேது.

(௩க) இந்தப்பசுக்களுக்கு, மோக்ஷத்திலே சாதநமில்லையோ - உண்டோ.

(௩உ) அதுதான், கன்மமேசாதநமோ - ஞானகன்மசமுச்சயஞ்சாதநமோ கன்மவேதுவான ஞானஞ்சாதநமோ.

(௩௩) ஞானமுங்கனமமும், ஸ்வதந்திரசாதநமோ - அங்காங்கிபாவசாதநமோ.

(௩ச) கன்மஞானத்திற்கு, ஐந்நியபாத்தியோபகாரமோ - ஆராதுபகாரமோ.

(௩௫) அந்தஞானம், சிவசீவர்களுக்குப் பேதவிஷயஞான மோ - அபேதவிஷயஞானமோ - பேதாபேதவிஷயஞான மோ - தாதாத்மகஸ்வரூபமோ.

(௩௬) இந்தஞானத்திற்கு ஏதுவான சைவாகமத்திற் க திகாரி த்ரைவர்ணிகரோ - ஸ்ரீருத்திரத் துவிஜபந்துக்களோ, சாதுர்வர்ணத்தி னவர்களுமோ.

(௩௭) ஆகமாதிகாரிகள், கேவல நாலுவர்ணத்தி னவர்க ளுமோ - சமஸ்காரவிசிஷ்டரோ.

(௩௮) அந்தசமஸ்க்காரந்தான், ஸ்மார்த்தமோ - சைவ மோ.

(௩௯) சைவந்தான், சமயவிசேஷமோ-நிர்வாணதீக்ஷையோ.

(௪௦) நிர்வாணதீக்ஷயிலே, வர்ணமாத் திரத்திலே அ திகாரிகளோ - முமுக்ஷுவோ.

(௪௧) அந்த முமுக்ஷுவின் இலக்ஷணமேது.

(௪௨) தீக்ஷையைப்பண்ணு மாசாரியனிலக்ஷணமேது.

(௪௩) அந்தஆசாரியன்றான், ஜீவன்முத்தனோ-சிவனோ

(௪௪) தீக்ஷயிலே சோதிக்கப்படு மந்திர பத வர்ண புவ னதத்துவங் கலையென்னு மவைகளினுடைய சொரூபமேது.

(௪௫) இந்தஅத்வாவைச் சோதிக்குமடைவேது.

(௪௬) தீக்ஷாநந்தரம், பரமமுத்தனோ - ஜீவன்முத்த வி யவஹாரமுண்டோ.

(௪௭) ஜீவன்முத்தர்க்கு, கிஞ்சித் கிருத்திய மில்லையோ-உ ண்டோ.

(சஅ) ஜீவன்முத்தியவத்தையில், ஆகாமியமேறுமோ-று
தோ.

(சகூ) ஏறுதற் குபாயமேது.

(ரு) முத்தியானதுதான், தேக விநாசமோ-பிரகிருதிபு
ருஷவிவேகத்தைப்பண்ணிப் பிரகிருதிக்குப் புறம்பாயபுருஷமா
த்திரமாயிருக்கையோ - ஞானசத்திவிச்சேதமோ - ஆத்தியந்தி
கதுக்கவிச்சேதமோ - உலோகாக்கரத்தை யடைவதோ - நித்
தியமான ரூபத்தைப்பெறுவதோ - அணுமாதிலைப்பெறுவ
தோ - கணுதிபத்தியமோ - பாஷாணவஸ்திதமோ - அவிர்ப
சந்திய வித்தியா நிவிர்த்தியோ - சிவசாயுச்சியமோ.

(ருக) அந்தச்சிவசாயுச்சியந்தான், சிவகுணசங்கிராந்தி
யோ - சமுத்பத்தியோ - சிவசமாவேசமோ - ஆன்மாவிலேலக்ஷ
ணக்குள்ள சர்வஞ்ஞத்துவாதி அபிவியத்தியாய சிவசமமாயிரு
ப்பதோ - அகண்டாகாரசச்சிதாநந்தாத்துவய சிவாநந்யா
நுபவாத்ம சாக்ஷாத்காரமோ: என்னுமித்தியாதி சந்தேகங்க
ளெல்லாம் நிவிர்த்தியாம்படிக்கு அநுக்கிரகம்பண்ணவேணு
மென்றுவிஞ்ஞாபனம்பண்ண.

ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தி பகவான் சந்தோஷித்து, நந்திகேஸ்
வரபகவான் சிரஸ்ஸிலே ஸ்ரீ அத்தத்தை வைத்து, நீர் பண்ணி
ன பிரஸ்னை உலோகாநுக்கிரகமாச்சுது; இங்ஙனமொருவர்க்கு
ம் பிரஸ்னை பண்ணக்கூடாது.

சிருஷ்டிகாலத்திலே பரமசிவம் சதாசிவமூர்த்தியை ய
திஷ்டித்து, மஹேசகளகப்பிரகாரமென்றும் பிரதி சங்கிராப்பிர

காரமென்றும் இருவகைத்தாயருளின பிரணவாதி சிவர்கள் பத்துப்பேர்க்கும் அநாதிருத்திராதியான உருத்திரர் பதினெட்டுப்பேர்க்கும் ஆக விருபத்தெட்டுப்பேர்க்கும் காமிகாதி வாதுளாந்தமான ஆகம மிருபத்தெட்டையும் பிரதி சங்கிதாப்பிகாரமாக வருளினாலநுக்கிரகம் பண்ணினார்.

இந்த விருபத்தெட் டாகமங்களையு மஹேசப்பிரகாரமாக அநந்தேஸ்வரதேவர்க்கு அநுக்கிரகம்பண்ண, அந்தப்பிரகாரமே அநந்தேஸ்வர தேவர் நமக் கநுக்கிரகம் பண்ணினார்.

அதில * இரௌரவாகமத்திலே † பாச விமோசனப் படலத்திலே அநுஷ்டுப் சந்தசாக துவாதச சூத்திரஞ் சர்வாகம[illegible]யிருக்கும்; அதை யுமக்குபதேசம்பண்ணுகிறோம், அ[illegible] தவமுனிகணங்களிடத்திலே பக்குவமறிந்து நீரும்போ[illegible]று "ஸ்ரீ புந் நபுஞ்சகாதித்துவா" தித்தியாத் துவாதச சூத்திரத்தை[illegible]னுடைய வர்த்தத்தையு மநுக்கிரகம்பண்ண:—

* [illegible]வம் = ருருஎன்பவர்க்கு ஆதியில் உபதேசித்தருளியதால் [illegible]மெனப் பெயர் கொண்டது. இஃது வடநூற் சிவ[illegible]க உரை யச்சிட்டிருப்பதில் கூறுகின்றது.

† பாச விமோசனப்படலம் ரௌரவாகமத்தில்—எ௬—வது படலம், ௧௨ வது அத்தியாயம் - துவாசசூத்திரம் - சிவஞானபோதம்.

அந்த நந்திகேஸ்வர பகவான், சநற்குமார மகாருஷிக்கநுக்கிரகம்பண்ண, அவர் சத்தியஞான தரிசகர்க் கநுக்கிரகம்பண்ண, அவர் பரஞ்சோதி மஹாமுனிக் கநுக்கிரகம்பண்ண, அவர் கிருபாவசத்தினாலே யித்தேசத்தெழுந்தருளித் திருவெண்

ணய்நல்லூரிலே சாம்சித்தராக அவதரித்திருக்கும் மெய்கண்ட தேவ சிவாசாரியரை இந்தச் சிவஞானபோதத்தை மொழிபெயர்த்துத் தமிழாகச்செய்து பக்குவான்மாக்களுக் குபதேசியு மென்று அநுக்கிரகம்பண்ண, அவ்வாறே மொழிபெயர்த்து மு ன்னூற்பெயராகவே யுரைத்துத் தம்முடைய சிஷியர்கள்-சு-பேருக்கு மநுக்கிரகித்துத் தம்முடைய பிரதான சிஷியராகிய அருணந்திதேவ சிவாசாரியாரை யிதை விஸ்தரித் தொருகிரந்தஞ் செய்யும்படி ஆஞ்ஞாபித்தனர்.

இச்சரித்திரம், சிவஞானசித்தியாருக்கு. சிவாக்கிரயோகிகள் எழுதிய உரையிலிருப்பதை எடுத் திவ்விடம் அச்சிடுவிக்கப் பட்டது.

திருவாதவூரராகிய மாணிக்கசுவாமிகளுக்கு அநுக்கிரகம்மித்தியம் குருந்தமரத்தடியில் குருமூர்த்த ரூபமாக எழுந்தருளிய போதும் இச்சிவஞானபோதத்தையே அநுக்கிரகித்ததாக திருவாதவூர்புராணம் திருப்பெருந்துறைச்சருக்கும் ௩௰-௬௬-செய்யுள் கூறுகின்றன.

"செங்கைமீது, பொருந்துமுறும் புத்தகமே தையவென்னப் பொய்ம்மையிலாச்சிவஞான போதமென்றார்" "என்றலுமேசிவமே துஞானமேதிங் கிலங்கியிடும்போதமேதியம்புவீரே, லன்று வடநீழலில்வர்திருந்தார்நீரே யடிபேணுமுமக்கடிமையாவேனென்ன, நின்றசிவமொன்றதனைத்தேர்தன்ஞான நிகழ்போதந்தேர்ந்ததனைத் தெளிதலாமென், றென்றியநற்பொருள்வினவி நிற்பார்சிந்தை யுருகும்வகையுரைசெய்தாருவமையில்லார்" என்பதனாலுணர்க.

இந்நூற்சிவஞானபோதமொன்றே ஞானார்த்தவிளக்கத்திற்குரியதென்பதை தெள்ளிதிற்றுணியப்படும்.



உ

சிவமயம்.

# மெய்கண்டதேவர் தோற்றப் பிரபாவம்.



௧—திருப்பெண்ணாகடத்துச் சைவ வேளாளரில் அச்சுதகன் என்னும் ஒருவர் மிகுந்த நற்குண நற்செய்கை யுடையராய் ...சாதுரந்தரராய்த் திருவெண்காட்டுச்சிவாலயத்தி லெழுந்...யிருக்கும் சிவபிரானுக்கு வந்தனை வழிபாடுசெய்பவரா யிருந்தனர்.

அவர் "பெறுமவற்றுள் யாமறிவ தில்லை அறிவறிந்த மக்கட்பேறல்லபிற" என்ற சிந்தையையுடையராய்த் தனக்குப் புத்திரப்பேற்றைவிரும்பி தனக்கான்மார்த்தமாயுள்ள சுவேதவனம் என்னும் திருவெண்காட்டில் பிரம்மவித்தியாநாயகி சமேத சுவேதாரணியேசுரரை வழிபட்டுத் திருஞானசம்பந்த சுவாமிகளாலியற்றிய திருவெண்காட்டுத் தேவாரப்பதிகத்தில் "பேயடையா பிரிவெய்தும் பிள்ளையினோடுள்ளநினை - வாயினவே வரம்பெறுவ ரையுறவேண்டாவொன்றும் - வேயனதோ ளுமைபங்கன் வெண்காட்டுமுக்குளநீர் - தோய்வினையாரவர்தம்மைத் தோயாவாந்தீவினையே" என்னும், - ௨ - வது பாசுரத்தில் 'பிள்ளையினோடுள்ள நினைவாயினவே வரம்பெறுவர்—வெண்காட்டு முக்குளநீர்தோய் வினையார்' என்னுங்கருத்தைக் கடைப்பிடித்து முக்குளநீரில் ஸ்நாநஞ்செய்து சிவபெருமானைத் தியானித்துத் தவஞ்செய்வாராயினர்.

ஸ்வேதம்-வெண்மை, வநம் - காடு=சுவேதவநம் - திருவெண்காடு. சோழநாட்டி லுள்ளது. சுவாமியார் பெயர் - சுவேதாரணியேசுரர், தேவியார் - பிரம வித்தியாநாயகி. முக்குளநீர் - அவ்விடத்துள்ள தீர்த்தத்திலொன்று, அத்தீர்த்தம் பரமசிவத்தின் முக்கண்ணினின்றும் மூன்றுதுளிகளாய் அவ்விடத்தில் தேவியாருக்குத் திருநடநங்காட்டியபோது தோன்றியது, இதனைத் திருவெண்காட்டுப்புராணத்தாலறிக.

௩—அச்சுதப்பெயரோன் தவத்திற்கிரங்கி மௌனநிலையையுடைய ஒருபுத்திரனைச் சிவபெருமான் அக்குளத்தின் படிக்கரையில் அவர்முன்னர் தோற்றுவிக்கச்செய்து இதனையுன்மகவாய் வளர்க்கக்கடவை என அசரீரிவாக்களித்தனர். அவ்வசரீர வாக்கினைக்கேட்டு குழந்தையிருக்கக்கண்ட சிவநேசத்தபோதனாச் சைவவேளாளர் மிகவும் சந்தோஷமெய்தி அக்குழந்தையைத் தழுவியெடுத்து மார்போடணைத்துத்தமதுமனைவிபாலளித்தனர்.

௪—பின்பு அவ்விருவரும் அக்குழந்தைக்கு சுவேதவநப் பெருமான் அநுக்கிரகித்த மூர்த்தமாதலால் காரணந்தோற்றச் * சுவேதவநப்பெருமான் என்னுந்திருநாமஞ்சூட்டி மிகுபோராக்கத்துடன் வளர்த்துவந்தனர். ஊரவர்யாவரும் இக்குழந்தையாரோ பழுதுடையாள் பெற்றுள்ளதுபோலும்; அதைக் குளத்தருகி லெறிந்துவிட இச்சைவர் பிள்ளை பித்துகொண்டு சிவபிரான் அநுக்கிரகித்ததெனஎடுத்து வளர்த்துவருகின்றனர் என நிந்தைகூறத் தொடங்கினர்.

௫—ஊரவர் கூறும் நிந்தையை பொறுத்திலராய் "எழுபிறப்புந் தீயவை தீண்டா பழிபிறங்காப்—பண்புடை மக்கட்பெறின்'' என்பதன்றே உலகியலிற் சிறந்தது. அஃதங்ஙனமாகச் சி

---

*பட்டிணத்துப் பிள்ளையார்க்கும் இக்காரணத்தாலே திருவெண்காடரெனப் பெயரிடப்பட்டது.

சிவபிரான் நமக்கு இவ்வண்ணம் அமைத்திட்டது நம்முடைய முன்வினையேபோலும்.

௬—"அவாவிலார்க்கில்லாகுந் துன்பம் அஃதுண்டேற்—றவா அதுமேன்மேல்வரும்" என்னும் வாக்கியப்படி நமக்கு இவ்வளவா துன்பமே விளைகின்றது, யாதுசெய்வோம்! என வருந்தி, வருகையில் சிவச்செயலால் திருவெண்ணெய் நல்லூரிலிருந்து தன் பத்தினியின் சகோதரர் காங்கேயபூபதி தன் வீட்டிற்குவந்து [illegible]துண்டு அவ்விடத்தில் நடந்துள்ள யாவையும் நோக்கி அ[illegible]ங்கையைத் தான் சில நாள் வளர்த்துவருவதாய் தன் [illegible]னர்மாட்டுவினவி விடைபெற்றுத் தம்மிடத்தெடுத்துச் சென்று சுவேதவனப்பெருமானை வளர்த்துவந்தனர்.

௭—[illegible]ந்தை இரண்டுபிராயத்தில் வீதியில் மணலிட்டு வி[illegible]ம்சித்தத்தன்மையால் சிவபிரானை யர்ச்சித்து[illegible]தும் நிற்கும்போது, அவ்வழியில் கிருபாமூர்த்தியாய் எழுந்தருளிய பரஞ்சோதிமாமுனிவர் இக்குழந்தையின் பரிபக்குவத்தையும், குழந்தையின்மாட்டுத் தம்மனம் கவர்ந்திழுக்கும் தன்மையையும், சிவபிரான் செயலையும், ஞானதிருஷ்டியாலறிந்து; அக்குழந்தைக்கு உடனே சைவதீக்ஷைசெய்து, சுவேதவனப்பெருமான் என்னும் பிள்ளைத்திருநாமத்தினை மாற்றி மெய்கண்டதேவனென்னும் தீக்ஷாநாமந் தந்து, தான் சந்தானபரம்பரையாய்ப் பெற்றுள்ள சிவஞானபோதத்தினைத் தந்து, அதன் பொருள்களை யுபதேசித்துத் தமிழுலக முய்யும்பொருட்டுச் சிவஞானபோதத்தினைத் தமிழாகச் செய்யக் கட்டளையிட்டுச் சென்றனர்.

அ—மெய்கண்டதேவர் ஐந்துபிராயத்திற்குள் தினது ஆன்மார்த்தபரார்த்த பூஜாவிசேஷங்களால் திருவெண்ணெய் கல்லூரிலெழுந்தருளியுள்ள பொல்லாப்பிள்ளையாரால் வேதசிவாகமங்களையும் சிவஞானபோதத்தின் பொருள்களையும் நன்கு போதிக்கப் பயின்று வந்தனர். அல்லாமலும் சிவஞானபோதத்திற்குப்பொல்லாப்பிள்ளையார் செய்து தந்த சூர்ணிகையைக்கொண்டு தமிழ்நூல் சிவஞானபோதமும் அதற்கு வார்த்திக உரையும் செய்தனர்.

௯—இவ்வாறு பயின்று வரும் அவை, அவ்வூரிலுள்ளோர்கட்குத்தெரிந்தவையன்று; மெய்கண்டதேவர் தான் அந்தரங்கமாய்க் கேட்கும்பொருள்களைச்சிந்தித்தும் தெளிந்தும் நிட்டை கூடியும் வருவதன்றி வேறொரு சிந்தனையும் செயலுமில்லாது மௌனமாயிருப்பதை, ஊரவர் கண்டு இக்குழந்தை ஊமைப்பிள்ளைபோலும்; ஐயோ! ஈதென்னபாவம்! என்றுங்கூறிவந்தனர்.

௧௦—இச்சொல் குழந்தையை வளர்த்துவருபவருக்குத் தன் மைத்துனர் கொண்டதுன்பத்தினு மதிகமாயிருந்தது.

௧௧—ஒருநாள் பொல்லாப்பிள்ளையாருக்குப்பூசைசெய்யும் சிவத்துவிசர் அக்கோயிலுக்குப் பூசைசெய்து சென்றபின் மீட்டும் அக்கோயிலுக்குச் சுவாமி தரிசநார்த்தமாய் வரநேரிட்டது. அப்போது அக்கோயிலில் யாதோவொரு சந்தடி கேட்பதைச் செவியுறுத்துச்சற்றுத்தூரத்திலேயேநின்றுஅதனைஆராயும்போது, பிள்ளையாரும்ஊமைக்குழந்தையும்ஆசாரிய சிஷியபாவமாய் உத்தரப் பிரதியுத்தர ஆக்ஷேபசமாதானங்கள் செய்து வருவதைக்கண்டு அத்தியாச்சரியமடைந்து, உடனே ஊரிற்சென்று

பிள்ளையை வளர்த்துவருபவருங்கு அதிக ஆவலுடன் தெரிவிக்க; அதனைக்கேட்ட சைவவேளாளர் நம்பிக்கையின்றி ஆதிசைவருடன் கூடித் திருக்கோயிலருகில் வந்து அவ்விடத்து நடக்குஞ் செய்திகள் யாவையும் ஆதிசைவர் தெரிவித்தவண்ணம் உண்மையாகக்கண்டு, இருவரும் கோயிற்குட்சென்று பொல்லாப்பிள்ளையாருடன் குழந்தையையும் வணங்கி, ஊரவர்கூறும் நிந்தனைகட் காளாக்காமல் இனி யாவருங்காண வாய்பேசிவரவேண்டுமென்று குறையிரந்துகேட்ப, அவரன்பிற்கு அவ்வாறு திருவுளமிசைந்து அன்றுதொட்டு வேண்டுங்காரியங்கட்கு வார்த்தையாடிவந்தனர்.

௧௨—இச்செய்தி சிலதினத்துள் அவ்வூர்முழுவதும் பரவிற்று.

௧௩—திருத்துறையூர் சகலாகம பண்டிதரென்னும் அருணந்தி சிவசாரியார், தமது சிஷியவர்க்கத்தின் வேண்டுகோட்படி திருவெண்ணெய் நல்லூர்க்கெழுந்தருளி வேதசிவாகமங்களைப் பாடமோதி வரும்போது; சிஷியர்கள் மெய்கண்டதேவர் வசிக்குமிடத்திற்கு நேரே போய்வருவதை மெய்கண்டதேவர் கண்டு, ஒருநாள் அந்தச் சிஷியர்களை அழைத்து அவர்கள் கேட்டுவரும்பாடங்களில் கருதலாயுள்ள பொருள்கட்கு உரைகேட்க, அவர்கள் அவ்விடத்திற்குப் பொருள் தெளிவாய்ப் பாடஞ்சொல்லவில்லையென: மெய்கண்டதேவர் அதன்பொருள்களை ஏது திருஷ்டாந்த பூர்வகமாயும் ஆக்ஷேபசமாதாநங்களுடனும், பரபக்ஷ சபக்ஷங்களாய்த் தெளிவித்தனர், சிஷியர்கள் மிகவும் ஆநந்தசந்தோஷகரராய் விடைபெற்றுச் சென்று நித்தியமும் அ

ருணந்தி சிவாசாரியாரிடம் சென்று திரும்புகாலையில் தங்கள் சந்தேகங்களை மெய்கண்டதேவரிடம் தெரிவித்துச் சந்தேகநிவர்த்தி செய்யத்தொடங்கினர்.

கசு—அருணந்திதேவர் சிஷியர்கள் நாளாவட்டத்தில் அவரிடம்செல்வதை விட்டு, மெய்கண்டதேவரிடம் பாடங்கேட்க்த்தொடங்கினார்கள்

கரு—அருணந்திசிவாசாரியார் தமது சிஷியர்கள் வரவரக் குறைவுபடுவதையும் மெய்கண்டதேவருடைய பிரபாவங்களையுங் கேட்டுப் பொறுமையுற்று; சிறுபிள்ளையாவது சிலப்பிள்ளையாரிடம் பாடங்கேட்பதாவது ஆகமார்த்தங்களின் சந்தேகங்கள் தெளிவிப்பதாவதென்று மிகவும் ஆராய்ச்சியுடையராய்; அதனைத்தெளிந்துவருவோமென மெய்கண்டதேவர் வசிக்குமிடத்திற்குச் சென்றனர்.

கசு—மெய்கண்டதேவரிடம் அருணந்திசிவாசாரியார் வந்த சமயம் சாஸ்திரப்பயிற்சிசெய்யுங் காலமாயிருந்தது. அருணந்திசிவாசாரியார் தம்முடைய சிஷியர்கள் யாவரும் அங்கு பாடங்கேட்பதைக் கண்டு கோபங்கொண்டிருப்பதைச் சிஷியர்கள் கண்டு எழுந்து வந்தனைவழிபாடு செய்தார்கள் மெய்கண்டதேவர் இவையாவையும் பாராமல் தன்மட்டே கவனித்திருந்தனர்.

கஎ—அருணந்திசிவாசாரியார் குலத்தினாலும் வயதினாலும் வித்தையினாலும் சிறந்ததன்னை மெய்கண்டதேவர் மதியாமலிருப்பதைக்கண்டு; மனவருத்தமுற்று, சிஷியர்களைநோக்கி பாடங்கேட்பித்து அதன்மூலமாய் தர்க்கித்து வெற்றிகொள்ள உத்தேசித்து: சிஷியர்களுக்குப் பாடங்கேட்கும்படி குறிப்பித்தார்.

கஅ—சிஷியர்கள் பாடங்கேட்கத்தொடங்கினார்கள். ஏதுதிருஷ்டாந்த ஆக்ஷேப சமாதாந பரபக்ஷ சபக்ஷங்களை மெய்கண்டதேவர் கூறிவருவதைக்கேட்ட அருணந்திசிவாசாரியர், மெய்கண்டதேவரைநோக்கி ஆணவமலமென்பது யாது? அதனை யெவ்வண்ணம் தரிசித்தல்? எனவினாவினர்.

கக—மெய்கண்டதேவர் அருணந்திசிவாசாரியருடைய அதிதீவிரபக்குவத்தா லமைந்த அதிநுட்பபுத்தியை நோக்கித் தமது கிருபாநோக்கத்தால் அவர்கேட்டவினாவின்சந்தேகந்தெளிந்து சிவஞானமடையும்படி சக்ஷு தீக்ஷைசெய்தருளினர். அங்ஙனம், அப்பார்வையின் விசேஷத்தால் அருணந்திசிவாசாரியார் தாம்வினாவிச் செருக்குற்று நிற்பது ஆணவமலத்தின் தன்மையெனவும், அங்ஙனம் ஆசிரியர் தன்னை நோக்கி மீட்டும் தம்மையே பார்த்திருப்பதுபோல், தாமும் புறத்துள்ளவிஷயங்களைநோக்கி அவ்விஷயங்களை யவாவுடன் ஆராய்ந்துசென்று பற்றுவதிபாது என்று தமக்குள் நாடியறியவேண்டுமென்றும் அப்படியாராயப்புகின் ஆணவமலத்தின் றன்மைவெளிப்பட்டு அடங்குமென்வும் யூகித்தறிந்து, இங்ஙனம் இம்மௌனஞானக்குறிகளானுணர்த்திய தேசிகரே நம்மையாளுடைய தேசிகரெனத்தீர்மானித்து மெய்கண்டதேவர் திருப்பாதங்களில் வீழ்ந்து நமஸ்கரித்து நின்றனர்.

உ௦—மெய்கண்டதேவரும் தெய்வத்திருக்குறிப்புணர்ந்து அருணந்திசிவாசாரியருக்கு விதிப்படி அநுக்கிரகஞ்செய்து, தாம் பரஞ்சோதிமுனிவரால் அநுக்கிரகித்துக் கட்டளையிட்டருளியபடி செய்த தமிழ் நூற் சிவஞானபோதமும், பொல்லாப்பிள்ளையார் அநுக்கிரகித்த ஷைசூர்ணிகையும், ஷை நூலுக்கு வடநூற் சாம்பிரதாயப்படி தாம்செய்த வார்த்திகப்பொழிப்புரையும் கொடுத்து; இதனை உலகத்தார் எளிதாகத்தெளியும் வண்ணம்

சகலாகமங்களின் திருஷ்டாந்தக்கருத்தையுமடக்கி யோர் நூல் செய்யும்படி கட்டளையிட்டனர்.

மெய்கண்டதேவருக்குச் சிஷியர்கள்—சூ. அவர்களுள் சிவஞானபோதத்தின் வழிநூல்செய்து சிவஞானசித்தியெனப் பெயரிட்டவர் அருணந்திசிவாசாரியார். உண்மைவிளக்கங்கூறியவர் திருவதிகை மநவாசகங்கடந்தார்.

அருணந்திசிவாசாரியார், மெய்கண்டதேவர் சந்நிதியில் தாம்வினவிய வினாக்களுக்கு அவர் திருநோக்கால் தமக்கு பொருள்விளங்கியதை; இருபாவிருபஃதென்னும் நூலாகக்கூறினர்.

மநவாசகங்கடந்தார், மெய்கண்டதேவர் தமக்குபதேசித்த உண்மைப்பொருளை உண்மைவிளக்க மெனக் கூறினர்,

இவை சேர்ந்து சைவசித்தாந்தசாத்திரம் கச.

மெய்கண்டதேவர் விபவங்களைக்கேட்கப்பெற்ற தாய் தந்தைகளும் கன்மாமனரும் "ஈன்ற பொழுதிற் பெரிதுவக்குந் தன் மகனைச்—சான்றோ னெனக்கேட்டதாய்." என்ன மிகவு மனக் களிப்புற்றனர்.

## தமிழ் நூற்

## சிவஞானபோதச் சிறப்பு.

வேதம்பசு வதன்பால் மெய்யாகம நால்வ
ரோதுந் தமிழதனி னுள்ளுறுநெய் - போதமிகு
நெய்யி னுறுசுவையா நீள்வெண்ணெய் மெய்கண்டான்
செய்த தமிழ்நூலின் றிறம்.

## வேதாகம மொன்றென்பதற்கும் நால்வரோதுந்தமிழ் அவற்றின் பொருள் என்பதற்கும் பிரமாணம்.

---

[illegible]
[illegible]

வேதசிவாகமங்கட்கு பேதங்காண் கிலம் வேதமே சிவாகமம் என்பது-நீலகண்டபாஷியம்.

வேதமொ டாகம மெய்ய மிறைவனூ
லோதும் பொதுவும் சிறப்புமென் றுன்னுக
நாத னுரையிவை நாடி லிரண்டந்தம்
பேதம தென்பர் பெரியோர்க் கபேதமே.

என்பது திருமூலர் திருமந்திரம் ஆறந்தம் உ௮-செ.

தேவர் குறளுந் திருநான் மறைமுடிவு
மூவர் தமிழு முனிமொழியுங் - கோவை
திருவா சகமுந் திருமூலர் சொல்லு
மொருவா சகமென் றுணர்.

என்பது ஔவையார் நல்வழி—௪௦ வது, செ.

---

## சந்தானகுரவர்களின்

| பெயர். | பரிபூரண ஸ்தலம். | மாசம். | நக்ஷத்திரம். |
| --- | --- | --- | --- |
| மெய்கண்டதேவர். | திருவெண்ணெய்நல்லூர். | ஐப்பசி. | ஸ்வாதி. |
| அருணந்திசிவாசாரியார். | திருத்துறையூர். | புரட்டாசி. | பூரம். |
| மறைஞானசம்பந்தசிவாசாரியார். | திருக்களாஞ்சேரி. | ஆவணி. | உத்திரம். |
| உமாபதிசிவாசாரியார். | கொற்றவன்குடி. | சித்திரை. | அஸ்தம். |

சித்திரையத்த முமாபதி யாவணித் திங்கடனி
லுத்தரஞ் சீர்கொண் மறைஞான சம்பந்த ரோதுகன்னி
சுத்தமெய்ப் பூர மருணந்தி பைப்பசி சோதிதன்னில்
வித்தக மெய்கண்ட தேவர் சிவகதி மேவினரே.

இவர்களைச் சந்தானகுரவர்களென்பது சைவசித்தாந்தத்தினுண்மையை வெளிபிடுவித்துப் போதித்துவருதலானும் இவர்கள் காலந்தொடங்கி சிஷியவர்க்கத்தவர்கள் பரம்பரைச் சாம்பிரதாயங்கள் ஏற்பட்டுவருதலானும் கூறப்படுகின்றது.

### சைவசித்தாந்த சாத்திரம்
### பதினான்கினையுமுணர்த்துஞ்செய்யுள்.

உந்தி களிறு வுயர்போதஞ் சித்தியார்
பிந்திருபா வுண்மைப் பிரகாசம் – வந்தவருட்
பண்புவினா போற்றி கொடி பாசமிலா நெஞ்சுவிடு
வுண்மைநெறி சங்கற்ப முற்று.



சிவமயம்.

# உரைவகை.



சிவஞானபோதத்திற்கு மெய்கண்டதேவர் வார்த்திகவுரையொன்றும் பாண்டிப்பெருமாள் பதவுரையொன்றும், விருத்தியாகிய இவ்வுரையொன்றும், சிவஞானமுனிவரால் சூத்திர வார்த்திகங்கட்கும், உதாரணச்செய்யுட்களுக்கு மியற்றிய சிற்றுரையொன்றும், திராவிடபாஷியமென்னும் பேருரையும் வழங்கிவருகின்றன.

மெய்கண்டதேவரியற்றிய சூத்திரவார்த்திகங்கள் வடநூற்பயிற்சி யுடையார்க்கே தெளிவாகுமன்றி யேனையோர்க்குத் தெளிந்தா யுணரப்படுவதன்று. இதைநோக்கியே மெய்கண்டதேவர் தமது சிஷியர்களிற் சிறந்த அருணந்திசிவாசாரியருக்கு இதனைத்தெளிவாக்கி யோர் நூல் செய்யும்படி கட்டளையிட்டனர். அருணந்திசிவாசாரியாரும் முதனூல் சிவஞானபோதத்திற்கு ஆகமங்களின பொருள்கள்தோன்ற சிவஞானசித்தியைச் செய்தனர். இச்சித்தியாரே இதன்பொருளை விளக்குவதற்கும் மற்றைத்தமிழ் நூற்களிற் கூறியசைவசித்தாந்தங்கட்கும் உரைக்கற்போலிருக்கின்றது.

பாண்டிப்பெருமாள் விருத்தியுரையானது சிவஞானபோதத்தின் பொருள்களை யுணர்த்தி, சைவ சம்பிரதாயப்பொருள்களை வெளிப்படுத்தி, வழிநூலாகிய சிவஞானசித்தியின் கருத்தைச் செய்யுட்கடோறும் உதகரித்துக்காட்டி, வாசிப்போர்களின் கருத்தைப் பேரானந்தத்தில் எளிதிலடையச்செய்விக்கும் கருவியா

யிருக்கின்றது. இதனைவாசித்தநுபவிக்கப் பெற்றவர்கட்கு வேறுரையில் கருத்துச்செல்லாதென்பதே துணிபு. நிச்சயம்! நிச்சயம்! நிச்சயம்!

பாண்டிப்பெருமாள் மெய்கண்ட சந்தானத்தார் என்பது அவர் உரையானும் - ௫௨௩-வது, பக்கம்கூறிய உரைச்சிறப்புப்பாயிரத்தானும் விளங்கும்.

இவர்சரித்திரம் வேறுவகையாற் காண்பதரிதாயிருக்கின்றது.

சிவஞானமுனிவர்உரை, இலக்கண இலக்கியங்களோடு வடநூற்பயிற்சியும் சிறிதுடையோர்க்கே புலப்படும்.

இவரது சரத்திரம் காஞ்சிப்புராணப் பதிப்புரையிற் காண்க.

வடநூற் சிவஞானபோதசுலோகத்திற்கு * அவதும்ரக்ஷேத்திரவாசியாகிய ப்ரம்மஸ்ரீ விஸ்வேஸ்வரசாஸ்திரியாரவர்களால் பதவுரையெழுதி வுதவிபுரியப்பட்டதுமன்றி, சமஸ்கிருதவுரையும் தந்து, அவற்றையச்சிடும் வழுக்களைப் பரிசீலித்தும் உதவிபுரிந்தனர்.

இவர்செய்நன்றி "பயன்றூக்கார் செய்த வுதவி நயன்றூக்கி னன்மை கடலிற் பெரிது" "உதவி வரைத்தன் றுதவி யுதவி செயப்பட்டார் சால்பின் வரைத்து" என யாம்பாராட்டுவேம்.

* (அவதும்ரம்-அத்திமரம்,) இதனாற்சிறந்த க்ஷேத்திரம் திருவொற்றியூர்.



சிவமயம்.

# பதிப்புரை.



௧—சைவசித்தாந்த சாத்திரங்கள் (௧௪)க்கும் உரை யச்சிட்டுத் தொடங்கி திருவுந்தியார், திருக்களிற்றுப்படியார், உமாபதி சிவாசாரியா ரியற்றிய சிவப்பிரகாசமுதலிய ௭-சாத்திரங்களை, சிவஞானசித்தி பரபக்ஷம் மனவாசகங்கடந்தார் உண்மை விளக்கம் இவைகளை அச்சிட்டுமுடித்துச் சிவஞானபோதத்திற்கும் தெளிவான ஒருரை யச்சிடுவது கருதி இவ்வுரையை யச்சிடுவித்தனன்.

௨—இதில் ௧-இல் சிவஞானபோத உற்பத்தியும், ௨—வது மெய்கண்டதேவர் தோற்றப்பிரபாவமும், ௩—வது உரையாசிரியர்களின் உரைவிபரமும், ௪—வது பதிப்புரை விபரமும், ௫—வது சிவஞானபோத படனவிதியும், ௬-வது அகராதி அட்டவணையும், அச்சிட்டிருக்கின்றனன்.

௩—நூலாரம்பத்தில் சைவர்களின் பாராயணத்தின் பொருட்டு — ரௌரவாகம சிவஞானபோத சூத்திரமும் அதற்கு மெய்கண்டதேவர் தமிழ்நூற் சூத்திரமும்—, ௨—(௮)ம்-பக்கமுதல் (௧௮) வரை, கிரந்தசூத்திரங்கட்குத் தமிழுரையும், ௩—(௨௭)முதல் (௪௭) வரை தமிழ்நூற் சூத்திரங்கட்கு வடநூன்மரபைத்தழுவி நூலாசிரியர் மெய்கண்டதேவர் தாமே யியற்றிய அதிகரணப்பகுப்பும் வார்த்திகப்பொழிப்பும், இவையிற்றுக்கு ஆதரவாய் பொல்லாப்பிள்ளையார் அநுக்கிரகித்தருளிய சூர்ணிகைபும், ௪—(௪௮) முதல் (௧௨௭) வரை மூல உரை ஷை வார்த்திகத்திற்குச் சிவஞானமுனிவர் விரித்துக்கூறிய பொருளும், ௫—(௧௨௮) முதல் (௫௨௩) வரை பாண்டிப்பெருமா

ள் உரையும், அவற்றின் சிழ்க்கோடேளிட்டு சிவஞானமுனிவர் உரையை ஆங்காங்குப் பிரித்துத் தெளிவாக்கியும் அச்சிட்டிருக்கின்றேன். சிவஞானமுனிவர் உரையை விரும்புவோர்க்கு இஃது தெளிவாய்க் காட்டும். செய்யுட் பாடபேதங்கள் அவ்வவ்வுரையிற் கவனிக்கவேண்டும்.

௩—தமிழ்நூற் பயிற்சியுடன் வடநூலை யுணர்ந்தவர்களும் சிவஞானபோதத்தை யாராய்ச்சிசெய்யவேண்டுமெனபது அதியவசியமெனக்கருதிக் கீழ்ந்த விபயினும் பௌஷ்கரம் மிருகேந்திரமுதலிய ஆகம உதாரணங்களுடன் உரை அச்சிட்டிருக்கின்றேன்.

௫—இவைகளையும்; இன்னும் இதற்காதரவாய் இப்போது அச்சிட்டுவரும் தமிழ்நூற் சிவஞானசித்தியாருக்கு சிவாக்கிரயோகியர்முதலியோர் உரைவிசேஷங்களடங்கிய மறைஞானதேசிகருரையும், கிரந்தசித்தாந்தசாராவளிக்குத்தமிழ்உரையும், சைவர்களாயுள்ளார்யாவர்க்கும் இன்றியமையாத கருவிநூலாயிருப்பதால்பொருளுள்ளவொவ்வொருவர்களும்முன்பணம்கொடுத்து வாங்கிக்கொள்வார்களாகில் சிவஞானபோதஅச்சுக்கூடம் தழைத்தோங்கி இன்னும் நீலகண்ட பாஷியம் பௌஷ்கராகமவிருத்தி முதலியவற்றை அச்சிட்டுக் கொடுத்துவருமென்பதிற்றடையிராது.



உ

சிவமயம்.

# சிவஞானபோத படனவிதி.

௧—அதிநுட்பபுத்தியும் அதிதீவரபக்குவமும் அமைந்துடையார்க்குச் சிவஞானபோத சூத்திரத்திற்கு வார்த்திக முதலிய பொருள்கள் தானேவிளங்கும்.

௨—ஏனையோர் சற்குருபால் சிவதீக்ஷையுடையவர்களாய்ச்சைவநெறிபூண்டு சிவஞானபோதசூத்திரம் (௧௨)யும் நித்திய பாராயணஞ்செய்து அவரோஹணமாய் பொருள்கேட்டல்வேண்டும்: அஃதாவது, சூத்திரவெண்பாக்களுக்குப் பாண்டிப்பெருமாள் விருத்திஉரையை (௧௨௯) வது, பக்கமுதல் சிவஞானசித்தி உதாரணத்துடன் வாசித்துப் பின் வார்த்திகமுதலிய பொருள்களை வாசித்தல்வேண்டும்.

௩—இவ்வாறு ஒருமுறை வாசித்தலில் பொருள்புலப்படாவிடில் இருமுறை மூன்றுமுறை முழுவதும் வாசிக்கில் பொருள் தெளிவாய் வெளிப்படும்.

௪—இனி இதனினும் புலப்படாவிடில் தமக்கு ஆன்மார்த்தமூர்த்தியை இடைவிடாது தியானித்துப் பரார்த்தமூர்த்திகளுக்கு அபிஷேகாதிவிபவங்களால் சிறப்பிக்கில், அரியவும் எளியவாய் விளங்குமென்பது சத்தியம்! சத்தியம்!! சத்தியம்!!!

௫—இதுமுதலிய சைவநூல்களின் பொருள்களை யோதியுணர்வதற்குத் தக்கவர்கள் நேரிடாதவர்கள் எம்மாட்டோதியுணர விரும்பின் அவர்கள் சைவசீலத் தவர்களாய்வரின் எம்மாற் றெரிந்தவரை தெளிவிக்கத் தடையிராது.

இங்ஙனம்,

 கொ - சண்முகசுந்தர முதலியார்

சிந்தாதிரிப்பேட்டை,

# சிவஞானபோத

| சூத்திரத்திற்கு | கிரந்த சூத்திர உரையின் பக்கம். | தமிழ் சூத்திர உரையின் பக்கம். | சூத்திரக் கருத்து அதிகரணம்-வார்த்திகம் - சூர்ணிகையின் பக்கம். |
|---|---|---|---|
| க | அ | கருஉ | உ௦ |
| உ | கூ | உகுகூ | உஉ |
| ங | ,, | உசுரு | உச |
| ச | க௦ | உஅகூ | உஅ |
| ரு | கக | ஙஉச | உகூ |
| சு | கஉ | ஙசங | ,, |
| எ | கங | ஙசுஅ | ஙஉ |
| அ | கச | ஙஅரு | ஙச |
| கூ | கரு | சககூ | ஙசு |
| க௦ | கசு | சசஅ | ஙஅ |
| கக | கஎ | சஎஉ | ,, |
| கஉ | கஅ | சகூசு | ச௦ |

---

# சிவஞானபோத

| சூத்திரத் தொகை. | அதிகரணத் தொகை; | சூர்ணிகைத் தொகை: | உதாரண வெண்பா. |
|---|---|---|---|
| ௧ | ௩ | ௩ | ௫ |
| ௨ | ௪ | ௪ | ௧௦ |
| ௩ | எ | எ | எ |
| ௪ | ௩ | ௩ | எ |
| ௫ | ௨ | ௨ | ௪ |
| ௬ | ௨ | ௨ | ௬ |
| எ | ௩ | ௩ | ௫ |
| அ | ௪ | ௪ | ௯ |
| ௯ | ௩ | ௩ | அ |
| ௧௦ | ௨ | ௨ | ௬ |
| ௧௧ | ௨ | ௨ | ௬ |
| ௧௨ | ௩ | ௪ | அ |
| ‡ புறனடை-௧ | | | |
| ஆக. | ௩அ | ௩௯ | அ௨ |

இவற்றிற்குச்செய்யுள் ௪௬-ம், பக்கம் காண்க.

‡நெய்க்குடமேனு நீர்க்குடமேனும்வைப்பார் குறடானுங்கல்லானும் புறத்தடுத்துவைப்பர், அவையக்குடத்தினையுஞ் சாயாமற்காத்துப் புறத்துவருமிடையூறுகளையுநீக்கும், அதுபோலச்சூத்திரத்துட் சொல்லப்பட்ட பொருளை யாப்புறுத்தானு முதற்சூத்திரத்துளில்லாத பொருளைத் தழீஇயானுநிற்பது புறனடையெனவுணர்க - இஃது ஓத்துப்புறனடை அதிகாரப்புறனடை சூத்திரப்புறனடை பிண்டப்புறனடை நூற்புறனடை எனப்பலவகைப்படும். என்னை (ஓத்ததிகாரஞ் சூத்திரம் பிண்டம் யாத்த நூலென வைந்தாம் புறனடை) என்பதோத்தாகலின் புறனடை-எனவுமோதுப.

# சிவஞானபோத செய்யுட் குறிப்பகராதி.



செய்யுள். பக்கம். செய்யுள். பக்கம். செய்யுள். பக்கம்.

# இப்போதச்சிட்டிருக்கும் சிவஞானபோதயந்திரசாலை புத்தகங்களின் விபரம்.

உ

சிவமயம்.

# இப்போதச்சிட்டுவருவன.



சிவஞானசித்தியார் சுபக்ஷத்திற்கு சிவாக்கிரயோகியர் முதலியோர் உரைவிசேஷங்களடங்கிய மறைஞானதேசிகருரை.

சமஸ்கிருத சித்தாந்த சாராவளிக்குத் தமிழுரை.

இவைகளையும், சைவாகமமுதலிய பழைமையாயுள்ள (இதுவரை அச்சிடாத) சைவகிரந்தங்களையும், சஞ்சிகைபூர்வமாய் அச்சிட்டுத்தருவதற்கு ஆரம்பித்திருக்கின்றேன். மாதம் க-இ கூ௦ கஉ தடங்கிய சஞ்சிகை க-இ ரூ கால் வீதம் வருஷம் க-இ ரூ மூன்று முன்பணம் அனுப்புவோர்கட்கு மாதமாதம் ஒவ்வொரு சஞ்சிகை அனுப்பப்படும்.

இங்ஙனம்,

சர்வஜித்துஇ ஆவணி ௴ } கொ-சண்முகசுந்தர முதலியார் சிந்தாதிரிப்பேட்டை.

உ

சிவமயம்.

# சிவஞானபோத சூத்திரம்.



## விநாயகர் வணக்கம்.

கல்லானிழன்மலை வில்லாரருளிய
பொல்லாரிணைமலர் நல்லார்புனைவரே.

அவனவளதுவெனு மவைமூவினைமையிற்
றோற்றியதிதியே யொடுங்கிமலத்துளதா
மந்தமாதி யென்மனார்புலவர். ௧

அவையேதானே யாயிருவினையிற்
போக்குவரவு புரியவாணையி
னீக்கமின்றி நிற்குமன்றே. ௨

உளதிலதென்றலி னெனதுடலென்றலி
னைம்புலனொடுக்க மறிதலிற்கண்படி
லுண்டிவினையின்மையி னுணர்த்தவுணர்தலின்
மாயாவியந்திர தனுவினுள்ளான்மா. ௩

அந்தக்கரண மவற்றினொன்றன்றவை
சந்தித்ததான்மாச் சகசமலத்துணரா
தமைச்சரசேய்ப்பநின் றஞ்சவத்தைத்தே. ௪

விளம்பியவுள்ளத்து மெய்வாய்கண்மூக்
களந்தளந்தறியா வாங்கவைபோலத்
தாந்தமுணர்வின் றமியருள்
காந்தங்கண்ட பசாசத்தவையே. ௫

உணருருவசத்தெனி னுணராதின்மையி
னிருதிறனல்லது சிவசத்தாமென
விரண்டுவகையி னிசைக்குமன்னுலகே. ௬

யாவையுஞ்சூனியஞ் சத்தெதிராதலிற்
சத்தேயறியா தசத்திலதறியா
திருதிறனறிவுள திரண்டலாவான்மா. ௭

ஐம்புலவேடரி னயர்ந்தனைவளர்ந்தெனத்
தம்முதல்குருவுமாய்த் தவத்தினிலுணர்த்தவிட்
டந்நியமின்மையி னரன்கழல்செலுமே. ௮

ஊனக்கண்பாசமுணராப்பதியை
ஞானக்கண்ணினிற் சிந்தைநாடி
யுராத்துனைத்தேர்த்தெனப் பாசமொருவத்
தண்ணிழலாம் பதிவிதி
யெண்ணுமஞ் செழுத்தே. ௯

அவனேதானே யாகியவந்நெறி
யேகனாகி யிறைபணிநிற்க
மலமாயைதன்னொடுவல்வினையின்றே. ௰

காணுங்கண்ணுக்குக் காட்டுமுளம்போற்
காணவுளத்தைக் கண்டுகாட்டலி
னயராவன்பி னரன்கழல்செலுமே. ௧௧

𑌶𑌿𑌵𑌜𑍍𑌞𑌾𑌨𑌬𑍋𑌧𑌃

𑌜𑍍𑌞𑍇𑌯𑌤𑍍𑌵𑌾𑌤𑍍 𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌯𑌤𑍍𑌵𑌾𑌤𑍍 𑌸𑌰𑍍𑌵𑍇𑌷𑌾𑌂 𑌸𑌞𑍍𑌜𑍀𑌵𑍇𑌷𑌾𑌂
𑌶𑌿𑌵𑌾𑌶𑍍𑌰𑌯𑌃 । 𑌸𑌾𑌂𑌵𑌿𑌦𑍍𑌯𑌾 𑌶𑌿𑌵𑌜𑍍𑌞𑌾𑌨𑌬𑍋𑌧𑍇
𑌶𑍈𑌵𑌾𑌰𑍍𑌥𑌨𑌿𑌰𑍍𑌣𑌯𑌃 ॥ ௰௨

𑌶𑌿𑌵𑌜𑍍𑌞𑌾𑌨𑌬𑍋𑌧𑌂 𑌵𑌕𑍍𑌷𑍍𑌯𑍇

𑌰𑍌𑌰𑌵𑌾𑌗𑌮𑍇 𑌶𑍈𑌵𑌸𑌿𑌦𑍍𑌧𑌾𑌨𑍍𑌤𑌸𑌂𑌕𑍇𑌤𑍇𑌨
𑌨𑌿𑌰𑍍𑌣𑍀𑌤𑌃 । 𑌶𑌿𑌵𑌦𑍃𑌷𑍍𑌟𑍇𑌨 𑌸𑌾𑌰𑌣𑌾 𑌸𑌤𑍍𑌯𑌾𑌰𑍍𑌥 𑌪𑍍𑌰𑌯𑍋𑌜𑌨
𑌨𑌿𑌶𑍍𑌚𑌯𑍇𑌨 ॥

செம்மலர்நோன்றாள் சேரலொட்டா
வம்மலங்கழீ இயன்பரொடுமரீஇ
மாலறநேய மலிந்தவர்வேடமு
மாலயந்தானு மரனெனத்தொழுமே. கஉ

சிவஞானபோதசூத்திரம் முற்றிற்று

## தனியன்.

எந்தை சனற்குமர னேத்தித் தொழவியல்பா
னந்தி யுரைத்தருளு ஞானநூல்—சிந்தைசெய்து
தானுரைத்தான் மெய்கண்டான் றாரணியோர் தமுணர
வேதுதிருட் டாந்தத்தா லின்று.

---

ௐ

# ஶிவஜ்ஞாநபோதம்

## ப்ரதமஸூத்ரம்

௧ — ஸ்த்ரீபும்நபும்ஸகாதிகாத் - ஜகத꞉ - கார்யதர்ஶநாத் - அஸ்தி - கர்த்தா - ஸ꞉ - ஹ்ருத்வா - ஏதத் - ஸ்ருஜதி - அஸ்மாத் - ப்ரபு꞉ - ஹர꞉. ||

| அந்வயம். | அர்த்தம். |
|---|---|
| ஜகத꞉ | பிரபஞ்சத்திற்கு |
| கர்த்தா | கர்த்தாவானவர் |
| அஸ்தி | உண்டு |
| கார்யதர்ஶநாத் | காரிய ரூபமாய் காணுதலி[னால் |
| ஸ்த்ரீபும்நபும்ஸகாதிகாத் | அவளவனதுவென்னும் [தநுகரணாதிகளாய் வருகையால்] |
| ஸ꞉ | அந்தகர்த்தா |
| ஏதத் | இந்த பிரபஞ்சத்தை |
| ஹ்ருத்வா | சங்கரித்து |
| ஸ்ருஜதி | சிருஷ்டிக்கிறார் |
| அஸ்மாத் | இந்த காரணத்தால் |
| ஹர꞉ | சங்காரகர்த்தா |
| ப்ரபு꞉ | எஜமானன். [ஈஸ்வரன்] (க) |

பதச்சேதம்.

௨ — அந்ய: - ஸந் - வ்யாப்தித: - அநந்ய: - க
ர்த்தா - கர்மாநுஸாரத: - கரோதி - ஸம்ஸ்ருதிம்-
பும்ஸாம் - ஆஜ்ஞயா - ஸஹிதயா. ||

| அந்வயம். | அர்த்தம். |
|---|---|
| வ்யாப்தித: | சாக்ஷாத்கார ரூப ஞானத் |
| அநந்ய: | வேறில்லாதவரான [தால் |
| கர்த்தா | கர்த்தாவானவர் |
| அந்ய: - ஸந் | [அவ னவ னது வென்பதற்கு] வேறா யிருந்துகொண்டு |
| ஸஹிதயா | பிரி வில்லாம லிருக்கிற |
| ஆஜ்ஞயா | ஆணையினல்(ஆஞ்ஞா சக்தியினலே) |
| கர்மாநுஸாரத: | அவரவர் செய்த வினைக் கீடாக |
| பும்ஸாம் | ஆன்மாக்களுக்கு |
| ஸம்ஸ்ருதிம் | சுக துக்காதி வியா பாரத்தை |
| கரோதி | செய்யாநிற்கிறார். (௨) |

பதச்சேதம்.

௩ — நேத்ரத: - ஸதோஷ்காஸ் - அபேக்ஷா
வாதி தோயத: - ஸாபெ - நிஹேத்ரமத: -
தோயே - தோயஸ்காஸ் - அஸ்தி - அணு: - தநௌ.

| 𑌅𑌨𑍍𑌵𑌯𑌃 | 𑌅𑌰𑍍𑌥𑌃 |
|---|---|
| 𑌤𑌨𑍌 | சரீரத்தில் |
| 𑌨𑍇𑌤𑌿𑌤𑌃 | இல்லை யென்கையி னாலும் |
| 𑌮𑌮𑌤𑍋𑌦𑍍𑌰𑍇𑌕𑌾𑌤𑍍 | மமதையி னுடைய ஆதிக்கத்தாலும் |
| 𑌅𑌕𑍍𑌷𑍋𑌪𑌰𑌤𑌿 𑌬𑍋𑌧𑌤𑌃 | இந்திரியங்களுடைய ஒடுக்கமாகிய ஸ்வப்பன அவஸ்தையிலுண்டான அறிவினாலே |
| 𑌸𑍍𑌵𑌾𑌪𑍇 | சுஷுப்தி காலத்தில் |
| 𑌨𑌿𑌰𑍍𑌭𑍋𑌗𑌤𑌃 | அறி வில்லாமையாலும் |
| 𑌬𑍋𑌧𑍇 | சாக்கிரத்தில் |
| 𑌬𑍋𑌦𑍍𑌧𑍃𑌤𑍍𑌵𑌾𑌤𑍍 | அறிகிறதினால் |
| 𑌅𑌣𑍁𑌃 | ஆன்மா |
| 𑌅𑌸𑍍𑌤𑌿 | உண்டு. (௩) |

𑌪𑌦𑌚𑍍𑌛𑍇𑌦𑌃

𑌸 — 𑌆𑌤𑍍𑌮𑌾 - 𑌅𑌨𑍍𑌤𑌃𑌕𑌰𑌣𑌾𑌤𑍍 - 𑌅𑌨𑍍𑌯𑌃 - 𑌅𑌪𑌿 - 𑌅𑌨𑍍𑌵𑌿𑌤𑌃 - 𑌮𑌨𑍍𑌤𑍍𑌰𑌿𑌭𑍂𑌪𑌵𑌤𑍍 - 𑌅𑌵𑌸𑍍𑌥𑌾𑌪𑌞𑍍𑌚𑌕𑌸𑍍𑌥𑌃 - 𑌅𑌸𑍍𑌮𑌾𑌤𑍍 - 𑌮𑌲𑌰𑍁𑌦𑍍𑌧𑌃 - 𑌸𑍍𑌵𑌦𑍃𑌕𑍍𑌕𑍍𑌰𑌿𑌯𑌃 ||

| 𑌅𑌨𑍍𑌵𑌯𑌃 | 𑌅𑌰𑍍𑌥𑌃 |
|---|---|
| 𑌅𑌨𑍍𑌤𑌃𑌕𑌰𑌣𑌾𑌤𑍍 | அந்தக் கரணத்தைக் காட்டிலும் |
| 𑌅𑌨𑍍𑌯𑍋𑌽𑌪𑌿 | வேறா யிருந்த போதிலும் |

| | |
|---|---|
| மந்த்ரிராஜவத் | மந்திரியும் ராஜாவும்போல |
| ஸம்ஹித: | கூடினவனும் |
| அவஸ்தா²பஞ்சகஸ்த²: | [சாக்கிர முதலிய] அவஸ்தா பஞ்சகத்தி லிருக்கிறவனும் |
| மலாவ்ருத: | மலங்களாலே மூடப்பட்ட |
| ஸ்வாத்மஜ்ஞ: | ஆன்ம ஞானத்தை யுடையவனை |
| ஆத்மா | ஆன்மா வானவன் |
| ஸ்யாத் | இருப்பன். (௪) |

பத³ச்சே²த³ம்.

௫ — விந்த³ந்தி - அக்ஷாணி - ப்ரஸாத்³யமாநாநி - ந - ஸ்வயம் - ஸ: - அபி - ஹம்ஸேநா - தத³பி காஶி - ஶிவ: - சேத் - ந - காண்ட³: - அபோத்வத் - ஸ: - தம் - நயேத். ||

அந்வய:, அர்த²:.

| | |
|---|---|
| அக்ஷாணி | இந்திரியாமனது |
| ப்ரஸாத்³யமாநாநி | ஆன்மாவின்பிரேரணையோடு கூடிக்கொண்டு விஷயங்களை |
| விந்த³ந்தி | அறிகிறது |
| ஸ்வயம் | தானே |
| ந | அறிகிற தில்லை |

| | |
|---|---|
| ஸோ(அ)பி | அந்த ஆன்மாவும் |
| ஶம்புநா | பரமசிவத்தோடு கூடி அறிகிறது |
| ஶிவ: | பரமசிவம் |
| தத்விகாரிபி: | [பாலன - திரோதான] விகாரமுள்ளவரோடென்றால் |
| ந | இல்லை |
| காந்த: | காந்தமானது |
| க்ரியாவாந் | இரும்பை [சேஷ்டிப்பிப்பதுபோல்] |
| ஸ: | அந்தப் பரமசிவம் |
| தம் | அந்த ஆன்மாவை |
| நயேத் | விகாரப் படுத்துவர் (௫) |

[பசுலக்ஷணமுடிந்தது]

ஷஷ்டஸூத்ரம்.

ஸூ — த்ருஶ்யம் - சேத் - அஸத்பாவ: - அத்ருஶ்யம் சேத் - ஜடோ - ஹ்யஸத் - ஶம்போ: - தத்ரூபேண - ஜ்ஞேயம் - ஶிவம் - விது: - புதா: ||

அந்வய: அர்த்த:

| | |
|---|---|
| + ஶம்போ: | பரம சிவத்தினுடைய |

+ ஶம்-சுகம்;—பவ: = பவதி-உண்டாகிறது=சுகத்தை உண்டாக்குகிறவன் என்பது கருத்து.

| | |
|---|---|
| 𑌰𑍂𑌪𑌂 | [ஞான]ரூபமானது |
| 𑌅𑌦𑍃𑌶𑍍𑌯𑌤𑍍𑌵𑌾𑌚𑍍𑌚 | காணக்கூடாததனால் |
| 𑌅𑌸𑌤𑍍𑌵𑌃 | [சச விஷாணம் போல்] பொய்ப் பொருளாம் |
| 𑌦𑍃𑌶𑍍𑌯𑌤𑍍𑌵𑍇𑌚 | காணக்கூடுமென்றால் |
| 𑌜𑌡𑌤𑌾 | ஜடபதார்த்தமாக |
| 𑌭𑌵𑍇𑌤𑍍 | ஆகும் |
| 𑌤𑌦𑍍𑌵𑍍𑌯𑌤𑌿𑌰𑍇𑌕𑍇𑌣 | அறியப்படாததும் |
| 𑌜𑍍𑌞𑍇𑌯𑌂 | அறியப் பட்டது மான- இரண்டுவகைக்கும் வேறாக |
| 𑌜𑍍𑌞𑌾𑌨𑌿𑌨𑌃 | [சிவ] ஞானிகள் |
| 𑌶𑌂𑌭𑌵𑌾𑌃 | பரமசிவத்தை |
| 𑌵𑌿𑌦𑍁𑌃 | அறிகிறார்கள். (௬) |

𑌪𑌦𑌚𑍍𑌛𑍇𑌦𑌃.

௭ — 𑌨 - 𑌅𑌸𑌤𑍍 - 𑌚𑌿𑌤𑍍 - 𑌸𑌨𑍍𑌨𑌿𑌧𑍌 - 𑌕𑌿𑌂𑌚𑌨 - 𑌨 - 𑌵𑌿𑌤𑍍𑌤𑌃 - 𑌤𑍇 - 𑌉𑌭𑍇 - 𑌮𑌿𑌥𑌃 - 𑌪𑍍𑌰𑌪𑌞𑍍𑌚𑌶𑌿𑌵𑌯𑍋𑌃 - 𑌵𑍇𑌤𑍍𑌤𑌾 - 𑌯𑌃 - 𑌸𑌃 - 𑌆𑌤𑍍𑌮𑌾 - 𑌤𑌯𑍋𑌃 - 𑌪𑍃𑌥𑌕𑍍

| 𑌅𑌨𑍍𑌵𑌯𑌃. | 𑌅𑌰𑍍𑌥𑌃. |
|---|---|
| 𑌅𑌸𑌤𑍍 | பிரபஞ்ச மானது |
| 𑌚𑌿𑌤𑍍 | சித்தாகிய [ஞான சொரூப மாகிய] |
| 𑌸𑌨𑍍𑌨𑌿𑌧𑍌 | [சிவ]சந்நிதானத்தில் |

| | |
|---|---|
| ந | [பிரகாசிக்கிற] தில்லை |
| கிஞ்சித் | [பின்]யாதெனில் |
| தேந | அந்த |
| உபே | இரண்டும் [பிரபஞ்ச-சிவம் இரண்டும்] |
| இமௌ | ஒன்றுக்கொன்று |
| நவித்தஃ | அறிகிறதில்லை |
| ப்ரபஞ்சஶிவயோஃ | பிரபஞ்சசிவங்களை |
| வேத்தா | அறிகிறவன் |
| யஃ | எவனோ |
| ஸஃ | அவன் |
| தயோஃ | அந்தப்பிரபஞ்சசிவங்களுக்கு |
| ப்ருதக் | வேறான |
| ஆத்மா | ஆன்மாவென்று சொல்லத் தக்கவன். (எ) |

பதவிச்சேதம்.

அ — விஷ்யா - ஸஹ - இந்த்ரியவ்ருத்தயஃ - ஸ்வாப - ந - வேத்தி - ஜ்ஞப்தி - போதிதஃ - உத்க்ருஷ்டாநு - ஶரணா - ஸஞ்சந்ந்யஃ - முமுக்ஷுஃ - ப்ராஸ்போதி - தத்பதம். ||

ஸாந்வயம். கருத்து.

| | |
|---|---|
| முமுக்ஷுஃ | முமுக்ஷுவானவன் |

| | |
|---|---|
| இந்த்ரியவ்யாதை: | {இந்திரியங்களாகிற வேடர்களோடு |
| ஸஹ | கூட |
| உஷித்வா | இருந்து |
| குருணா | {ஆசாரிய ரூபமான [சிவத்தாலே] |
| ஸ்வம் ந வேத்ஸி | {உன்னுடைய சொரூபத்தை அறிகிலை |
| இதி | என்று |
| போதித: | போதிக்கப்பட்டவனாய் |
| தாந் | {இந்த இந்திரியங்களாகிற [வேடர்களை] |
| த்யக்த்வா | விட்டு |
| அநந்யஸந் | {சிவத்தைக் காட்டிலும் வேறுகிறவனைக் கொண்டு |
| தத்பதம் | அந்த [சிவ] சொரூபத்தை |
| ப்ராப்நோதி | அடைகிறான். (௮) |

பதச்சேதம்.

௯ — சித் - த்ருசா - ஆத்மநி - த்ருஷ்ட்வா - ஈசம் - த்யக்த்வா - வ்ருத்திம் - மரீசிகாம் - லப்த்வா - சிவ பதச்சாயாம் - த்யாயேத் - பஞ்சாக்ஷரீம் - ஸுதீ: -

| அந்வயம். | அர்த்தம். |
|---|---|
| ஸுதீ: | [சிவ] ஞானமுள்ளவன் |

| | |
|---|---|
| மரீசிகாம் வ்ருத்திம் | காணலுக் கொப்பாகிய [பஞ்சேந்திரிய] வியாபாரத்தை |
| த்யக்த்வா | விட்டு |
| த்ருஶா | ஞான திருஷ்டியினால் |
| ஸ்வஸ்மிந் | தன்னிடத்தில் |
| பரம்ஶிவம் | பரமசிவத்தை |
| த்ருஷ்ட்வா | பார்த்து |
| ஶிவபதச்சாயாம் | பரமசிவத்தின் பாத நிழலை |
| ஶ்ரித்வா | அடைந்து |
| பஞ்சாக்ஷரீம் | பஞ்சாக்ஷரத்தை |
| த்யாயேத் | தியானிக்கவேண்டியது |

பதச்சேத:

௰௨ — ஶிவேந - ஐக்யம் - கத: - வஶீ - தந்மயீ - நஶ: - ஸ்வக்ருத்ய: - ப்ரஸாதாத்ஸம்ஸ்ப்ருஷ்ட: - ஸர்வ ஸாந்நித்யமீஶதே. ||

அந்வய: — அர்த:

| | |
|---|---|
| வஶீ | [அந்தக்கரணத்தை] வஶீகரித்தவன் = வசப்படுத்தினவன் |
| ஶிவேந | பரமசிவத்தோடு |
| ஐக்யம் | ஐக்கியத்தை |

| | |
|---|---|
| யுதஃ | அடைந்தவனும் |
| மலமாயாத்யஸம்ஸ்ப்ருஷ்டஃ | [ஆணவ] மலத்தாலும் - மாயையினாலும் - கர்மத்தாலும் - தொடப்படாதவனாகவும் |
| ஸ்வாதீநஃ | பரமசிவத்தினிடத்திலேயே ஸ்வாதீனமான |
| ஸ்வவ்ருத்திகஃ | தன்னுடைய வியாபாரத்தை யுடையவனாய் |
| ஸ்வாநந்தாநுபூதிமாந் | [சிவ ஸ்வரூப மான] தன்னுடைய அநுபவத்தை யுடைத்தானவனாய் |
| பவதி | ஆகிறான். (௪௦) |

ஶ்லோகம்.

௪௧ — நேத்ரைஃ - ஸம்யுதஃ - ச - ஆத்மா - தஸ்ய - ஸம்யுதா - ஶிவஃ - ஸ்வஸ்ய - ஸ்வஸ்ய - பாஶம் - ஶக்திம் - கார்யார்த்தம் - ஆத்மோபகாரகே ||

| அந்வயம், | அர்த்தம். |
|---|---|
| ஆத்மா | ஆன்மாவானவன் |
| நேத்ரைஃ | கண்களை |

| | |
|---|---|
| மூலம் | ஶிவஜ்ஞாநபோதம் |
| ஜ்ஞாபயிதஃ | [ஞாபகஞ் செய்கிறவன்] அறிவிக்கிறவன் |
| தஸ்ய | அந்த ஆன்மாவையும் |
| ஶிவஃ | பரமசிவமானவர் |
| ஜ்ஞாபயிதா | அறிவிக்கிறார் |
| தஸ்மாத் | ஆகையால் |
| ஸ்வோபகாரகே | ஆன்மா [தனக்குப்போகமோக்ஷங்களை] உபகாரஞ் செய்கிற |
| தஸ்மிந் | அந்தப்பரமசிவத்தினிடத்திலே |
| காடாம் | திருடமான |
| பக்திம் | அன்பை |
| குர்யாத் | செய்யவேண்டியது. (௧௧) |

ஸமாப்தம்.

மூலம் — ரௌரவே - ப்ராமாண்யே - ஸதஃ - ஶேஷம் - ஹ்ருதயம் - ஶேஷம் - ஶி[illegible]யம் - ஸாரம் - விஸ்ருஷ்டம் - ஶிவஜ்ஞாநபோதே [illegible] ஸேவா யோஜிதம்.

| அந்வயம். | அர்த்தம். |
| --- | --- |
| முமுக்ஷுபி: | முக்தியின் பொருட்டு |
| ஸத: | [ஞான்சிவா] சாரியனை |
| ப்ராப்ய | அடைந்து |
| தேஷாம் | [அந்த]சைவர்களுடைய |
| வேஷம் | [பஸ்ம- ருத்தி ராக்ஷாதி] அடையாளங்களையும் |
| ஶிவாலயம் | சிவாலயத்தையும் |
| பஜேத் | தொழவேண்டியது |
| ஏவம் | இந்தப் பிரகாரம் |
| ஶிவஜ்ஞாநபோதே | சிவ ஞான போதமென்கிற [சாஸ்திரத்தில்] |
| ஶைவஸித்தாந்தநிஷ்டயா | சைவ சித்தாந்தத்தின் முடிவை |
| வித்யாத். | அறியவேண்டியது. (கஉ) |

ஶிவஜ்ஞாநபோதவ்யாக்யாநம்

ஸம்பூர்ணமாஸீத்.



சிவமயம்.

# சிவஞானபோதம்.



## க—வது, சூத்திரம்.

அவனவளதுவெனு மவைமூவினைமையிற்
றோற்றியதிதியே யொடுங்கிமலத்துளதா
மந்தமாதி யென்மனார்புலவர்.

| அதிகரண மென்னும் கண்ணழிவு. | வார்த்திகம் என்னும் பொழிப்புரை. |
|---|---|
| க—அவ னவ ளதுவெனு மவை மூவினைமையின் | ஈண்டுத்தோற்றமும் ஈறும் உள்ளதன்பாலே கிடத்தலின் - உளதாய் ஒருவ னொருத்தியொன் றென்று சுட்டப்பட்ட பிரபஞ்ச முற்பத்தி திதி நாசமுடைத் தென்றது. |
| ௨—தோற்றிய திதியே யொடுங்கி மலத்து உளதாம் | இனி இல்லதற்குத் தோற்றமின்மையின் உள்ளதற்குச் செய்வோரின்றிச் செய்வினையின்மையின் - ஒடுங்கினசங்காரத்தின்வழியல்லது உற்பத்தி யில்லை யென்றது. |
| ௩—அந்த மாதி யென்மனார் புலவர். | இனிச் சுட்டுணர்வாகிய பிரபஞ்சஞ் சுட்டுணர்வன்றி நின்ற சங்காரத்தின் வழியல்லது சுதந்தரமின்றி நிற்றலான் - சங்காரமே முதலென்றது. |

கருத்துரை.

என்பது சூத்திரம் என்னுதலிற்றோவெனின்,—சங்காரகாரணனாயுள்ள முதலையே முதலாக வுடைத் திவ்வுலகமென்பதுணர்த்துத னுதலிற்று.

இதன் பொழிப் புரைத்துக்கொள்க.

சூர்ணிகை என்னும் கருத்துரை.

தொகை.

சகம் பிறப் பிருப் பிறப்பாகிய முத்தொழிலை யுடையது. (க)

அது அரனாலே யுண்டாயது. (உ)

மற் றிருவரு முத்தொழிற் பவிவர்கள். (ந)

க—சூத்திரம், அதிகரணம் - ந க்கு சூர்ணிகை ந,

உ—வது, சூத்திரம்.

அவையேதானே யாயிருவினையிற்
போக்குவரவு புரியவாணையி
னீக்கமின்றி நிற்குமன்றே.

க—அவையே தானேயாய் — ஈண்டு அத்துவித மென்ற சொல்லானே யேக மென்னின் ஏகமென்று சுட்டுவ துண்மை யின், அத்துவித மென்ற சொல்லே யந்நிய நாத்தியை யுணர்த் துமாயிட்டு - இவ்வான்மாக்கள்ப லவு முதல்வன் முனேயாய் நிற்கு மென்றது.

உ—ஆணையின் இருவினை யின் — இனி இவ்வான்மாக்களுக் கி ருவினை முதல்வனுணையின் வரு மென்றது - ஒருநகரியைக் காப் பான் பாடிகாவலிட்டாங்கு அ வை யவன தாக்கினை யாதலான்

ந—போக்கு வரவு புரிய — இனி இவ் வான்மாக்கண் மா றிப் பிறந்து வருமென்றது. - தோற்றமு மீறு முள்ளதற் கல்ல து உளதாத லின்மையான்,

ச — நீக்கமின்றி நிற் கும். — இனி நீக்கமின்றி நிற்குமன் றேயென்றது- அவன் ஏகானே க மிரண்டு மின்றிச் சர்வ விய பியாய் நிற்றலான்

## ௩—வது, சூத்திரம்.

உளதிலதென்றலி னெனதுடலென்றலி
னைம்புலனொடுக்க மறிதலிற்கண்படி
லுண்டிவினையின்மையி னுணர்த்தவுணர்தலின்
மாயாவியந்திர தனுவினுளான்மா.

க—இலதென்றலின் ஆன்மா வுளது

ஈண்டு இலதென்றலின் ஆன்மா வுளதென்றது - எவற்றினையும் அன்றன்றென விட்டு ஆன்மா இலதென்றுநிற்பது உளதாதலின் அதுவே அவ்வான்மாவாமென்றது.

உ—எனதுடல் என்றலின் ஆன்மா வுளது.

இனி எனதுடலென்றலின் ஆன்மா வுளதென்றது - என் பதி என் மனை என்றாற்போல; என்கை என்கா லென நிற்பதுளதாதலின், அதுவே அவ்வான்மாவாமென்றது.

௩—ஐம்புலன் அறிதலின் ஆன்மாவுளது

இனி ஐம்புல னறிதலின் ஆன்மாவுளதென்றது - ஐம்புலனாகிய சத்த பரிச ரூப ரச கந்தங்களை இந்திரியங்கள் ஒன்றறிந்த தொன்றறியாமையின், இவ்வைந்தினு மைம்பயனு மறிவ துளதாதலின், அதுவே அவ் வான்மாவா மென்றது.

௩-ஏ-ன்—ஆன்மப்பிரகாச முணர்த்துத லுகலிற்று.

இல்லை யென்கின்ற வறிவுடனே சொல்லுகையினாலே யறிவுயிருண்டு. (க)

எனதுட லென்ற பொருட்பிரிதின் கிழமையாகச் சொல்லுகையினாலே, உடற்கு வேறுயிருண்டு. (உ)

ஐந்தையு மொருவனே யறிகையின் ஒவ்வொன்றை மாத்திர மறிகின்ற வைந்திற்கும் வேறு யிருண்டு. (௩)

௪—ஒடுக்க மறிதலின் ஆன்மா வுளது

இனி ஒடுக்க மறிதலின் ஆன்மா வுளதென்றது - கனவின்கட் கனவு கண்டாமென்றுங் கண்டில மென்றும் நிற்ப துளதாதலின் அதுவே யவ்வான்மாவா மென்றது.

௫—கண்படில் உண்டிவினை யின்மையின் ஆன்மா வுளது

இனி கண்படி லுண்டி வினை யின்மையி னான்மா வுளதென்றது -ஒடுங்கின விடத்து இன்ப துன்பஞ் சீவன்பிரகிருதிக் கின்மையின், ஒடுங்காதவிடத்துஇன்ப துன்பஞ் சீவியாநிற்ப துளதாதலின், அதுவேயவ்வான்மாவா மென்றது.

௬—உணர்த்த உணர்தலின் ஆன்மா வுளது

இனி உணர்த்த வுணர்தலி னான்மா வுளதென்றது--அவ னறிந்தாங் கறிவனென் றறிவிக்க வறிந் துபதேசியாய் நிற்ப துளதாதலின் அதுவே யவ்வான்மாவா மென்றது.

௭—மாயா வியந்திர தனுவினுள் ஆன்மா வுளது.

இனி மாயா வியந்திர தனுவி னுளான்மாவுள தென்றது - அவை தாம் வெவ்வேறுபெயர் பெற்று நிற்றலான்.

கனவுடலை விட்டு நனவுடலி லே வருகையினாலே அக்கனவுட லுக்கு வேறா யுயிருண்டு. (௪)

நித்திரையிலும் பிராணவா யுத் தொழிற் பண்ணவுஞ் சரீரத் திற்குப் புசிப்புந் தொழிலு மில் லாதபடியினாலே, பிராணவாயு வுக்கு வேறா யுயிருண்டு. (௫)

மறந்து மறந்து நினைக்கின்ற படியினாலே மறவாம லிருக்கிற வரனுக்கு வேறா யுயிருண்டு (௬)

எல்லாத் தத்துவங்களுக்கும் வெவ்வேறு பெய ரிருக்கிற படி யினாலே, அந்தத் தத்துவங்க ளுக்குவேறா யுயிருண்டு. (எ)

௩—சூ - ம்,
அ - எக்கு, சூர் - எ.

ஆக சூ - ௩க்கு
அ - கச, சூர் - கச

## ச—வது, சூத்திரம்.

அந்தக்கரண மவற்றின்றன்றவை
சந்தித்ததான்மாச் சகசமலத்துணரா
தமைச்சரசேய்ப்பநின் றஞ்சவத்தைத்தே.

க—அந்தக்கரண மவற்றின்றன்று: ஈண்டு இவ் வான்மா வாவது அந்தக்கரணங்களாயுள்ள மனோ புத்தியாங்கார சித்தங்களிலொன்றன்றென்றது - அவை தாம் பிரகாசமாய் நின்றே யப்பிரகாசமாய் நிற்றலான்.

உ— சகசமலத் துணராது (அமைச் சர சேய்ப்ப) அவை சந்தித்தது ஆன்மா: இனி இவ்வான்மா சகசமலத்தினு லுணர்வின் றென்றது - அதுதான் ஞான திரோதகமாய்மறைத்துக்கொடு நிற்றலான்.

ந—அமைச் சர சேய்ப்ப நின் றஞ்சவத்தைத்தே: இனி இவ்வான்மா சாக்கிரஞ் சொப்பனஞ் சுழுத்தி துரியந் துரியாதீதமாயுள்ள பஞ்சாவத்திதனாய் நிற்குமென்றது -; அதுதான் மலசொரூபத்தின் மறைந்து அரூப சொரூபியாய் நிற்றலான்.

## ரு—வது, சூத்திரம்.

விளம்பியவுள்ளத்து மெய்வாய்கண்மூக்
களந்தறிந்தறியா வாங்கவைபோலத்

சூ - எ - ன்—இருவாறது.

அந்தக்கரணங்களுக் குயிருட னேகூடி ஞானந்தொழி லில்லாதபடியினாலே, அந்தக்கரணங்களுக்கு வேறா யுயிருண்டு. (க)

மலமறைப்பா லுயிர்க் கறிவில்லை (உ)

உயிர் மூன்றவத்தைப்படும் (ங)

சா— சூ - ம்,
அ - ஙக்கு, சூர் - ங.

ஆக சூ - சக்கு
அ - கஎ, சூர் - கஎ.

காந்தமுணர்வின் றமியருள்
காந்தங்கண்ட பசாசத்தவையே.

க—விளம்பிய வுள்ளத்து மெய் வாய் கண் மூக் களந் தறிந் தறியா

ஈண்டு ஐயுணர்வுக ளான்மா வா லுணருமென்றது - அவற்றா லான்மா வொற்றித்துக் காணினல்லது அவை யொன்றையு மறியா வாகலான்.

உ—ஆங் கவைபோலத் தாந்தமுணர்வின் றமியருள் காந் தங் கண்ட பசாசத் தவையே.

இனி இவ்வான்மா தன்னாலே யுணருமிந்திரியங்களைப்போலத் தானுந்தன்னையுணராது நிற்றலால் இதுவுந் தமது முதலாலேயுணருமென்றது.

## ௬—வது, சூத்திரம்.

உணருருவசத்தெனி னுணராதின்மையி
னிருதிறனல்லது சிவசத்தாமென
விரண்டுவகையி னிசைக்குமன்னுலகே.

க—உணருரு வசத்தெனி னுணரா தின்மையின்

ஈண்டு அறிவினா லறியப்பட்ட சுட்டு அசத்தென்றது-அவை தாம் பிரகாசமாய் நின்றே யப்பிரகாசமாய் நிற்றலான்.

உ—இருதிற னல்லது சிவ சத்தாமென விரண்டு வகையி னிசைக்கு மன்னுலகே.

இனிப் பிரகாசத்தினுக்குப் பிரகாசிக்க வேண்டுவ தின்மையானும் அப்பிரகாசத்தினுக்குப் பிரகாசமின்மையானும் இவ்விரண்

சூ - எ - ன்—இவ் வான்மாக்களிடத்துத தமது முத லுபகா ரமுணர்த்துத லுதலிற்று.

உயிராலே தத்துவங்க ளெல்லாந் தொழில் செய்யும். (க)

ரு—சூ - ௩,
அ - ௨க்கு, சூ - ௨

அரனாலே வுயிர்க ளெல்லா மறியும். (௨)

ஆக சூ - ௫க்கு
அ - கக; சூ - கக

சூ - எ-ன்—சத்தும் அசத்தும் வரைசெய் துணர்த்துதனுதலிற்று.

உயி ரறிவினாலே யறியப்பட் டவெல்லா மழியும். (௩)

தென்மையு மின்றி வாக்கு மனோ
திதகோசரமாய் நின்ற வதுவே
சத்தாயுள்ள சிவமென் றுணரற்
பாற்று.

## எ—வது, சூத்திரம்.

யாவையுஞ்சூனியஞ் சத்தெதிராதலிற்
சத்தேயறியா தசத்திலதறியா
திருதிறனறிவுள திரண்டலாவான்மா.

௧—யாவையுஞ் சூனியஞ் சத்தெதி ராதலிற் சத்தேய றியாது

ஈண்டுச் சத்தினிடத் தசத்து ப் பிரகாசியா தென்றது - மெய்யினிடத்துப் பொய் யப்பிரகாசமாய் நிற்றலான்.

௨—அசத் தில தறியாது

இனி யசத்திணுக் குணர்வின் றென்றது -அதுதா னிருபிக்கி லின்றாகலான்.

௩—இருதிற னறிவுள திரண்டலா வான்மா.

இனி இருதிறனறிவுள திரண்டலாவான்மா வென்றது- இவ்விரண்டினையு மறிவதா யுடதேசியாய்நின்ற வறிவு இரண்டன்பாலு முளதாய்,உள்ள அதுவே யவ்வான்மாவாமென்றது.

௩—ஞ - ம்,
அ - உக்கு, சூர் - உ.

அப்பிரமேயமாக வறியப்பட் ௨௧ சூ - ௩ ச்கு
டவனே யரன். (௨) அ - உக, சூர் - உக.

சூ - எ - ன்—மேலதற்கோர் புறனடை யுணர்த்துத னுதலிற்று.

அரன்பாசத்தை யநுபவியான்.

பாசம் அரனை யநுபவியாது (௨)

எ—சூ - ம்,
அ - ௫க்கு, சூர் - ௫.

உயிர் அவ்விரண்டினையு மநுபவி ௨௧ சூ - எக்கு
க்கும். (௩) அ - உச, சூர் - உச.

## அ—வது. சூத்திரம்.

ஐம்புலவேடரி னயர்ந்தனை வளர்ந்தெனத்
தம்முதல்குருவுமாய்த் தவத்தினி லுணர்த்தவிட்
டந்நியமின்மையி னரன்கழல்செலுமே.

க—தவத்தினி லுணர்த்த

ஈண்டு இவ்வான்மாக்கட்கு முற்செய் தவத்தான் ஞானநிகழு மென்றது - மேற் சரியை கிரியா யோகங்களைச் செய்துழி நன்னெறியாகிய ஞானத்தைக் காட்டி யல்லது மோக்ஷத்தைக் கொடா வாகலான்.

உ—தம் முதல் குருவுமாய்

இனி இவ்வான்மாக்களுக்குத் தமது முதல்வனே குருவுமா யுணர்த்து மென்றது - அவன் அந்நியமின்றிச் சைதன்னிய சொரூபியாய் நிற்றலான்.

ங—ஐம்புல வேடரின் அயர்ந்தனை வளர்ந்தென

இனி இவ்வான்மாக்கள் ஐயுணர்வுகளான் மயங்கித் தம்மை யுணரா வென்றது - அவை தாம் பளிங்கிலிட்ட வண்ணம்போல், காட்டிற்றைக் காட்டி நிற்றலான்.

௪—விட்டந்நிய மின்மையின் அரன்கழல் செலுமே.

இனி இவ்வான்மா தன்னை யிந்திரியத்தின் வேறுவான் காணவே தமது முதற் பாதத்தை யணையுமென்றது — அவை தாம்

இ - ள் - ஞானத்தினை யுணரு முறைமையினை யுணர்த்துகின்றது.

உயிர்க்கு நல்லறிவு தவத்தினாலே வரும். (௧)

உயிர்க்குச் சற்குருவாய் வருவ தரனே. (௨)

உயிர் பஞ்சேந்திரியங்களைப் பற்றுகையினாலே தன்னையு மறிய மாட்டாது. (௩)

ஊசல் கயிறற்றாற் றய்தனாயே
யாந் துணையான்.

## கூ—வது. சூத்திரம்.

ஊனக்கண்பாசமுணராப்பதியை
ஞானக்கண்ணினிற் சிந்தைநாடி
யுராத்துனைத்தேர்த்தெனப் பாசமொருவத்
தண்ணிழலாம் பதிவிதி
யெண்ணுமஞ் செழுத்தே.

க—ஊனக்கண் பாச முணராப் பதியை ஞானக் கண்ணினிற் சிந்தை நாடி

என்டு அம்முதலை ஞானக்கண்ணினாலே காண்க வென்றது—அவன் வாக்குமனதீத கோசரமாய்நிற்றலான்.

உ—உராத் துனைத்தேர்த்தெனப்பாசமொருவத் தண்ணிழலாம் பதி

இனி அசத்தாயுள்ளவன்னவே தங்களை யசத்தென்று காணவுளதாய்நிற்பது ஞான சொருபமென் றுணரற்பாற்று.

ந—விதி யெண்ணு மஞ்செழுத்தே.

இனி இவ்விடத்து ஸ்ரீபஞ்சாக்ஷரத்தை விதிப்படி யுச்சரிக்க வென்றது,— இவ்வான்மாக்களுக்கு ஞானம் பிரகாசித்தும் அஞ்ஞானத்தை வேம்புதின்ற புழுப்போல நோக்கிற்றை நோக்கி நிற்குமாதலின், அது நீக்குதற் கென்க்கொள்க.

உயிர் பஞ்சேந்திரியங்களிற் ப
ற்றற்றாற்றன்னையுமறியும். (௫)

அ — சூ - ம்,
அ - ௫க்கு, சூர் - ௫.

ஆக சூ - அ - க்கு
அ - ௨௮, சூர் - ௨௮.

சூ - ௭ - ன் — ஆன்மசுத்தி பண்ணுமா றுணர்த்துதனுத
லிற்று.

உயிர் அரன் ஞானத்தினாலே
யே அரனைக் காணும். (௧)

உயிர் பாசத்திலே பற்றற்றால்,
அரன் வெளிப்படுவன். (௨)

௯ — சூ - ம்,
அ - ௩க்கு, சூர் - ௩.

பஞ்சாக்ஷர ஜபம் பண்ணினால்,
வாசனாமலம் போம். (௩)

ஆக சூ - ௯க்கு
அ - ௩௧, சூர் - ௩௧.

## ௧௦—வது சூத்திரம்.

அவனேதானே யாகியவந்நெறி
யேகனாகி யிறைபணிநிற்க
மலமாயைதன்னொடு வல்வினையின்றே.

௧—அவனே தானேயாகி ய வந்நெறி யேகனாகி

ஈண்டுப்பரமேஸ்வரன் இவ்வான்மாவாய் நின்றமுறைமையால் அவனிடத்தேகனாய்நிற்கவென்றது - அவ்வாறு நிற்கவே யானெனதென்னுஞ் செருக்கற்றுஅவனது சீபாதத்தை யணையுமாகலான்.

௨—இறை பணி நிற்கமலமாயைதன்னொடு வல்வினை யின்றே.

இனி இறை பணி வழுவாது நிற்கவென்றது - அவனருளாலல்லது ஒன்றையுஞ் செய்யாராகவே யஞ்ஞான கன்மம் பிரவேசியா வாகலான்.

## ௧௧—வது சூத்திரம்.

காணுங்கண்ணுக்குக் காட்டுமுளம்போற்
காணவுளத்தைக் கண்டுகாட்டலி
னயராவன்பி னரன்கழல்செலுமே.

௧—காணுங் கண்ணுக்குக் காட்டுமுளம்போற் காணவுள்ளத்தைக்கண்டு காட்டலின்

ஈண்டுஇவ்வான்மாக்கள் அவனையின்றி யவைந்தொன்றையும் விடயியா வாகலான்-அவனும்அவற்றதுவிடயத்தை யுணருமென்றது

சூ - ஏ - ன் - பாசக்ஷயம் பண்ணுமா றுணர்த்துகின்றது.

அரனுடன் ஒன்றாகில். (க)

கo—சூ - ம்,
அ - உக்கு, சூர் - உ.

உன்றொழிலெல்லா மரன் ப
ணியென்றே கொள். (உ)

ஆக சூ - கo க்கு
அ - ருரு, சூர் - ருரு.

சூ - ஏ - ன் — பரமேஸ்வரனது பெருமையை யுணர்த்
துகின்றது.

ஞானிக்கு வருகின்ற விடயங்
களை யரனே யனுபவிப்பன். (க)

உ—அயரா வன்பி னரன் கழல் செலுமே. இனிப் பத்தியினான் மறவாதே த்த வவனது சீபாதத்தை யணையுமென்றது - அவ னன்றியமின் றிச் செய்வோர் செய்திப்பயன் விளைத்து நிற்றலான்.

## கஉ—வது சூத்திரம்.

செம்மலர்நோன்றாள் சேரலொட்டா
வம்மலங்கழீஇ யன்பரொடுமரீஇ
மாலறநேய மலிந்தவர்வேடமு
மாலயந்தானு மரனெனத்தொழுமே.

க—செம்மலர் நோன்றா ள் சேரலொட்டா வம்மலங் கழீஇ ஏண்டு ஆணவ மாயை காமிய மென்னு மலங்களைக் களைகவென்றது - அவைதாம் ஞானத்தினையுணர்த்தா தஞ்ஞானத்தை யுணர்த்துமாகலான்.

உ—அன்பரொடு மரீஇ இனி சிவபத்தர்களோடிணங்குகவென்றது -அல்லாதா ரஞ்ஞானத்தை யுணர்த்துவ ராகலான்.

ங—மாலற நேய மலிந்தவர்வேடமும் மாலயந்தானு மரனெனத் தொழுமே. இனிபத்தரது திருவேடத்தையுஞ் சிவாலயத்தையும் பரமேஸ்வரனெனக் கண்டு வழிபடுகவென்றது - அவன் மற்றிவ்விட

சிவ ஞானிகளையுஞ் சிவலிங்கத் தையுஞ் சிவனென்றே தேறி வழி படுக. (௧)

௧௨—சூ-ம்,
அ-௫, வா-௧.
சூ-௪.

வழிபடாமையை யொழிக(௪)

௪௧ சூ-௧௨க்கு
அ-௫அ, வார்த்திகம்-௫௯
சூ-௫௯,

வடநூற் சிவஞானபோதத்திற் கியைந்த
தமிழ்நூற் சிவஞானபோத சூத்திரத்திற்கு

பருத்துரை — அதிகரணம் — வார்த்திகம் — சூர்ணிகை

முடிந்தது.

---

சிவஞானமுனிவர் சிவஞானபோதச் சிற்றுரையில் ௧௨-சூ-ம், ௪-வது வார்த்திகத்தை, புறனடையெனச் சில பிரதிகளினும், ௬-வது அதிகரணமெனச் சிலபிரதிகளினும் கூறப்பட்டுளது: இதை ௧௨-வது சூ-முதலில், அதிகரணம் வகுத்தவிடத்தில், மூன்றதிகரணமெனப் பகுத்துளதாதலின் வார்த்திகமும் விசேடமும் கூறியவிடத்து நான்காமதிகரணமெனக் காட்டுதல் பொருந்தாது. வார்த்திகப் புறனடை எனவே கொள்ளல்வேண்டும்.

அற்றேல், அதிகரணத்தையேனும் நான்காய்ப் பகுத்துரைத்தல் வேண்டும்; அவ்வாறு பகுத்தற்கு அதிகரணங்களின்றாரமையான் வருவித்துரைத்த கடா விடையாகிய வார்த்திக மாத்திரமே கூறப்பட்டுளது.

ஆதலினால் ௧௨—சூ - ம், ௪ - அ, என்பதனை உரையாசிரியர் சிவஞானமுனிவர் எழுதிய சிற்றுரைப்பொருளின்படி புறனடையெனவே கொள்ளல் வேண்டும்.

சூர்ணை வகுத்தநுக்கிரகித்தவர் திருவெண்ணெய் நல்லூரில் திருவுருக்கொண்ட பொல்லாப்பிள்ளையார்.

வார்த்திக முரைத்தவர் திருவெண்ணெய் நல்லூர் மெய்கண்டதேவர்.

இங்ஙனம், சூர்ணிகையை அநுசரித்து வார்த்திகமும், வார்த்திகத்தை யனுசரித்து அதிகரணங்களும் வகுத்திருக்கின்றன.

சூத்திரங்கள் ௧௨—க்கும், சூர்ணிகையை வரையறுத்துச் செய்யுள் ஏற்பட்டிருக்கின்றது.

முதற் சூத்திர முதல் பதினொராஞ்சூத்திரம்வரை சூர்ணிகைக்குச் சரியாய் அதிகரணம் வகுத்து, இப் பன்னிரண்டாஞ் சூத்திரத்தில் மூன்றுஞ் சூர்ணிகையிலேயே அதிகரண முடிவுபெற்றுளது; ௪-வது சூர்ணிகைக்குப் பன்னிரண்டாஞ் சூத்திரத்திற் சென்றுநின்ற கருத்திற் கேய்ய வார்த்திக மாத்திரமே கூறியிருக்கின்றது. (அதிகரணம் கூறப்படவில்லை.)

ஆதலால் ௧௨-வது சூ-க்கு ௪-வது அதிகரணம் என்பது ஏட்டுப் பிரதிகளின் வழு; புறனடை என்பதே துணிபு.

சிவஞானபோத சூத்திரத்திற்கு

சூர்ணிகை - ௩௯, வார்த்திகம் - ௩௯, அதிகரணம் - ௩௮.

## அதிகரண வார்த்திகங்களின்

## பாடபேதம்.

க—சூ, க-அ. அவனவளதுவெனு மவைமூ விணைமையின் என்பதற்குப் பிரமாணங் கூறுகின்றது. பிரவஞ்சம் நித்தியம் என்றும், தோற்றமும் ஈறும் சுபாவம் என்றும், சார்பிற் றோன்றும் என்றும் சொல்வார்க்கு, அது அப்படி அன்று ஒரு கர்த்தாவை உடைத்து என்கின்றது.

உ—சூ, உ-அ. ஆணையி னிருவினை புரிய என்பதற்குப் பிரமாணங் கூறுகின்றது. இது கர்த்தாவினுடைய ஆணையினாலே ஒழிந்து ஆன்மாக்களுக்குப் புண்ணியபாவங்கள் கூடா என்பதும், அவை கூடுமிடத்து முன்புள்ளவை ஒழிந்து கூடா என்பதும், கூட்டுமிடத்து விருப்பு வெறுப்பின்றிக் கூட்டுவன் என்பதும் கூறுகின்றது.

உ—சூ, ங-அ. ஆணையிற் போக்குவரவு புரிய என்பதற்குப் பிரமாணங் கூறியது. இது ஆன்மாவுக்குத் தேகம் விட்டால் அறிவில்லை என்றும் மீண்டொரு தேகம் எடாதென்றும் சொல்வோர்க்கு அவை உண்டென்கின்றது.

ங—சூ' க-அ. இலதென்றலின் ஆன்மா உளதென்பதற்குப் பிரமாணம் கூறு முகத்தானே பதி பசு பாசமாகிய முதல் மூன்றும் இல்லை. உடம்பே அறியும் என்றவனைப்பற்றி அந்த மூன்று முதலும் உண்டென்றும், உடம்பறியாது உடம்புக்கு வேறாகிய ஆன்மா அறியுமென்றுங் கூறுகின்றது.

ங—சூ, எ-அ. மாயாகாரியங்களால் ஆக்கப்பட்டியன்ற சூத்திரப்பாவைபோலும் உடம்பின் கண்ணே அம்மாயா காரியங்கள் வெவ்வேறு பெயர் பெற்று நிற்றலால், அவ்வுடம்பிற்கு வேறாய் ஆன்மா உளது என்றது.

ச—சூ, க-ரை. இச்சூத்திரம் வேறு கூறவேண்டியது என்னை எனின், மேற்பிரமாணத்தால் அறிவிக்கப்பட்ட ஆன்மாவுக்கு இலக்கணங் கூறுகின்றது.

ச—சூ, க-அ. அந்தக்கரணம் அவற்றின் ஒன்றன்று என்றது. அவை தாம் பிரகாசமாய் நின்றே அப்பிரகாசமாய் நிற்றலான், அந்தக்கரணங்கள் தமக்குக் கீழுள்ளவற்றை நோக்கும் இடத்துச் சித்தாயும், தம்மை நோக்கும் இடத்து அசித்தாயும் நிற்றலால், என்றும் சித்தாயே நிற்கும் ஆன்மாவானது அந்தக்கரணங்களுள் ஒன்றன்றாம்.

ச—சூ, உ—அ. அவை சந்தித்தது ஆன்மா என்றது, அந்தக்கரணங்களின் இயல்பும், அவற்றிற்கு ஆன்மா வேறென்பதுங் கூறுகின்றது.

ச—சூ, ந—அ. ஆன்மா சகசமலத்தினால் உணர்வின்று என்றது, அதுதான் ஞானதிரோதமாய் மறைத்துக்கொண்டு நிற்றலான், அந்தச் சகசமலமாவது ஞானத்திற்குத் திரோதமாய் அதனை மறைத்துக்கொண்டு நிற்றலினால், ஆன்மா சகசமலத்தினால் உணர்வின்று என்றதாம்.

---

பாடபேதப் பிரதிகளில் ச—வது சூத்திரத்திற்கு அதிகரணம் ச ஆகக் கூறுவது பொருளுக்கேற்கக் கூறியுளதேனும், இதற்குச் சூரணிகை மூன்றேயன்றி நான்கு கூறப்படாமையின் அவ்வாறு பிரித்து அச்சிடவில்லை.

மெய்கண்டதேவரியற்றிய
வார்த்திகத்திற்கு
சிவஞானமுனிவர் — உரை.

## க—சூத்திரக் கருத்துரை.

எ-து. சூ-ம். எ-னின். சங்காரகாரணனாயுள்ள முதலையேமுதலாகவுடைத்து இவ்வுலகம் என்பதுணர்த்துத னுதலிற்று:—
இது சூத்திரக்கருத்துரைக்கின்றது.

இ-ள். நிவிர்த்திகலைமுதலிய பஞ்சகலைகளுட்பட்ட ஐவகைச்சங்காரத்துள் இறுதிக்கண்ணதாகிய மாசங்காரத்தைச் செய்யும் வினைமுதலாயுள்ள முதல்வனையே தனக்கு முதற்கடவுளாகவுடைத்து, அவனவளதுவென்று இவ்வாறு சுட்டியுணரப்படுவதாய உலகம் எனவேதாகமங்களுட் கூறப்படுவதனை அநுவாதவளவையா னுணர்த்துதலைக் கருதிற்று இச்சூத்திரம். எ-று.

ஏகாரம், இயைபின்மை நீக்குதற்கும், பிறிதினியைபு நீக்குதற்கும் பொதுவாய் நின்ற பிரிநிலை.

இதன்பொழிப்பு உரைத்துக் கொள்க.

இஃது இவ்வுரைமுகத்துக் கேட்போரால் உரைவகை பற்றிச் செய்து கோடற்பாலதொன்றனை அறிவுறுத்துகின்றது.

இ-ள். சூத்திரத்தின் பிண்டப்பொழிப்பு முன்னர்க் கண்ணழித்துரைக்கும் பொழிப்புரை பற்றி உரைத்துக்கொள்க. எ-று.

எனவே, இங்ஙனம் இருவகைப்படும் பொழிப்புரையுட் கண்ணழித்துக் கடாவிடைகளானுரைக்கும் வார்த்திகமாய பொழிப்புரை மாத்திரையே யாமீண்டுரைக்கின்றாம்; பிண்டமாகக்கொண்டுரைப்பதாய பொழிப்புரை இதுபற்றி யுணர்ந்துகோடல் எளிதாகலின், அஃதியா முரைக்கின்றிலம் என உரைமுகத்து மாணாக்கர்க்கு அறிவுறுத்தவாறாயிற்று.

இஃது, ஏனைச் சூத்திரங்களினும் உய்த்துக்கொண்டுணர்தற் பொருட்டு, முதற்கண் வைக்கப்பட்டது.

இச்சூத்திரத்துள் அவனவளதுவெனு மவை மூவினைமையின் என்பது ஓரதிகரணம், தோற்றிய திதியே யொடுங்கியுளதாம் என்பது மூன்றதிகரணத்தை யுள்ளடக்கி நிற்பதோரதிகரணம், அந்தமாதி யென்மனார் புலவர் என்பது ஓரதிகரணம், ஆக முக்கூற்றது இச்சூத்திரமென்றுணர்க. இம்மூன்றும் முறையே ஒன்றற்கொன் றேதுவும் பயனுமாய் ஒரு பொருண்மேல் வருதலின், ஒரு சூத்திரத்தாற் கூறினார்.

தன்னாற் கூறப்படும் பொருளும், அதன்கணையப்பாடும், அதற்குப் பிறர் கூறும் பக்கமும், அதனை மறுத்துரைக்குஞ் சித்தாந்தத் துணிவும், இயைபும், என்னும் இவற்றது நிலைக்களம் அதிகரணமெனப்படும்.

## க—சூ, முதலதிகரண வார்த்திகம்.

ஈண்டு, தோற்றமும் ஈறும் உள்ளதன்பாலே
கிடத்தலின்-உளதாய் ஒருவ னொருத்தி யொன்
றென்று சுட்டப்பட்ட பிரபஞ்ச முற்பத்தி தி
தி நாசமுண்டத் தென்றது.

அந்வயம்—ஈண்டு, உளதாய் ஒருவன் ஒருத்தி
ஒன்று என்று சுட்டப்பட்ட பிரபஞ்சம் உற்ப
த்தி திதி நாசமுடைத்து என்றது.

எ-து. மே-ள். எ-னின். மூவினையுடைத்தோ அன்றோ வென்னும் ஐயப்பாட்டின்கண், நித்தமாய்க் காணப்படும் பிரபஞ்சத்தை மூவினையுடைத்தென்றல் பொருந்தாது; என மீமாஞ்சகரும் உலோகாயதருங் கூறுங்கடாவையாசங்கித்து 'அவனவளது' என்னுஞ் சூத்திரத்தின் முதற்கூற்றைக் கண்ணழித்துரைத்து மேற்கோடனுதலிற்று.

இ-ள். வெ-டை.

ஒருவனென்றும் ஒருத்தியென்றும் ஒன்றென்றும் இவ்வாறு அவயவப்பகுப்புடைத்தாயும், பலவேறு வகைத்தாய்ச் சடமாயும், சுட்டியறியப்படுவதாயுமிருத்தலின், இம்மூன்றேதுவானும் பிரபஞ்சந் தோன்றி நின்றழியுமென்பது துணியப்படுமென்பார், உளதாயொருவ னொருத்தி யொன்றென்று சுட்டப்பட்ட பிரபஞ்சமென உடம்பொடு புணர்த்தோதினார்.

உளதாய்ச் சுட்டப்பட்ட வெனவியையும். உளதாகச் சுட்டப்படுதல், முயற்கோடு முதலியனபோலத் திரிவையங்களானன்றி மெய்யாகச் சுட்டப்படுதல்.

தோற்றமும் ஈறும் உள்ளதன்பாலே கிடத்
தலின்.

எ-து. ஏது எ-னின். காட்சியளவைக்கு எய்தாதனைப்பனவெல்லாம் பிரமாணமாகாவென உலோகாயதர் கூறுங்கடாவை யாசங்கித்துக் காட்சியளவைபற்றியும் மேற்கோளைச் சாதித்தனுதலிற்று.

இ-ள். உற்பத்தியும் நாசமுங் காணப்பட்ட திதியின் பக்கத்தே காணக் கிடத்தலின், உளதா யொருவ னொருத்தி யொன்றென்று சுட்டப்பட்ட பிரபஞ்சம் உற்பத்தி திதி நாசமுடைத்து என மேற்கொண்டது. எ-று.

---

௧—சூ, ௨-அ வா-ம்.

‘ இனி, இல்லதற்குத் தோற்றமின்மையின் உள்ளதற்குச் செய்வோரின்றிச் செய்வினையின்மையின் - ஒடுங்கின சங்காரத்தின் வழியல்லது உற்பத்தியில்லையென்றது.

என விங்ஙனஞ் சொற்பல்காலைப் பொருட்டுத் துணிந்தது ஆக வைத்துரைத்தாராயினும், பொருளியைபிற்கேற்ப இதனை மேன்றகிகரணமாக வைத்துரைப்பது ஆசிரியர் கருத்தெனக் கொள்க ; அஃதாமாறுகாட்டுதும்:—

இனி, உலகமுள்ளது என்றது.

எ-து. மே-ள். எ-னின். உலகம் இல்பொருளாய்த் தத்தஞ் சார்பிலே தோன்றியழிதல் இயல்பென்றலே அமைவுடைமையின், அது மூவினை யுடைத்தாயினும் தோற்றுவாரொருவனை யுடைத்தாதல் செல்லாது எனப் புத்தநூலார் சொல்லுங்கடாவை யாசங்கித்து 'இதி' என்னுஞ் சூத்திரக்கூற்றைக் கண்ணழித்துரைத்து மேற்கோடனுதலிற்று.

இ-ள். வெ-டை.

இல்லதற்குத் தோற்றமின்மையின்.

எ-து. ஏது எ-னின். உள்ளதாதல் யாங்ஙனம் என்னுங் கடாவை யாசங்கித்து மேற்கோளைச் சாதித்தனுதலிற்று.

இ-ள் இல்பொருளாகிய முயற்கோட்டிற்கு முக்காலத்துமுற்பத்தியின்மையின், ஈண்டுற்பத்தி காணப்படுதலான், உலகமுள்ளது என மேற்கொண்டது. எ-று.

இனி, உலகஞ் செய்வோனையுடைத்து என்றது.

எ-து. மே-ள். எ-னின். உள்பொருளெனப்பட்ட பிரபஞ்சம் தத்தமுதற்காரணத்தினின்றுந் தானே தோன்றியழியும், இதற்கொரு நிமித்தகாரணமாய் ஒரு கருத்தா வேண்டாம் எனச் சாங்கியர்கூறுங் கடாவையாசங்கித்து 'தோற்றிய' என்னுஞ் சூத்திரக் கூற்றைக் கண்ணழித்துரைத்து மேற்கோடனுதலிற்று.

இ-ள். வெ-டை.

உள்ளதற்குச் செய்வோரின்றிச் செய்வினையின்
மையின்.

எ-து. ஏது எ-னின். அதற்குப் பிரமாணமென்னை என்னுங் கடாவை யாசங்கித்து மேற்கோளைச் சாதித்தனுதலிற்று.

இ-ள். மண்முதலியவற்றினுள்ளதாகிய கடமுதலிய பொருட்குக், குயவன் முதலிய செய்வோனையின்றி வினைதன் முதலிய செய்தொழில் நிகழாமையின்; உலகம் இவ்வியல்பிற்றுகலான் இனி இவ்வுலகஞ்செய்வோனையுடைத்து என மேற்கொண்டது. எ-று.

இனி, ஒடுங்கின சங்காரத்தின் வழிபல்லது உற்பத்தியில்லை யென்றது.

எ-து. மே-ள். எ-னின். இத்துணையுங் கூறியவாற்றான், உலகத்தைத் தோற்றுவிப்பான் உண்டெனப்பட்ட கருத்தா திதிகருத்தா சிருட்டிகருத்தா முதலியோரில் ஒருவனே யாதலையும் எனப் பாஞ்சராத்திரி முதலியோர் கூறுங்கடாவை யாசங்கித்து 'ஒடுங்கியுளதாம்' என்னுஞ் சூத்திரகூற்றைக் கண்ணழித்துரைத்து மேற்கோடனுதலிற்று.

இ-ள். உலகம் தாேனொடுங்குதற்கு நிலைக்களமான சங்கார கருத்தாவினின்றன்றி உளதாகாது. எ-று.

ஒடுங்கினவென்னும் பெயரெச்சஞ் சங்காரமென்னும் இடப்பெயரோடு முடிந்தது. சங்காரம் ஆகுபெயர்.

அல்லதில்லை என்று எதிர்மறை முகத்தாற்கூறியது, வினைகட்வுளாரின் உளதாகாமை யாப்புறுத்தற்பொருட்டு.

இதனுள் ஒடுங்கின என்பதனாற் போந்த குறிப்பேதுவை புலப்படக்காணுமாறு.

ஆண்டு ஒடுங்குதலின்.

ஏ-து. ஏது. எ-னின். அதற்குப் பிரமாணமென்னை என்னுங்
டாரவை யாசங்கித்து மேற்கோளைச் சாதித்தனுதலிற்று.

இ-ள். யாது யாண்டொடுங்கும், அஃததனினுற்பத்தியாம்;
ண்ணிற்குடம்போலும் என்னும் அவிநாபாவத்தாற் பிரபஞ்
ஞ் சங்காரகாரணன்மாட் டொடுங்குதலின், மீளத் தோன்று
கால் ஆண்டுநின்றுந் தோன்றுதலே பொருத்தமுடைமையி
, அவ்வாறு மேற்கொண்டது. எ-று.

இவ்வாறு மூன்றதிகரணப் பொருளும் இரன்கட்போந்தவா
ம், இவ்வாறுரையாக்காற் பொருளிடைப்படாமையுந் நுண்
ணர்வாற் கண்டுகொள்க.

---

க—ரு, ரு-அ-வா-ம்.

இனி, சுட்டுணர்வாகிய பிரபஞ்சஞ் சுட்டுணர்
வின்றி நின்ற சங்காரத்தின் வழியல்லது சுத
ந்தரமின்றி நிற்றலான் - சங்காரமே முதலெ
ன்றது.

அ—இனி, சங்காரமே முதலென்றது.

ஏ-து. மே-ள். எ-னின். ஒடுங்கின சங்காரத்தினல்லதுற்பத்
யில்லை, எனவே சங்காரகருத்தா உலகிற்கு முதற்கடவுளெ
பது போந்ததாயினும், தேர்முதலாயின பலர் கூடிச்செய்யக்
ண்டலின்; அவற்றினும் அதிவிசித்திரமான உலகத்திற்கு ம
றுமத்தன்மையராய முதற்கடவுளர் உண்டெனக்கோடும் எ
னும் அநேகேசுரவாதிகண்முதலியோர் மதம்பற்றி நிகழுங்
டாவை யாசங்கித்து 'அந்தமாதி' என்னுஞ் சூத்திரக்கூற்றைக்
ண்ணழித்துரைத்து மேற்கோடனுதலிற்று.

இ-ள். சங்காரகருத்தா ஒருவனே உலகிற்கு முதற்கடவுளெ
றது. எ-று.

சங்காரம் ஆகுபெயர். ஏனையோர் முதல்வராகாரெனப் பிரித்தமையின் ஏகாரம் பிரிநிலைக்கண் வந்தது.

> சுட்டுணர்வாகிய பிரபஞ்சஞ் சுட்டுணர்வின்றி நின்ற சங்காரத்தின் வழி யல்லது சுதந்தரமின்றி நிற்றலான்.

எ-து. ஏது. எ-னின். அதற்குப் பிரமாணமென்னை யென்னுங்கடாவை யாசங்கித்து மேற்கோளைச் சாதித்தனுதலிற்று.

இ-ள். ஒன்றொன்றாய்ச் சுட்டியறிவதாகிய உருவும் அருவுமென் றிருவேறுவகைப்பட்ட பிரபஞ்சம், அவ்வாறு சுட்டியறிதலின்றி எவ்வுலகும் ஒன்றுபறிந்து நின்ற சங்காரகருத்தாவின் வழிப் பரதந்திரமாய் நிற்பதல்லது தனக்கெனச் சுதந்திரமுடைத்தாய் நிற்பதன்றாகலால்; சங்காரகாரணனொருவனே உலகிற்கு முதற்கடவுளன்றி, ஏனையோர் முதற்கடவுளரல்லரென மேற்கொண்டது. எ-று.

பிரபஞ்சத்திற்குச் சுதந்தரமின்மையுஞ் சங்காரகாரணனுக்குச் சுதந்திரமுண்மையும் ஏதுமுகத்தார் காட்டுவார் சுட்டுணர்வாகிய பிரபஞ்சமெனவும், சுட்டுணர்வின்றி நின்ற சங்காரமெனவும், ஈரிடத்தும் உடம்பொடு புணர்த்தோதினார். சுட்டுணர்வுடையதனைச் சுட்டுணர்வென்றது உபசாரம்.

ஈண்டுப் பிரபஞ்சமென்றது சேதனப்பிரபஞ்சத்தை; பிரிநிலையேகாரத்தான் விலக்குதற்குரியது அதுவே யாகலின்.

தேர் முதலாயின பலராற் செய்யப்படினும் அப்பலரும் ஒருவனேவல்வழி நின்றேசெய்ப வாகலானும், வேதத்துட் காரணவாக்கியங்களிற் சுட்டுணர்வினராகிய நாராயணன் இரணியகருப்பன் இந்திரன் அங்கி சூரியன் முதலியோரைக் காரணமென்றது குயவன்போல் அவாந்தரகாரணமாதல் பற்றியே

யாகலின் அவையெல்லாம் ஆகுபெயராற் சங்காரகாரணனாகிய முதற்கடவுளையே யுணர்த்தி நிற்குமாகலானும், செய்துஞ் செய்வித்தும் எல்லாத்தொழிற்கும் வினைமுதலாய் நிற்கு முதற்கடவுள் சங்காரகருத்தா வொருவனே யென்பது கருத்து.

---

உ—சூ. க - ரை.

எ-து. சூ-ம் எ-னின். புனருற்பவம் வருமா றுணர்த்துத னுதலிற்று.

எ-து. க-ரை. எ-னின். சூத்திரக் கருத்துணர்த்துத னுதலிற்று.

இ-ள். உலகம் ஒடுங்கியினின்றும் மீளவுளதாமாற்றை வகுத்துணர்த்து முகத்தானே துணைக்காரண முதலியன இல்வழி இறைவன் உலகிற்கு நிமித்தகாரணனாதல் சாலுமாறு யாங்ஙனம் என்னுங்கடாவை யாசங்கித்து, அவற்றதுண்மைக்குப் பிரமாணமுணர்த்துதனுதலிற்று இச் சூத்திரம். எ-று.

சூத்திரவிளைபும் இதனானே விளங்கும்.

ஒடுங்கியுளதா மென்றவழி ஒடுங்கியினின்றும் மீளவுளதாயது எவ்வாறென்று அவாய் நிற்றலின், அவ்வவாய் நிலைப்பற்றிப் புனருற்பவமே ஈண்டுக் கூறப்பட்டது.

இதனுள் அவையே தானேயாய் என்பதோரதிகரணம், ஆணையினிருவினையின் என்பதோ ரதிகரணம், போக்கு வரவுபுரிய என்பதோ ரதிகரணம், ஆணையி னீக்கமின்றி நிற்குமன்றே என்பதோ ரதிகரணம், ஆக நாற்கூற்றது இச் சூத்திரமெனக் கொள்க.

---

உ—சூ, க - அ - வா-ம்.

ஈண்டு, அத்துவித மென்ற சொல்லானே யேக மென்னின ஏகமென்று சுட்டுவ துண்மையின்,

அத்துவித மென்ற சொல்லே யந்நிய நாத்தி
யை யுணர்த்துமாயிட்டு - இவ்வான்மாக்கள்
பலவு முதல்வன் றனேயாய் நிற்கு மென்றது.

அந்—ஈண்டு இவ்வான்மாக்கள் பலவும் முத
ல்வன்றனேயாய் நிற்கும் என்றது.

ஏ-து. மே-ள். எ-னின். மேன் முதற்கடவுளல்லவென வில
க்கப்பட்டு நின்ற சேதனப்பிரபஞ்சமும் முதல்வனும், பொன்னு
ம் பணியும்போல் அபேதமோ, இருளும் வெளியும் போற் பேத
மோ, சொல்லும் பொருளும்போற் பேதாபேதமோ என்னுமைய
ப்பாட்டின்கண், அம்மூன்றனுள் ஒரோவொன்றேபற்றி அவ்வம்
மதத்தார் கூறும் கடாவை யாசங்கித்து 'அவையேதானேயா
ய்' என்னும் சூத்திரத்தின் முதற் கூற்றைக் கண்ணழித்துரைத்
து மேற்கோடணுதலிற்று.

இ-ள். வெ-டை.

ஈண்டும் இறட்டுற மொழிந்து கொள்க.

இதனானே, ஒருவிடயத்தைக் காணுங்கால் ஆன்மபோதம் க
ண்ணொளியெனத்தானென வேறின்றி உடனாய் நின்று காணுமா
றுபோல, முதல்வன் புனருற்பவஞ் செய்யுங்கால் உயிர்களோடு
உடனாய் நின்று செய்வனென்பதூஉம், பெறப்பட்டது.

அத்துவிதமென்ற சொல்லானே ஏகமென்னில்
ஏகமென்று சுட்டுவதுண்மையின் - அத்துவித
மென்ற சொல்லே அந்நிய நாத்தியை யுணர்த்
துமாயிட்டு.

எ-து. ஏது. எ-னின். முதல்வன் அவ்வாறு மூவகையுமாய் நி
ற்பனென்றற்குப் பிரமாணமென்னே என்னுங்கடாவை யாசங்கித்
து மேற்கோளைச் சாதித்தனுதலிற்று.

இ-ள். அத்துவிதமென்ற சொல்லின் அகரம் -இன்மை அன்
மை மறுதலை என்னு முப்பொருளுணர்த்துமன்றே அவற்றுள்

ருசு - ருள பக்கத்தில் உ—ரு. க-அ, த்தில்

அத்துவிதம் என்ற சொல்லானது, ந துவிதீயம்=அத்துவிதீயம் எனநின்றது.

அஃதாவது, ந லோபப்பட்டு அ தோன்றிற்று.

(லோபம் - கெடுதல்.)

இது, பாணினி. உ-வது அத்தியாயம், உ-ம் பாதம், சுஉ-வது நஞ், என்னும் சூத்திரவிதி.

உதாரணம். ந பிராமணஹ=அப்பிராம்மணஹ, ந பாம்சுல=அபாம்சுல.

(பாம்சுல=குற்றமுள்ளவன்.) எ-ம்.

சாந்தோக்கிய உபநிஷத்திலும், ஏகமேவா துவிதியம் என்பதில் ந துவிதீயம்=அத்துவிதீயம் எனவே உதஹரிக்கின்றது.

தமிழில் பேர் அகத்தியத்தினும் எழுத்திலக்கணக்
காண்டம் ரு-வது, வடபதப்படலத்தில்.

"எதிர்மறைவடசொற் கிசைந்த மொழிமுதல் - உயிர்வரிலந்து மொற்றிலவ்வுமாம்". என்னை, வடசொற்களில் அன்மைப் பொருளையுணர்த்துமிடத்து மொழிக்குமுதலில் உயிர்வரின் அந் உம், மெய்வரில் அ உம் தோன்றும் என்பதாம்.

உ - ம். ஆசாரமின்மை - அநாசாரம், ஆதியின்மை - அநாதி, என உயிர்முதல்மொழிக்கு அநும், களங்கமின்மை - அகளங்கம், களமின்மை - அகளம், யோக்கியமின்மை - அயோக்கியம் என மெய்முதல்மொழிக்கு அ—உம் வருவனவறிக.

அத்துவிதம் என்ற சொல்லினும் துவிதம் என்னும் மொழிக்

ரு - து - என்னுமெய்யெழுத்து முதலில்நின்றதால் எதிர்மறைப்பொருளை யுணர்த்தும்பொருட்டு ந கெட்டு அ தோன்றிற்று.

நேமிநாதம் எழுத்ததிகாரம் கஅ—செய்யுள்.

"நேர்ந்த மொழிப்பொருளை நீக்க வருநகரஞ், சார்ந் துடலாயிற் றன்னுடல்போஞ் - சார்ந்ததுதா, னுவியேற் றன்னுவி முன்னாகும்". எ-ம்.

வீரசோழியத்தில் சந்திப்படலம் கக - வது செய்யுள்.

"சொன்னமொழிப்பொரு ணீக்குநகரமச் சொன்முன்மெய்யேல் அந்நிலையாக வுடல்கெடுமாவி முன்னாகிலது, தன்னிலைமாற்றிடும்——வடமொழி வாசகத்தே" எ-ம். கூறியவிதியுங்காண்க.

இதனால் உ—ரு, க-அ, த்தில் கூறிய அத்துவிதம் என்ற சொல்லின்முன்நின்ற அ கரம் ந கெட்ட அ எனக் கொள்க.

இனி அத்துவிதீயம் என்பதற்கு இன்மையாகிய எதிர்மறைகூறவேண்டில் அநத்துவிதீயம் எனக்கூறல் வேண்டும். அதுவோ இரண்டுமின்மை ஒன்றுமின்மையைக்கூறி நாஸ்திகத்தைக்காட்டும்.

இவ்விதியினீங்கி இயல்பாய்வரும் வடசொற்களும் சில உள.

அவை:— ந க்ஷத்திரம் — க்ஷத்திரம் - நழுகாமலிருக்கிறது.

ந முசி — முசி விடுகிறது.

ந குலம் — குலம் சாதி.

ந கம் — கம் இந்திரியம்.

ந காம் — காம் போகிறது. எனவருவன.

இன்மைப் பொருள்பற்றி அத்துவிதமென்ற மொழிமாத்திரை யானே ஒரு பொருளென்றல் பொருத்தமுடைத்தெனில், நா னே தன்னை யொன்றெனக் கருதல்வேண்டாமையின், அவ்வா று கருதும் பொருள் வேறுண்டென்பது பெறப்படுதலானும்; எண்ணுப்பெயர்மேல் வந்த அகரம் - அன்மைப்பொருண்மாத்தி ரையே யுணர்த்திப் பொதுமையினிற்பதன்றி, ஏனைச்சொற்க ளின்மேல் வந்த அகரம்போல இன்மை மறுதலைப்பொருள்க ளை யுணர்த்துதல் வழக்கின்கணின்மையின், அத்துவிதமென் கின்றமொழி தானே பிறிது காரணம் வேண்டாது வேறின் மையை யுணர்த்தி நிற்குமாகலானும், ஈண்டிவ்வான்மாக்கள் பலவும் முதல்வன் றானேயாய் நிற்குமென மேற்கொண் டது. எ-று.

ஆகலானென்பதற்கு ஆயிட்டென்பது அக்காலவழக்குப்போ லும்; அற்றாகலினன்றே + "நீயோ செய்யாய் நின்மலனாயிட் டு" என்றார் வழிநூலாசிரியரும்; இனி "மழைபெய்து குள நிறைந்தது" என்புழிப்போல ஆயிடலாலென்பது ஆயிட்டெ னத் திரிந்ததென்றலுமொன்று.

எண்ணும்மை விரித்துரைக்க.

வேறின்றி உடனாதல் பெறப்படவே, பொருண்மையாற் பே தமென்பதூஉம் கலப்பினால் அபேதமென்பதூஉம் தாமேபோத ருமென்பது கருத்து.

---

உ—ரூ, உ - அ - வா-ம்.

இனி, இவ்வான்மாக்களுக்கு இருவினை முதல்
வனாணையின் வரும் என்றது.

எ-து. மே-ள். எ-னின். முதல்வன் அவ்வாறு உயிர்களோ

---

+ இருபாவிருபது. ச -செ. 'கூறியமூன்று'

டியைந்து நின்று புனருற்பவஞ் செய்யுங்கால் உலகத்துப்போல் அவனுக்குத் துணைக்காரணமுதலியன வேண்டப்படுமோ படாவோ என்னும் ஐயப்பாட்டின்கண், முதல்வனது சுதந்திரத்திற்கும் அளவிலாற்றற்கும் இழுக்காய் முடியுமாகலின், அவனுக்கு அவை வேண்டப்படா எனப் பரிணாம வாதிகள் கூறுங் கடாவை யாசங்கித்து 'ஆணையி னிருவினை யின்' என்னும் சூத்திரத்தின் இரண்டாங் கூற்றைக் கண்ணழித்துரைத்து மேற்கோடனுதலிற்று.

இ-ள். வெ-டை.

ஈண்டு இருவினையென்றது முற்பிறவிகளினீட்டப்பட்டு மாயையிற் கட்டுப்பட்டுக் கிடந்த புண்ணிய பாவங்களையென்க; எனவே, மாயையினுண்மையும் பெறப்பட்டது. இவை வேண்டப்படுதல்பற்றி முதல்வன் சுதந்திரத்திற்கு இழுக்கில்லையென்பார், முதல்வனாணையின் வரும் என்றார்.

ஒரு நகரியைக் காப்பான் பாடி காவலிட்டாங்கு
அவை அவனதாக்கினை யாகலான்.

எ - து. ஏது. எ - வின். ஆணையேயமையும், இருவினையெற்றுக்கு என்னுங் கடாவை யாசங்கித்து மேற்கோளைச் சாதித்தனுதலிற்று.

இ - ள். ஒரு பட்டணத்தைப் புரக்கும் வேந்தன் பாடி காவற்றொழிலைக் களைகணுவானொருவன் மாட்டு வைத்தாற்போல, எல்லாவறிவு முதன்மை யநுக்கிரகங்களுடையஅம்முதல்வன், புனருற்பவத்தைச் செய்வதாகிய தன தாணையை, அவ்விருவினைகண்மாட்டுவைத்து நடாத்துதலே முறையாகலான்; இனியிவ்வான்மாக்களுக்கு இருவினை முதல்வனாணையின் வரும் என மேற்கொண்டது. எ - று

முதல்வன் செய்யுஞ் செய்தியெல்லாம் உலகத்தோடொப்ப நிகழ்வனவாகலின் ஈண்டைக்கு அரசன்செய்தி உவமையாயிற்று.

பாடிகாவலாவது களைகணுவானொருவனைக்கொண்டு வேந்தன் செய்விப்பதொரு தண்டத்தொழில்விசேடம். அது × "கோடிகாவனைக் கூறாத நாளெல்லாம்—பாடி காவலிற் பட்டுக் கழியுமே" என்னுந் திருப்பாட்டானு மறிக. இஃதறியாதார் தத்தமக்கு வேண்டியவாறெல்லா முரைப்ப.

---

உ—சூ. ரு - அ - வாம்.

இனி, இவ்வான்மாக்கள் மாறிப் பிறந்து வருமென்றது.

எ-து. மேல். எ-னின். புனருற்பவம் சடத்துக்கன்றிச் சித்துக்குமுளதாயினன்றே முற்செய்வினையே ஈண்டைக்கு வருமென மேற்கூறிய தமையும், அஃதுண்டோ இல்லையோ என்னுமையப் பாட்டின்கட் குடமுடைந்தவழிக் குடாகாயம் ஆகாயத்தோடு கூடுமாறுபோல, உடம்பு நீங்கிய வழி உயிர் பிரமத்தோடு கூமென்னுஞ் சுருதிபற்றி, இறந்தவுயிர் மீளப் பிறப்பதில்லையெனக் கிரீடாப் பிரமவாதிகள் கூறுங் கடாவை யாசங்கித்து 'போக்குவரவு புரிய' என்னும் சூத்திரத்தின் மூன்றாங் கூற்றைக் கண்ணழித் துரைத்து மேற்கோடனுதலிற்று.

இ - ள். வெ - படை.

வருதல் தொன்றுதொட் டவ்வாருதல்.

மாறுதல்-ஈண்டிறத்தலென்பது 'போக்கு வரவுபுரிய' என்னு மூலத்தானும், ஏது வுதாரணங்களோடு உள்ளதாகிய இயைபானுமுணர்க. இஃதுணராது அச்சு வேறுபடுதலென்றுரைப்பாருமுளர். அஃதீண்டைக்கியாதுமியையாமை யுணர்க.

---

× திருநாவுக்கரசு நாயனர் திருக்கோடிகா -திருக்குறுந்தொகை. சு—செ. 'நாடி' காரணன்.

தோற்றமுமீறும் உள்ளதற்கல்லது உளதாதலி
ன்மையான்.

என் - து. ஏது. என் - னின். அதற்குப் பிரமாணமென்னை யெ
ன்னுங் கடாவை யாசங்கித்து மேற்கோளைச் சாதித்தனுதலிற்று.

இ - ள். உற்பத்தியும் நாசமுந் தொடர்ச்சியாயுள்ள பொருட்
கன்றி ஏனைப்பொருட்கு உற்பத்தி கூடாமையான், இனி இவ்வா
ன்மாக்கள் மாறிப் பிறந்து வருமென மேற்கொண்டது. என் - று,

தோற்றமும் ஈறுமென்னு முறைமைகளை எதிரது தழீஇயினை
வாகக் கோடலிற்றொடர்ச்சியாயென்பது போந்தவாறறிக. உள
தாதல்-ஈண்டுத் தோன்றுதல்.

இனி இவ்வாறன்றிக் குடாகாயவுவமையேபற்றி இருவினையா
ன் வரும் புனருற்பவம் உயிரின்பொருட்டுச் சிவத்துக்கேயாமெ
னச் சிவாத்துவிதிகள் கூறுங்கடாவை யாசங்கித்தும்,மூலப்பகு
தியிற்றோன்றும் புத்திதத்துவத்திற்கே அதுவெனச்சாங்கியர்
கூறுங்கடாவை யாசங்கித்தும், மேற்கோடனுதலிற்று இவ்வதி
கரணமெனக்கொண்டு; தோற்றமும் ஈறும் அவ்வுரிமையுள்ளதற்
கேயன்றி ஏனையவற்றிற்கு உளதாதலின்மையான்,இவ்வான்மாக்
களே மாறிப் பிறந்துவருமென மேற்கொண்டதென்றுரைப்பினு
மாம். இப்பொருட்கு உரிமையென்பது அவாய்நிலையான் வந்தது.

உளதாதலென்னும் ஒருமை தோற்றவீறுகளோடு தனித்தனி
சென்றியையும்.

ஆன்மாக்களேயென்னும் பிரிநிலையேகாரம் விகாரத்தாற்றொ
க்கது.

இனி மாயாவாதி முதலியோர் மதத்தை மறுத்தற்பொருட்டு
மேற்கொண்டதென்பாருமுளர். அத்துவிதமென்றசொல்லானே
அவரை மறுத்து ஆன்மாக்களைப் பெறுவித்தமையின், ஈண்டவர்
மதம்பற்றிக் கடா நிகழ்தற் கோரியையின்மையுணர்க.

உ—சூ, ச - அ - வா-ம்.

இனி, நீக்கமின்றி நிற்குமன்றே யென்றது.

எ - து. மே - ள். எ-னின். அங்ஙனம் புனருற்பவமாதற் கேதுவாய் இருவினைகளைச் செலுத்தி நிற்பதெனப் போந்த ஆணையெ , னப்படுஞ் சத்தியாவது, முதல்வனின் வேறோ அன்றோ வெனும் ஐயப்பாடின்கட், பொருட்குச் சத்தி வேறென்னு மீமாஞ்சகர் முதலியோர் மதமும், அன்றென்னும் நையாயிகர் முதலியோர் மதமும் பற்றி நிகழுங் கடாவை யாசங்கித்து 'நீக்கமின்றி நிற்கும்' என்னும், சூத்திரத்தின் இறுதிக் கூற்றைக் கண்ணழித்துரைத்து மேற்கோ ளனுதலிற்று.

இ - ள். முதல்வன் தன தாணையாகிய சிற் சத்தியோடு சமவேதமாய் நிற்பன். எ - று.

அன்னியயோகவியவச்சேதம்-அயோகவியவச் சேதம்-என்றற்றொடக்கத்து வடசொற்கள் பிறிதினியைபு நீக்குதல்-இயைபின்மை நீக்குதல்-என்றற்றொடக்கத்தனவாக மொழிபெயர்த்து வழங்கப்படுமாறுபோல, சமவாயமென்னும் வடமொழி தமிழின்கண் நீக்கமின்றி நிற்றலென மொழிபெயர்த்து வழங்கப்படுமென்றுணர்க. வடமொழி இரண்டாஞ்சூத்திரத்திறுதியின் ஆணை முதல்வனோடு சமவேதமாய் நிற்குமென ஆணைமேல் வைத்தோதியதனை, ஈண்டு முதல்வன்மேல்வைத்தோதினார். கன்மவொழிப்புழி இருவினை முதல்வனாணையின் வருமெனக் கூறிப்போந்த ஆணை, ஈண்டுக் கூறுமையே இனிது விளங்குமென்னுங்கருத்தாற் சொற்பல்காமைப்பொருட்டு அதனை யொழித்தெடுத்துக் கொள்ளப்பட்டது. இப்பொருள் சாணமாட்டாதார் சருவவியாபியாய் நிற்றலாலென்னும் ஏதுவின்பொருளை மேற்கோளுக்கும் பொருளாகக் கொண்டுரைப்ப. அது கூறியது கூறலாதலுமன்றி மொழிபெயர்த்தல்யாப்பிற்கேலாமையுமறிக. ஈண்டுச் ச

மவாடமென்றது தாதான்மிய சம்பந்தத்தை. அஃதாவது பொருளான் ஒன்றேயாயும் ஒருவாற்றாற் பேதமாதற்கு உரிமையுடைமை.

அவன் ஏகாநேக மிரண்டு மின்றிச் சருவவியாபி
யாய் நிற்றலான்.

எ - து. ஏது. எ - னின். அதற்குப் பிரமாண மென்னை யெனுங் கடாவை யாசங்கித்து மேற்கோளை வலியுறுத்துதனுதலிற்று.

இ - ள். அம்முதல்வன் ஒன்றே வேறேயென்னும் இருதன்மையு மின்றி அவ்விரண்டற்கும் பொதுவாய் எங்கணும் வியாபியாய் நிற்றலான், இனி ஆணையி னீக்கமின்றி நிற்குமன்றே, என மேற்கொண்டது. எ - று.

அவினு பாவ முணர்த்துவார், ஏகா நேகமிரண்டு மின்றியென மேற்கோளிற் போந்த பொருளை அநுவதித்துச் சருவ வியாபியாய் நிற்றலானென ஏதுக் கூறினார். சருவ வியாபியாய் நிற்றல், அவையே தானே யாய் என்னும் அதிகரணத்தாற் சாதிக்கப்பட்டமையின் அதனை ஈண்டேதுவாக வைத்து, ஆணையி னீக்கமின்றி நிற்கும்என்னு மேற்கோளைச் சாதித்தவாறு.

---

௩—ரு, க - ரை.

எ - து. ரு - ம். எ - னின். ஆன்மப்பிரகாச முணர்த்துத னுதலிற்று.

எ - து. க - ரை. எ - னின். சூத்திரக்கருத் துணர்த்துத னுதலிற்று. ய

இ - ள். மேல் அவையே தானே யென் றெடுத்துக் கொள்ளப்பட்ட உயிர், சூனிய முதலியவற்றுள் ஒன்றாகற் பாற்றென அவ்வமதம்பற்றி நிகழுங் கடாவை யாசங்கித்து, உயிர் அவற்றிற்கு

வேறு யுண்டென்பது கருதலளவையான் விளக்கி, மேலைச் சூத்திரத்தின் உயிர் கண்மேல் வைத்தோதிய முதல் வனதிலக்கணத்தை வலியுறுத்துதல் மூன்றுஞ் சூத்திரத்தின் கருத்து. எ - று.

முதன்மையுடைமை பற்றி உலகிற்கு நிமித்தகாரணமாகிய பதிப்பொருளுண்டென்பது முதற் சூத்திரத்துட்கூறி, காரணமாதற்பொதுமையான் இயைபுடைமை நோக்கித் துணைக்காரணமுதற்காரணங்களது உண்மையும் அவற்றான் உலகங் காரியப்படுமாறும், இரண்டாஞ் சூத்திரத்துட் கூறி, அவற்றானாய பயன் கோடற்குரிய பசுக்களதுண்மைக்குப் பிரமாணம் ஈண்டுக் கூறுகின்றாரென்றுணர்க. இதனானே சூத்திரவியைபும் இனிது விளங்கும்.

ஈண்டு மேற்கோள் ஒன்றாயினும், எழுவகைமதங்களை வேறு வேறு மறுக்குமேதுக்கள் ஏழாகலான், ஆன்மாவுளது என்னுமேற்கோள் அவற்றொடு தனித்தனிசென்றியைதலின், ஏழுதிகரணத்தாயிற்று இச்சூத்திரமென்றுணர்க. இதனுட்கூறிய வேதுவே யேதுவும் மேற்கோளும் அதுவேயாகலான், ஏனைச்சூத்திரங்களுட்போல வேறேதுக் கூறவேண்டாமையின், இவையேதுவாமாறும் இவற்றான் மேற்கோளைச் சாதிக்குமாறும், இனிது விளக்கி வலியுறுத்துதன்மாத்திரையே ஈண்டுரைக்கப்படுவதெனக் கொள்க.

---

## ங—சூ, க - அ - வா-ம்.

ஈண்டு, இலதென்றலின் ஆன்மாவுளதென்றது.

எ-று. மே-ள். எ-னின். சூனியான்மவாதி, தேகான்மவாதி இந்திரியான்மவாதி, அந்தக்கரணான்மவாதி, சூக்குமதேகான்மவாதி, பிராணான்மவாதி, விஞ்ஞானான்மவாதி, சமுதாயான்மவாதி என்னு மெண்மருள், அந்தக்கரணான்மவாதிகள் ஆன்மாவின தி

லக்கணங் கூறும்வழி அநுவாதமுகத்தான் மறுக்கப்படுதலின் அவரை யொழித்து ஒழிந்த எழுவர் மதங்களையும் முறையே மறுத்து உயிருண்மை சாதிப்பான் றொடங்கி, அவற்றுள் இது சூனியமே யான்மாவென்னு மாத்துமிகர் கூறுங்கடாவை யாசங்கித்து 'இலதென்றலின் ஆன்மா வுளது'என்னும் சூத்திரத்தின் முதற்கூற்றைக் கண்ணழித்துரைத்துமேற்கோடனுதலிற்று.

இ - ள். வெ - டை.

ஆன்மாவிலதென்றலினென வருவித்துரைக்க.
எவற்றினையும் அன்றன்றெனவிட்டு ஆன்மா இலதென்று நிற்பது உளதாகலின்அதுவே அவ்வான்மாவரும்என்க.

எ - து பொ - ரை. எ - னின். ஆன்மா இலதென்றலே பற்றி அஃதுண்டெனக் கோடல், முயற்கோடில்லையென்னு மேதுவால் அஃதுண்டெனச் சாதித்தலோடொக்கும், என்னுங்கடாவை யாசங்கித்து அதன் குற்றமிய முணர்த்துத னுதலிற்று:

இ-ள். ஆன்மா இலதென்னுஞ் சூனியான்மவாதிகளும் இல்லையென வாளா கூறுதலமையாமையின், உடல் பொறி விடயமனைத்தினையும் முறையானே இஃதான்மாவன்று இஃதான்மாவன்றென ஒரோவொன்றாகக் கழித்து, இவ்வாறாகலின் ஆன்மாவென்பது சூனியமென்று அங்ஙனங் கூறுபவாகலான், அவற்றை ஒரோவொன்றாக விட்டு அங்ஙனங்கூறிக்கொண்டு நிற்பதோரறிவுண்மையின்,அவ்வறிவே மேல் அவையே தானேயாமென்பதனுள் ஆகமவளவையாற் சாதித்துப்போந்த ஆன்மாவென்றவாறும். ஈண்டிலதென்றலின் ஆன்மாவுளதுஎன மேற்கொண்டது. எ-று.

அங்ஙன மறியுமறிவுஞ் சூனியமேயெனின், அஃது எல்லையின்றாண்மலடி யென்பதனோடொக்கு மென்றொழிக வென்பது கருத்து.

இல்லை யீண்டுச் சூனியப்பொருட்டு. சூனியமாவது உள்ளதுமன்று இல்லதுமன்று இரண்டுமாவதுமன்று வேறுமன்றெனப்படும் பாழ்.

ஏகாரம் பிரிநிலைக்கண் வந்தது.

---

௩—சூ, உ - அ - வா-ம்.

இனி, எனதுடலென்றலின் ஆன்மாவுளதென்றது.

எ-து. மே-ள். எ-னின். அவ்வறிவு உடம்பின்கணன்றி நிகழக் காணாமையானும், நான் றுணுகினேன் பருத்தேனென உடம்பினையே நானென்று வழங்கக் காண்டலானும், உடம்பேயான்மாவெனத் தேகான்மவாதிகள் கூறுங்கடாவை யாசங்கித்து 'எனதுடலென்றலின்' என்னுஞ்சூத்திரத்தி னிரண்டாங் கூற்றைக் கண்ணழித்துரைத்து மேற்கோட னுதலிற்று.

இ-ள். வெ-டை.

நான் பருத்தேன் சிறுத்தேன் கரியேன் மனிதன் பார்ப்பானென்ன உடம்பின் குணவிசேடங்களை உபசாரத்தால் உயிருக்கேற்றி வழங்கினும், யானுடம்பு யான்கை யான்கால் எனவுடம்பை அவ்வாறு வழங்குவாரின்றி, எனதென வேற்றுமைப்படவே யாவரும் வழங்கக் காண்டலின், அதுவே உயிர் வேறுண்டென்பதனை அறிவுறுக்குமென அவன் வழங்குமுறையே பற்றி அவனை மறுத்தவாறு.

என்பதி என்மனையென்றாற்போல, என்கை என்காலென நிற்பதுமுளதாகலின், அதுவே அவ்வான்மாவாமென்றது.

எ-து. பொ-ள். எ-னின். எனதுடலென்பது பிறிதின் கிழமைப் பொருட்படாது தலைமாத்திரையாய் நிற்குமிராகுவை

இராகுவினது தலையென்று வழங்குமாறுபோல, அபேதம் பற்றியே வழங்கப்படுமென அமையுமென்னுங் கடாவை யாசங்கித்து அதன்குற்றப்பரிய முணர்த்துத னுதலிற்று.

இ-ள். இராகுவினது தலையென்றற்போல்வன சிறுபான்மை வழக்கமாதலின், ஆண்டொற்றுமைப்பொருள்கோடல் அமையும். ஈண்டவ்வாறன்றி என்பதி என்மனைவி என்பொருள் என்று வழங்குமாறுபோல என்கை என்கால் என்கண் என்செவி என்பொறி என்பிராணன் என்னறிவெனப் பலவாற்றானும் பெரும்பாலும் உலகத்து வழங்கக் காண்டலின் இவ்வழக்க மிகுதிப்பாடு பிறிதின்கிழமைப் பொருட்கணன்றி வாராமையான், அங்ஙனங் கூறிக்கொண்டு நிற்கும் பொருள் வேறொன்றுண்டென்பது பெறப்படுதலின், அதுவே மேலுரையளவைபற்றிச் சாதித்த ஆன்மா வென்றவாறும். எனதுடலென்றலின் ஆன்மாவுளதென மேற்கொண்டது. எ-று.

---

ங—சூ, ங-அ-வா-ம்

இனி ஐம்புலனறிதலின் ஆன்மா வுளதென்றது.

எ-து. மே-ள். எ-னின். ஐம்பொறிகள் ஐம்புலன்களையுமறியுமென்றல் எல்லார்க்குமொப்ப முடிந்தமையின், அவை உடல்போற் சடமன்மை பெறப்படுதலானும், அவற்றை எனதென்னும் வழக்கம் பெரும்பான்மையன்றாகலானும், அவையே உயிராதலமையுமென இந்திரியான்மவாதிகள் கூறுங்கடாவை யாசங்கித்து 'ஐம்புலனறிதலின்'என்னும் மூன்றுங் கூற்றைக் கண்ணழித்துரைத்து மேற்கோட னுதலிற்று.

இ-ள். வெ-ட.

ஐம்புலனாகிய சத்த பரிச ரூப ரச கந்தங்களை இந்திரியங்கள் ஒன்றறிந்த தொன்றறியாமை யின் இவ்வைந்தினாலும் ஐம்பயனு மறிவதுளதா கலின் அதுவே அவ்வான்மாவாம் என்றது.

எ-து. பொ-ரை. எ-னின். ஐம்புலனறிதலின், ஆன்மா ஐம்பொறியின் வேறெனச் சாதித்தற்கேதுவாமாறு யாங்ஙன மென்னுங் கடாவை யாசங்கித்து அதன்குற்றபரிய மூணர்த்து த னுதலிற்று.

இ-ள். வெ-டை.

---

௩—ரு, ச - அ - வா-ம்.

இனி ஒடுக்கமறிதலின் ஆன்மாவுளதென்றது.

எ-து. மே-ள். எ-னின். + "தேசவிந் திரியங்கட்கு நிகழறி ஒதனாற் காண்டும்" எனநீவிருங் கோடலின், அவ்விந்திரி யங்களின் வேறாய் அங்ஙனமறிவது புரியட்டக வுடம்பேயா மெனவமையும், அது புறத்து 'நிகழாதாயினும் அகத்தே நின்று இந்திரியங்களைப் புறத்திற் செலுத்தி யறியுமெனக் கோடுமென ச் சூக்குமதேகான்மவாதிகள் கூறுங்கடாவை யாசங்கித்து ஒடுக்கமறிதலின், என்னும் நாலாங் கூற்றைக் கண்ணழித்து ரைத்து மேற்கோட. னுதலிற்று.

இ-ள். ஐம்பொறிகளு மொடுங்கின சொப்புனத்தானத்தின் கழ்ந்தவற்றை யறிதலின் ஆன்மா வேறுண்டு. எ-று. ஒடுக்கம் ஆகுபெயர்.

---

+ சிவஞானசித்தி, ௩—ரு, ௬௪. செ.—'ஓசைசுற்பரிச'

நனவின்கட் கனவுகண்டா மென்றுங் கண்டில
மென்றும் நிற்ப துளதாதலின் அதுவே யவ்வா
ன்மாவா மென்றது.

எ-து. பொ-ரை. எ-னின். சொப்பனத்தி னிகழ்ந்தவற்றை
யறிவதுஞ் சூக்குமதேகமேயாகலின், இது சித்தசாதனமாமா
லென்னுங்கடாவை யாசங்கித்து அதன்றாற்பரியமுரைத்து
நுதலிற்று.

இ-ள். வெ-டை.

இஃதென்சொல்லிய வாறோவெனின், ஒடுக்கமெறிதலின் என்
றது ஒடுக்கத்தினிகழ்ந்தவற்றை நனவின்கண் மயங்கியறிதலெ
ன்றற்பொருட்டாதலாற் சித்தசாதனமாதல் யாண்டையதெ
ன விடுத்தவாறென்பது. கனவுகண்ட சூக்குமவுடம்பே நன
வின்கண் அதனை யறியுமாயிற் கண்டபடியறியாது மயங்கியறி
தல் கூடாமையின், உயிர்க்காயின் அதுபோல் ஒருதன்மைத்தா
கலின்றி அகத்துச் சேறலும் புறத்துச்சேறலும் வேறுபாடுடை
மையான், அதுபற்றி மயங்கியறிதல் கூடுமாகலின், அவ்வாறறி
யுமுயிர் வேறுண்டென்பது கண்டுகொள்க.

---

௩—ஆ, ௫ - அ - வா-ம்.

இனி, கண்படில் உண்டிவினையின்மையின் ஆ
ன்மாவுளதென்றது.

எ-து. மே-ள். எ-னின். சொப்பனந் தானமாக்கினையின்
ன்றித் தொழிற்படாத சூக்குமதேகம்போலன்றி, சுழுத்தி
யிடத்துந் தொழிற்படுவதாய பிராணவாயுவே, அடங்குத
ல் விரிதலுஞ்செய் தறிவதாகிய ஆன்மாவாதலுடைமெனப் பி

...ான்மவாதிகள் கூறுங்கடாவை யாசங்கித்து 'கண்படிவ ...ண்டிவினை' என்னும் சூத்திரத்தி னேந்தாங்கூற்றைக் கண் ...ழித்துரைத்து மேற்கோட ணுதலிற்று.

இ-ள். வெ-டை.

உண்டிவினை உம்மைத்தொகை. அஃது × "உண்டியும் வினை யின்றிக் கிடந்து" என வழிநூலாசிரியர் கூறியவாற்றானு ...றிக.

> ஒடுங்கினவிடத்து இன்பதுன்பஞ் சீவனம் பிரகிருதிக்கின்மையின் ஒடுங்காதவிடத்து இன்ப துன்பஞ் சீவியாநிற்ப தனாதாதலின், அதுவே அவ்வான்மாவாம் என்றது.

எ-து பொ-ரை. எ-னின். கண்படைகொண்டவழி உண்டிவி ...யில்லையென்றது உடற்கோ பிராணவாயுக்கோவென வி ...வினோர்க்கு, உடம்பு உயிரன்மையான், அதற்கவை யில்லாமை ...றி ஈண்டைக்காவதோரிழுக்கில்லை; இனிப் பிராணவாயுக் ...ன்னின், அது துயின்றெழுந்தபின்னர்ச் சுகமாகத் துயின் ...னென்றறிதல் பிறிதோராற்றாற் பெறப்படாதென்னும் அரு ...த்தாபத்தியான், ஆண்டும் இன்ப துன்ப நுகர்ச்சியுண்டென்ப ... பெறும். விழித்துழிப்போல உறங்குழியும் பிராணவாயு ...பங்குதலான் வினையுண்மையுங் கண்டாமாகலின், அதற்கு ...வையாண்டில்லையென்றல் மாறுகோள்போலு மென்னுங்கடா ... யாசங்கித்து அதன்குற்றப்பரிய முணர்த்துத னுதலிற்று.

இ-ள். ஈண்டு உண்டியென்றது விடயங்களிலிடமாக வரும் ...்பதுன்ப நுகர்ச்சியை. வினையென்றது உடம்பு சேட்டித் ...யாகலின், இவ்விரண்டும் பிராணவாயுவை யொழித்தே

---

× சிவஞானசித்தி, ச-சூ. ௫)—செ. 'கண்டுணர்'.

ழுந்த கருவிகளெல்லா மொடுங்கிய துயிலிடத்து அவ்விரண்டு
நிற்பவும் உடம்பின்கண்ணே நிகழ்தலின்மையின், அவையொடு
ங்காத நனவினிடத்து அவையிரண்டும் அதன்கணிகழ்தலுண்
மையின், அவ்வின்மை யுண்மைகட் கேதுவாகக் கருவிகளை யொ
டுக்கியும் ஒடுக்காது நிற்பதியாது அதுவே அவ்வான்மா வென்ப
வாரும். கண்படில் உண்டி வினையின்மையின் ஆன்மாவுள தெ
ன மேற்கொண்டது. எ-று.

பிராணவாயுவை யொழித்தொழிந்த கருவிகளென்பது ஆ
றலான் வந்தது.

இன்பதுன்ப நுகர்ச்சியை இன்பதுன்பமென் றுபசரி
தார்.

சீவனம் - சீவித்தல். சேட்டித்தலென்றதாம்.

செவ்வெண்டொகை விகாரத்தாற்றொக்கது.

சீவியாநிற்டதென்பது சீவியாநிற்றலென்னுந் தொழிற்பெ
ர் மாத்திரையாய் நின்றது. "உறங்குவது போலும்" என்
ழிப்போல.

உளதென்றது தனித்தனி சென்றியையும்.

துயின்றுழியும் விழித்துழியுந் திரிபின்றி ஒருதன்மைத்தா
ல்பற்றி உடம்பு பிரகிருதியெனப்பட்டது, பிரகிருதிக்சென்
து உருபு மயக்கம்.

இரண்டுகாலத்துமொப்ப வியங்குதல்பற்றிப் பிராணவா
வைப் பிரகிருதியெனக்கொண்டு, அதற்கவை யின்மையினெ
றுரைப்பாரும், பிரகிருதி விகாரமாகிய சித்தத்திற்கு அவை
யின்மையினென வுரைத்துச் சுழுத்தியின் கண்ணுந் தொழி

வெசாய சித்தமேயுயிரொன்னுஞ் சித்தான்மவாதிகளை மறுத்தற் கெழுந்த திவ்வதிகரணமென் றுரைப்பாருமுளர்.

---

௩-சூ, ௬ - அ - வா-ம்.

இனி, உணர்த்த வுணர்தலின் ஆன்மாவுளது என்றது.

எ-து. மே-ள். எ-னின். பிரமப்பொருள் மேற்கூறிப்போந்த சடப்பொருள்கள் போலன்றிச் சித்தாகலான், அதுவே உயிராதலமையுமென விஞ்ஞானான்மவாதிகள் கூறுங்கடாவை யாசங்கித்து. 'உணர்த்த உணர்தலின்' என்னும் ஆறுங்கூற்றைக் கண்ணழித்துரைத்து மேற்கோட னுதலிற்று.

இ-ள். தொழிற்படுங் கருவிகளொன்றுமின்றிக் கேவலமாய் அதீதாவத்தையினின்றுழி அறியுமாறின்றிப் பின்னர்க் கலை முதலிய கருவிகளால் அறிவிக்கவறிந்து வருதலுண்மையின், எக்காலத்துந் திரிபின்றி யறிந்தாங்கறிந்து நிற்குஞ் சித்தாகிய பிரமத்திற்கு இது தகாமையான் அங்ஙன முணருமான்மா வேறுண்டு. எ-று.

உணர்த்தவுணர்தலெனவே முன்னுணராது கிடத்தல் பெற்றாம்.

அவனறிந்தாங் கறிவனென் றறிவிக்கவறிந்து உபதேசியாய் நிற்பதுளதாதலின் அதுவே யவ் வான்மாவா மென்றது.

எ-து. பொ-ரை. எ-னின். அறிந்தாங்கறிவதாகிய பிரமப் பொருள் அவிச்சைக்காலத்துக் கருவிகளோடுங் கூடியன்றி யறியாதெனக் கோடுமாகலின், அதுபற்றி உயிர் வேறுண்டென்றல்

பொருந்தா தென்னுங் கடாவை யாசங்கித்து, அவ்வளவினவன் மேன்முக வென்னுநியாயத்தால் வேறு மதன்குற்றமரிய முணர்த்துத னுதலிற்று.

இ-ள். கருவிகளோடு கூடியவழியுந் தன்னியல் புணருமாறின்றி, அம்முதல்வன் இதுபோல மறந்து மறந்தறிதலின்றி, அறிந்தவ றேயறிந்து நிற்கும் பேரறிவுடையனென வேதாகமங்களானறிவிக்கவறிந்து, குரவனறிவுறுக்கு முபதேச மொழியைப் பெற்றுடையதாய் நிற்பதொன் றுளதாகலின்; அதுவே மேலுரையளவையாற் சாதித்துப் போந்த ஆன்மாவென்றவாறும். உணர்த்த வுணர்தலின் ஆன்மாவுளதென மேற்கொண்டது. எ-று.

அறிந்தாங் கென்பது அப்பொருட்டாதல் "எண்ணிய வெண்ணியாங் கெய்துப" என்பதனானுமறிக. இதற்குப் பிறவாறுமுரைப்ப. அவையெல்லாம் பொருந்தாமை யோர்ந்துணர்க.

---

௩—ரு, எ - அ - வா-ம்.

இனி, மாயாவியந்திர தனுவினுள் ஆன்மாவுள தென்றது.

எ-து. மே-ள். எ-னின். உடம்புமுதலியவற்றுள் ஒரோவொன்றே ஆன்மாவாதலின்றென்றதொக்கும், அவற்றுள் ஒன்று குறைந்தவழியும் அறிவு நிகழாமையானும், எல்லாங் கூடியவழி அது நிகழ்தலானும், அனைத்துங்கூடிய சமுதாயமே உயிராதலமையுமெனச் சமுகான்மவாதிகளாகிய சௌத்திராந்திகர் வைபாடிகர் கூறுங்கடாவை யாசங்கித்து 'மாயாவியந்திரதனு' என்னுஞ் சூத்திரத்தினிறுதிக்கூற்றைக் கண்ணழித்துரைத்து மேற்கோட னுதலிற்று.

இ-ள். மாயாகாரியங்களான் யாக்கப்பட்டியன்ற சூத்திரப்பாவைபோலு முடம்பின்கண்ணே அவற்றிற்கு வேறாய் ஆன்மா வுண்டு. எ-று.

எனவே, அவையெல்லாம் மாயையின் காரியங்களாய் நிலை பெறுதனவாதலின், நிலைபேறுடைய உயிராகாவென்றவாறாயிற்று.

மாயை ஆகுபெயர். இகரம் விரித்தல்விகாரம்.

அவை தாம் வெவ்வேறு பெயர்பெற்று நிற்றலான்.

எ-து. ஏ-து. எ-னின். சித்தமுஞ் சித்தப்பகுதியுமாகிய அகச்சமுதாயமைந்தும் மாயாகாரியமென்பது எம்மனோர்க்கு உடம்பாடன்மையின், அதுபற்றி ஆன்மா வேறுண்டெனச் சாதித்தலமையுமாறென்னை யெனுங்கடாவை யாசங்கித்து அவ்வளவினவன் மகிழுமாறுவென்னு நியாயம்பற்றி வேறுமோராற்றாற் சாதித்த னுதலிற்று,

இ-ள். நீ ஐந்து கந்தமெனக் கொண்ட மாயாகாரியங்கள் ஆன்மாவெனப் பெயர் பெறுமாறின்றி வேறு வேறு பெயர்பெற்று நிற்பனவாகலான், மாயாவியந்திரத்தனுவினுள் ஆன்மாவுளதென மேற்கொண்டது. எ-று.

வேறு வேறு என்பது வெவ்வேறெனமரீஇற்று.

---

ச—ரூ, க - ரை.

எ-து. சூ-ம். எ-னின். இதுவுமது.

எ - து. க-ரை. எ-னின். சூத்திரக் கருத்துணர்த்துத னுதலிற்று.

இ-ள். பிரமாணம் இலக்கணமிரண்டானும் பொருளுண்மை பெறற்பாற்றெனனு முறைமைபற்றி, மேற்பிரமாணத்தாற் பெற

விக்கப்பட்ட பதி பாச பசுக்களுக்கிலக்கணம் எதிர்நிரனிறை யாக வைத்துக் கூறுவான் றொடங்கி, அவற்றுள் இது மேலடுக்க நின்ற ஆன்மாவினிலக்கணங் கூறுத னுதலிற்று.

சொற்பல்காமைப்பொருட்டும், ஒத்து வேறுய வழியும், இயைபுடைமை யுணர்ந்துகோடற்பொருட்டும், ஈண்டு இதுவுமதுவென மாட்டெறிந்துரைத்த ஆசிரியர், இங்ஙனமுரைத்துக்கோடற் கேற்பவன்றே ஆண்டு ஆன்மாவினதுண்மையுணர்த்துத னுதலிற்றெனச் சிறந்தெடுத்தோதாது பொதுப்பட ஆன்மப்பிரகாசமுணர்த்துதனுதலிற்றென்றதூஉமென்க. இவ்வாறன்றி மேலைச்சூத்திரத்தின் ஆன்மாவினதுண்மை கூறுமுகத்தாற் றொகுத்தோதிய அஞ்சவத்தையை ஈண்டிலக்கணங் கூறுமுகத்தான் விரித்தோதப்படுதலின், இதுவுமது வென்றது மேலைச் சூத்திரப்பொருளோடு மாட்டெறிந்ததென் *றுரைப்பினுமாம். இதனாலுஞ் சூத்திரவியைபு இனிது விளங்கும்.

இதனுள் அந்தக்கரணமவற்றி னொன்றன்றென்றது ஓரதிகரணம், ஒன்றன்றாயினுஞ் சகசமலத்துணரா தமைச்சரசேய்ப்பவவை சந்தித்ததென்றது ஓரதிகரணம், அமைச்சரசேய்ப்பநின்றஞ்சவத்தைத்தேயென்றது ஓரதிகரணம், ஆக மூன்றதிகரணத்தது இச்சூத்திரமென்றுணர்க.

---

சு—சூ, க - அ - வா-ம்.

ஈண்டு, இவ்வான்மாவாவது அந்தக்கரணங்களாயுள்ள மனோபுத்தியகங்கார சித்தங்களில் ஒன்றன்று என்றது.

எ-து. மே-ள். எ-னின். ஏனையவெல்லாம் வெவ்வேறு பெயர்பெற்று நிற்பனவாகலான் உயிராகா ஆயினும், மனமுதலிய

அந்தக்கரணங்கள் சிந்தையைச் சீவனென்றுஞ் சீவனைச் சிந்தையென்றும் இங்ஙன முயிரெல்லாம் பெயரானும் வழங்கப்படுதலுண்மையானும், இந்திரிய முதலியவற்றை அவ்வாறு கூறுதலின்மையின் அஃதாகுபெயரென்றற்கேலாமையானும், அவையே தனித்தனி ஆன்மாவாமென்றல் அமைவுடைத்தென அந்தக்கரணான்மவாதிகள் கூறுங்கடாவை யாசங்கித்து 'அந்தக்கரண மவற்றினொன்றன்று' என்னும் சூத்திரத்தின் முதற்கூற்றைக் கண்ணழித்துரைத்து மேற்கோடனுதலிற்று. இது மேலைச்சூத்திரத்துள் ஓதற்பாலதேயாயினும், ஈண்டிலக்கணங்கூறும் வழியும் அவற்றொடு சந்தித்து அமைச்சரசெய்ப்ப நிற்பதென அவத்தைக் கேதுவாக எடுத்தோதவேண்டுதலின் ஈரிடத்துமெடுத்தோதுதல் "சில்வகை யெழுத்தின் செய்யுட் டாகித்—சொல்லுங் காலை யுரையகத்தடக்கி—நுண்மையொடு புணர்ந்த வொண்மைத் தாகி" என்னுமிலக்கணத்ததாய சூத்திரத்துக்கேலாமையான் அதுபற்றி விதிமுகத்தானன்றி அநுவாதமுகத்தான் ஈண்டுணர்த்தப்பட்டது.

இ-ள். வெ-டை.

ஈண்டு அந்தக்கரணமென்றது உள்ளந்தக்கரணமாகிய கலாதிகளினுஞ் செல்லாமைப்பொருட்டு மனோபுத்தியகங்கார சித்தங்களிலெனக் கிளந்தெடுத்துரைத்தார். கலாதிகளுண்டெனக்கொண்டோரின் உயிர் வேறுண்டெனக்கொள்ளாதார் இன்மையின் ஆண்டாசங்கை நிகழாமையானும் அமைச்சரோடு உவமிக்கப்பட்டு அவத்தைக் கேதுவாவன அம்மனமாதியேயன்றிக் கஞ்சுகத்தோடு உவமிக்கப்பட்டு அதீதத்தினு நீங்காது உடனிற்பனவாய கலாதிகளன்மையானும் அவற்றை ஈண்டெடுத்தோதவேண்டாமையின், மனமுதலிய புறவந்தக்கரணங்களே ஈண்டுக் கூறுநின்றனவென்பது கருத்து.

அவை தாம் பிரகாசமாய்நின்றே அப்பிரகாசமாய் நிற்றலான்.

ஏ-து: எது. எ-னின். × "மனம் புத்தி யகங்காரஞ்சித்த நான்கு, மருவியான்மா வேதென்ன வரும்" என நீயிருந் தோடலின், உயிர் அவற்றுளொன்றாதலையுமென்றுற்படுமிழுச்சென்னையென்னுங்கடாவை யாசங்கித்து மேற்கோளைச் சாதித்த னுதலிற்று.

இ-ள். அவ்வந்தக்கரணங்டாம் தம்மிற் கீழுள்ளவற்றை நோக்கிச் சித்தாய்நின்றே தம்மை நோக்கி அசித்தாய் நிற்றலால், தன்னை நோக்கியுஞ்சித்தாய் நிற்கும் இவ்வான்மாவாவது அந்தக்கரணங்களாயுள்ள மனோபுத்தியகங்காரசித்தங்களில் ஒன்றன்றென மேற்கொண்டது. எ-று.

எனவே, உயிரான் அதிட்டிக்கப்பட்டு ஐம்பொறிகளறிந்த விடயங்களுள் ஒன்றனை இஃதியாதாகற்பாற்றெனச் சித்தஞ்சிந்தித்தறியும், யான் சிந்தித்தேனென்றறியமாட்டாது. மனம் அதனை இஃதின்னதாகற்பாற்றெனவும் அஃதாமோஅன்றோவெனவும் இவ்வாறு சங்கற்ப விகற்பஞ் செய்தறியும், யான் சங்கற்ப விகற்பஞ்செய்தேனென்றறியமாட்டாது. அகங்காரம் அதனை இன்னதெனத் துணிவேன் யானென்று ஒருப்பட்டெழுந்தறியும், யானொருப்பட்டெழுந்தேனென்றறியமாட்டாது. புத்தி அதனை இன்னதிதுவென நிச்சயித்தறியும், யானிச்சயித்தேனென்றறியமாட்டாது. ஆகலான் அவ்வாறின்றி அவற்றொடு கூடி யான் சிந்தித்தேன் பற்றினேன் எழுந்திருந்தேன் நிச்சயித்தேனென்றும் அதன்பின் அதுவதுவாய்ப் பரிணமித்துச் சுகதுக்க மோகரூபமாய்த் தன்மாட்டுவந்த புத்திதத்துவத்தின் பரிணாமங்களைக் கலாதிகளோடு கூடி நின்று இது சுகம் இது துக்கம் இது மோக

---

× சிவஞானசித்தி, ௪—௬, செ - ௨. 'கருவியா.

னென்றறிந்தும், யான்சுகித்தேன் யான் றுக்கித்தேன் யான் மோகித்தேன் என்றறிந்தும், இங்ஙனம் பிறவற்றை நோக்கியுந் தன்னை நோக்கியுஞ் சித்தாகிய ஆன்மாத் தம்மை நோக்கிச் சித்தாகாது அந்தக்கரணங்களின் ஒன்றுமாறியாண்மைப்பெனை மறுத்தவாறாயிற்று. ×"இவன்றனும் புத்தியுஞ்சித் திவனுமோ புத்தி" யென வழிநூலாசிரியர் கூறியதும் இவ்வியல்பு நோக்கி.

ஈண்டுப் பிரகாசம் அப்பிரகாசம் என்பன சித்து அசித்தென்னும் பொருளவாம்.

ஏனையோரை நோக்கி அரசனுக்கு அணுக்கராதற் சிறப்புப்பற்றி அமைச்சரை அரசென்று உபசரித்துக் கூறப்படுமாறுபோல, புறக்கருவிகளை நோக்கி ஆன்மாவுக்கு அணுக்கமாய் நிற்றற்சிறப்புப்பற்றி மனம்புத்தியகங்காரஞ்சித்தநான்குமேநுவி யான்மாவே யென்ன உபசரித்துக் கூறப்படுந்தன்மையென்றொழிக. சூழ்ச்சித்துணையாதல்பற்றி அந்தக்கரணங்கள் அமைச்சரையொக்குமெனவே, ஏனைக்கருவிகள் ஏனைப்பரிசனங்களை ஒக்குமென்பது பெற்றாம். அது ஞானாமிர்தத்திற் காண்க.

மேலைச் சூத்திரத்தோதிய ஏதுக்களை ஈண்டைக்கு முடையவாயினும், சிறந்தவை பற்றி வேறெடுத்துக் கூறினார்.

---

ச—ரு, உ - அ - வா-ம்.

இனி, இவ்வான்மா சகசமலத்தி னுணர்வின்றென்றது.

எ - து. மே-ள். எ-னின். ஆன்மா அந்தக்கரணங்களின் வேறென்றாயின், அவற்றொடு சந்தித்து நிற்றற் கேதுவென்னை யென அவர் கூறுங்கடாவை யாசங்கித்து 'சகசமலத் துணர

---

× சிவஞானசித்தி, கக—சூ, செ - கக. 'சிவனுயி'.

ராது' என்னும் சூத்திரத்தின் இரண்டாங்கூற்றைக்கண்ணழித்து ரைத்து மேற்கோ ளுதலிற்று

இ-ள். வெ-படை.

ஆகந்துகமலங்களி னீக்குதற்குச் சகசமலமென விசேடிக்கப் பட்டது. படவே, உயிர் முதல்வனைப்போல் அந்தக்கரணமுதலி யவற்றின் வேறாய சேதனப்பொருளாயினுஞ் செம்பிற்களிம்பு போல வேறுகாரணமின்றி மூலமலந் தன்னோடு உடனாய்நிற்ற லில், தன்னியல்பானுணருமாறின்றிக் கருவிகளைக் கூடிநின்றுண ர்வதாயிற்றென விடுத்தவாறாயிற்று. இதனானே மலத்துளதா மென பேற்பிரமாணத்தாற் பெறுவிக்கப்பட்ட மூலமலத்திற் கு ஈண்டிலக்கணங் கூறினாரென்பது பெறுதும். அறியாமை யைச் செய்தலாகிய கேவலத்தினிகழுமியல்பே மலத்திற்குத் த ன்னிடல்பு, கருவிகளோடு கூடி அவத்தையுறுவதாகிய விபரீத வு ணர்வைச் செய்யுஞ் சகலத்தினிகழு மியல்பே பொதுவியல் பா கலான், மலத்திற்கு இருவகை யிலக்கணமும் ஈண்டே பெறப் பட்டன.

அது தான் ஞானதிரோதகமாய் மறைத்துக்
கொடு நிற்றலான்.

எ-து. எது. எ-னின். சகசமலத்தினால்உணர்வின்றியொ ழியில் பின் கருவிகளோடு கூடியவழி அறிவுண்டாமா றியாங்ங னமெனச் சற்காரியவாதம்பற்றி நிகழுங் கடாவை யாசங்கித்து மேற்கோளைச் சாதித்த லுதலிற்று.

இ-ள். அச்சகசமலமாவது ஞானத்திற்குத் திரோதகமாய் அ தனை யில்லை யென்னும்படி மறைத்துக்கொண்டு நிற்றலான் இனி இவ்வான்மா சகசமலத்தினால் உணர்வின்றென மேற்கொண் டது. எ-று.

மலத்தினதிலக்கணம் வடமொழி வழக்குப்பற்றிக் கூறுவார் ஞானதிரோதகமாயெனவும், அதனைத் தமிழ்மொழியான் விளக்

ருவார் மறைத்துக்கொடு நிற்றலானெனவுங் கூறினாராகலவன்; அது கூறியது கூறலன்மை யுணர்க. திரோதகமென்னும் வடமொழி மறைத்தலைச் செய்வதென்னும் பொருட்டாய் வினைமுதன்மேனின்ற வினைப்பெயர்.

இதனானே ஞானபாவமே அஞ்ஞானமென்பார் மதமும் மறுக்கப்பட்டது; அபாவம் ஒருகாரியத்தைச் செய்யமாட்டாமையின்.

---

சு—சூ, ௩ - அ - வாம்.

இனி, இவ்வான்மா சாக்கிரஞ் சொப்பனஞ் சுழுத்தி துரியந் துரியாதீதமாயுள்ள பஞ்சாவத்தைதனாய் நிற்குமென்றது.

எ-து. மே-ள். எ-னின். இருளகப்பட்ட கண் விளக்கோடு கூடியவழி விடயங்களைக் காண்டலேயன்றி வெவ்வேறவத்தைப்படுமாறில்லை, அதுபோல மலத்தகப்பட்ட உயிர் கருவிகளோடு சந்தித்தவழிஒருதன்மைத்தாயறிதலே அமையுடைத்து; அவ்வாறன்றி மேலைச்சூத்திரத்தோதிய முறையான் ஐம்புலனறிந்தும் ஒடுக்கமறிந்தும், உண்டி வினையின்றிக் கிடந்தும், உணர்த்தவுணர்ந்தும்,இங்ஙனம் வெவ்வேறு அவத்தைப்படுமாறியாங்ஙனமென அவர்கூறுங்கடாவை யாசங்கித்து 'அமைச்சரசேய்ப்ப' என்னும் சூத்திரத்தின் இறுதிக்கூற்றைக் கண்ணழித்துரைத்து மேற்கோடனுதலிற்று.

இ-ள். வெ-டை.

அவத்தைபெனப்படுவன பலவுளவாகலின், அவற்றுள் ஈண்டு ஐந்தவத்தையெனப்பட்டவை யாவையென்னும் ஐடீச்சூதற்கு க்கிளந்தெடுத்துரைத்தார்

அவத்திதன் என்னும் வடமொழி ஆதேசவழிச்சொல்லாற் கூறினது அம்மதப்பற்றி.

அமைச்சரசேப்ப நிற்றலானென்பதூஉம் ஈண்டு வருவித்துரைத்துக்கொள்க. கொள்ளவே, × "படைகொடு பவனிபோதும்" வேந்தன் "கடைதொறும் விட்டுவிட்டுக் காவலுமிட்டு" அந்தப்புரத்திற் செல்லுமாறுபோல ஆன்மா அங்ஙனம் அஞ்சவத்தைப்படுதல் அமைவுடைத்தென விடுத்தவாறாயிற்று.

அதுதான் மலசொரூபத்தின் மறைந்து அரூப
சொரூபி யாய் நிற்றலான்.

எ-து. ஏது. எ-னின். அரசன்போல் உயிர் அங்ஙனமஞ்சவத்தைப்படுமாயின் வியாபகத்திற்கிழுக்காய் முடியும்போலுமென்னுங் கடாவை யாசங்கித்து மேற்கோளைச் சாதித்தனுதலிற்று.

இ-ள். அவ்வுயிர்தான் மலவடிவின் மறைப்புண்டவழி அருவுடம்பாகிய தத்துவசொரூபியாய் நிற்றலான், அத்தத்துவங்கள் தொழிற்படுமவத்தை வேறுபாடுபற்றி இனி இவ்வான்மாச் சாக்கிரஞ் சொப்பனஞ் சுழுத்தி துரியந் துரியாதீதமென்னும் பஞ்சாவத்திதனாய் நிற்குமென மேற்கொண்டது. எ-று.

"சீவனோ வியாபி யவத்தையில் விழிந்து திரும்புதல் குற்றமாங் கருவி, சேருதல் பிரித லில்லையா முறையிற் செயப்படுங் கருவியே தெரியுந், தாவிலாவறிவு தங்கினவிடமே தனுவுயிர்க் கிருப்பிடம்" என்றதூஉம் இப்பொருள் பற்றியென்க.

தத்துவவன்னரூபனாதல் வீடு பெற்றுழியும் உண்டுபோலுமென்னு மாசங்கை நிகழாமைப்பொருட்டு, மலசொரூபத்தின் மறைந்தென மேற்கூறிப்போந்ததனை வழிமொழிந்துகொண்டு அரூபசொரூபியாய் நிற்றலானென்று ஏதுக்கூறினார்.

மறைந்தவழியென்றது மறைந்தெனத் திரிந்துநின்றது.

× சிவஞானசித்தி, ௨—ரு, செ - ௬௨

இ—ரு, க - ரை.

எ-து. ரு-ம். எ-னின். இவ்வான்மாக்களி டத்துத் தமது முதலுபகார முணர்த்துத லு தலிற்று.

எ-து. க-ரை. எ-னின். சூத்திரக்கருத்துணர்த்துத லு தலிற்று.

இ-ள். ஐந்தவத்தைப்படும் வழிக் கருவியும் உயிரும் அமைச்சும் அரசுமேய்ப்ப நிற்பின் அவையே யமையுமாகலான், முதல்வனால் ஆண்டைக் காகற்பாலதொரு பயனில்லைபோலுமென்னுங் கடாவை யாசங்கித்து, ஆண்டும் இன்றியமையாது வேண்டப்படுவதாய முதல்வனுடைய உதவியை அறிவிக்கு முகத்தானே இரண்டாஞ் சூத்திரத்திரேுதிய துணைக்காரண முதற்காரணங்களை இலக்கண முணர்த்துதல் இவ்வைஞ்சாஞ் சூத்திரத்தின் கருத்து. எ-று.

இதனானே சூத்திரவிடையும் இனிது விளங்கும்.

மாயை கன்மங்கள் திரோதானசத்திக்குக் கருவியாய் அதனுடங்குதலிற் றமது முதலுபகாரமெனப்படுந் திரோதானசத்தியதிலக்கணங் கூறவே அவற்றதிலக்கணமுங் கூறியவாறு தலறிக.

இதனுள் விளம்பிய வுள்ளத்து மெய் வாய் கண் மூக் களக்க திக்கறியா என்றது ஓரதிகரணம், அங்கவைபோலத் தாந்தமுணர்வின் றமியருள் காந்தங்கண்ட பசாசத்தவையே என்றது ஓரதிகரணம். ஆக இரண்டதிகரணத்தது இச்சூத்திரமென்றுணர்க.

---

கு—ரு, - க - அ - வா-ம்.

ஈண்டு, ஐயுணர்வுகள் ஆன்மாவாலுணருமென்றது.

எ-து. மே-ள். எ-னின். தாமரையிலையி னீர்போற் புருடன்பற்றற்று நிற்பப் புருடன் சந்நிதியிற் புத்திதத்துவமே ஐம்பொறிவழியான் விடயங்களையும் அறியுமெனவமையும், அவ்வாறன்றிக் கருவிகளோடு கூடிப் புருடனே அவற்றைப் படுமென மேற்கூறிய தமையுமா றென்னையெனச் சாங்கியநூலார் மதம்பற்றி நிகழுங்கடாவை யாசங்கித்து 'விளம்பிய வுள்ளத்து' என்னும் சூத்திரத்தின் முதற்கூற்றைக் கண்ணழித்துரைத்து மேற்கோட னுதலிற்று.

இ-ள். வெ-டை.

உணர்விற் கேதுவாகிய பொறிகளை உணர்வென் றுபசரித்தார்

அவற்றினால் ஆன்மா வொற்றித்துக் காணினல்லது அவை யொன்றையும் விடயியாவாகலான்.

எ-து. ஏது. எ-னின். அதற்குப் பிரமாணமென்னை யென்பானை நோக்கி மேற்கோளைச் சாதித்த னுதலிற்று.

இ-ள். அவ்வைம்பொறிகளோடும் உயிர் ஒற்றுமைப்பட்டு நின்றறிந்தாலன்றி அவை ஒருவிடயத்தையும் விடயிக்கமாட்டாவாகலான், ஈண்டு ஐயுணர்வுகள் ஆன்மாவாலுணருமென மேற்கொண்டது எ-று.

ஆன் உடனிகழ்ச்சிப் பொருட்கண் வந்தது.

உம்மை இழிவுசிறப்பு, முற்றுமாம்.

எதிர்மறை முகத்தாற் கூறினார், இன்றியமையாமை விளக்கற்கு.

---

௫—சூ, உ - அ - வா - ம்.

இனி இவ்வான்மா தன்னாலே யுணருமிந்திரியங்களைப்போலத் தானுந் தன்னை யுணராது நிற்றலால்-இதுவுந் தமது முதலாலே யுணருமென்றது.

அறு—இனி இதுவுந் தமது முதலாலே யுணருமென்றது.

எ-து. மே-ள். எ-னின். கருவி சடமாகலிற் சித்தாகிய பிராணன்றி அமையாவாயினுஞ் சித்தாகிய உயிர் முதல்வனதுபகாரத்தை யவாய் நிற்பதன்று; அவாவுமாயின், முதல்வனும் அவ்வாறே பிறிதொன்றனுபகாரத்தைஅவாவுமெனப் பட்டுபோய் வரம்பின்றியோடும் என ஈசுரவவிகாரவாதி முதலியோர் கூறுங்கடாவை யாசங்கித்து 'ஆங்கவைபோல,என்னுஞ் சூத்திரத்தின் பிற்கூற்றைக் கண்ணழித்துரைத்து மேற்கோட லுதலிற்று.

இ-ள். வெ-ளிட.

தமது முதலென்பது யானெம்மூர் புகுவன் நீ நும்மூர் புகுவ வென்புழிப்போல வேறுமுடிபு கோடலிற் பால்வழுவன்றென வுணர்க.

உம்மை இறந்ததுதழீஇயவெச்சம்.

இம்முறைமை தமக்கொரு முதலுடையவர்திற்கேயன்றி முதற்பொருட்கின்மையின் வரம்பின்றியோடுமாறில்லை யென்

பார், தமது முதலென்று உடம்பொடு புணர்த்தோதினு
தம்முணர்வின்றமியென்றது மது.

தத்துவங்களுமுயிருந் தமக்கொரு முதலுடையனவா
ம் முதல்வனுக்கு அஃதின்மையும் மேற்கூறிப்போந்த சூத்
ங்களாற் பெறப்பட்டனவென்பது கருத்து.

இவ்வான்மா தன்னுலே யுணரு மிந்திரியங்க
ளைப்போலத் தானுந் + தன்னையுணராது நித்
றலான்.

ஏ-து. ஏது. எ-னின். உயிர் ஐம்பொறியிற் சடமன்மை
ன் அவற்றை யெடுத்துக் காட்டி. மேற்கோடல் சுமன்மைக்
மையாமென்பாரை நோக்கி அதனைச் சாதித்த துவிற்று.

இ-ள். வெ-ளை.

சடமுஞ் சேதனமுமாய வேறுபாடெற்றித் தம்முள் ஒவ்
வாயினுந் தம்மையுந் தமது முதலையும் அறியமாட்டாமை
கண் ஐம்பொறியும் உயிருந் தம்முள் ஒக்குமாகலின், அதுபற்
அங்ஙனமேற்கோடலமையுமென்பது கருத்து.

---

சூ—௩, க - ரை.

எ-து. ௩-ம். எ-வின். சத்தும் அசத்தும் வ
ரைசெய் துணர்த்துத லுதலிற்று.

எ-து. க-ரை. எ-னின். சூத்திரக்கருத் துணர்த்துத லு
லிற்று.

---

+ தன்னை யுணராது எனபதற்குத தன்னையுந் தன முத
வனையு முணராது எனப் பொருள் கொள்ளப்படும். தன்
தன்முதல்வன்.

இ-ள். மேலைச் சூத்திரத்தானுங் கூறிப்போந்த பொருள்க ள், யாது சத்து யாது அசத்தென்னும் ஐயநீக்குதற்குச் சத்தி யல்பும் அசத்தினியல்பும் இவையென அவ்விரண்டும் இலக் கத்தாற் றம்முண்மயங்காதவாறு வரைந்து வைத்துணர் ந்; உண்மையதிகாரத்திற்குத் தோற்றுவாய் செய்யுமுகத்தா ா இலக்கணமேயோத்துட் கூறுதற்கு எஞ்சிநின்ற பதிப்பொரு திலக்கணங் கூறுதல் இவ்வாற்றுஞ் சூத்திரத்தின் கரு து. எ-று.

இதனானே சூத்திரவிடைபும் இனிது விளங்கும்.

இதனுள் உணருருவசத்தெனி, னுணராதின்மையின் என்றது திகரணம், இருதிறனல்லது சிவசத்தாமென இரண்டுவகை விளக்கு 'மன்னுலகே என்றது ஓரதிகரணம், ஆக இ டதிகரணத்தது இச்சூத்திரமென்றுணர்க.

---

சூ—ரு, க - அ - வா - ம்.

சுண்டு, அறிவினலறியப்பட்ட சுட்டு அசத்தெ 'ன்றது.

எ-து. மே-ள். எ-வின். மேலைச்சூத்திரத்தின் 'அளந்தறிந் தியா' என்றதனை உடம்படாது பிரபஞ்சம்போல முதல் னும் அளவைகளான் அளந்தறிபொருளேயாமென நையா கர் முதலியோர் கூறுங்கடாவையும், எல்லாப்பொருளுந் த்தாகலின் அளந்தறிபொருளுஞ் சத்தேயாமெனச் சாங்கி ர்கூறுங்கடாவையு மாசங்கித்து 'உணருருவசத்தெனின்' என் ற் சூத்திரத்தின் முதற்கூற்றைக் கண்ணழித்துரைத்து மே கோட ஞுதலிற்று.

இ-ள். சுட்டறிவினால் அறியப்பட்ட சுட்டுப்பொருளெல் ாம் அசத்து. எ-று.

சுட்டு ஆகுபெயர்.

சிவஞானத்தா லறியப்படுதலை நீக்குதற்கு அறிவிறுஎல

விசேடித்தார்.

ஈண்டு அறிவென்றது ஒன்றை முந்தி அதுவதுவாகச் சுட்டி காணும் அளவையறிவினையென்பது ×"அறிவினா லறிந்த யா மசத்தாத லறிதி" என்ற புடைநூலாசிரியர் மீள அங்கு ரைத்தோதியவாறுபற்றி யுணர்ந்துகொள்க.

அவைதாம் பிரகாசமாய் நின்றே அப்பிரகாச
மாய் நிற்றலான்.

எ-து. ஏது. எ-னின். உள்ளதென்னு முணர்விற்கு விட மாய் உபலத்தியைப் பயப்பிக்கும் பிரபஞ்சத்தை இல்லையென் னு முணர்விற்கு விடயமாய் அநுபலத்தியைப் பயப்பிக்கு இல்பொருளோடொப்ப அசத்தென்றல் அமையுமாதியாங்ங மெனவும், சத்தாகிய பிரபஞ்சத்தைச் சுட்டப்படுதன்மாத்தி ரையான் அசத்தென்றல் சற்காரியவாதத்திற் கிழுக்காம்பொ ருளெனவும், முறையே அவ்விருவர்மதம்பற்றிக் கூறுவானை நோக்கி மேற்கோளைச் சாதித்த னுதலிற்று.

இ-ள். அச்சுட்டுப்பொருள்கடாம் இராசதகுணமிகுதிப்பாட் டான் உள்ளதென்னும் உணர்விற்கு விடயமாய் உபலத்தியைப் பயப்பித்து நின்று, தாமே தாமதகுணமிகுதிப்பாட்டான் இல் லையென்னு முணர்விற்கு விடயமாய் அநுபலத்தியைப் பயப்பி த்து நிற்றலான், ஈண்டறிவினாலறியப்பட்ட சுட்டு அசத்தென மேற்கொண்டது. எ-று.

---

× சிவப்பிரகாசம், உண்மை ௨-ஞ—௫.

றுண்டுப் பிரகாசம் அப்பிரகாசமென்பன உபலக்கி அருப
க்தியென்னும் பொருளவாய் அவை நிகழ்தற்கிடனாகிய பொரு
ண்மேனின்றன.

இது நையாயிகரை நோக்கி மேற்கோளைச் சாதித்தவாறு.
இனி இதனையே இரட்டுற மொழிந்துகொண்டு, அவைதாங் கா
ரியவவத்தையிற் றூலமாய் விளங்கிநின்றே காட்சிப்புலனாய்ச்
சடுதியின் மறைந்து சூக்குமமாய்க் காரணவவத்தையின் விள
ங்காது நிற்கும் இவ்வேற்றுமையுடைமையான், அங்ஙனம் புல
னாகாத காரணப்பொருள்களை நோக்கிக் காரியப்பிரபஞ்சம்
அசத்தாதல் சாலுமாகலின், ஏனையறிவினாலறியப்பட்ட, சுட்டு
அசத்தென மேற்கொண்டதென்றவாறு எனவும் உரைத்துக்
கொள்க.

---

சூ—௬, உ - அ - வா-ம்.

இனி, பிரகாசத்தினுக்குப் பிரகாசிக்க வேண்டுவ தி
ன்மையானும், அப்பிரகாசத்தினுக்குப் பிரகாசமின்
மையானும், இவ்விரண்டுதன்மையு மின்றி வாக்கு
மனதீதகோசரமாய் நின்ற வதுவே சத்தாயுள்ள சி
வமென் றுணரற்பாற்று.

அ-ம்— இனி, இவ்விரண்டு தன்மையுமின்றி வாக்
கு மனதீதகோசரமாய் நின்ற வதுவே சத்தா
யுள்ள சிவமென் றுணரற்பாற்று.

எ-து. மே-ள். எ-வின். மேல் உணர்பொருளியல்பும் உண
ராத பொருளியல்புங் கூறுமுகத்தான் அசத்தினியல்பை வரை
செய் துணர்த்தியவழி இரண்டும் இவ்வாறாகலான், இவற்றின்
வேறாய முதல்வனதியல்பாவது மாயாவாதி கூறும் அநிர்வச

னம்போலுமென்னுங் கடாவை யாசங்கித்து 'இருதிறனல்லது' என்னும் சூத்திரத்தின் பிற்கூற்றைக் கண்ணழித்துரைத்து மேற்கோடனுதலிற்று.

இ-ள். வெ-டை.

வாக்கெனப்படு நாதமுடிவான பாசஞானத்தை வாக்கென்றும், அவற்றின் வேறாய பசுஞானத்தை மனமென்றும் உபசாரவழக்காற் கூறினார்.

வாக்குமனாதீத கோசரமாய் நின்ற. எ-து. அவ்விரண்டின் விருத்திகளைக் கடந்து அதீதமாயும் ஒற்றுமைப்பட்டு நின்றுணரும் அநுபவஞானமாத்திரைக்கே விளங்கிக் கோசரிப்பதாயும் நின்றவென்றவாறு.

அவ்வாறு நின்றபொருள் இதுவென அளவைகளான் அறியவாராமைபற்றி அதுவேயென மகாவாக்கியத்திற் கூறியதனை அநுவதித்துச் சத்தாகிய சிவமாதலைச் செவியறிவுறுத்தார்.

வாக்குமனாதீதம் என்பது தமிழ்நூன்முடிபு. மரவடி மராடியென மரீஇயினாற்போல, மனவதீதம் மனாதீதமென மரீஇயிற்று. அதீதகோசரமென்பது வடநூன் முடிபு.

வாக்குமனாதீதப் பொருளாகலின் உணருருவாந்தன்மையும், கோசரப்பொருளாகலின் உணராதாந்தன்மையும் இல்லையென்பது பெறப்படுதலின், இவ்விரண்டுவகையு மின்றி யென்றார்.

> பிரகாசத்தினுக்குப் பிரகாசிக்கவேண்டுவதின்
> மையானும், அப்பிரகாசத்தினுக்குப் பிரகாசமி
> ன்மையானும்.

எ-து. ஏது. எ-னின். இவ்விரண்டு வகையுமில்லாத பொருள் அநிர்வசனமாய் நிற்பதென்னாது வாக்குமனாதீத கோசர

மாய் நிற்பதென்றற்குப் பிரமாணமென்னை யென்பாரை நோக் கி மேற்கோளைச் சாதித்த துதலிற்று.

இ-ள். வாக்குமனங்களா லோதியுணரப்படுவதாய கிர்வச னப்பொருட்கு முன்னர்க் கூறப்படுஞ் சாதனங்களின்றி அ றியற்பாலதாக வேண்டாமையானும், ஒருவாற்றானும் அறியப் படாத அநிர்வசனப்பொருட்குச் சாதனத்தினின்றும் அறியப் படுமாதின்மையானும், இனி இவ்விரண்டுதன்மையுமின்றி வாக்கு மனாதீதகோசரமாய் நின்ற அதுவே சத்தாயுள்ள சிவமென்று ணரற்பாற்றென மேற்கொண்டது. எ-று.

உணர்தற்பாற் றென்றார் உணர்தலருமைநோக்கி.

பிரகாசம் அப்பிரகாசமென்பன உபசாரவழக்கு.

---

எ—சூ, க - ரை.

எ-து. சூ-ம். எ-னின். மேலதற்கோர் புறன டை யுணர்த்துத னுதலிற்று.

எ-து. க-ரை. எ-னின். சூத்திரக்கருத் துணர்த்துத னுத லிற்று.

இ-ள். நூலாருந்தகி நியாயம்பற்றி மேலையாறுசூத்திரங்களி னுஞ் சிவாகமங்களிற் கூறப்படும் முப்பொருள்களது பொதுவிய ல்பு, பிரமாணமுகத்தானும் இலக்கணமுகத்தானும் ஆராய்ச்சி செய்துணர்த்தியருளியவர் அம்முப்பொருள்களது சிறப்பியல்பெ னப்படும் உண்மை, சாதனமுகத்தானும் பயன்முகத்தானும் ஆராய்ச்சிசெய் துணர்த்துவான் புகுந்து: முதற்கண் மூன்று சூத்திரங்களான் அவற்றையறிந்து அதற்குரிய பயன் பெறு தற் கேதுவாகிய சாதனங் கூறத் தொடங்கினார். அவற்றுள் இச்சூத்திரம் 'உணருருவசத்து,' எனவும் 'இருதிறனல்லது சிவசத்

து, எனவும் மேலைச்சூத்திரத்தான் வரைசெய்துணர்த்தியவற்றி அங்ஙனமறியும் பொருள் அவ்விரண்டானும் ஒன்றோ வேறோ வென்னும் ஐயப்பாட்டின்கண், அவ்விரண்டினுள் ஒன்றாகற்பா லதென்பார் மதம்பற்றி நிகழுங் கடாவை யாசங்கித்துச் சூத்திரத்துக்குப் புறனடையெடுத்து ஓரொழிபாகிய சதசத்தினியல்பு வரைசெய்துணர்த்து முகத்தானே சாதித்துப் பயன்பெறுதற்குரிய அதிகாரியாவது இதுவென்ப துணர்த்துதனுதலிற்று. எ-று.

அதிகாரமும் ஒத்தும் வேறாயவழியும் இவைபுணர்ந்து கோடற்பொருட்டுக் கருத்துரை அவ்வாறு செய்தாரென்பது.

இப்புறனடையை வடநூலார் வாக்கியசேடமென்ப.

இதனுட் கூறப்படுமூன்றதிகரணமும் மூன்றுபுறனடைபோலு மென மலையாமைப்பொருட்டு ஓர் புறனடையென்றார். முன்னையவிரண்டும் இறுதியதிகரணத்தைச் சாதித்தற்கேதுவாய் ஒருபொருண்மேல் வந்தனவேயாம் என்பது கருத்து.

ஒன்றனையறிந்தவழி அதனானாய பயன்பெறுதற்குரிய முயற்சி செய்யலுறுவார்க்கு அதனைச் சாதிக்குமாற்றல் தமக்குண்டென்பதூஉம், சாதித்ததனால் வரும் பயன் இதுவென்பதூஉம், அதனைப் பயப்பித்தற்குரிய சாதனமாவது இதுவென்பதூஉம், அவ்வருவாயும் உணர்ந்தாலன்றி, அதன்கண் மனவெழுச்சி செல்லாமையின்; ஈண்டோதப்படுஞ் சாதனஞ்செய்து பயன்பெறுதற்குரிமையுடைய அதிகாரியியல்புணர்த்துவதாய இச்சூத்திரம் முதற்கண்வைக்கப்பட்டது.

இதனுள் யாவையுஞ் சூனியஞ் சத்தெதிராகலிற் சத்தேயறியாதென்றது ஓரதிகரணம், அசத்திலதறியாதென்றது ஓரதிக

ரணம், இருதிறனறிவுளதிரண்டலாவான்மாவென்றது ஏழதிகர ணம். ஆக மூன்றதிகரணத்தது இச்சூத்திரமென்றுணர்க.

---

## எ—சூ, க - அ - வா-ம்.

ஈண்டு, சத்தினிடத்து அசத்துப்பிரகாசியாதெ ன்றது.

எ-து. மே-ள். எ-னின். "தந்திடுஞ் சிவனவன்றன் சத்தி தன்னி லின்றே" எ-ம். "கூடுமொளி வளர்குழலை மானை மேவி." எ-ம். "தாரகமா மத்தன்றுணிற்றல்." எ-ம். "வி மலனுக்கோர் சத்தியாய்." எனவும். "உலகமேயுருவமாக" எ-ம். "அத்துவா மூர்த்தியாகி." எ-ம். "இருநிலனாய்த் தீயா கி நீருமாகி—நின்றவாறே." எ-ம். கூறப்படுமியல்புடைய பிர பஞ்சத்தைச் சத்தெதிர் சூனியமென்றல் அவசித்தாந்தமாய் மு டியும்போலும் எனவும், "மண்டிய வுணர்வுயிர்க்காய் மன்னிநி ன்றறியும்" எனவுங் கூறுஞ் சிவாத்துவிதசைவர் மதம்பற்றி நிகழுங்கடாவை யாசங்கித்து 'யாவையுஞ் சூனியம்' என்னும் சூத்திரத்தின் முதற்கூற்றிற்போந்த ஏதுவைக் கண்ணழித் துரைத்து மேற்கோ ளுதலிற்று.

இ-ள். சுட்டுணர்வின்றி நின்றறியுஞ் சிவசத்தின்முன்னர்ச் சு ட்டியறியப்படும் அசத்தாய பிரபஞ்சம் விளங்கித் தோன்று து. எ-று.

ஈண்டுச் சூனியமென்றது விளங்காமைப்பொருட்டென்பார் பிரகாசியாதென்றார். இக்கருத்தே பற்றி "முனைத்திடாதசத் துச் சத்தின் முன்னிருள்" என்றார் வழிநூலாசிரியரும். மு னைத்திடாமையாவது இது குடம் இஃதாடையென வெம்மனோ ராற் சுட்டியறியப்படுமாறுபோல முதல்வனாற் சுட்டியறியப்ப

வதாய் வேறு நில்லாமையாம். ஆகவே ஈண்டுச் சத்தெதிர் யாவையுஞ் சூனியமென்றது கொண்டு அவசித்தாந்தமாதல் யாண்டையதென மறுத்துச் சத்தறியாதென்றதனை வலியுறுத்தியவாறு காண்க.

மெய்யினிடத்துப் பொய் அப்பிரகாசமாய் நிற்றலான்.

எ-து. ஏ-து. எ-னின். முற்றுணர்வுடைய சிவத்துக்கு அசத்தை விடயிப்பதாய சுட்டுணர்வும் உண்டென்றுற்படும் இழுக்கென்னையென்பாரை நோக்கி மேற்கோளைச் சாதித்தலுதலிற்று.

இ-ள். தன்னியல்பாகிய இயற்கையுணர்வின் முன்னர்ப் பொதுவியல்பாகிய செயற்கைச்சுட்டுணர்வு பிரகாசித்து நில்லாமையான், ஈண்டுச் சத்தினிடத்து அசத்துப் பிரகாசியாதென மேற்கொண்டது. எ-று.

பிரகாசித்துநிற்றலின்மையாவது, இயற்கையுணர்வோடொப்ப ஒருங்குநில்லாமை. எக்காலத்து நிலைபெறுவதாய தன்னியல்பே மெய்யெனவும், இடையே தோன்றிமறைவதாய பொதுவியல்பே பொய்யெனவுங் கூறப்படுவனவாகலான், அவை ஈண்டைக்கேற்புடைய அறிவின்மேனின்றன. இஃதறியாதார் உரைப்பனவெல்லாம் மேற்கோளைச் சாதித்தற்குரிய ஏதுவாதல் செல்லாது கூறியது கூறலாய் முடியுமென்றொழிக.

---

எ—ரு, உ - அ - வா-ம்.

இனி, அசத்தினுக்கு உணர்வின்றென்றது.

ஏ-ற. மே-ள். எ-னின். சத்து அசத்தையறியாதாயினும், அசத்தென்னப்பட்ட தநுகரணபுவனபோகங்களுள் ஒன்றாய

கரணம், விளக்குப்போல் விகாரமின்றி நிற்கும் ஆன்ம சந்நிதி யிற் பெத்தநிலைக்கண் அசத்தாய விடயங்களையறிந்தாற்போல முத்திநிலையிற் சிவகரணமாய் நின்று சிவத்தையறியுமென்றாலும், கண்ணாடியினிழல்போல ஆன்மசந்நிதியின் அதன்கணறிவுண்டாமென்றாலும் அமைவுடைத்துப்போலுமெனச் சிவசங்கிராந்தவாதி மதம்பற்றி நிகழுங் கடாவை யாசங்கித்து 'அசத்திலதறியாது' என்னும் சூத்திரத்தின் இரண்டாங்கூற்றிற் போந்த வேதுவைக் கண்ணழித்துரைத்து மேற்கோட லுதலிற்று.

இ-ள். வெ-டை.

சூத்திரத்தின் இரண்டென்றது அறிவிலதென்னும் பொருட்டென்பார் உணர்வின்றெனவுரைத்தார்.

ஈண்டு அசத்தென்றது தத்துவப்பிரபஞ்சத்தை; ஏனைப்பிரபஞ்சத்திற்கு அறிவின்மை சாதிக்கவேண்டாமையின்.

அதுதானிரூபிக்கில் இன்றாகலான்.

எ-து. ஏ-து. எ-னின். பதிஞானபசுஞானங்களையொப்பப் பாசஞானமொன்றென வைத்தெண்ணப்படு முரிமையுடையவதனை அறிவுடைத்தன்றென்றல் பொருந்தாதென்பாரை நோக்கி மேற்கோளைச் சாதித்த லுதலிற்று.

இ-ள். அவ்வறிவாவது தூலமாய் நோக்கும்வழி அவ்வசத்துக்கு உள்ளதுபோலத் தோன்றினும் ஐயந்திரிபின்றி மாசறுகாட்சியான் ஆராயும் வழி அதன்கண் இல்லாதாகலான், இனி அசத்தினுக் குணர்வின்றென மேற்கொண்டது. எ-று.

எனவே, பாசம் வாயிலாக உயிரின்கணிகழு ஞானமே பாசஞானமென்று உபசரித்துக் கூறப்படுமதனைப் பாசத்திற்குளது

சிய ஞானமெனக் காண்டல் நிரூபியாதவழிப் படும் மடமையே பிறிதில்லையென்றவாறாயிற்று.

---

எ—ரு, கூ - அ - வா-ம்

இனி, +இருதிறனறிவுள திரண்டலா வான்மா வென்றது.

எ-து. மே-ள். எ-னின். சிவசத்தின்றன்மையே உயிர்க்குந் தன்மையாவதன்றி வேறில்லையாகலிற் சத்தே அசத்தை யறியுமென்னுஞ் சிவாத்துவிதசைவரையும், உயிர்க்குந் தன்மையென்பதொன்றின்மையின் அசத்தே சத்தை அறியுமென்னுஞ் சிவசங்கிராந்தவாதசைவரையும் மறுத்து, சத்து மசத்துந் தம்முளறியுமாறில்லையென மேற்சாதித்தவழி இரண்டுட் இவ்வாறாயின், இவற்றையறியும்பொருள்வேறென்னை யென்பாரை நோக்கிப் பாரிசேடவளவையான் அவ்விரண்டின் வேறாய் உயிர்க்குத் தன்மையுண்டென்பது விளக்கிச் சதசத்தினியல்பை யுணர் செய்துணர்த்துத னுதலிற்று.

இ-ள் வெ-டை.

ஈண்டு இரண்டலாவான்மா இருதிறனறியுள தென்றது சுத்தெதிர் நில்லாத அசத்துஞ் சத்துந் தம்முள் ஒன்றாய் நின்றறியப் படாமையான், இருதிறனறிவுளது இரண்டலா வான்மாவேயாம்; தம்முள் ஒன்றையொன்று அநுபவிக்கப்படாத ஞாயிற்றையும் விடயத்தையும் அநுபவிக்குங் கண்போலுமென அநுமானங்கூறிக்காண்க. அவை உயிரானும் அறியப்படாதவழிப் பயப்பாடின்றிச் சூனியமாய் முடியுமாகலான் உயிர் அறிதற்றன்மைத்து என்பது கேற்றெனவுணர்க.

---

+ இதனுள் அதிகரண பதமே வார்த்திகமாகிய வாறுகாண்க

இவ்விரண்டினையுமறிவதாய் உபதேசியாய் நின்றவறிவு இரண்டன்பாலுமுளதாய், உள்ளவதுவே அவ்வான்மாவாமென்றது.

எ-து. பொ-ரை. எ-வின். இருதிறனறிவென்னுந் தொகைச்சொல் விரியுங்காற்படும் பொருள்வேறுபாடு விளக்குமுகத்தான், உயிர்க்குத் தன்னியல்பு வேறு வேறு கூறுஞ் சமயங்களெல்லாம் மறுக்கப்படுமாறுணர்த்துத லுதலிற்று.

இ-ள். இவ்விரண்டினையும் அறிவதாய். எ-து. மேற்கூறிப்போந்தசத்தையும் அசத்தையும் அறியுந்தன்மைத்தாய்—உபதேசியாய். எ-து. அறிவிக்க அறியுந்தன்மைத்தாய்—இரண்டன்பாலுந் நின்ற அறிவு உளதாய். எ-து. அவ்விரண்டின்கண்ணுந் நிலைபெற்ற அநுபவவறிவுள்ளதாய்—உள்ள அதுவே அவ்வான்மாவாமென்றது. எ-து. இவ்வாறுள்ள பொருள்யாது அதுவே சத்தும் அசத்துமல்லாத சதசத்தாகிய உயிரென்றுணரும். இருதிறனறிவுள திரண்டலாவான்மாவென மேற்கொண்டது. எ-று.

ஆயென்னும் வினையெச்சமூன்றும் உள்ளவென்னும் பெயரெச்ச வினைக்குறிப்போடு முடிந்தன.

இருதிறனறிவென்னும் தொகைச்சொல் ஈண்டு மூன்றுபொருளின் மயங்கிற்றென்னுங் கருத்தான் இவ்வாறு மொழிந்தார். அவற்றுள் இருதிறனையுமறியுமறிவென்னும் இரண்டாம்வேற்றுமைத் தொகைப் பொருள்பற்றி இவ்விரண்டினையு மறிவதாயெனவும், இருதிறனால் விளங்கிய வறிவென்னும் மூன்றாம்வேற்றுமைத் தொகைப்பொருள்பற்றி உபதேசியாயெனவும், இருதிறனிலுமுள்ள வறிவென்னும் ஏழாம்வேற்றுமைத் தொகைப்பொருள்பற்றி நின்றவறிவு இரண்டன்பாலுமுளதாயெனவும், உரைக்கப்பட்டன.

இவ்விரண்டினையு மறிவதாயுள்ள வதுவென்பதனால் இரண்டும் இவ்வாறாயின் இவற்றையறியும் பொருள் வேறென்னையென்னுங் கடாவுக்கு விடைகூறி, அவ்விருவர் மதங்களையும் அவற்றோடொருதன்மையவான சமயங்களையும் மறுத்தவாறு.

உபதேசிபாயுள்ளவதுவென்றதனால் உயிர் அறிவிக்கவேண்டாதுதானேயறியுமியல்பிற்றென்னுஞ் சமவாதசைவர்-ஈசுரவவிகாரவாதசைவர்-ஐக்கவாதசைவர் மதங்களையும், அவற்றோடொருதன்மையவான சமயங்களையும் மறுத்தவாறு.

இரண்டன்பாலுமுளதாயுள்ள வதுவென்பதனால், ஆன்மாவினறிவு சத்தோடுகூடுமாறில்லையென்னும் பாடாணவாதசைவர் பேதவாதசைவர் மதங்களையும், சத்தோடு கூடியவழி ஒன்றாய்ப் போதலேயன்றி அதன்பாலுளதாமாறில்லையென்னுஞ் சுத்தசைவர்மதத்தையும், அவற்றோடொருதன்மையவான சமயங்களையும் மறுத்தவாறு.

இவ்விரண்டினையுமறிவதாமெனவே அவ்வறியுந்தன்மை இவ்விரண்டின்றன்மைபோலன்றி இருளொளியலாக் கண்டன்மை போல வேறுபடுவதோர் தன்மையென்பதூஉம், உபதேசியாமெனவே அஃதாகாயத்தின் குணமாய ஓசையினியல்புபோலத் தன்னை விளக்குவதாகிய வியஞ்சகமுள்வழி விளங்குவதோர் தன்மையென்பதூஉம், இரண்டன்பாலுமுளதாமெனவே அத்தன்மை படிகம்போலச் சார்ந்ததன்வண்ணமாய் அழுந்துந் தன்மையென்பதூஉம் பெறப்பட்டன.

அ—ரு, க - ரா.

எ-து. சூ-ம். எ-னின். ஞானத்தினை யுண ருமுறைமையினை யுணர்த்துத னுதலிற்று.

எ-து. க-ரை. எ-னின். சூத்திரக்கருத்துணர்த்துத னுதலிற்று.

இ-ள். அவ்வான்மாவின் அறிவாவது மேலிருதிறனென் றதனுள் அசத்தான் விளங்கி அசத்தின்பாலுளதாய் அசத்தினை யறிந்து நின்றவாறும், சத்தான் விளங்கிச் சத்தின்பாலுளதாய்ச் சத்தினையறிந்து நிற்குமாறும், தரிசிக்குமுறைமையினை யுணர்த்து முகத்தாற் சாதித்தற்குரிய அதிகாரந் தனக்குண்டென மேலைச்சூத்திரத்தானறிந்த ஆன்மாவுக்குச் சாதித்தலாற் பெறப்படும் பயனும், அதற்குச்சிறந்த சாதனமாவதும், அது வருவாயும், இவையென்ப துணர்த்துதல் இவ்வெட்டாஞ் சூத்திரத்தின் கருத்து. எ-று.

இதனானே சூத்திரவியையும் இனிது விளங்கும்.

இதனுள், தவத்தினிலுணர்த்த என்றது ஓரதிகரணம், தம்முதல் குருவுமாய் என்றது ஓரதிகரணம், ஐம்புலவேடரினயர்ந்தனை வளர்ந்தெந என்றது ஓரதிகரணம், விட்டன்ளியமின்மையி னரன்கழல்செலுமே என்றது ஓரதிகரணம், ஆக நான்கதிகரணத்தது இச்சூத்திரமென்றுணர்க.

---

அ—ரு, க - அ - வா-ம்.

ஈண்டு, இவ்வான்மாக்கட்கு முற்செய் தவத்தான் ஞான நிகழுமென்றது.

எ-து. மே-ள். எ-னின். மேற்கூறிப் போந்த சாதகராற்செ

ப்பட்டுஞ் சாதனமும், அது வருவாயும், வேறு வேறாகக்கூறு ஞ் சூத்திரத்தானை நோக்கி 'தவத்திலி ் உணர்த்த' என்னும் சூத்திரத்தின் முதற்கூற்றைக் கண்ணழித்துரைத்து மேற்கோ டனுதலிற்று.

இ-ள். வெ-படை.

மேற் கூறிப் போந்த இயல்புடைய ஆன்மாக்களுக்கென்பார் இவ்வான்மாக்களுக்கென்றார்

படிமுறையானன்றி இவ்வொருபிறவியிற்செய்த தவந்தானே அமையாதென்பதுணர்த்துதற்கு முற்செய்தவமென விசேடித்தார்.

ஈண்டு ஞானமென்றது குரவனுணர்த்தியவாறு சிவஞானங் கண்ணாகக்கொண்டு அறிவதாகிய சாதனவறிவின்மேற்று.

நிகழ்தல்-ஐயந்திரிபின்றி விளங்குதல்.

மேற் சரியை கிரியாயோகங்களைச் செய்தறி
நன்னெறியாகிய ஞானத்தைக்காட்டியல்லது
மோக்ஷத்தைக்கொடாவாகலான்.

ஏ-து. ஏ-ரு. எ-வின். தவங்களே சாதனமாதலையும் ஞானமேமற்றுக்கென்பானை நோக்கி மேற்கோளைச் சாதித்த னுதலிற்று.

இ-ள். வெ-டை.

ஈண்டுத் தவமெனப்பட்டன பிறவல்லவென்பார் சரியைகிரியாயோகங்களையெனக் கிளந்துரைத்தார்.

கிரியாயோகங்களென்னும் உம்மைத்தொகை யுடனான் மூடிபு. கிரியாயோகமிரண்டற்குந் தீக்கை யொன் றென்பது தோன்ற அவ்விரண்டனையுந் தொகுத்தோதிச் சரியையைத் தமிழுக்குரிய வீற்றான் வேறு வைத்தார்.

அருணந்திசிவாசாரியார் முதலாயினார்க்குத் தவமின்றியும் ஞானநிகழ்ந்தவாறென்னையென்னுங் கடாவை விடுத்தற்கு மேற்செய்துழியென ஈண்டும் வலியுறுத்தார்.

மேலாகிய உண்மைச்சரியை கிரியாயோகங்களை யெனினுமமையும்.

காட்டிக்கொடுக்குமெனற்பாலதனை எதிர்மறைமுகத்தாற்கூறினார், ஞானத்தை யின்றியமையாமை யுணர்த்துதற்கு. சரியை கிரியா யோகங்களைச் செய்துழி யென்றது உபலக்கணமாகலின், தீக்கை பெற்றுழி அதுவும் ஞானத்தைக் காட்டியல்லது மோட்சத்தைக் கொடாதெனக் கொள்க. அவையெல்லாம் ஞானத்தைக் காட்டியல்லது மோட்சத்தைக் கொடாமையை வலியுறுத்துவார், நன்னெறியாகியவெனஞானத்தை விசேடித்தார். நன்மையெனப்படுவன வெல்லாவற்றினுஞ் சிறந்த தன்மையாவது வீடுபேறென்பது. அதனைத் தலைப்படுதற் கேதுவாய்ச்சிறந்தநெறியாகலின் ஞானம் நன்னெறியெனப்பட்டது. வீட்டிற்கு நெறியென அவ்வச்சமயத்தாராற் கூறப்படுவனவனைத்துந் தன்கண்ணே வந்து கூடநின்ற பெருநெறியாகலானும் அது நன்னெறியெனப்பட்டது. நன்னெறி சன்மார்க்கமென்பன ஒருபொருட்கிளவி.

---

அ—சூ, உ - அ - வா-ம்.

இனி, இவ்வான்மாக்களுக்குத் தமது முதலு
னே குருவுமாயுணர்த்துமென்றது.

எ-று. மேல். எ-னின். மேற்கூறியவாற்றான் நிகழு ஞானத்தையுணர்த்துவார் கலைஞானங்களை யுணர்த்துவார்போல நம்மனோரில் ஒருவராதலுமையுமெனச் சாங்கியர் நையாயிகர் முதலியோர் மதம்பற்றி நிகழுங்கடாவை யாசங்கித்து 'தம்முதல்குருவுமாய்' என்னும் சூத்திரத்தின் இரண்டாங் கூற்றைக் கண்ணழித்துரைத்து மேற்கோட னுதலிற்று.

இ-ள். மேற்கூறியவாற்றாற் சரியை முதலிய மூன்றும் முற்றியபின்னர், இம்முற்றுதலானே மலபரிபாகஞ் சத்திநிபாதம் நிகழ்ந்து தத்துவஞானத்தின அவாவுதலையுடைய உயிர்கட்கு, இதுகாறுந் தமக்கு முதலாய் உண்ணின்றுணர்த்தி வந்த பரம்பொருளே அப்பருவமறிந்து குருமூர்த்தமா யெழுந்தருளிவந்து அதனை யறிவுறுக்கும். எ-று.

எனவே, ஏனையோர்க்கு அது கூடாதென்றவாறாயிற்று.

இக்கருத்தே பற்றி + "அசத்தறுநோய்க் குள்ளின ரன்றியதனைச், சகத்தவருங் காண்பரோ தான்" என்றார் புடைநூலாசிரியரும்.

ஏகாரந் தேற்றம்.

அவன் அந்நியமின்றிச் சைதன்னிய சொரூபி
யாய் நிற்றலான்.

எ-று. ஏது. எ-னின். மாயாவொருவன் மாயாவுருவினையேபான்; ஏயுமெனின், எம்மனோரிலொருவனாப் முடியுமாகலின்

+ திருவருட்பயன், அருளுருநிலை. உ—செ.

தமது முதற் குருமூர்த்தி ஆகாரமாகத்தரித்துநின்றுணர்த்து மென்றமே அமைவுடைத்தெனப் பொதுவகையான் அதிட்டா னபக்கங் கூறுவாரை நோக்கி, சிறப்புவகையான் ஆவேசபக்க மாமாறுணர்த்தி மேற்கோளைச் சாதித்த னுதலிற்று.

இ-ள். அம்முதல்வன் பாலினெய்போல மறைந்து வேருய் நிற்றலின்றிச் சுத்தான்ம சைதன்னியமே தனக்குச்சொரூபமாகக் கொண்டு தயிரினெய்போல ஆண்டு விளங்கிநிற்றலான், இவ்வான்மாக்களுக்குத் தமது முதன்மே குருவுமாயுணர்த்துமென மேற்கொண்டது. எ-று.

பாலினெய்போல வேருய் மறைந்து நின்று செலுத்தப் படுவனவற்றினும் பொதுவாய்ச் செல்வதாகிய அதிட்டானபக் கங் கொள்வார்க்கு ஏனைச்சமயகுரவருங் குரவராவான்சேற லின், அஃது ஈண்டைக் கமைவுடைத்தன்றென்பதாம்.

சைதன்னியமென்றார் மாசு தீர்ந்ததென்ப துணர்த்துதற்கு.

---

அ—ரு, ங. - அ - வா ம்.

இனி, இவ்வான்மாக்கள் ஐயுணர்வுகளான் மய ங்கித் தம்மை யுணராவென்றது.

எ-து. மே-ள். எ-னின். விடயஞானத்தை விளக்குமைம் பொறிகளே தத்துவஞானத்தை விளக்குதற்குமமையும், தம் முதல் குருவுமாதல் வேண்டாவெனச் சிவசங்கிராந்த வாதசை வர் மதம் பற்றி நிகழுங் கடாவை யாசங்கித்து 'ஐம்புலவேடரி ன்' என்னும் சூத்திரத்தின் மூன்றாங் கூற்றைக் கண்ணழித்து ரைத்து மேற்கோட னுதலிற்று.

இவ்வாறுரையாக்கால், இனியென்பதனு னுணர்த்தப்படும் மேலையதிகரணத்தோடுள்ளதாகிய இயைபு பெறப்படாமை யறிக.

இ-ள். வெ-டை.

உணர்வு ஆகுபெயர்

ஆவை தாம் பளிங்கிலிட்ட வண்ணம்போற் கா
ட்டிற்றைக் காட்டி நிற்றலான்.

எ-று, ஏது. எ-னின். அறிவை விளக்குங் கருவியான்மை யச்சு நிகழுமா றியாங்ஙனமென்பாரை நோக்கி மேற்கோளைச் சாதித்த னுதலிற்று.

இ-ள். படிகத்தின் வைத்த பலவேறுவகைப்பட்ட நிறங்கள் அப்படிகவொளியைக் கீழ்ப்படுத்துத் தத்த மியல்பினையே விளக்கி நிற்குமாறுபோல, அவ்வைம்பொறிகடாம் ஆன்மசொரூபத்தைக் கீழ்ப்படுத்துத் தம்மாற்காட்டப்பட்ட தத்தம் விடயமாத்திரையே அவ்வான்மாவுக்குக் காட்டி நிற்பனவாகலான்; இனி யிவ்வான்மாக்கள் ஐயுணர்வுகளான் மயங்கித் தம்மையுணராவென மேற்கொண்டது. எ-று.

விடயங்களுள்ளும் அவ்வவிடையமாத்திரையே அவ்வவிந்திரியங் காட்டவல்லுமென்பார் காட்டிற்றையென ஒன்றறிசொல்லாற் கூறினர்.

---

அ—ரூ, ச - அ - வா-ம்.

இனி, இவ்வான்மாத் தன்னை இந்திரியத்தின்

வேறுவான் காணவே தமது முதல் சீபாதத்
தை யணையுமென்றது.

எ-து. மேல். எ-னின். பொய்ப்புலனை வேறுணர்ந்து போய் பொய்யா மெய்கண்டார்க்கு அதுவேயமையும், கருவிகள் நீங்கியவழிச் செய்யக் கடவதொரு முயற்சி கூடாமையின் ஆண்டுமெய்ப்பொருட்குத் தைவமாதல் பெறப்படாதெனப் பேதவாதசைவர் முதலியோர் கூறுங்கடாவை யாசங்கித்து 'விட்டந்நியமின்மையின்' என்னும் சூத்திரத்தின் நான்காங் கூற்றைக் கண்ணழித்துரைத்து மேற்கோடனுதலிற்று.

இ-ள். வெ-டை.

இந்திரியத்தின் வேறுயவழிக் கேவலத்தை யணைதலு முண்மையின் அதனை நீக்குதற்பொருட்டு வேறுகவென்றொழியாது வேறுவான் காணவென்றார்; காண்டலே அதற்கமையு மென்றலின்.

ஏகாரந் தேற்றத்தின்கண் வந்தது.

ஊசல் கயிறற்றாற் றாய்தரையே யாந்துணை
யான்.

எ-து. ஏது. எ-னின். அவ்வாறு காண்டலே சீபாதத்தை யணைதற்குச் சாலுமென்பது யாங்ஙனமென்பாரை நோக்கி, உவமையின் வைத்துக்காட்டிய மேற்கோளைச் சாதித்த லுதலிற்று.

இ-ள். ஒருவன் ஏறியிருந் தாடுதற்கு ஆதாரமான ஊசல் கயிறற்றதாயின் அவனுக்கு உற்றுழியுதவுந் தாய்போல, ஆண்டுத் தாரகமாவது நிலனேயன்றிப் பிறிதில்லையென்னும் ஒப்புமையான்;

இனி யிவ்வான்மாத் தன்னை யிந்திரியத்தின் வேறுவான் காணா வே தமது முதல் சூத்திரத்தை யணையுமென மேற்கொண்டது. எ-று.

வியாபகப் பொருட்குக் காட்சிவிசேடமே நீக்கமாகலின் அஃதுதல் அதற்கு உவமையாயிற்று.

---

௯—சூ, ௧ - ரை.

எ-து. சூ-ம். எ-ஙின். ஆன்மசுத்திபண்ணுமா
றுணர்த்துத னுதலிற்று.

எ - து. க - ரை. எ - ஙின். சூத்திரக்கருத்துணர்த்துத னுதலிற்று.

இ-ள். தம்முதல் குருவுமாயுணர்த்தக் கேட்டு அதனைச் சிந்தனைசெய் துணருமா றுணர்த்து முகத்தான், ஐம்புலவேடரின் வளர்ந்த வாலாமை நீக்கி, உயிர் தன்னைத் தூய்மைப்படுத்துமாறுணர்த்துதல் இவ்வொன்பதாஞ் சூத்திரத்தின் கருத்து. எ-று.

சூத்திரவியைபும் இதனானே இனிது விளங்கும்.

சிவப்பிரகாசத்துத் 'தான் பணியை நீத்தல்' என்றோதப்படும் ஆன்மசுத்தியாவது இறைபணிநிற்கவென வருகின்ற சூத்திரத்திற் பெறற்பாலதாகலானும், அழுக்கு நீக்கமே அறுவைக்குச் சுத்தியாமாறுபோலப் பாசக்ஷயமே உயிர்க்குச் சுத்தியாவதன்றி

வேறன்மையானும், பாசக்ஷயம்பண்ணுமுன்னர்ச் சுத்தியாதல் 
டாமையானும், வருகின்ற சூத்திரத்தின் கருத்தாய்நின்ற ஆ
ன்மசுத்தி பண்ணுமாற்றைப் 'பதியை நாடி' எனவும் 'தண்ணி
ழலாம்பதி' எனவுஞ் சிவதரிசனம் பண்ணுமாறே யுணர்த்
துதற்கெழுந்த இச்சூத்திரத்தின் கருத்தாக வைத்துரை
த்ததென்னையோவென மலையற்க ; சிவதரிசனத்தினிகழ்
வது ஆன்மசுத்தியென்னும் உடனிகழ்ச்சி யுணர்த்துதற்கு
ம் தம்முள் வேறுபாடு சிறுபான்மையுடையனவாய இவ்
விருசூத்திரமும் ஒரு பொருண்மேலனவென்ப துணர்த்
துதற்கும் இவ்வாறுரைத்தாராகலின், அஃதங்ஙனமாக. ஆ
ன்மா தன்னை யிந்திரியத்தின் வேருவான்காணவே தமரூமுத
சீபாதத்தை யணையுமென்றலின், அக்காட்சியே அதற்சுமையு
; சுத்தியெற்றுக்கெனின், அஃதொக்கும். நிருவிகற்பமாய்க்
காண்டலும், இரட்டுறக் காண்டலும், தெளியக்காண்டலுமென
க் காட்சிமூவகைப்படும். இம்மூன்றும் அதிபரிபக்குவ முடை
யார்க்குக் கேட்டமாத்திரையே ஒருங்கு நிகழுமாயினும், ஏனை
யார்க்குக் கேட்டல் சிந்தித்தல் தெளிதலென்னுஞ் சோபான
முறையினன்றி நிகழாமையின், அவரைநோக்கிச் சிவரூபத்தி னி
கழும் ஆன்மதரிசனத்தின் பின்னாகச் சிவதரிசனத்தி னிகழும்
ஆன்மசுத்தியும் ஒருதலையான் வேண்டப்படுமென் றுணர்ந்து
கொள்க. × "நேசமொடுந் திருவடிக்கீழ் நீங்காதே தூங்கு நி
னைவுடையோர் நின்றிடுவர் நிலையதுவே யாகி—யாசையொடு ம
ங்கு மிங்கு மாகியல மருவோ ரரும்பாச மறுக்கும்வகை யருளி
வழி யுரைப்பாம்," என வழிநூலாசிரியரும் இக்கருத்தே
பற்றி யோதினர்.

× சிவஞானசித்தி, சுபக்கம், அ - கு,—செ. ௬௧. 'பாசிபடு'

இதனுள், ஊனக்கண் பாசமுணராப்பதியை ஞானக்கண்ணி னிற் சிந்தை நாடி என்றது ஓரதிகரணம், உராத்துனைத் தேர்த் தெனப் பாசமொருவத் தண்ணிழலாம் பதி என்றது ஓரதிகர ணம், விதியெண்ணு மஞ்செழுத்தே என்றது ஓரதிகரணம், ஆக மூன்றதிகரணத்தது இச்சூத்திரமென்றுணர்க.

---

கூ—சூ, க - அ - வா - ம்.

ஈண்டு, அம்முதலை ஞானக்கண்ணினாலே காண்க வென்றது.

எ-து. மே-ள். எ-னின். மேலைச் சூத்திரத்தோதியவாற் றான் முதல்வன் பாசவறிவால் நாடப்படுவனல்லனாயினும் பசு வறிவால் நாடப்படுவனென்றற்கு இழுக்கென்னையெனச் சிவச மவாதசைவர் மதம்பற்றி நிகழுங் கடாவை யாசங்கித்து 'ஊன க்கண்பாச முணரா' என்னும் சூத்திரத்தின் முதற்கூற்றைக் க ண்ணழித்துரைத்து மேற்கோட ணுதலிற்று.

ஏகாரம் தேற்றம்.

அவன் வாக்கு மனாதீதகோசரமாய் நிற்ற லான்.

எ-து. ஏது. எ-னின். ஏனைஞானங்களா னறியப்படாது சிவஞானத்தா னறியப்படுமென்றற்குப் பிரமாணமென்னை யெ ன்பாரை நோக்கி மேற்கோளைச் சாதித்த ணுதலிற்று.

இ-ள். வாக்குமனாதீதகோசரமாய் நின்ற அதுவே என்புழி யுரைத்தாம்.

ஆண்டுப் பொதுவகையாற் பெறப்பட்டதனை ஈண்டேதுவா
வைத்து வாக்கு மனாதீதமாயுங் கோசரமாதல் பிறிதொன்
ற் பெறப்படாதென்னும் அருத்தாபத்தியான் ஞானக்கண்,
லே காணப்படுமென்பது தாமே போதருமென மேற்கோ
ச் சாதித்தார்.

---

கூ—சூ, உ - அ - வா - ம்.

இனி, அசத்தாயுள்ள வன்னபேதங்களை அசத்
தென்று காண உளதாய் நிற்பது ஞானசொரு
பமென் றுணரற்பாற்று.

எ-து. மே-ள். எ-னின். அம்முதலை ஞானக்கண்ணாலே
ாண்கவென்றுணர்த்தியவழி அந்தஞானக்கண்ணைப் பெறு
ாறு யாங்ஙனமென நிகழும் அவாய் நிலையை நீக்குதற்பொரு
டு மேலதற்கோர் புறனடையாயெழுந்த ‘உராத் துனைத்தேர்
தென்’ என்னும் இச்சூத்திரத்தின் இரண்டாங்கூற்றைக்
ண்ணழித்துரைத்து மேற்கோட னுதலிற்று.

இ-ள். வெ-டை.

பாசமொருவத் தண்ணிழலாம்பதி யென்புழிப் பாசமென்ற
து காரியப்பிரபஞ்சத்தையென்பார் அசத்தாயுள்ளவென்றும்
சொற்பல்காமைப்பொருட்டு ஏதுட்பொருளை உருவகமுகத்தா
ன் உடம்பொடுபுணர்த்துக் காட்டுவார் பிரபஞ்சத்தை யென்னு
து வன்னபேதங்களை யென்றும், வியாபகப்பொருளுக்கு ஒருவுத
லாவது உணர்ச்சி விசேடமேயாமென்பார் அசத்தென் றொழிய
வென்றது காணவென்றும், தண்ணிழலாய் நிற்றல்புதிதன்றெ
ன்பார் உளதாய் நிற்பதென்றும், பதியென்றது ஆகுபெயராற்
பதிஞானத்தின் மேனின்றதென்பார் ஞானசொரூபமென்றும்

இஃது உருபவத்தினன்றிச் சொல்லளவையின் அறிய வாராதெனப் பாரா உரைதற்பாற்றென்று முரைத்தார். இஃது ஏகதேச உருவகம்.

இதனுட் பெறப்படுமேதுப்பொருளை ஏனையவற்றுட்போல மேற்கோளின் வேறுவைத்துக் காணுமாறு:

இனி, அசத்தாயுள்ள பிரபஞ்சத்தை அசத்தென்று காணவுளதாய் நிற்பது ஞான சொரூபமென்றது, வேற்றியல்பாகிய வன்னபேதங்களை வேற்றியல்பென்று கண்டு கழிப்பின், உளதாய் நிற்பது படிகசொரூபமாந்துணையான் எனவரும்.

இ-ள். படிகசொரூபத்தைக் காட்டாது மறைத்து நின்ற வேற்று நிறங்களை இவை நிலையுதலிலவாகிய வேற்றுநிறங்களெனக் கண்டுநிற்பின், அவ்வழி நிலையுதலுடைத்தாய் விளங்கி நிற்பது பளிங்கினது சொரூபமாமென்னு மொப்புமையான் நிலையுதலுடைய தற்சொரூபத்தைக் காட்டாது மறைத்து நிற்கும் நிலையுதலிலவாயுள்ள பிரபஞ்சத்தை, இவை நிலையுதலுடையன வல்லவென்று விவேகித்தறியின்; அங்ஙனநிராலம்பமயமாய் விளங்கித் தோன்றுவது ஞானசொரூபமென மேற்கொண்டது. எ-று.

வன்னபேதமாவது சித்திரமெனக்கொண்டு சுவர்மேல் வைத்துரைத்தலு மொன்று.

அசத்தாயுள்ள பிரபஞ்சத்தை அசத்தென்று காண்டலாவது ஆசிரியனறிவுறுத்த உபதேசப்பொருளினுரைத்து நின்று + "அ

+ சிவஞானசித்தி, ௯-௫,-அ—செ. 'சுறித்தடி'.

ட குணமெட்டுச் சித்திக் கோகனதன் முதல்வாழ்வு குலவுப மெல்லாம்—வெறுத்துநெறி யறுவகையு மேலொடுகீ ழடங்க'' ாரணரூபத்தினில்லாமையால் வெறும்பொயென நினைந்து ந்தல்.

---

கூ—சூ, ந - அ- வா-ம்

இனி, இவ்விடத்து ஸ்ரீ பஞ்சாக்கரத்தை விதிப்படி யுச்சரிக்க வென்றது.

எ-து. மே-ள். எ-னின். ஆன்மாவைச் சுத்திபண்ணுதற் ப் பாசமொருவியவழித் தண்ணிழலாய்ப் பிரகாசித்த ஞான சாரூபமொன்றே அமையுமாகலின், இவ்விடத்தில் இனிச்செய் க்கடவதொன்றில்லை யென்பாரை நோக்கி 'விதியெண்ணு மஞ் சழுத்தே, என்னும் சூத்திரத்தின் மூன்றாங்கூற்றைக் கண்ண த்துரைத்து மேற்கோட னுதலிற்று.

இ-ள் பாசமொருவி ஆண்டுத் தண்ணிழலாய்ப் பிரகாசித்த ானக்கண்ணாற் பதியைச் சிந்தை நாடியபின்னர், அவ்விடத்து திருவஞ்செழுத்தையும் விதிப்படி கணிக்கவென மேற்கொண் து. எ-று.

இறந்தது தழீஇயவெச்சவும்மை விகாரத்தாற்றொக்கது. அ ருகலினன்றே + "பின்னுமோசைதரு மஞ்செழுத்தை விதி படி யுச்சரிக்க" என்றார் வழிநூலாசிரியருமென்க.

ஈண்டு ஸ்ரீ பஞ்சாக்கரத்தையென்றது முத்தி பஞ்சாக்கரக் க. திருவஞ்செழுத்தாற் சாதிக்கப்படும்பொருளும் அதுவே

---

× சிவஞானசித்தி, சுபக்கம், கூ-சூ, க—செ. பாசஞானத் ாலும்.

யாகலான் வேறு வகுத்துக் கூறவேண்டாமையின், விதிப்படி யென மாட்டெறிந்தொழிந்தார்.

இவ்வா றாசிரியர் மாட்டெறிந்ததுணராதார், சாதிக்கு நிற்குமுறை வேறே, ஓதுமுறை வேறேயெனச் சித்தாந்தமழக் கொடு முரணிக் கூறுவர். நிற்குமுறைமையும் ஓதுமுறைமையுந் தம்முளியைபில்வழி அஃது அதற்குச் சாதனமாமாறு யாண்டைய தென்றொழிக.

மானதம் மந்தம் உரையெனக் கணிக்குமாறு மூவகைப்படும் அவற்றுட் சுத்தமானதமெனப்படும் அறிவாற்கணித்தலே ஈண்டு உச்சரித்தலென்பார் சூத்திரத்துள் உச்சரிக்கவென்றது எண்ணுகவென்றார். வடமொழிச் சூத்திரத்துத் தியானிக்கவென்றதும் அது. இன்னும் இதன்கட்படும் இயல்பெலாம், உண்மைவிளக்கம், சிவட்பிரகாசம், திருவருட்பயன், கொடிப்பாட்டு, நெஞ்சுவிடுதூது முதலியவற்றுட் காண்க, ஈண்டு விரிப்பிற் பெருகும்.

இவ்வான்மாக்களுக்கு ஞானம் பிரகாசித்தும், அஞ்ஞானத்தை வேம்புதின்றபுழுப்போல நோக்கிற்றை நோக்கிநிற்குமாதலின், அது நீக்குதற் கெனக்கொள்க.

எ-து: ஏது., எ-னின். அந்தரங்க வழிபாடாகலின், அந் ந்திருவாய் நின்ற பதியைச் சிந்திதருசக்கண்டு வழிபடுமாற்றைச் சாரவைத் தேசுதற்பாலதாகிய இதனைச் சித்தசாதனமாமீண்டு விதித்தல் எற்றுக்கென்பாரை நோக்கி மேற்கோளைச் சாதித்து நுதலிற்று.

இ-ள். வேம்புதின்ற புழு அதனைவெறுவிக் கரும்பு தின்னத்தலைப்பட்டு அதன்சுவை தெரிந்துழியும் பயிற்சிவயத்தான் நோக்கிற்றை நோக்கிநிற்குமாறுபோல, அசத்தாயுள்ள வன்னபேதங்களை அசத்தென்று கண்ட உயிர்களுக்கு அதனுள் ஞானசொரூபம் விளங்கி ஞேயங்காட்டப்பட்ட விடத்தும் அவை பயிற்சிவயத்தாற் பண்டைச்சிற்றுணர்வைநோக்கிநிற்குமாகலின், அவ்வாதனை நீக்குதற்பொருட்டு ஈண்டைக்கு வேண்டப்படுதலான், இனி ஸ்ரீ பஞ்சாக்ஷரத்தை விதிப்படி யிவ்விடத்துச்சரிக்கவென மேற்கொண்டதெனக்கொள்க. எ-று.

இவ்விடத்தென்றதனால் அணைந்தோர் தன்மையைச் சாரவைத்து மேற்கோடற்குரிய ஸ்ரீ பஞ்சாக்ஷரத்தையென வருவித்துரைத்துக்கொள்க. எனக்கொள்கவென்று உடம்படுப்பித்ததும் அதுபற்றி. இக்கருத்து நோக்கியன்றே புடைநூலாசிரியர் அஞ்செழுத்தருணிலையை ஆன்மலாபத்தின் பின்னாக அணைந்தோர்தன்மையைச் சாரவைத்தோதியதூஉமென்க.

“வாநோக்கி வாழும்” “கோநோக்கி வாழும்,” என்றாற்போல ஈண்டு நோக்கென்றது மனவெழுச்சி விசேடத்தை.

பிரகாசித்தவழியென்பது பிரகாசித்தெனத்திரிந்தது.

ஈண்டு ஞானமென்றது அசத்தை அசத்தென்று கண்டவழி விளங்குவதெனப்பட்ட ஞானசொரூபத்தை. அஞ்ஞானமென்றது அதற்கு மறுதலையாகிய சுட்டுணர்வையெனவுணர்க. அது நீக்குதற்கெனக் கொள்கவெனவே, சித்த சாதனமன்றென்பதும் பெறப்பட்டது.

---

க0—ரு, க - ரை.

எ-து. சூ-ம். எ-னின். பாசக்ஷயம் பண்

னும்மாறுணர்த்துத னுதலிற்று.

எ-து. க-ரை. எ-னின். சூத்திரக்கருத்துணர்த்துத னுதலிற்று.

இ-ள். மேல் ஏழாஞ்சூத்திரமுதலிய மூன்றானும் முறையே சாதிக்கும் பொருளதியல்பும், சாதித்துப்பெறப்படும் பொருளதியல்பும், சாதிக்குமாறு முணர்த்தி, இனி அச்சாதனத் தானாய பயனியல்பு வகுத்துக்கூறுவானெடுத்துக்கொண்டார். அப்பயனுவது பாசவீடுஞ் சிவப்பேறுமென இருவகைப்படும். அவ்விரண்டனுட் சுட்டுணர்வினுகிய ஏகதேசநோக்கத்தைத் திருவஞ்செழுத்தினுச்சரிப்பாற் பற்றறத்தடைத்தவழிப் பெறப்படுவதாகிய மேலைச்சூத்திரத்தினெடுத்துக்கொண்ட ஆன்மசுத்திப் பயனுகிய பாசவிடுதியைச் செய்துகொள்ளுமாறு, மேற்சிந்தனை செய்தபொருளைத் தெளியுமாறுணர்த்துமுகத்தானுணர்த்துதல் இப்பத்தாஞ்சூத்திரத்தின்கருத்து. எ-று.

இதனுனே சூத்திரவியைபும் இனிது விளங்கும்.

இதனுள், அவனேதானேயாகியவந்நெறி யேகனுகி என்றது ஓரதிகரணம், இறைபணிநிற்க மலமாயைதன்னொடு வல்வினையின்றே என்றது ஓரதிகரணம், ஆக இரண்டதிகரணத்தது இச்சூத்திரமென்றுணர்க.

---

க0—சூ, க - அ - வா-ம்.

ஈண்டு, பரமேஸ்வரன் இவ்வான்மாவாய் நின்ற
முறைமையான் அவனிடத்தேகனுகி நிற்கவெ
ன்றது.

எ-து. மே-ள். எ-னின். ஞானம்பிரகாசித்த முதற்பொருளைக்காண்டன்மாத்திரையே வீடுபேற்றிற்கமையுமெனச்சிவசமவாதசைவர் முதலியோர் மதம்பற்றி நிகழுங் கடாவையாசங்கித்

து 'அவனே தானே' என்னும் சூத்திரத்தின் முதற்கூற்றைக் கண்ணழித்துரைத்து மேற்கோட னுதலிற்று.

இ-ள். வெ-படை.

> அவ்வாறு நிற்கவே யானெனதென்னுஞ் செ
> ருக்கற்று அவனது சீபாதத்தை யணையுமாக
> லான்.

எ-து. ஏது. எ-னின். அஃதெற்றுக்கென்பாரை நோக்கி மேற்கோளைச் சாதித்த னுதலிற்று.

இ-ள். அங்ஙனமொற்றுமைப்பட்டு நின்றாலே யானும் எனதும் எனப் பகுத்து நிற்கும் மயக்கவுணர்விற் கேதுவாய மலநீங்கி அம்முதல்வனது திருவடியாகிய சிவானந்தத்தைப் பெறுமாகலான், அச்செருக்கறுதிக்குக் காரணமாதல்பற்றி ஈண்டுப் பரமேஸ்வரன் இவ்வான்மாவாய் நின்ற முறைமையான் அவனிடத்து ஏகனாகிநிற்கவென மேற்கொண்டது. எ-று.

அவ்வாறுநில்லாதவழி மலமறாது, அஃதறாதவழிச் சீபாதத்தையணைதல் பெறப்படாதென்பார் நிற்கவேயெனத் தேற்றேகாரத்தாற் கூறினார்.

யானெனப்படுவது ஞாதிரு. எனதெனப்படுவன ஞானஞேயங்கள்.

ஆறுவது பண்பின்கிழமையும் உணர்ச்சிக்கிழமையும் பற்றிவந்தது.

ஒருமை தனித்தனிசென்றிடையும். செருக்கு ஆகுபெயர்.

அற்றணையுமென்றது மழைபெய்து குளநிறையும் என்றாற்போலக் காரணகாரியப்பொருள்பற்றி வந்த செயவெனெச்சத்திரிபு.

---

## கo—சூ, உ-அ-வா-ம்.

இனி, இறைபணி வழுவாது நிற்கவென்றது.

எ-து. மேல். எ-னின். உடம்பு நிற்குங்காறும் அதுகொண்ட வினைப்பயனும், அதனையநுபவித்தற்குத் துணைக்காரணமாய் உடனிற்கு முயற்சியும், ஒருவாற்றானும் நீக்கலாகாமையின்; அவை அவ்வழியேகனாகி நிற்றற்குத் தடையாதலைக் கடக்குமாறில்லைபோலுமெனச் சுத்தசைவரீருயினூர் மதம்பற்றி நிகழுங்கடாவை யாசங்கித்து 'இறை பணி நிற்க மலமாயை' என்னும் சூத்திரத்தின் இரண்டாங்கூற்றைக் கண்ணழித்துரைத்து மேற்கோடனுதலிற்று.

இ-ள். வெ-டை:

நிற்றலாவது சலியாது நிலைபெறுதலென்பார் வழுவாது நிற்கவென்றார்.

'ஈண்டிறைபணியென்றது யாதெனின்' அஃது ஆசிரியர் தாமே முன்னர்த்தெரித்துரைக்கின்றமையின் இனிது விளங்கும்.

அவனருளா லல்லது ஒன்றையுஞ் செய்யானாக
வே அஞ்ஞான கன்மம் பிரவேசியாவாகலான்.

எ-து. ஏது. எ-னின். ஏகனாகிநிற்றலேயமையும், இறைபணி நிற்றலெற்றுக்கென்பாரை நோக்கி மேற்கோளைச் சாதித்தனுதலிற்று.

இ-ள். தன்செய்திக்கு முதல்வன் செய்தியை இன்றியமையாத ஆன்மாச் செய்வனவெல்லாம் அவனருளின்வழி நின்று செய்யுமாயின், மாயேயமுங் கன்மமும் ஏகனாகி நிற்றற்குத் தடையாய் வந்து தாக்கா ஆகலான்; அவை தாக்காமைப்பொருட்டுச் செய்யப்படுமுபாயமாதல்பற்றி இனி 'இறைபணி வழுவாது நிற்க' வென மேற்கொண்டது. எ-று.

அஞ்ஞான கன்மம் உம்மைத்தொகை.

மலமின்றுதல் மேற் பெறப்பட்டமையின் ஈண்டஞ்ஞானமென்றது மாயையின் காரியமாகிய மயக்கத்தையென்பது பெற்றும். உடம்பு நசிக்குமளவும் அவை மாய்வனவல்லமையின் அநுமென்றது பிரவேசியாவென்றார்.

---

கக—ரூ, க—ரை.

ஏ-து. சூ-ம். ஏ-னின். பரமேஸ்வரனது சீ
பாதங்களை யணையுமா றுணர்த்துத னுதலிற்று.

ஏ-து, க-ரை. ஏ-னின். சூத்திரக்கருத்துணர்த்துத னுதலிற்று.

இ-ள். அங்ஙனம் ஏகனாகி யிறைபணிநிற்பார்க்கு அறிவிச்சை செயல்கள் விடயித்தற்குரிய தோரிவைப்பு ஆண்டுப் பெறப்படாமையின், விடயமாவதொன்றில்லைபோலும் என்னும்வாதிகளை நோக்கி, விடயித்தலில்வழி ஆண்டுப்புத்தர்கூறு மாயைவிஞ்ஞானம்போலச் சூனியமாமெனப்பட்டு, குணஞ் சூனியமாகவே குணியுஞ்சூனியமாய் முடியுமாகலான்; அஃதேலாமையின், ஆண்டவை யிவைபுபற்றி விடயிக்குமாறுணர்த்து முகத்தானே பயனிரண்டனுள் முடிவா யெஞ்சிநின்ற சிவப்பேறு கூடுதலாய நிட்டையினியல்புணர்த்துதல் இப்பதினோராஞ் சூத்திரத்தின் கருத்து. எ-று.

இதனானே, சூத்திரவியைபும் இனிது விளங்கும்.

அற்றேல், ஏகனாகியிறைபணிநின்றார்க்கு இனிச் செய்யக்கடவதொன்றின்மையானும், இருணீக்கமும் ஒளிவிளக்கமும் உடனிகழ்ச்சியாயவாறுபோலப் பசுத்துவநீக்கமுஞ் சிவத்துவவிள

க்கமும் இடையீடின்றி உடனிகழ்வனவாகலின் வேறோத வேண்டாமையானும், முதனூலுட் சுவாநுபூதியாகிய சிவப்பேற்றைப் பத்தாஞ்சூத்திரத்துட் பாசநீக்கத்தோடு ஒருங்குவைத்தே யோதலானும், அதனையீண்டு வேறுவைத்தோதல் அமையாதுபோலுமெனின்; அறியாது கடாயினாய்: ஏகனாகியிறைபணி நிற்பது துரியநிலைக்கண்ணதாகிய அருணிலையேயாகலின், ஆண்டு மலநீங்கிய துணையானே சுகப்பிரபைமாத்திரையே விளங்குவதன்றி அதீதநிலைக்கண்ணதாகிய சிவத்துவவிளக்கமெனப்படும் பரமசுகம் விளங்காமையின், அது விளங்குதல் அவனருளாலல்லதொன்றையுஞ் செய்யாமைமாத்திரையால் அமையாமையின், அதற்கு வேறு மாண்டுச்செய்யக்கடவதுண்டென்பது தானே போதருதலானும், இருணீக்கத்தின் ஒளிவிளக்கம்போலப் பசுத்துவ நீக்கத்தின் அருள்விளக்கமாத்திரையேயன்றி ஆனந்த விளக்கமும் உடனிகழாமையானும், அவ்விரண்டற்கும் வேறுபாடு முன்னர்க்காட்டப்படுமாகலானும், முதனூலிற் பாசக்ஷயம் பண்ணுமாறுணர்த்திய வழிப் பாசநீக்கமாத்திரையே முத்தியெனக்கொண்ட வாதிகளை மறுத்தற்பொருட்டுப் பாசநீக்கம்பெற்றோனே சுவாநுபூதியுடையவனாவனெனப் பதினோராஞ்சூத்திரஞ்செய்தற்குத் தோற்றுவாயாந்துணையே பத்தாஞ்சூத்திரத்திற் செய்துவைத்துச் சுவாநுபூதிநிகழ்ச்சிக்கண் ஓதற்பாலனவெல்லாம் பதினோராஞ்சூத்திரத்துட் கூறுதலின், ஒன்பதாஞ்சூத்திரத்தின் எடுத்துக்கொண்ட ஆன்மசுத்தி பண்ணுமாறு பத்தாஞ்சூத்திரத்திற் சென்றியைந்து முற்றுப்பெற்றாற்போலப் பத்தாஞ்சூத்திரத்தின் எடுத்துக்கொண்ட சுவாநுபூதிநிலை பதினோராஞ்சூத்திரத்திற் சென்றியைந்து முற்றுப்பெறுதலான், அதன்கண் மலையாமைப்பொருட்டு ஆசிரியர் சுவாநுபூதிமானாவனென்பதனையும், அரன்கழல்செலுமெனப் பதினோராஞ்சூத்திரத்தானே ஒருங்குவைத்தோதினாராகலின், அது மாறன்மையா

னும், அவ்வாறின்றி மொழிபெயர்த்தல் யாப்பால் நூல்செய்து ரைப்பான் புகுந்த ஆசிரியர் வேறுபடச் செய்துரையாராகலா னுமென்பது. இதனானே, முதனூலிற் சுவாநுபூதிமானென வாளாகூறியதனைப் பதினொராஞ்சூத்திரத்துப் பத்திசெய்க வென்றதன் பின்னாகக் கொண்டுகூட்டி வைத்துரைத்தலே அதன் கருத்தென்பதூஉம் பெறப்பட்டது. அற்றாகலினன்றே, பத்தாஞ்சூத்திரம் பாசக்ஷயம்பண்ணுமாறுணர்த்திற்றெனவும், பதினொராஞ்சூத்திரம் பரமசிவனது சீபாதங்களை யணையுமாறுணர்த்திற்றெனவுங் கருத்துரைசெய்ததூஉமென்க. இஃதறியாதார் தத்தமக்கு வேண்டியவாறே யுரைப்ப.

இதனுள், காணுங்கண்ணுக்குக் காட்டுமுளம்போற் காணவுள்ளத்தைக் கண்டு காட்டலின் என்றது ஓரதிகரணம், அதனை அயராவன்பினரன்கழல் செலுமே என்றது ஓரதிகரணம், ஆக இரண்டதிகரணத்தது இச்சூத்திரமென்றுணர்க.

---

## கக—சூ, க - அ - வா-ம்.

ஈண்டு, இவ்வான்மாக்கள் அவனையின்றியமையாது ஒன்றையும் விடயியாவாகலான் - அவனும் அவற்றது விடயத்தை யுணருமென்றது.

அறு—அவனும் அவற்றது விடயத்தையுணருமென்றது.

எ-து. மே-ள். எ-னின். முதல்வன் உயிர்க்குக் காட்டுமுபகாரமாத்திரையே யுள்ளதென்னும் வாதிகளைநோக்கி அத்துவித நிலையுணர்த்துதற் கெடுத்துக்கொண்ட சூத்திரத்தின் ‘காணுங் கண்ணுக்கு’ என்னும் முதற்கூற்றைக் கண்ணழித்துரைத்து மேற்கோடனுதலிற்று.

இ-ள். முதல்வனும் உயிர்களானுணரப்படும் விடயத்தை உடனின்றுணருவன். எ-று.

உம்மை உயிர்களுணர்தலேயன்றிபென இறந்ததுதழீஇயி
ற்று.

இஃதறியாதார் ஈண்டுணருமென்றது அறிவித்தற்கேதுவா யறியுமென்றுரைப்பாருமுளர். அவ்வாறுரைப்பிற் சித்தசாதனமாமாகலானும், ஈண்டைக்கியைபின்மையானும் அதுபோலியென்றொழிக.

அவையே தானேயாயெனவும், தாந்தமுணர்வின்றமியருளென வும், மேற்பொதுவகையாற்கூறிப் போந்த அத்துவிதத்தை ஈண்டுக் காணுமுபகாரத்தின் வைத்துணர்த்தி இனிது விளக்கியவாறு.

இவ்வான்மாக்கள் அவனையின்றியமைந்து ஒன்
றையும் விடயியாவாகலான்.

எ-து. ஏது, எ-னின். கண் சடமாகலானும், காண்டற்பயன் உயிர்க்கேயாகலானும், கண் காண்புழி உயிரும் உடனின்று காண்டல் பெறப்படும் கண்போல் உயிர் சடமன்மையானும், உணர்தற்பயன் உயிர்க்கேயாகலானும், அதனையெடுத்துக்காட்டி அவனும் அவற்றது விடயத்தையுணருமென்றல் அமையாதென்பாரை நோக்கி மேற்கோளைச் சாதித்தவாறு.

இ-ள். விளக்கொளி கண்ணொளியோடு கலந்து கண்ணொளியோடு கூட உருவத்தினுங் கலந்தாலன்றி அஃதவ்வுருவத்தைக் காண்டலின்றியவாறுபோல, அறிவிக்கவறியும் இயல்பினவாய உயிர்களும் முதல்வனதுணர்வு தம்மோடு விரவி நின்று தம்மோடு கூடச்சென்று விடயத்தினும் விரவிநின்றால், அறிவு விளங்கி அதனை அறியும் இயல்பினவன்றித் தனித்தமையவுமாட்டா, தனித்தொன்றனை விடயிக்கவுமாட்டாவாகலான், அறிவ

விளங்குதன்மாத்திரைக்கேயன்றி விடயத்தைப்பற்றுதற்கண்ணும் முதல்வன் உடனின்றறிதல் ஒருதலையான் வேண்டப்படுதலான், ஈண்டு அவனும் அவற்றது விடயத்தையுணருமென மேற்கொண்டது. எ-று.

அவனையின்றி யமையாமையிற் காட்டுமுபகாரம் விளங்கினாற் போல, அவனையின்றி ஒன்றையும் விடயியாமையிற் காணுமுபகாரமும் இனிது விளங்குமென்பார்; அவனையின்றியமைந்தொன்றையும் விடயியாவாகலானென்றார்.

அமைந்து விடயியாவென்றதனைக் "கந்தித்துச் சுழலும்" என்றாற்போலக்கொள்க.

உம்மை முற்றும்மை.

விடயியா என்றது பெயரடியிற் பிறந்த எதிர்மறைவினை. * "எவ்விடத்து மிறையடியை யின்றியமைந் தொன்றை யறிந்தியற்றி யிடாவுயிர்க ளீசன்றானுஞ்—செவ்விதினி னுளம்புகுந்து செய்தியெலா முணர்ந்து சேட்டிப்பித் தெங்குமாய்ச் செறிந்து நிற்ப—னிவ்வுயிர்க டோற்றும்போ தவனையின்றித் தோற்றா விவற்றினுக்கும் முதலெழுத்துக் கெல்லாமாய் நிற்கு—மவ்வுயிர்போ னின்றிடுவ னாதலானா மரனடியை யகன்று நிற்ப தெங்கே யாமே" என வழிநூலாசிரியர் இதனை விரித்தோதியவாறுமுணர்க. எவ்விடத்துமென்றது பெத்தமுத்திஇரண்டினு மென்பதாம். இதனுள், 'இறையடியை யின்றியமைந்தொன்றையறிந்தியற்றியிடாவுயிர்கள்' எனவும் 'ஈசன் றானெங்குமாய்ச் செறிந்து நிற்பன்' எனவுங் கூறியது விடயத்தின்கட்படு நிகழ்ச்சிக்கெனவும், 'இவ்வுயிர்கடோற்றும் போதவனையின்றித் தோற்றா' எனவும் 'அவ்வுயிர்போனின்றிடுவன்,

* சிவஞானசித்தி, சுபக்கம், கக-கூ, எ—செ.

எனவுங் கூறியது உயிரின்கட்படு நிகழ்ச்சிக்கெனவும் கொ ள்க. அவ்வாறு கொள்ளாக்கால் இருசாற் கூறுதல் புன ருத்தியாய்முடியுமென்றொழிக. இனி விளக்கொளி கலத் தல் ஈரிடத்தும் வேண்டப்படுமென்பதூஉம், "விளக்கொ ளிகலந்தவற்றை" எ-ம். × "விளக்கின்சோதி கலந்திடும்" எ-ம். புடைநூலாசிரியர் வகுத்தோதியவாற்றானுணர்க. அஃ தங்ஙனமாக, பரமுத்தியில் உயிர்க்கு விடயமாவது ஒன்றின்மை யின் வழிநூலாசிரியர் எவ்விடத்துமென்றது அமையுமாறென் னையெனின்;—அறியாதுகூறினாய்: ┼ "சுத்த வநுபோகத்தைத் துய்த்தலனு" எ-ம். + "ஒன்றிநின் றுணருமுண்மை." எ-ம். பிறாண்டும் இவ்வாறே யோதுப வாகலின், பரமுத்தியில் உயிர் சிவானந்தாநுபூதியை விடயித்தலுண்டெனவும், அது முதல் வனை இன்றியாகாமையின் அவனும் ஆண்டவ்வநுபூதியை உட னின்றறிவனெனவுமுணர்க.

---

கக—சூ, உ - அ - வா - ம்.

இனி, பத்தியினான் மறவாதேத்த வவனது
போதத்தை யணையுமென்றது.

எ-து. மே-ள். எ-வின். ஏகனாகி நின்றார்க்கு அவ்வினைப்பு பற்றி அறிவிச்சைசெயல்கண் மூன்றும் ஆண்டு விடயிக்குமாறு யாங்ஙனமென்பாரை நோக்கி, நிட்டையினியல்புணர்த்துதற் கெடுத்துக்கொண்ட 'அயரா வன்பின்' என்னும் இரண்டாங்கூற் றைக் கண்ணழித்துரைத்து மேற்கோட னுதலிற்று.

இ-ள். சூத்திரத்துரைத்தவாறுபற்றி யுரைத்துக்கொள்க.

---

× சிவப்பிரகாசம், உண்மை, அ—செ. கண்ணொளி.
┼ உண்மைவிளக்கம், ருக—செ. முத்திதனில்.
+ சிவப்பிரகாசம், உண்மை, கூள—செ. ஒன்றிரண்டாகி.

"இச்சையாயு மறிவுடையனாயன்புசெய்ய" என வழிநூலாசிரியருமோதுதலின் ஈண்டுமறவாது பத்தியினாலேத்தவெனச் சூத்திரப்பொருட்கேற்ப மாறிவைத்துரைத்துக்கொள்க. ஏத்தவென்றது உபசாரவவழக்கு.

அன்பு பத்தி காதலென்றாற்போல்வன இச்சை மீதூர்தற் பொருளவாகலான், அது பரமுத்தியினுமுண்டென்பதுணராதார், பத்தியாவது சீவன்முத்திநிலைக்கே செய்யப்படுவதொரு சாதனம் போலுமெனமயங்கித் தத்தமக்கு வேண்டியவாறே யுரைப்ப. பரமுத்தியின்கண் இச்சை நிகழாதவழிச் சிவபோகம் அநுபவமாதல் செல்லாமையானும், சீவன்முத்திநிலைக்கே கூறுவதொன்றாயிற் "செம்மலர் நோன்றாள்" என்னுஞ் சூத்திரத்து ஒருங்குவைத்தோதவமையும் சூத்திரம் வேறுசெய்ய வேண்டாமையானும், அவ்வுரை போலியென்றொழிக.

அவன் அந்நியமின்றிச் செய்வோர் செய்திப்
பயன் விளைத்து நிற்றலான்.

எ-து. ஏது. எ-னின். பத்தியினான் மறவாதேத்தினும் அவனது சீபாதத்தை யணைதல் பரமுத்தியினன்றி முடியாதென்பாரை நோக்கி மேற்கோளைச் சாதித்த னுதலிற்று.

இ-ள். அம்முதல்வன் வேறு நில்லாது செய்வோர் செய்வனவற்றை யறிந்து அவ்வச்செய்திக்குத் தக்க பயனை மிகச்செய்யலாயின், அவ்வப்பொழுதே விளைவித்தும் அல்லுழிக் காலாந்தரத்தின் விளைவித்தும் உடனாய் நிற்பனாகலான், இவிப் பத்தியினான் மறவாதேத்தவே அம்முதல்வனது சீபாதத்தையணையுமென மேற்கொண்டது. எ-று.

---

கஉ—சூ, க - ரை.

எ-து. சூ-ம். எ-னின். அசிந்திதனாய் நின்ற பதியைச் சிந்திதனாகக் கண்டு வழிபடுமாறுணர்த்துத னுதலிற்று.

எ - து. க - ரை. எ - னின். சூத்திரக்கருத்துணர்த்துத னுதலிற்று.

இ-ள். அயராவன்பினரன்கழல் சென்ற முத்தர்க்குச் சீவன் முத்திநிலைக்கண் அவ்வறிவிச்சை செயல்கள் ஒரோவழிப் புறத்துச் செல்லுங்கால் அவை செல்லுமிடம் இவையென்பதுணர்த்து முகத்தான் வாக்குமனாதீதமாய்ப்பத்தியினுன்மறவாதேத்த நின்றமுதல்வனை வாக்குமனங்களுக்குக் கோசரமாம்படி தெளியக் கண்டு வழிபடுமாறுணர்த்துதல் இப்பனிரண்டாஞ் சூத்திரத்தின் கருத்து. எ-று.

சூத்திரவிளைபபும் இனிதுவிளங்கும்.

இதனுள், செம்மலர் நோன்றாள் சேரலொட்டா வம்மலங்களைஇ என்றது ஓரதிகரணம், அன்பரொடு மரீஇ என்றது ஓரதிகரணம், மாலறநேய மலிந்தவர் வேடமு மாலயந்தானு மரனெனத் தொழுமே என்றது ஓரதிகரணம், ஆக மூன்றதிகரணத்தது இச்சூத்திரமென்றுணர்க.

---

கஉ—சூ, க - அ - வா-ம்.

ஈண்டு, ஆணவமாயைகான்மியமென்னு மலங்களைக் களைகவென்றது.

எ-து. மே-ள். எ-னின். சீவன்முத்தர்க்கு ஒருதலையான் முன்னர்ச்செய்யக்கடவதிதுவென 'செம்மலர் நோன்றாள்' என்னும் சூத்திரத்தின் முதற்கூற்றைக் கண்ணழித்துரைத்து மேற்கோட்டுனுதலிற்று.

இ-ள். வெ-டை,

கன்மமலமே தன் மூலத்தை நோக்கிக் கான்மியமெனவும் படும். காமியமெனப் பாடமோதி, ஆகாமியங் காமியமெனத் தலைக்குறையென் றுரைப்பாருமுளர்.

அவை தாம் ஞானத்தை யுணர்த்தாது அஞ்
ஞானத்தை யுணர்த்துமாகலான்.

எ-து. ஏது. எ-னின். "மலமாயை தன்னொடு வல்வினையின்றே" எனப் பாசநீக்கம் மேலே பெறப்பட்டமையின், மெய்யுணர்ந்து நிட்டைகூடியபின் அவை களைபக்கிடத்தல் யாங்ஙனமென்பாரை நோக்கிச் சூத்திரத்தின் உடம்பொடுபுணர்த்தோதிய பொருளைத் தெரித்துணர்த்தி மேற்கோளைச் சாதித்தனுதலிற்று.

இ-ள். அம்மலங்கண்மூன்றும் மெய்யுணர்ந்து நிட்டைகூடினோர் மாட்டும் யாதானுமோராற்றானுழைந்து தம்மெய்யுணர்வைக் கீழ்ப்படுத்துப் பிறவிக்கு வித்தாகிய பண்டை விபரீதவுணர்வை மேற்படுத்துவனவாம். ஆகலான், அஃதவர்க்காகாமையின் ஈண்டு ஆணவமாயை கான்மியமென்னு மலங்களைக் களைகவென மேற்கொண்டது. எ-று.

உணர்த்துதல் உணர்விற்கேதுவாதல்.

ஈண்டு அஞ்ஞானமென்றது விபரீதவுணர்வை.

---

௧௨—சூ, உ - அ - வா-ம்

இனி, சிவபத்தர்களோ டிணங்குகவென்றது.

எ-து. மே-ள், எ-னின். அம்மலங் கழீஇயினோர்க்கு அஃதி நிலைபெறுத்துவதாய் அதன்பின்னர்ச் செய்யக்கடவது இ...

வென 'அன்பரொடு மரீஇ' என்னும் சூத்திரத்தின் இரண்டாங் கூற்றைக் கண்ணழித்துரைத்து மேற்கோட னுதலிற்று.

இ-ள். வெ-டை.

ஈண்டுச் சிவபத்தரென்றது பத்தியினான் மறவாதேத்தி முதல்வனது சீபதத்தையணைந்த சீவன்முத்தர்மேற்று.

இணங்குதல் நட்புச்செய்தல். சிவபத்தர்களோடிணங்குகவெனவே, எதிர்மறைமுகத்தான் ஏனையரோடிணங்கற்கவென்பதூஉம் பெறப்பட்டது.

அல்லாதார் அஞ்ஞானத்தை யுணர்த்துவராகலான்.

எ-து. ஏ-து. எ-னின். உறவும் பகையுமொழித்த மெய்ஞ்ஞானிகள் சிலர்மாட்டு நட்புஞ் சிலர்மாட்டு நட்பின்மையுமுடையராதல் சால்பன்றென்பாரை நோக்கி மேற்கோளைச் சாதித்தனுதலிற்று.

இ-ள். வெ-டை.

அல்லாதார் அஞ்ஞானத்தையுணர்த்துமாறு ×"தெய்வமென்பதோர் சித்தமுண் டாகி—முனிவி லாததோர் பொருளது கருது—மாறு கோடி மாயா சத்திகள்—வேறு வேறுதம் மாயைக டொடங்கின—வாத்தமானா ரயலவர் கூடி—நாத்திகம் பேசி நாத்தழும் பேறினர்—சுற்ற மென்னுந் தொல்பசுக் குழாங்கள்—பற்றி யழைத்துப் பதறினர் பெருகவும்—விரத மேபரமாகவே தியரும்—சரதமாகவே சாத்திரங் காட்டினர்—சமயவாதிக டத்த மதங்களே—யமைவ தாக வரற்றிமலைந்தனர்" என்றற்றொடக்கத்துத் திருவாக்குக்களானறிக. மும்மலங்க

× திருவாசகம் - ச—போற்றித் திருவகவல்.

ள் அஞ்ஞானத்தை யுணர்த்துதல், இலக்குவாய்த்தழி ஏதுவா தன் மாத்திரையே. சிவபத்தரல்லாதார் அவ்வாறின்றி இலக்கு வாயாதவழியும் வாய்க்குமாறு செய்துகொண்டு பலவகையுபா யங்களானுந் தம்மோடொப்ப விபரீதவுணர்வைச் செலுத்திவே விடுவராகலான், அம்மலங்களினுங் கொடியராகிய இவரை அவ ற்றினுமஞ்சிவிட்டொழிதலே அறிவுடைமைக்குச் சால்பென்ப தாம்.

---

கஉ—சூ, ௩ - அ - வாம்.

இனி, பத்தரது திருவேடத்தையுஞ் சிவாலயத் தையும் பரமேஸ்வரனெனக் கண்டு வழிபடுக வென்றது.

எ-து. மே-ள். எ-னின். அன்பரொடு மரீஇயினார்க்கு அம்ம ருவுதலே நிலைபெறுத்துவதாய் அதன்பின்னர்ச் செய்யக்கடவது துவென 'மாலற நேய மலிந்தவர்' என்னும் சூத்திரத்தின் மூன்றாங்கூற்றைக் கண்ணழித்துரைத்து மேற்கோட ளுத லிற்று.

இ-ள். வெ-டை.

காண்டல் ஐயுறவின்றித் தெளிதல்.

காமக்கிழத்தியர் வடிவிற் காணப்படும் ஆடை சாந்து அணி கலன்முதலாயின காமுகரை வசீகரித்து இன்பஞ்செய்யுமாறு போல, மெய்யுணர்வுடையாரைக் காட்சிமாத்திரையின் வசீகரி த்து இன்பஞ்செய்தல்பற்றித் திருவேடத்தையுஞ் சிவாலயத் தையுமென்றுபசரித்தார். அது + "சேலுங் கயலுந் திளைக்குங் கண்ணாரிளங் கொங்கையிற் செங்குங்குமம்—போலும் பொடி யணி மார்பிலங்குமென்று புண்ணியர் போற்றிசைப்ப" லென்னு

---

+ சேந்தனார் - திருப்பல்லாண்டு, அ—செ.

ந் திருவாக்கானுமறிக. திருவேடத்தினியல்பு "தூய வெண்ணீ று துதைந்தபொன் மேனியுந் தாழ்வடமு—நாயகன் சேவடி தைவரு சிந்தையு நைந் துருகிப்—பாய்வது போலன்பினீர்பொ ழி கண்ணும் பதிகச்செஞ்சொன்—மேயசெவ் வாயு முடையார் புகுந்தனர் வீதி யுள்ளே." "சிந்தை யிடையறு மன்புந் திரு மேனி தன்னி லசைவுங்—கந்தை மிசையாங் கருத்துங் கையுழ வாரப் படையும்—வந்திழி கண்ணீர் மழையும் வடிவிற்பொலி திருநீறு—மந்தமி லாத்திரு வேடத் தரசு மெதிர்வந் தணைய" "கண்ட கவுணியக் கன்றுங் கருத்திற் பரவு மெய்க்காதற்—றொண்டர் திருவேட நேரே தோன்றிய தென்று தொழுதே" என்றற்றொடக்கத்துத் திருவாக்குக்களானு மறிக.

அவன் மற்றிவ்விடங்களிற் பிரகாசமாய் நின்றே அல்லாதவிடத்து அப்பிரகாசமாய் நிற்ற லான்.

எ-று. ஏ-து. எ-னின். மெய்யுணர்வுடையார்க்குப் பகுப்பின்றி எக்கணும்பரமேசுவரனெனக்காண்டலே பொருத்தமுடை மையானும், நின்ற திருத்தாண்டகமுதலியவற்றுள் அவ்வாறோ துதலானும், திருவுருத்திரத்துட் பகுப்பின்றி உயிர்ப்பொருள் உயிரில்பொருளெல்லாவற்றையுந் தனித்தனியெடுத்தோதி வழி பாடு கூறுதலானும், ஈண்டிவற்றை மாத்திரையே விதந்துகொ ண்டோதிய தென்னையென்பாரை நோக்கி மேற்கோளைச் சாதித்த னுதலிற்று.

இ-ள். அம்முதல்வன் யாங்கணும் வியாபகமாய் நிற்பினும் இவ்விரண்டிடத்துமாத்திரையே தயிரினெய்போல விளங்கி நிலைபெற்று அல்வழியெல்லாம் பாலினெய்போல வெளிப்ப டாது நிற்றலான் இனிப்பத்தரது திருவேடத்தையுஞ் சிவால

யத்தையும் பரமேஸ்வரனெனக் கண்டு வழிபடுகவென மேற்கொண்டது. எ-று.

மற்று உரையசை.

எப்பொருட்கண்ணுமிறைவன் கலந்துளனென்பது தெளிந்துகோடற்பொருட்டுத் திருவுருத்திரத்தின் அவ்வாறோதப்பட்டதெனக் கொள்க.

---

கஉ—சூ, ச—புறநடை - வா-ம்.

இனி, இவ்விடங்களிற் வழிபடுக வென்றது.

எ-ரு. மே-ள். எ-னின். மேற்கூறிப் போந்த மூன்றுஞ்சிவன்முத்தர்க்குத் தாமேயுளவாம் இலக்கணமாகலின், அநுவாதமாக வைத்துணர்த்தற்பாலனவாகிய இவற்றைக் கலைக இணங்குக வழிபடுகவென விதியாக வைத்தோதிய தென்னுக்கென்பாரை நோக்கி, அதனை அவற்றொழிபாகக்கொண்டு சாதித்தற்கு மேற்கோடனுதலிற்று.

இ-ள். வெ-ண்ட.

இவ்விடங்களென்றது மேற்கூறிப இரண்டனையும்.

வழிபடுகவென்னும் எடுத்தலோசையான் அநுவதித்துணர்த்துவதே யமையுமென்பாரை நோக்கி விதித்தலை வலியுறுத்தவாறு. இனம்பற்றிக் கலைதல் இணங்குதல்கட்கும் இஃதொக்கும்.

நரம்பு நாடி முதலானவற்றைத் தானதுவாய் வரும் புருடன் அவையாகாவாறு அப்புருடனுமாகலான்.

எ-து. ஏது. எ-னின். எய்தியதனை விதித்தல் படனுடைத்தன்றுபோலுமென்பாரை நோக்கி மேற்கோளைச் சாதித்த னுதலிற்று.

இ-ள். நரம்புமுதலிய தாதுக்களின்கண் வேற்றுமையின்றி அதுவது தானாய் வருகின்ற உயிர் நாடியோ என்போ நரம்புக்கோழையோவென்று இங்ஙனம் பைமறியாய்ப் பார்ப்பார்க்கு அந்நரம்பு நாடிமுதலியவையாகாது அவற்றின் வேறுமாயினாற்போல, உயிர்க்குயிராகிய அம்முதல்வனும் உயிர்ப்பொருள் உயிரில்பொருளெல்லாவற்றினுங் கலப்பான் அதுவது தானாகியும் பொருண்மையான் அல்லனாகியும் நிற்பனாகலான், அதுவது தானாய்க் காணுங் காட்சிபற்றியெய்திய வழிபாடு அல்லனாய் நிற்றலைக் காணுங் காலெய்தாதாகலின், அவ்வழிபு மெய்துவிக்க வேண்டுதலான், இனி இவ்விடங்களின் வழிபடுகவென விதித்தோதியது. எ-று.

அவையாகாவாறப்புருடனுமெனவே அவ்விடத்தெய்துவித்தல் ஒருதலையான் வேண்டுமென்பது தாற்பரியமாயிற்று.

மேற்கோளின் இவ்விடங்களையென்றது இவ்விடங்களினென வேற்றுமைப் படுத்தோதியதூஉம் இஃதுணர்ந்து கோடற்பொருட்டு. இதனானே, எய்தாததெய்துவிப்பதூஉம், எய்தியதிகந்துபடாமற் காப்பதூஉம், எய்தியதனை யொருமருங்கு மறிப்பதூஉம் என்னும் விதிமூன்றனுள், இஃதெய்தியது இகந்துபடாமற் காத்ததென்பது போந்தவாறுணர்க.

வாறு உவமவுருபுபட நின்றது.

முதலானவற்றை யென்பது உருபு மயக்கம்.

மெய்கண்டதேவர்

சிவஞானபோத வார்த்திகத்திற்கு, சிவஞான முனிவர் உரை

முற்றும்.

---

சிவமயம்.

# சிவஞானபோத விருத்தியுரை.



கல்லா னிழன்மலை வில்லா ரருளிய
பொல்லா ரிணையடி நல்லார் புனைவரே.

(என்பது விநாயகர் துதி.)

இ-ள். கல் ஆல் நிழலார். எ-து. — கல் ஆலினுடைய நிழலிலே எழுந்தருளியிருந்தவர்.

எனவே தம்மை வழிபட்டவர்களை யநுக்கிரகிக்கை காரணமாகச் சரியை கிரியாயோக ஞானமாகிய வாகமங்களை யருளிச்செய்தவர் என்பதாம்.

மலைவில்லார் எ-து. — மகம்மேருவாகிய மலையைப் வில்லாக வளைத்தவர்.

எனவே தம்மை வழிபடாதவர்களை நிக்கிரகித்தவர் எ-ம்.

ஆர் என்பதனை இரண்டிடத்துங் கூட்டுக.

அருளிய - பொல்லார் எ-து. — அவரா லருளப்பட்ட பொல்லாதபிள்ளையாரென்னுந் திருநாமத்தையுடைய மூத்தநாயனார்.

இணை யடி நல்லார்புனைவரே. எ-து. — அவருடைய விரண்டு ஸ்ரீபாதங்களையும் அறிவாலுயர்ந்த தவங்களையுணர்ந்த ஞானவான்கள் சூடுவார்கள்—என்றவாறு.

எனவே சிட்டரையநுக்கிரகித்தும், துட்டரை நிக்கிரகித்துஞ் செய்யவல்லவரே கர்த்தா என்பதாம்.

ஆதலால், அவரா லருளப்பட்ட மூத்தநாயனாரும் அத்தன்மையினொன்றாயிற்று.

அது வழிபடுவோருடைய பாசத்தை நிக்கிரகித்து, மேர்க்ஷத்தை அநுக்கிரகிப்ப தென்னும் பொருட்டாயிற்று.

ஞானவான்க ளவருடைய ஸ்ரீபாதங்களைப் புனைவார்களெனவே யாமு மதுசெய்யக் கருதினமென்ப தாயிற்று.

---

இவ்வுரையாசிரியர் இந்நூலின்காப்பையே தமதுரைக்கும் காப்பாகக் கொண்டு, பாயிரத்தின் முன்னர் காப்பினிற்கு உரைகூறினர். இவ்வாறு சிறப்புப்பாயிரங்கள் நூல்களிற்கு இடையும் கடையும் வருவனவும் பெரும்பாலும் காணப்படுகின்றது.

பாண்டிப்பெருமாள் பதவுரை.

பொல்லார் -பொல்லாப் பிள்ளையார். எனவே பாசவிக்கினங்களைப் போக்கும் விக்கிநேசுரராதலினாலே அந்தப் பாசத்துக்குப் பொல்லார் என்பதாம்.

நல்லார்-பதி பசு பாசங்களை உணர்ந்த ஞானிகள்.

சிவஞானமுனிவர் உரை.

காமிகமுதலிய சைவாகமங்களின் ஞானபாதத்தி னுளதாகிய ஆசங்கை நீக்கி அவற்றின் பொருணுண்மை பொது வியல்பு சிறப்பியல் பென்று இரு வேறுவகைப்படுத்துக் காட்டிப் போதித்தற்கு இரௌரவாகமத்தினெழுந்த சிவஞானபோத நூலினைத் தமிழுலக முய்தற்பொருட்டு மொழி பெயர்த்துச் செய்து. பொழிப்புரைப்பா னெடுத்துக்கொண்ட வாசிரியர், சாக்கிரத்தே அதீதத்தைப் புரியுந் தமக்கு இடையூறு சிறிது மணுகாமை அறிந்தாராயினும், ஆன்றோ ராசாரம் பாதுகாத்தற்பொருட்டும், மாணுக்கர்க் கறிவுறுத்தற்பொருட்டும், முதற்க ணிடையூறு நீ

க்குதற் குரிய விநாயகக் கடவுளை வாழ்த்துவதாகிய மங்கலவாழ்த்துக் கூறுகின்றார்.

இ-ள். கல்லால் நிழல். எ-து. அருள்வடிவாகிய கல்லால நிழலின் கண்ணே எழுந்தருளியிருந்து—மலைவு இல்லார். எ-து நந்திப்பெருமானுக்கு இந்நூலான் மலைவு தீர்த்தருளிய முதலாசிரியர்—அருளிய. எ-து. மேன்மேற் கருணைகூர்ந் தருளுதற் பொருட்டு,—பொல்லார் இணை மலர். எ-து. பொல்லாத பிள்ளையாருடைய ஞானசத்தி கிரியாசத்தியென்னும் இரண்டு திருவடித் தாமரைகளை—நல்லார். எ-து. கேட்டுச் சிந்தித்துத் தெளிந்த மெய்யன்பர்—புனைவரே. எ-து. தம்முடைய ஞானசத்தி கிரியாசத்திக்கு வியாபகமாகக் கொண்டு தாடலைபோல் அடங்கி நிற்பர். எ-று.

நல்லார் புனைவரெனவே, ஏனையோர்க்கு அது கூடாதென்பதூஉம் பெறப்பட்டது.

மூவகை வாழ்த்துள் இது பொருளியல்புரைத்ததெனக் கொள்க.

அருளிய வென்பது செய்யியவென்னும் வாய்பாட்டு வினையெச்சம்; அது புனைவரென்னும் பிறவினை கொண்டது.

இல்லார் இல்லாகச் செய்தாரெனப் பண்படியிற் பிறந்த வினைப்பெயர்.

அருளிய பொல்லாரெனப் பெயரெச்சமுடிபாக வைத்துரைப்பினு மமையும்.

மலைவில்லாரருளிய பொல்லார்தாள் புனைவரெனவே, அவ்விருவருந் தம்முள் வேற்றுமையின்மை பெற்றாம். உலகத்துப் புதல்வர்கண்மாட்டுச் செய்யும் வழிபாடு தந்தையர்க்குக் கழிபேருவகை பயப்பிக்குமாகலின், அந்நயம் பற்றி அங்ஙனங் கூறியவாறாம்.

அருணந்திதேவர் இயற்றிய

# சிறப்புப்பாயிரம்.

## சூத்திரம்.

மலர்தலை யுலகின் மாயிரு டமியப்
பலர்புகழ் ஞாயிறு படரி னல்லதைக்
காண்டல் செல்லாக் கண்போ லீண்டிய
பெரும்பெயர்க் கடவுளிற் கண்டுகண் ணிருடீர்ந்
தருந்துயர்க் குரம்பையி னான்மா நாடி
மயர்வற நந்தி முனிகணத் தளித்த
வுயர்சிவ ஞான போத முரைத்தோன்
பெண்ணைப் புனல்சூழ் வெண்ணெய்ச்சுவேதவனன்
பொய்கண் டகன்ற மெய்கண்ட தேவன்
பவநனி வன்பகை கடந்த
தவரடி புனைந்த தலைமை யோனே.

எ-து. பாயிரம்.

"ஆயிரமுகத்தானகன்றதாயினும் பாயிரமில்லது பனுவலன்றே" என்பவாகலின் பாயிரமுரைத்தே நூலுரைக்கற்பாற்று. பாயிரமாவது நூற்கின்றி யமையாதது.

அது பொதுப்பாயிரமெனவுஞ் சிறப்புப் பாயிர மெனவு மிருவகைப்படும்.

பொதுப்பாயிர மாவது, எல்லாநூற்கும் பொதுவாய் வருவது.

சிறப்புப்பாயிர மாவது, தன்னா லுரைக்கப்படும் நூற் கின்றி யமையாதது.

---

## பொதுப்பாயிரவிதி.

அவற்றுட் பொது நான்கு வகைப்படும்.

அவை கற்பிக்குமாசிரியனது முறைமையும், அவன் கற்பிக்குமுறைமையும், அதற்கு மாணாக்கனியல்பும், அவன்கற்குமுறைமையும்—ஆம்.

"ஈவோன்றன்மை யீதலியற்கை கொள்வோன்றன்மை கோடன்மரபென - வீரைந்தென்ப பொதுவின்றொகையே". என்பவாகலின்.

கற்பிக்குமாசிரியரு மிருவகையார்.

கற்கப்படுவோருங் கற்கப்படாதோருமென.

அவருட் கற்கப்படுவோர் நான்கு வகைப்படுவர்.

"மலை நிலம் பூவே துலாக்கோலென் றின்ன, குலைவி லுணர்வுடையோர்".

மலைபோல் எ-து. தான்கூறிய பொருளைப் பிறனொருவன் றிரிவுகாட்டியவழி நிலைகுலையாது திரிவுபடாமற் கூறுதல்.

நிலம்போல் எ-து. தான் கூறியபொருளைப் பிறனொருவன் றிரிவுகாட்டியவழி யாண்டுவெகுளாது அறிவுறுத்துதலுந் தன்னை வழிபட்டார்க்குத் தக்ககற்பித்தலும்.

பூப்போல் எ-து. கேட்டோர்க் கின்பம்பயக்குமாறு கூறுதலும், மற் றிதற் செளிதாக மெல்லியவாகக் கூறுதலும்.

துலாக்கோல்போல் எ-து. இருவராசிரியர் தம்முண் மாறுபட்டு வினவியவழி யதனது நிலைமையைத் துணிந்து கூறவல்லவனாதல்.

இன்னும் "மலை நிலம் பூவே துலாக்கோல்" என்றதனால், நிலைமையும், பொறையுடைமையும், மெல்லியனாதலும், நடுவுநிலைமையும் ஆகிய வொழுக்கமுங் கொள்க.

கற்கப்படாதோரு நால்வகையார்.

" கழற்பெய்குடமே மடற்பனை முடத்தெங்கு, குண்டிகைப் பருத்தியோ டிவையென மொழிப".

கழற்பெய்குடம்போல் எ-து. சொரியுங்காலத் தொருங்கு விழும். அதுபோலக் கொள்வோனுணர்வு சிறிதாயினுந் தான் கற்றதெல்லா மொருங்குரைத்தல்.

* மடற்பனைபோல் எ-து. ஆசாரிய னுணர்வுடையனாயினுங் கற்பார்க்குக் கிட்டுதலருமை.

முடத்தெங்குபோல் எ-து. தன்னைப் போற்றுவாரிடத்துப் பழம்விழாது பிறர்மனைக்கண் விழத்தும். அதுபோல் வழிபடுவோர்க்குப் பயன்படாது பிறர்க்குப் பயன்படுதல்.

குண்டிகைப்பருத்திபோல் எ-து. குடத்தின்கணிட்ட பருத்தி யொருங்குகொள்ளக் கருதுவார்க்குச் சிறிதேயொழிய வாங்குதற்கருமைபோல், உணர்வுடையோர்க்குச் சிறிதே யுரைத்தல்.

---

* மடற்பனைபோல் எ-து. பிறராற் கிட்டுதற் கரிதா யினிதாகிய பயின்களைக் கொண்டிருத்தல். என்றார் நச்சினார்க்கினியர். தொல்காப்பியம் எழுத்ததிகாரம் பாயிரம் -க-ரு, உரை.

ஈதலியற்கை எ-து. ஆசிரியன் கற்பிக்குமுறைமை.

"ஈதலியல்பே யியல்புறக்கிளப்பிற், பொழிப்பேயகல நுட்ப
மெச்சமெனப், பழிப்பில்பல்லுரை பயின்றநாவினன், புகழ்ந்
கமதியிற் பொருந்துமோரையிற், றிகழ்ந்தவறிவினன் றெய்வம்
வாழ்த்திக், கொள்வோனுணர்வகை யறிந்தவன்கொள்வரக்
கொடுத்தன்மரபெனக் கூறினர்புலவர்".

இதன்கட் பொழிப்பு எ-து. தொகுத்துரைத்தல்.

அகலம் எ-து. விரித்துரைத்தல்.

நுட்பம் எ-து. கடாவிடை கூறுதல்.

எச்சம் எ-து. கடாவறத் துணிந்தபொருள்.

"பாடங்கண்ணழி வுதாரணமென்றிவை, நாடிற்றிரிபில வாந்தல் பொழிப்பே".

"தன்னூன்மருங்கினும் பிறநூன்மருங்கினுந், துன்னியகடாவின் புறந்தோன்று விகற்பம், பன்னியவகல மென்மனார் புலவர்".

"ஏதுவி னுங்கவை துடைத்த னுட்பம்".

"துடைத்துக்கொள் பொருளை யெச்சமென்ப".

என்பனவற்றாற்கொள்க.

மதி எ-து. திங்கள், (காள்=கிழமை,) நாள் பக்கங் கரணம் யோகமென்ற வைந்தாம் - என, அவற்றிற் பொருந்துந் திங்களும், பொருந்து நாளுமென்றதாம்.

---

கொள்வோன்றன்மை யிருவகைப்படும், கற்பிக்கப்படுவோரும் கற்பிக்கப்படாதோருமென.

அவருட் கற்பிக்கப்படுவோர்.

"அவர்தாம் - தன்மகனுசான் மகனேமன்மகன், பொருணனிகொடுப்போன் வழிபடுவோனே, யுரைகோளாளனேடிவரெனமொழிப".

இதனுனே அறுவகையரென்றுகொள்க.

இனிக் கற்பாரியல்பு.

"அன்னங்கிளியே நன்னிறநெய்யரி, யானையானே றென்றிவைபோலக், கூறிக்கொள்ப குணமாண்டோரே".

அன்னம்போல் எ-து. பாலுநீருங்கலந்தவழி நீருண்ணுது பாலுண்ணும். அதுபோலப் பல்லுரை கேட்டவழி நல்லுரை கொள்ள வல்லனுதல்.

கிளிபோல் எ-து. அது சொல்லிற்றுச்சொல்லும். அதுபோலாசிரியன்கூறியது பிறழாமற் கூறுவது.

நன்னிறம்போல் எ-து. "எந்நிறந்தோய்தற்குமேற்பதாதனன்னிறத்தியல்பென நாடினர்கொளலே."

நெய்யரிபோல் எ-து. பன்னுடை. அதுநெய்யினையேற்றவழிக் குற்றமுள்ளது மேலே தோற்றுவிக்கும். அதுபோலக் கேட்டவற்றுட் குற்றமுள்ளனவெடுத்து விளுவவல்லனுதல்.

யானைபோல் எ-து. யானை ஒருவன் செய்ததனை மறவாது. அதுபோற்கற்றது மறவாமை.

ஆனேறுபோல் எ-து. ஓசைகேட்கும்வழி யதன்மேலொருப்பட்டவுளத்ததாய்க்கேட்கும். அதுபோலக் கேட்குங்காலொருப்பட்டவுள்ளத்தனுய்க் கேட்டல்.

இனிக் கற்பிக்கப்படாதாரெண்வகையாராம்.

"மடிமானிபொச்சாப்பன் காமுகன்கள்வ, னடுநோய்ப்பிணியாள னுருச்சினத்தான், றடுமாறு நெஞ்சத்தவனுள்ளிட் டெண்மர், நெடுநூலைக் கற்கலாதார்".

என்பதனாலறிக.

கல்லாதாரியல்பு.

"குரங்கெறிவிளங்கா யெருமையாடே, தோணியென்றுங் கிடைபெனமொழிப".

குரங்கெறிவிள்ங்காய்போல் எ-து. விளாவின்கட் குரங்கிருந்தவழிக் காய்கோடலாற்றான் கல்லினா னதனையெறிய, அது விளங்காய்கொண்டெறியும். அதுபெற்றாற்போல, வழிபடதொழிந்துகொள்ளா தொருபொருளைக்சடாவிக் கேட்டா லவ்வழி யவன்கூறியவுரையைத் தனக்குப் பொருளாகக் கோடல்.

எருமைபோல் எ-து. ஒரு குளத்திற் றண்ணீருண்டால் அதனைக் கலக்குமாறுபோல, பொருள்கேட்டோன் அதனைத்திருவுசொல்லிக் கொள்ளாமை.

ஆடுபோல் எ-து. தனக்குவயிற்றுக் கொருதூற்றிலே கறிக்கலாயினும் பல்தூற்றினுஞ்சென்று கறிக்கும். அதுபோல, ஓர் நூலைக்கற்கக் காணாது பலநூலுங் கற்கமுயறல்.

தோணி எ-து. தானாக வியங்கமாட்டாது இயக்குவார் வழியியங்குமாறுபோல, ஆசிரியன் சொன்னபொழுது வல்லனாய் அவனதுநீக்கத்துக் காணமாட்டாமை.

"செவ்வன்றெரிகிற்பான்மெய்ந்நோக்கிக் காண்கிற்பான், பல்லுரையுங்கேட்பான் மிகப்பெரிதுங்காதலான், றெய்வத்தைப் போலமதிப்பான்றிரிபில்லா, னிவ்வாறு மாண்புடையார்க்குரைப்பவே, செவ்விதினூலைத்தெரிந்து".

இதனானறிக.

இனிக் கோடன்மரபு வருமாறு:—

"கோடன்மரபு கூறுங்காலைப், பொழுதொடுசென்று வழிபடன்முனியான், முன்னும் பின்னு மிரவினும்பகலினு, மகலானாகிய யன்பொடுபுணர்ந்தாஅங், காசறவுணர்ந்தோன் வாவெனவந்தாஅங், கிருவெனவிருந்து சொல்லெனச்சொல்லிப், போவெனப்போகி நெஞ்சுகளனாகச், செவிவாயாகக் கேட்டவை கேட்டவை, வல்லனாகிப் - போற்றிக்கோட லதுவதன்பண்பே".

"எத்திறமாசா னுவக்குமத்திற, மறத்திற்றிரியாப் படர்ச்சி வழிபாடே".

"அனையனல்லோன் கேட்டுவனாயின், வினையினுழப்பொடு பயன்றலைப்படாஅன்".

"ஆசானுரைத்தவை யமைவரக்கொளினுங், காற்கூறல்லது பற்றலனாகும்".

"அவ்வினையாளரொடு பயில்வகையொருபாற், செவ்விதினுரைப்ப வவ்விருபாலு, மையறுபுலமை மாண்புநனி யுடைத்தே".

இவற்றானுமறிக.

---

## சிறப்புப்பாயிர விதி.

இனிச்சிறப்புப் பாயிரமாவது:—

"ஆக்கியோன் பெயரே வழியேயெல்லை, நூற்பெயர்யாப்பே நுதலியபொருளே, கேட்போர்பயனோ டாயெண்பொருளும், வாய்ப்பக்காட்டல் பாயிரத்தியல்பே".

"காலங்களனே காரணமென்றிம், மூவகையேற்றி மொழிநருமுளரே".

என்பனவற்றுற் பதினொருவகைப்படும்.

ஆக்கியோன் பெயர் எ-து. நூல்செய்த வாசிரியன்பெயர்.

வழி எ-து. இன்னதன் வழித்தோன்றல்.

எல்லை எ-து. வழங்குமெல்லை கூறுதல், (நூலினதளவு கூறலுமாம்.)

நூற்பெயர் எ-து நூலின்பெயர் கூறுதல்.

யாப்பு எ-து. "தொகுத்தல் விரித்தல் தொகைவிரிமொழிபெயர்த்தல்" என நான்கினுள் ஒன்றை யாத்தல்.

நுதலியபொருள் எ-து. கற்றதனாற் பயனாகிய விடு கூறல்.

காலம் எ-து. நூல் தோன்றிய காலங் கூறல்.

களன் எ-து. தோன்றிய விடங் கூறல்.

காரணம் எ-து. நூல் செய்ததற்குக் காரணங்கூறல்.

அவை யிந்நூலகத்து வருமாறு. பாயிரசூத்திரப் பொருளுரைப்ப விளங்கும்.

* இப்பாயிர உதாரணச் சூத்திரங்கள் தொல்காப்பியம் எழுத்ததிகாரப்பாயிரத்துட் காண்க.

---

## பாயிரப் பொருள்.

மலர்தலை யுலகின் மாயிருள் துமிப்ப- பலர் புகழ் ஞாயிறு படரினல்லதைக்- காண்டல் செல்லாக்கண்போல் எ-து.

இடமகன்ற வுலகின்கண்ணுண்டாய மகத்தாகிய விருணீங்கப் பலசமயத்தாராலும் புகழப்பட்ட வாதித்தன் வரினல்லது காட்சியை யுடைத்தாகாத கண்போல.

ஈண்டிய-பெரும் பெயர்க் கடவுளிற் கண்டு கண்ணிரு டீர்ந்-தருந்துயர்க்குரம்பையி னான்மா காடி. எ-து.

எங்குந்தானாகி நிறைந்த பெரிய பெயரையுடைய கர்த்தாவாலே (தன்னுடைய இச்சா ஞானக்கிரியையாகிய சைதன்னியத்தை, காட்டமும் அக்கினியும்போல மறைந்து நிற்பதான) அஞ்ஞானமாகிய மூலமலந்தீர்ந்து, அரிய துயரத்தையுடைய (புண்ணிய பாவங்களாற் செறியப்பட்ட) உடம்பிலே யான்மாவை யாராய்ந்து கண்டு.

ஒன்றினொன்று தோன்றிவருதலையுடைய பஞ்சபூதக்கூட்டரவை 'மலர்தலையுல'கென்றார். உலகத்தை மறைத்துநின்ற விருளாதித்தனாலேபோனவிடத்துக் கண்ணுக்குப்பிரகாசமுண்டாய் அந்தப்பிரகாசத்தினாலே காட்டினஆதித்தனையு மறைந்துநின்றபிரபஞ்சத்தையு மறைத்தவிருளையுங்கண்டாற்போல, ஆன்மாவுந் தன்னைமறைத்துநின்ற மூலமலங் கர்த்தாவினுடையதிருவருளாலே போனவிடத்து ஞானக்கண்ணுடைத்தாய், அந்த ஞானக்கண்ணாலே காட்டினகர்த்தாவையு மறைந்துநின்றதன்னையு மறைத்தமூலமலத்தையுங் காண்டலிற் கடவுளிற் கண்டென்றார். எல்லாப்பெயரையுங்கடந் தப்பாலாய்நிற்றலாற் பெரும்பெயர்க்கடவுளென்றார். அன்றியும் பதியே ஆசாரியனாய் வருகின்றமுறைமையாற் பெரியபெயரையுடைய வாசாரியனாலே கண்டென்றுமாம். ஆன்மாநாடிக் கண்டெனவே பதிஞானத்தாலே பாசத்தைநீக்கி ஆன்மாவைக் காணவேண்டுகையாற் பதி-பசு-பாசத்தினுடைய உருபம் - சொரூபம் - சுபாவம் - வியாத்தி - வியாபகமும், தரிசனமும், பதிசத்தி சாலங்களினாலே பஞ்சகிருத்தியம்பண்ணுகின்ற முறைமையும், அவையிற்றினாலே யான்மாக்கள் தொழிற்பட்டுவருகின்ற முறைமையும், அவைதான் ஆன்மாக்களுக்குக் கிருத்தியப்படுகிற முறைமையும், பின்பு சத்தி

மிபாச முண்டாமுறைமையும், பலபிரகாரங்களாகிய முத்தியில க்கணங்களும், அவையிற்றிற் பரமுத்தியேமுத்தியென்னுமு றைமையும் ஆராய்ந்து கண்டென்றார்.

மயர்வற எ-து. மயக்க மற.

அது நூல் பின்னொடுமுன் மலையாமலென்றதாம்.

நந்தி முனிகண ஸ்ரீநந்திகேசுரர், ருஷிகணங்களிற் ச த் தளித்த - வு னற்குமாரபகவானுக்கு, (பரமேச்சுரன்தம ர் சிவஞான க்கருளிச்செய்த முறைமையை,) அருளிச் போத முரைத் செய்த மிக்க சிவஞானபோதத்தை அருளிச் தோன் எ-து. செய்தவன்.

முனிகணமாவார்;—அகத்தியன்-புலத்தியன்-சனகன்-சனந்த ன்-சனந்தன்-சனற்குமாரன-குசிகன்-குற்சன்-வான்மீகன்-வா மதேவன்-வைசம்பாயன்-தும்புரு - வியாதன்-வசிட்டன்-விசு வாமித்திரன்-சித்திரசேனன்-யாதுதீரன்-கோதமன்-கவுதமன் வசீராகன்-கௌருகன்-காலவாச்சியன்-வஞ்சமன்-அங்கிசமன்- ருசபாலீசன்-துர்வாசன்-தைட்டியதமன்-நாரதன்-நாராயண ன்-பாரத்துவாசன்-கபிலன்- கன்னன்-காசிபன் - காவேடன் பராசரன்-மார்க்கண்டேயன்-என்றுசொல்லப்பட்ட விவர் மு லாயினோர்.

இந்நூல் வந்த முறைமை:—"போதமிகுத்தோர் தொகுத்த பதமைக்கே பொருந்திநோ ரிவர்க்கன்றிக்கதிப்பாற்செல்ல, வதுநெறியெனுமவர்கட்கறியமூன்று ளிறைவனருணந்திதனக் யம்பநந்தி, கோதிலருட்சனற்குமாரற்குக்கூறக் குவலயத்தி ரவ்வழியெங் குருநாதன்கொண்டு, தீதகலவெமக்களித்த ஞா னநூலைத் தேர்ந்துரைப்பன் சிவஞானசித்தியென்றே"என்ப னாலறிக.

இந்தச் சிவஞானசித்தியிந்நூலின் வழிநூலாதலான் மேலு மிவ்வாறு காட்டும்பொருளுணர்க.

வெள்ளைப் புனல் சூழ் வெண்ணெய்ச் சுவேதவனன் - பொய் கண்டகன்ற மெய்கண்டதேவன் - பவநனிவன் டகைகடந்த தவரடி புனைந்த தலைமையோனே எ-து. — பெண்ணையாற்று நீராற் சூழப்பட்ட வெண்ணெய்நல்லூரிற் சுவேதவனப் பெருமாளென்னும் பிள்ளைத்திருநாமத்தை யுடையவன். அசத்தை அசத்தென்று கண்டு சத்தைத்தெரிசித்த மெய்கண்டதேவனென்னுஞ் சிறப்புப்பெயரை யுடையவன். பிறவியாகிய வலியபகையை வென்ற (ஸ்ரீநந்திகேசுரதேவர், சனற்குமாரபகவான், சத்தியஞான தரிசனிகள், பரஞ்சோதி மாமுனிக ளென்னுந்) தபோதனர்களுடைய சீர்பாதங்களைச் சூடின மேம்பாட்டை யுடையவன் எ-று.

எனவே பரமேச்சுரன் ஸ்ரீநந்திகேசுர தேவர்க்கு அருளிச்செய்து தொகுத்துரைத்த பன்னிரண்டு கிரந்தத்தையும் பன்னிரண்டு சூத்திரமாக மொழிபெயர்த்துச் சொல்லாத பிள்ளையார் பிரதிஷ்டசத்தருளிச் செய்ய, அதற்கேற்ற உதாரண வெண்பா அடைவடக்க மொன்றுட னென்பத்து மூன்றாக வருளிச்செய்தவர் எ-ம்.

மொழிபெயர்த்தல் கிரந்தத்தைத் தமிழாகச் செய்தல்.

இதன்பொழிப்பு:— இடமகன்ற வுலகின்கண் மகத்தாகிய விருள்போக யாவரும் புகழப்பட்ட வாதித்தன் வரினல்லது காட்சி யுண்டாகாத கண்போல, எங்கு நிறைந்துநின்ற பெரிய பெருமையையுடைய கத்தாவாலே கண்டு, தன்னிடத் துண்டாகிய மூலமலத்தைக் கெடுத்து, உரிய துயரையுடைய வுடம்பிலே ஆன்

அருணந்திதேவர் சண்மைத்தலைவர் எனக்கூறப்படுதற்குக் காரணம் என்னை?



மாவை யாராய்ந்து கண்டு, பின்னொடுமுன் மலையாமல் நந்திகேசுரர் ருஷிகணங்களிற் சனற்குமார பகவானுக் கருளிச்செய்த சிவஞானபோதத்தைத் தமிழாக வருளிச்செய்தவன்; சுவேதவனனாகிய மெய்கண்ட தேவன்: தவரடி புனைந்த தலைமையோன் எ-று.

“தோன்றுதோற்றித் துறைபலமுடிப்பினுந், தான்றற் புகழ்தல்தகுதியன்றே” என்பதனால், நூற்செய்தவன் பாயிரஞ்செயற்பாலனல்லன். அதுசெய்வார் தன்னாசிரியனாதல், மாணாக்கனாதல், தன்னோ டொருங்கு கற்றோனாதலாம். தான் செய்யினும் பிறன்போலக் கூறல்வேண்டும். அதனால் இந்தப் பாயிரஞ்செய்வார் யாவரெனில், அவர்மாணாக்கராகிய இதன்வழி சிவஞானசித்தியென்னுநூலைச் செய்தாரும் நாற்பத்தொன்பது பெயரிற் சண்மைத்தலைவனாயினாருமாகிய அருணந்திதேவதம்பிரான்.

இதனுட் சிறப்புப்பாயிரம் பதினொன்றும் வருமாறு:—ஆக்கியோன்பெயர் சுவேதவனப்பெருமாளாகிய மெய்கண்டதேவன். வழி நந்திமுனிகணத்தளித்தது. எல்லை கேட்போரது பொருண்முடிவு. நூற்பெயர் சிவஞானபோதம். யாப்பு மொழிபெயர்த்தல். நுதலியபொருள் பதிபசுபாசங்களுணர்த்தல். கேட்போர் பொல்லாதபிள்ளையார். பயன்சுவாநுபூதியாகநேயத்தழுந்தல். காலம் சத்திநிபாதநிகழ்தல். களன் திருவெண்ணெய்நல்லூர். காரணம் போதமிகுத்தோர் தொகுத்தபேசமைக்கேபொருந்தினோ ரிவர்க்கன்றிக் கதிப்பாற்செல்ல வேதுநெறியெனு மிவர்கட்கறிய வுணர்த்துதல். இத்தனையும் பாயிரமுரைக்கப்பட்டது.

சிறப்புப்பாயிர முடிந்தது.

---

சிவஞானமுனிவர் உரை.

சைவாகமங்களி னுளவாகிய நாற்பாதங்களுள் வைத்து ஞானபாதத் தோதிய பொருள்களை யாராயும் ஆராய்ச்சி இந் நூலின்க ணெடுத்துக்கொள்ளப்பட்டது. இது கேட்டலுறுவார்க்கு இதனாற்போந்த பயன் யாதோவெனவும், இது கேட்டற்குரியார் யாவரெனவும், இதனா னுதலப்படும் பொருள் யாதெனவும், இதனைப் பயப்பிக்குங் கருவியாய் இதற்குமுன் ஒருதலையா னுணர்தற்பால தியாதெனவும், இதனை வழங்குதற்கிட்டபெயர் யாதெனவும், இஃதியாண்டு வழங்குவதெனவும், இதன் முதனூல் யாதெனவும், இந்நூல் செய்தார் யாவரெனவும், பலவாற்றா னாசங்கை நிகழுமன்றே; அவ்வாசங்கை நீங்கி மனவெழுச்சி சேறற்பொருட்டு இந்நூன் முகத்துரைக்கப் படுவதாகிய சிறப்புப் பாயிரம்:—

இ-ள். மலர் தலை உலகின் மா இருள் துமியப் பலர் புகழ் ஞாயிறு படரின் அல்லதைக் காண்டல் செல்லாக் கண்போல். எ-து. விரிந்த விடத்தையுடைய ஞாலத்தின் கண்ணே துன்னிய பெரிய புறவிருள் கெடும்படி பல சமயத்தாரானும் புகழப்படுகின்ற பரிதியங்கடவுள் உதய கிரியினின்றும் போந்தாலன்றிக் காட்சி யெய்தமாட்டாத கண்ணொளிபோல, —அருந் துயர்க் குரம்பையின் ஆன்மா நாடி. எ-து. பொறுத்தற்கரிய துயரங்களுக்கெல்லாம் ஒருநிலைக்களமாய்ச் சத்த தாதுக்களாற் பொத்திய குரம்பையாகிய காணப்பட்ட உடம்பானே காணப்படாத ஆன்மாவையும் பரமான்மாவையும் அநுமான வளவையான் வைத்தாராய்ந்து அவற்றது தடத்த லக்கணமெனப்படும் பொதுவியல்புணர்ந்து,—கள் இருள் தீர்ந்து. எ-து. அவ்வுணர்ச்சியானே கருதி யுணரப்படும் அகவிருளாகிய ஆணவ மலத்தினின்று நீங்கி,—ஈண்டிய பெரும் பெ

யர்க் கடவுளிற் கண்டு. எ-து. அது நீங்கிய வழி எல்லா நூல்களுந் தன் பொருளேயாகத் திரண்டு கூடிய பெரும்பெயரெனப்படும் ஒரு வார்த்தையாகிய மகா வாக்கியத்தான் எடுத்தோதப்படும் முதற் கடவுளது திருவருளானே அப்பொருள்களது சொரூபவிலக்கணமெனப்படுஞ் சிறப்பியல்பை அநுபூதியிற் கண்டுணர்ந்து,—மயர்வு அற. எ-து. இம்முறையானே மயக்கவாசனையற்றுச் சிவாநுபவம் பெறுதற்பொருட்டு,—நந்தி முனிகணத்து அளித்த. எ-து. சீகண்ட தேவர்பாற் கேட்டருளிய நந்திப்பெருமான் சனற்குமார முனிவன் முதலிய முனிவர்கணங்கட்கு முறையானே அளித்தருளப்பட்ட,—உயர் சிவஞானபோதம். எ-து. சரிதை முதலிய மூன்று பாதப்பொருள்களை ஆராயு நூல்களின் மேற்பட்ட சிவஞானபோதமென்னும் வடநூலை,—உரைத்தோன். எ-து. மொழிபெயர்த்துக் கூறி வார்த்திகமெனப்படும் பொழிப்புரை செய்தோன்—பெண்ணைப் புனல் சூழ் வெண்ணெய்ச்சுவேதவனன் எ-து. பெண்ணையாற்று நீராலே சூழப்பட்ட திருவெண்ணெய் நல்லூரின் அவதரித்தருளிய சுவேதவனப் பெருமானென்னும் பிள்ளைத் திருநாமமுடையான்—பொய் கண்டு அகன்ற மெய்கண்ட தேவன். எ-து. பொய்ச்சமயங்களின் பொருள் இது விதுவென்று கண்டு கழிப்பித்த காரணத்தாற் பெற்ற மெய்கண்ட தேவனென்னுஞ் சிறப்புத் திருநாமமுடையான்—பவம் நனி வன்பகை கடந்த தவர் அடி புனைந்த தலைமையோன். எ-து. பிறவியாகிய மிக்க வலிய பகையினை வென்ற தவத்தோர் தனது திருவடியைப் புனைந்து கோடற்கேதுவாகிய தலைமைப் பாட்டினையுடையோன் என்றவாறு.

படரிற் காண்டல்செல்லுங் கண்ணெனற் பாலதனை எதிர் மறைமுகத்தாற் கூறினார், இன்றியமையாமை விளக்குதற்கு. இ

ப்பொருள் பற்றிக் கண்மேல் வைத்துக் கூறினாரேனும், உவமேயப் பொருட்கேற்பக் காண்டல்சேறற்குப் படர்ந்த ஞாயிறுபோலென்பது கருத்தாகக் கொள்க.

இருட்கேட்டிற்கும் நிருவிகற்பஞ் சவிகற்பமென்னும் இருவகைக் காட்சிக்கும் ஞாயிறு இன்றியமையாச் சிறப்பிற்றாயவாறுபோல; மலத்தீர்விற்கும், ஆராய்ச்சி அநுபூதியென்னும் இருவகை யுணர்விற்கும், இன்றியமையாச் சிறப்பிற்றாயது இந்நூலென்பார், துமியப் படரினல்லதைக் காண்டல் செல்லாக் கண்போனுடித் தீர்ந்து கண்டு மயர்வற வளித்த சிவஞானபோதமென்றார்.

தலைமைபற்றி அருந்துயர்க்குரம்பையி னென்றாரேனும், இனம்பற்றிக் கரணம் புவன முதலியனவும் உடன் கொள்ளப்படும்.

அருந்துயர்க் குரம்பையி னுடைப்படுவதாகிய பொதுவியல்பு முன்னாறு சூத்திரத்தானும், பெரும்பெயர்ப்பொருளிற் காணப்படுவதாகிய சிறப்பியல்பு பின்னாறு சூத்திரத்தானு மோதுப.

நாடியெனவே அநுமானவளவையா னென்பதூஉம், கண்டெனவே அநுபூதியி லென்பதூஉம், தாமே போதரும்.

பொதுவியல்பு அளவைமுகத்தானும் இலக்கணமுகத்தானுங் கூறப்பட்டுக் கேட்டல் சிந்தித்தல் என்னும் இருதிறத் தானுணரப்படும்; சிறப்பியல்பு சாதநமுகத்தானும் பயன்முகத்தா னுங் கூறப்பட்டுக் கேட்டல் சிந்தித்தல் தெளிதல் நிட்டையென்னு நான்குதிறத்தா னுணரப்படும்.

இஃதென்சொல்லிய வாறோவெனின்:—இவ்விருவகை யியல்பும் வேறு வேறு கூறும் ஆகமங்களின் பொருளொருமை உணரமாட்டாது ஒரோ வொன்றேபற்றி ஐக்கவாதமுதற் பலதிற

த்தான் வேறுபட்டுத் தம்முள் மாறுகொண்டு மயங்குவார்க்கு அங்ஙனமயங்காது அவற்றின் பொருளொருமை யுணர்தற்கு எழுந்தது இந்நூலென்றவாறாயிற்று. சிவஞானபோதமென்பதூஉம் இக்காரணத்தாற் பெற்ற பெயரென்பது வடமொழிச் சிவஞானபோதத் திறுதிச் சூத்திரத்தோதியவாறு பற்றியுணர்க.

சரியைமுதலிய மூன்று பாதப்பொருளை ஆராயு நூல்களாவன; சோமசம்புபத்ததி முதலாயின. அந்நூல்களின் மேற்பட்ட சிவஞானபோதமெனவே, அந்நூல்களுணர்ந்த பின்னர் இந்நூல் கேட்கற்பாற்றென்பது பெறப்பட்டது; படவே, முன்னர்த் தீக்கையுற்றுச் சிவாகமங்களை யோதி அதன்பின்னர்ச் சரியாபாத முதலியவற்றை ஆராயுநூல்களை முறையே கேட்டு அவ்வாறொழுகி மனந்தூயராய் நித்தியாநித்திய வுணர்வு தோன்றிப் பிறவிக்கஞ்சி வீடுபேற்றின் அவாமிக்குடையராய் வந்த அதிகாரிகளுக்கு இந்நூலுணர்த்துக வென்பது போந்ததெனக் கொள்க.

"உயர் சிவஞானபோதமெனவே யாப்பும் கேட்போரும் நுதலிய பொருளும் நூற்பெயரும், நாடித் தீர்ந்து கண்டு மயர்வறவெனவே நுதலிய பொருளின்வகையும் பயனும், நந்தி முனிகணத்தளித்தவெனவே வழியும், வெண்ணெய்ச்சுவேதவனனை மெய்கண்டதேவனெனவே ஆக்கியோன் பெயரும், தமிழ் வழங்கு நிலமே இந்நூல் வழங்குநிலமென எல்லையும் போந்தவாறுணர்க. வடநூலார் யாப்பை ஆனந்தரியமென்றும், நுதலிய பொருளை விடயமென்றும், கேட்போரை அதிகாரிகளென்றும், பயனைப் பிரயோசனமென்றுங் கூறுப. யாப்பு - சம்பந்தமென்பாருமுளர்.

* இவ்வுரையாசிரியராகிய சிவஞானமுனிவர் இப்பாயிரத்தை இந்நூற்கு முதற்கண்வைத்து, தமதுரைக்குக் காப்பாகிய தெய்வம் வாழ்த்துதலை தமது ஆசிரியர் மேற்கூறி இப்பாயிரத்திற்கு முன்வைத்திருக்கின்றர்.

அது:—

"கயிலாயபரம்பரையிற் சிவஞானபோதநெறி காட்டும்வெண்ணெய்ப், பயில்வாய்மைமெய்கண்டான் சந்ததிக்கோர்மெய்ஞ்ஞானபாநுவாகிக், குயிலாரும்பொழிற்றிருவா வடுதுறைவாழ் குருநமச்சிவாயதேவன், சயிலாதிமரபுடையோன் றிருமரபுநீடூழி தழைக்கமாதோ" என்பதாம்.

---

வெண்பா.

தம்மை யுணர்ந்து தமையுடைய தன்னுணர்வார்
எம்மை யுடைமை யெமையிகழார் - தம்மை
யுணரா ருணரா ருடங்கியைந்து தம்மிற்
புணராமை கேளாம் புறன்.

தம்மையுணர்ந்து எ-து. தம்மைத் (தம்முடையதேகத்துக் கந்நியமென்பதனை) யறிந்து.

அது ஆன்மதரிசநம். ஆன்மதரிசநம் பண்ணுமிடத்துப் பாசதரிசநம்பண்ணி நீக்கவேண்டுதலிற் பாசதரிசநமுங் கூறிற்றாயிற்று.

தமையுடைய தன்னுணர்வார் எ-து. தம்மை யடிமையாகவுடைய சிவனையுமறிவார்.

இது சிவதரிசநம். எனவே பதிபசுபாசங்களையுணர்ந்த ஞானவான்களென்பதாயிற்று.

எம்மையுடைமையெமை யிகழார் எ-து. (அவர்கள் சுவாநுபூதியாகிய ஞேயத்தழுந்திச் சிவனோடொன்றுபட்டவர்களாதலால்) எம்மையடிமையாக வுடையவர்கள்; யான்சொல்லு நூலுக்குக் குற்றஞ்சொல்லார்கள்.

தம்மையுணரார் உணரார் எ-து. அத்தன்மையாகிய தம்மையறியாதவர்கள், (பாசபந்தியாய் நிற்கின்ற முறைமையும், அந்தப்பாசநீங்கிச் சிவனுண்ணின்றுணர்த்துகின்ற முறைமையும்,) அறியார்கள். ஆகையால்,

உடங்கியைந்து தம்மிற் புணராமை கேளாம் புறன் எ-து. அவர்களுடன்கூடிப் பொருந்தியிராதபடியாலே யவர்கள் வாக்காற் குற்றங்கேட்பதில்லை எ-று.

என்றது, வேதாகமபுராணங்களின் பொருளுணர்ந்த ஞானவான்களிந்நூலிற் குற்றமுண்டாயினுங் குற்றந்தீர்த்துக் கொள்வரென்றும், உலகநூலை யுணர்ந்தோர்க் கிப்பொருடெரியாமையால் அவர்கள் சொல்லுங் குற்றம் குற்றமில்லையென்றும், இந்நூல் ஞானவான்களுட னல்லது பிறருடன் கூடாததாகாதென்பது முணர்த்தவே, அவையடக்க முணர்த்தினாராயிற்று.

இது கர்னபரம்பரையாய்க் குருபரம்பரையாய் வருநூலாதலா லிந்தச்சந்தானத்தார்க்கன்றிப் பிறர்க் கிப்பொருள் தெரியாதென்பதூஉங் கூறினாரென்பது முணர்க.

இது அவையடக்கம்.

---

சிவஞானமுனிவர் உரை.

இஃது அவையடக்கங் கூறுமுகத்தானே ஈண்டெடுத்துக் கொண்ட சித்தாந்தசைவத்தி னுயர்வும் ஏனைச்சமயத்தார்களா திழிபுங் கூறுகின்றது.

இ - ள். தம்மை உணர்ந்து தமை உடைய தன் உணர்வார். எ - து. உடைப்பொருளாகிய தம்மியல்பினை உணர்ந்து தம்மையுடையானாகிய தலைவனையுணருஞ் சித்தாந்த சைவர்—எம்மை உடைமை எமை இகழார். எ-து. தமக்குடைப்பொருளாகிய எம்மையுடையராகலின் எம்மைக்(குற்றங்களைக்கிக் குணங்கொண்டு கோதாட்டுவதன்றி) இகழ்தல் செய்யார்; ஆகலான் எம்மாற் செய்யப்படு நூலையும் அவ்வாறு கைக்கொள்வர்.—தம்மை உணரார் உணரார். எ-து. அங்ஙனந் தம்மை யுணராதார் தம்மையுடையானாகிய தலைவனையு முணரார். ஆகலான்—உடங்கு இயைந்து தம்மிற் புணராமை. எ-து. அவர் ஒருங்கே குழீஇக்கொண்டு தம்மிற்றாமே சேராது முரணுதலால்,—புறன் கேளாம். எ-து. அவர் எம்மையும் எம்மாற்செய்யப்படு நூலையும் இகழ்ந்துரைக்கும் மொழியை யாம் பொருளாகக் கொள்ளாம். எ-று.

ஆகலான் எம்மாற்செய்யப்படுநூலையும் அவ்வாறு கைக்கொள்வரென்பது குறிப்பெச்சம்.

தன்னையென்னும் இரண்டனுருபு விகாரத்தாற் றொக்கது.

உடைமை புணராமை என்புழி இன்னுருபு விரித்துரைக்க.

தம்மையுணராரெனப் பொதுப்படக் கூறுதலானே, தமொரு பொருளுண்டென்பதே உணராத உலோகாயதரும், தம்மைக்

குணிப்பொருளென் றுணராத புத்தர் சாங்கியர் மாயாவாதிக ளும், தம்மை முதல்வனுக்கு உடைப்பொருளென் றுணராத ஏ னைச்சமயத்தாரும் அடங்குவர். பாஞ்சராத்திரிகளும் சிவாத் துவித சைவரும், தம்மை உடைப்பொருளெனக் கொள்ளினும், அவருட் பாஞ்சராத்திரிகள் உடைப்பொருளாகிய தமக்கு அணு ப்பரிமாணங் கோடலானும், உடையானுக்குப் பரிணாமங்கூறுத லானும், உடையானல்லாதானை உடையானென மயங்கிக்கோ டலானும், சிவாத்துவிதசைவர் உடையானது சிற்சத்திக்குப் பரிணாமங்கூறுதலானும், பிறவாற்றானும், அவருந் தம்மை உணராரேயென்பது.

புறன்-புறச்சமயம்பற்றி இகழ்ந்துரைக்குமொழியும் புறங்கூ ற்று மொழியுமென்பது இரட்டுறமொழிதலென்னுமுத்தியாற் கொள்க. புறங்கூற்றுமொழியாவது முக்கூற்றுப் புறச்சமயங் களின் வேறுண பாடாணவாத சைவர் முதலியோர் முன்னன் றிப் புறத்தே இகழ்ந்துகூறு மொழியென்க.

---



# க — சூத்திரம்.



அவனேவ ளதுவெனு மவைமூ வினைமையிற்
றோன்றிய திதியே யொடுங்கிமலத் துளதா
மந்தமாதி யென்மனார் புலவர்.

இதன் கருத்து:—பிரபஞ்ச மாயாமலத்திலே தோன்றி யொடுங்குமென்பதூஉம், அது ஒரு கர்த்தாவாலொழிந் துண்டாகா தென்பதூஉம், கூறுகின்றது.

| | |
|---|---|
| இ-ள். அவனவளது வெனு மவை எ-து. | அவனென்றும் அவளென்றுஞ் சுட்டப்பட்ட உயர்திணையும், அதுவென்று சுட்டப்பட்ட அஃறிணையுமாகிய அவை. |
| மூவினைமையில் எ-து. | சிருட்டி திதி சங்காரமாகிய மூன்று தொழிலை யுடைத்தாகி வருதலாலே. |
| தோன்றிய திதியே யொடுங்கி மலத் துளதாம் எ-து. | (மாயாமலத்தின் கண்ணே) தோன்றி நின்ற முறைமையே யொடுங்கி மீளவு முண்டாம். |
| அந்தமாதி யென்மனார் புலவர் எ-து. | (அத்தொழில்கள் தானே யுண்டாகாது; அதற்குக் கர்த்தா வொருவன்) அந்தத்தினுள்ளானென்று சொல்வார்கள், வேதாகமபுராணங்களை யுணர்ந்த ஞானவான்கள் எ-று. |

ஆதி=கர்த்தா, அந்தம்=அந்தத்திலுள்ளான் எ-து. எக்காலத்தும் அழிவுபடாத சிற்சொருபத்தையுடையானென்றதாம். சங்காரகர்த்தாவென்றுமாம்.

"ஒருவனோடொருத்தியொன்றென் றுரைத்திடு முலகமெல்லாம், வருமுறைவந்துநின்றுபோவதுமாதலாலே, தருபவனொருவன் வேண்டுந்தான்முதலீறுமாகி, மருவிடுமனாதிமுத்த சித்துருவின்றே" என்னும்வழிநூலானுமுணர்க. சித்-க-சூ, க—செ.

இப்பொருள் சாத்திரத்தானுஞ், சம்பிரதாயத்தானும், அளவைப்பிரமாணங்களானு முணர்த்துமாறறிக.

சாத்திரமுஞ் சம்பிரதாயமுமேயன்றி யளவையென்பதென்னையெனின்? சாத்திரமும் அளவைகளையொழித் துணர்த்தமாட்டாதாதலின் அது நூற்கின்றியமையாதது.

உ-ம். "அருளினூலாகமத்தே யறியலாமளவையாலுந், தெருளலாஞ் சிவனைஞானச் செய்தியாற்சிந்தையுள்ளே, மருளெலா நீங்கிக்கண்டு வாழலாம்பிறவிமாயா, விருளெலா மிரிக்கலாகு மடியரோடிருக்கலாமே". எ-ம். "மறையினாலயனால் மாலால் மனத்தினால்வாக்கான் மற்றுங், குறைவிலாவளவையாலுங் கூறொணாதாகிநின்ற, விறைவனார் கமலபாத மின்றியானியர்புந்தன்மை, நிறையினார்குணத்தோர்க்கெல்லா நகையினை நிறுத்துமன்றே" எ-ம். சித் - சுப - பாயி, சு—ரு—செ.

அளவைப்பிரமாணங்க ளின்றியமையாமல் வருமாறு காண்க.

அளவை யிதன்வழிநூலான் வந்தவாறுணர்க.

---

சிவஞானமுனிவர் உரை.

ஈண்டு ஆசிரியர், முதனூலிற் கூறியவாறே சிவாகமங்களிற் சொல்லப்படும் ஞானபாதப்பொருளெல்லாவற்றையும் பொதுவுண்மையென்று இரண்டாகத்தொகுத்து, பிரமாணவியல் இலக்கணவியல் சாதனவியல் பயனியலென நால்வகைப்படுத்து, பிரமாணவியல் மூன்றுபாதத்தாற் கூறுவான்றொடங்கி, முதற்கண்

உலகிற்கு முதற்கடவுள் சிறப்புவகையானுண்டென்னும் ஆகமப்பிரமாணத்தை வலியுறுத்துவதாய அநுமானப்பிரமாணங் கூறுகின்றார்.

இதன் பொழிப்புரைத்துக் கொள்க. என ஆசிரியர் கூணைதந்தமையின், கண்ணழித்துரை பற்றிச் சூத்திரத்திற்குப் பதப்பொருள் கூறுதும்.

இ-ள்'அவன் அவள் அது எனும் அவை-புலவர்.எ-து.அவனென்றும் அவளென்றும் அதுவென்றும் இவ்வாறுபகுத்துப் பலவாய்ச்சுட்டி யுணரப்படுஞ் சொல்லும் பொருளுமாய இருகூற்றுப் பிரபஞ்சத்தொகுதி, தோற்றம் நிலை இறுதியென்னும் முத்தொழிலுடைமையால்; ஒருவனாற் றோற்றப்பட்டதாய் உள்பொருளேயாம். அது தோன்றுங்கால் தானொடுங்குதற்கு ஏதுவாய் நின்ற கடவுளினின்றும் சகசமல நீங்காமையால், அது நீங்குதற்பொருட்டு மீளத் தோன்றுவதாம். இவ்வாறாகலின், சங்காரத்தொழிலைச்செய்யுங் கடவுளே உலகிற்கு முதற்கடவுள்; ஏனையோர் அன்னரல்லர் எனக் கூறுவர் அளவைநூலுணர்ந்தோர்.

அவை -தொகுதி; சுட்டுப்பெயரெனக்கொள்ளின், உளவெனப் பிரித்துப் பயனிலையாக்கித், தாமென்பதனை அசைநிலையாக வைத்துரைத்து, ஆக்கச்சொல் வருவித்துக்கொள்க.

வினைமை வினையுடைமை.

தோன்றியவென்னாது தோற்றியவெனப் பிறவினைவாய் பாட்டானோதுதலின், அதற்குரிய வினைமுதல் அவாய்நிலையான் வந்தது. தோன்றியவென்னும் பெயரெச்சந் திதியென்னுஞ் செயப்படுபொருட்பெயர் கொண்டது. திதியா யொருவனாற் றோற்றப்பட்டதென்பார் தோற்றிய திதியென்றார். திதியென்றது ஈண்டு உள்பொருளென்னுந் துணையாய் நின்றது.

மூவினையுடைமையால் உள்பொருளாதலும், அவ்விரண்டுமுடைமையால் நிமித்தகாரணனையுடைத்தாதலுந் துணியப்படுமென்பார், மூவினைமையிற் றோற்றிய திதியேயென்றார்.

ஏகாரந் தேற்றம். ஒடுங்கியென்பது பெயர். உருபுகள் தொக்குநின்றன.

அந்தத்தைச்செய்யுங் கடவுளை அந்தமென்றது உபசாரம்.

காணப்பட்டவுலகாற் காணப்படாத கடவுட்குண்மைகூறவேண்டுதலின், தோற்றிய திதியேயெனவும், ஒடுங்கியுளதாமெனவும், உலகின்மேல்வைத்துக் கூறினார். கருத்துரையுட் கூறியதும் அது நோக்கி.

---

அளவை வருமாறு:— சிவஞானசித்தியார்.

அளவைகாண்டல் கருதலுரை யபாவம்பொருளொப் பாறென்ப, ரளவைமேலு மொழிபுண்மை பைதிகத்தோடியல்பெனநாள், களவைகாண்பா ரவையிற்றின் மேலுமறைவ ரவையெல்லா, மளவைகாண்டல் கருதலுரை யென்றிம்மூன்றி னடங்கிடுமே.

(இ-ள்.) அளவை - அளவைப்பிரமாணமாவது.

காண்டல்—பிரத்தியக்ஷம். [பிரதி-அக்ஷம்=பிரத்தியக்ஷம். அக்ஷம் - இந்திரியம், பிரதி-விஷயம்=இந்திரிய விஷயம்.]

அதாவது, கண் - செவி - வாய் - மூக்கு - மெய் இவ்வைந்திந்திரியங்களும் தத்தமக்கு விஷயமான உருபம் - சத்தம் - இரதம் - கந்தம்-பரிச மிவையிற்றை யுணர்தல். [அக்ஷம் - கண், பிரதி - அது காண்கிற வொளி.] எனினுமாம்.

கருதல் — அநுமானம்.

அதாவது, அநுமானத்தாலேதோற்று மநுமேயத்தையறிதல்,

உரை - ஆகமம்.

இவை மூன்றும் மேல்விரித்துரைப்பதனாலறிக.

அபாவம் - அபாவம். [பாவம் = உள்ளது, அபாவம் = இல்லாதது] அது இல்லதனையில்லையென்றல்.

அஃதாவது, உலகத்தாரில்லையென்று மதித்தபொருளைத் தானுமில்லையென்றுகோடல். அஃதென்போலவெனில்? முயற்கோடில்லை யென்றவழியதனையுண்டோவென்று மயங்காமற் றானுமில்லையென்றுகோடல். அது சித்திவிடத்து அசித்தறியாதென்றால் அஃதொக்குமென்றுகோடல்.

பொருள் - அருத்தாபத்தி.

அஃதாவது, கங்கையிலே யிடைச்சேரியிருப்பதென்றால் ஆற்றுக்குளொன்றுணராமல் அதன் கரையிலேயென்றுணரலாம். அது உடம்பறியுமென்றால் உடம்புசடமாகையாலறியாது, உடம்பினுள்ளே ஆன்மா நின்றறிகின்றதென வுணர்தல்.

ஒப்பு - உவமம் - உவமானமென்பதுவமது. [உவமம் - ஒன்றோடொன்றையொப்புறுத்தல்.]

அஃதாவது, ஆமாவை ஆப்போன்றிருக்குமென்றுகேட்டவன் அதனைக்காட்டகத்துக்கண்டபொழுது அந்த ஆவோடுவமித்துப் த்துணர்தலாம். அது சாத்திரம் சம்பிரதாயங்களாற்கேட்ட பொருளை யுவமையாலறிதல். அன்றியும் உவமங்காட்டியுரைப்பினுமாம். அது இன்னதின்னதுபோலு மென்றலாம். மாயையும் பூதாதியும் மண்ணுங் கடமும்போலு மென்றும், ஆன்மாவு மூலமலமும் செம்புங்களிதமும் போலுமென்றும், பதியினுடைய கிருத்தியம் ஆதித்தனைப்போலுமென்றும் பொருளுரைப்பினுமமையும்.

ஆறு என்பர் அளவை - அளவையாறுமொருவர் சொன்ன அடைவென்று சொல்லுவார்கள்.

மேலும் - இவையொழிந்தும்.

ஒழிபு - மீட்சிமொழி. (பாரிசேடம்)அஃதாவது,கீழைச்சேரி தோற்றதென்றால், மேலைச்சேரிவென்றதென்பது சொல்லாமலுணர்தல். அது ஒருவன் முத்திபெற்றானென்றால் பாசச்சேதநம்பண்ணினானென்பது சொல்லாமலறிதல்.

[பாரிசேஷமாவது, பாரித்துச் சேஷித்தல்= கூட்டிக்கழித்தல்.] அஃதாவது, மூவரிருந்தவிடத்தே ஒரு களவைநாடில், நாங்களிருவருமல்லவென்றால் நின்றவன் கள்வனாவன். அது போகம் பதி பசு பாசங்களில் யாதுக்கோவென்றவழிப் பதிக்குமன்று பாசத்துக்குமல்லென்றாற் பசுவுக்காமெனவறிதல்.

உண்மை - சம்பவம்.

அஃதாவது, ஒருகல் நிறைபையிலிருக்குதென்றால் அதுகாக்குமெனவறிதல். ஒருவன் சந்நிதியிலே பிரபஞ்சங் கிருத்தியப்பட்டு வருகுதென்றால், அவ னித்த முத்த சுத்தனாகி நிராதாரனாகிச் சிற்சொரூபனாகி யிருக்கின்ற பரமேஸ்வரனெனவறிதல்.

ஐதிகம் - ஐதிகம்.

அஃதாவது, உலகத்தா ரொரு மரத்தின்கண்ணே பேயுண்டென்றாற் றானு மஃதுண்டென்றுகோடலன்றி உண்டோவில்லையோ வென் றையப்படாதொழிதல். உலகத்தார் சாத்திரங்களாலே மகமேருமுதலாயின வுண்டென்றாற்றானுமுண்டென்று கொள்ளுதலன்றி உண்டோவில்லையோவென்றையப்படாதொழிதல்.

ஒடு - என்னொடு.

இயல்பு - இயைபு.

[இயைபெனினும் - சுபாவமெனினும் - தன்மையெனினுமொக்கும்.] ஆனைமே லிருந்தவன் தோட்டிதாவென்றால்

பிறிதோர் கோட்டியென் றுணராமல் யானைத் தோட்டியென் றுணர்ந் ததனைக் கொடுத்தல். என்றது, ஒரு சொல்பலவாகியவிடத் ததற்கேற்பனவறிந்து பொருள்கூறுதலாம்.சிவமென்பது பலபொருள்படுமாதலால் அஃதறிந்துகூறுதல். அஃதாவது "தத்துவமெண்மூன் றுஞ்சென் றுன்மதத் துவத்தொடுங்கும், வித்தையிலேழுடுங்குமாறு சிவத்தினிலொடுங்குமூன்று,நித்ததத் துவமிம்மூன்று மென்பர்களிரண்டுநின்ற, சுத்தமாஞ்சிவத்தொடுங்குந் தோற்றமுமதுபோலாகும்"—என்றதன்கண் சிவமென்றதனைச் சுத்தமாயையெனக் கொள்ளுதலாம். அப்படிவருவனகாண்க. சித் - உ - சு, எஉ—செ.

எனநான்களவைகாண்பார் - என்றிப்படியும் நாலளவை சொல்வார்கள்.

அவையிற்றின்மேலு மறைவர் - அவைபத்து மொழிந்துவேறுஞ் சிலபிரமாணங்கள் சொல்வார்கள்.

அவையெல்லா மளவை காண்டல் கருதலுரை யென்றிம்மூன்றி னடங்கிடுமே - இந்தப்பிரகாரத்தின் மேற்சொல்லப்பட்ட பிரமாணங்களெல்லாம் பிரத்தியக்ஷம் அநுமானம் ஆகமம் என்னு மூன்றினு ளடங்கும். எ-று.

பூர்வக்காட்சி யநுமானமுதலிய மேல்வருமாற்றாலறிக. இவை யநுமானத்தே யடங்குமாறறிக. மேலுமிப்படி வந்துழிக்காண்க. (க)

மாசறுகாட்சியையந் திரிவின்றிவிகற்பமுன்னு, தாசறவறிவதாகு மநுமானமவிநாபாவம், பேசுறு மேதுக்கொண்டு மறைபொருள் பெறுவதாகும், காசறுமுரையிம்மானத் தடங்கிடாப் பொருளைக்காட்டும்.

இ-ள். மாசறுகாட்சி யையந் திரிவின்றி விகற்பமுன்றாதா சறவறிவதாகும் - குற்றமற்ற பிரத்தியக்ஷமாவது, ஐயமுந் திரிவுமின்றி விகற்பத்தினுஞ் செலாமற் குற்றமற வறிவதாகும்.

அநுமான மவிநாபாவம் பேசுறு மேதுக்கொண்டு மறைபொருள் பெறுவதாகும். - [விநா=நீங்குதல், அவிநா=நீக்கமற்றது : பாவம் உள்ளது] அநுமானப் பிரமாணமாவது, -நீக்கமற்றதா யுள்ளதாகச்சொல்லப்பட்ட வேதுக்கொண்டு மறைந்த பொருளைக் காணப்படுவதாகும்.

நீக்கமாகச் சொல்லப்பட்ட வேதுக்களு முளவோவென்னில்? அவையுஞ் சிலவுள. அவை பொருந்துவதும், பொருந்தாதுமாய்வரும் அவை வருமாறு:—

ஏதுவென்றும், பொதுவென்றும், எச்சமென்றும், முதலென்றும், நான்குவகையாம்.

ஏது = புகையைக்கண்டு நெருப்புண்டென வறிதல்.

அவை தப்பவருவதுமுண்டு தப்பாமல் வருவதுமுண்டு. தப்பாமல்வருவது நெருப்பைவிட்டுநீங்காமல் மறுமைப்பட்டுப் புலப்படும் புகையாகிய காரணவநுமானத்தாலே யநுமேயத்தையறிதல்.

பொது = யானைமேலிருந்தோன் காளமூத, அந்தவோசை கேட்டவன் சாதநமாயுள்ளதோ ரொற்றுமையாயுள்ள யானைக் கோரொற்றுமைப்பா டின்றியிருந்தும், அந்தக்காளவோசைக் கேட்குந்தோறும் அந்தவிடத்தே யானையுண்டெனவறிதல்.

இவையிற்றிற் சாமாநிய வநுமானமாகிய காளம் யானையொழியவூதலுங்கூடும். [பொதுவெனினும் சாமாநியமெனினுமொக்கும்.]

எச்சம் = ஆற்றிலே வெள்ளம்வர அந்தக்காரியவேதுவைக் கொண்டறுதியிட்டிதற்குக்காரணமாகிய மழை மலைத்தலையின் கண்ணே யுண்டென வுணர்தல்.

[காரியமெனினு மெச்சமெனினு மொக்கும்.] காரியவநுமானமாகிய வெள்ளம் மலையில் மேகம் பெய்யாதொழிய வணையுடைந்து வரவுங்கூடும்.

முதல் = சூன்முதிர்ந்தமுகிலைக்கண்டு அச்சூல் காரணவேதுவாகக் காரியமாயுள்ள மழைபெய்யுமென் றுணர்தல். [முதலெனினுங் காரணமெனினுமொக்கும்.] காரணவநுமானமாகிய சூல்முதிர்ந்தமேகம் பெய்யாதொழிபவுங்கூடும்.

நின்றவநுமானங்களெல்லாமுங் கருதியுணரப்படுதலாற் கருத்தளவாகி யநுமானத்துளடங்கும்.

புகையுங்காளவோசையும் நிகழ்காலம் - வெள்ளம்வரவு இறந்தகாலம் - முகில்எதிர்காலம்.

காசறு முரை யிம்மானத் தடங்கிடாப் பொருளைக் காட்டும் - குற்றமற்ற சாத்திரப்பிரமாண மிந்தவநுமானத்து ளடங்காதபொருள்களைக் காட்டும். எ-று.

இவையிற்றுக்கு மேல்வரும் புறனடையடக்கங்களில் விரிக்குமாற்றுலறிக. (உ)

கண்டபொருளையிரட்டுறவே கருதலையந்திரியவே, கொண்டறிரிவாம்போர்சாதி குணமேகன்மம்பொருளெனவைந், துண்டவிகற்பவ்வுணர்விணுக்குப் பொருளினுண்மை மாத்திரத்தின் விண்டலில்லாவறிவாகும் விகற்பமில்லாக்காட்சியே.

இ-ள். கண்ட பொருளை யிரட்டுரவே கருத லையம் - காணத்தக்கதொருபொருளை யிரண்டுபடக்கருதல் ஐயக்காட்சியாம்

அது குற்றிசொல்லோ மகன்சொல்லோ தோன்றுகின்ற வுருவென்றல். அஃதாவது, பிரபஞ்ச மொருவன்படைக்கப்பட்டதோ ? தானேயுண்டானதோ ? என்றையப்படுதல். அன்றியும், சங்கரிப்புண்ட பிரபஞ்சம் சிவனிடத்தே யொடுங்குகின்றதோ? மாயையினிடத்தே யொடுங்குகின்றதோ? என் றையப்படுதலுமாம்.

திரியவே காண்டல் திரிவாம் - பிரபஞ்சந் தானேயுண்டானதென்றுஞ் சிவனிடத்தே யொடுங்குமென்றுங் கோடல் திரிபுக்காட்சியாம்.

திரிபுக்காட்சியாவது உண்மைப்பொருள் வேறுபடக்கோடல்.

பேர்சாதிகுணமே கன்மம் பொருளெனவைந்துண் டவ்விகற்பவுணர்வினுக்கு எ-து. விகற்பித்தறியுமறிவுக் கிது இன்ன பெயரையுடைத்தென்றும், இன்ன சாதியிலேயென்றும், இன்ன குணமுடைத்தென்றும், இன்னதொழிலுடைத்தென்றும், இன்னநிறமுடைத்தென்று முண்டாகும்.

விகற்பம் - வேறுபடுதல். பொருளென்பதற்குப் பேர்சாதிகுணங்கன்மம் ஆகியநாலையுமுடைய மூலம் பொருளென்றும்.

பொருளினுண்மை மாத்திரத்தின் விண்டலில்லாவறிவாகும் விகற்பமில்லாக் காட்சியே - அவையிற்றினையுடைய வகனது சொரூபமாத்திரத்தை யொருமாத்திரையிலே பகுத்தறியாமல் அறிவதாகும் விகற்பமில்லாக்காட்சி. எ-று.

தற்பிரியா பாவம் - அப்பிராந்தி. அது, மூன்றுகாலமுமின்றி தன்மை முன்னிலை படர்க்கையின்றிப் பெயர் முதலாயினவின்றித் தன்னறிகாட்சி. அது சுவாநுபூதியாக வுணர்வதென்

றும். தவமிக்காரோயதற்குச் சான்றென்பதாம். "கண்டவர் வி ண்டிலர்" என்பதூஉமது. (௩)

பாண்டிப் பெருமாள் பதவுரை.

ஐயம் - பசுவோ மரையோ என ஐயப்படுதல்.

திரிபு - பழுதையைப் பாம்பெனவும், இப்பியை வெள்ளி எ னவும், திரிபாகக் கொள்ளல்.

விகற்பக்காட்சி - சவிகற்பக்காட்சி.

விகற்பமில்லாக்காட்சி - நிர்விகற்பக்காட்சி.

காண்டல்வாயில் மனந்தன்வே தனையோடியோகக் காட் சியென, வீண்டுநான்கா மநுமானந் தனக்கும்பிறர்க்கு மென்றி ரண்டாம், மாண்டவுரை தந்திரமந்திரத்தோ டுபதேசச்சொல் லெனமூன்றாம், பூண்டவளவைக் கெதிர்புலன்றன் னியல்புபொ துவென் றிரண்டாமே.

இ-ள். காண்டல் - பிரத்தியட்சம். அஃதாவது,

வாயில்- இந்திரியப் பிரத்தியட்சம்

மனம் - மானதப்பிரத்தியட்சம்

தன்வேதனை - ஸ்வவேதனாப்பிரத்தியட்சம்

ஓடு - எண்ணொடு

யோகக்காட்சி - யோகப்பிரத்தியட்சம்

எனவீண்டு நான்காம் - என்று நால்வகையாம்.

காட்சி யெவ்விடத்துங் கூட்டுக.

× அநுமானம் தனக்கும் பிறர்க்கு மென்றிரண்டாம்-அநுமா னமாவது, அநுமேயத்தை யதற்கேற்றவுறுப்புக்கொண்டு தான றிதலும் பிறர்க்கறிவித்தலுமென விரண்டு வகையாம்.

மாண்டவுரை தந்திரமந்திரத்தோ டுபதேசச் சொல்லென மூன்றும் - மாட்சிமையையுடைய ஆகமப்பிரமாணம் தந்திரகலையென்றும், மந்திரகலையென்றும், உபதேசகலையென்றும், மூன்று வகையாம்.

பூண்டவளவைக்கெதிர்புலன் + தன்னியல்பு பொதுவென் றிரண்டாமே - இப்படிச்சொல்லப்பட்ட பிரமாணங்களுக்கு ஏற்பட்டபிரமேயம் தன்னியல்பென்றும் பொது வியல்பென்று மிரண்டாம். எ-று.

எதிர்தல்—தோன்றுதல், புலம் — பிரமேயம்=தோன்றும் பிரமேயம். இவைமேல் விரிக்குமாற்றாலறிக. (சு)

---

பாண்டிப்பெருமாள் பதவுரை.

× தன்பொருட்டநுமானம், பிறர்பொருட்டநுமானம் = அவை, ஸ்வார்த்தாநுமானம், பரார்த்தாநுமானம் என்னவுமாம்.

+ தன்னியல்பு, பொதுவியல்பு = தற்சுபாவம், சாமானிய சுபாவம் என்னவுமாம்.

---

அந்நிய சாதியுந் தன்சாதியு மகன்றுநிற்றல், தன்னியல் பன்னியத்தைத் தவிர்ந்துதன் சாதிக்கொத்தல், துன்னிய பொதுவியற்கை சொன்னவிவ் விரண்டினுள்ளே, மன்னிய பொருள்கள்யாவு மடங்கிடு மானமுற்றால்.

இ-ள். அந்நியசாதியுந் தன்சாதியு மகன்று நிற்றல் தன்னியல்பு - தனக்கந்நியமான சாதியையும், தன்னுடைய சாதியையும் நீங்கி, தானொரு தலைமைபெற்று நிற்றல்; தன்னுண்டாகிய வியல்பாம்.

அஃதாவது, மா என்பது ஒருமரந் தனக்கந்நியமான இருப்பைமரத்தினுங் கூடாமல், தன்சாதியாகிய மாமரத்தினு நில்லாமல், தனக்குத் தலைமையுண்டாகிய தேமாவென்று பேர்பெறுதலாம்.

இனி, சொன்னவிவ் விரண்டினுள்ளே மன்னிய பொருள்களி யாவு மடங்கிடு மானமுற்றால் (என்று கூறுதலால்) பதிபசு பாச மூன்று மிவ்வா ருமாறுணர்க. மானமுற்றால்—கறுதலுற்றால்=அளந்தறியுமிடத்து எ-ம்.

அந்நியத்தைத் தவிர்ந்து தன் சாதிக்கொத்தல் துன்னிய பொதுவியற்கை - அந்நியசாதியிற் செல்லாமற் றலைமையும் பெறுமற் றன்னுடைய சாதி குணத்திலே நிற்றல் பொருந்திய பொதுவியல்பாம்.

அஃதாவது, மாவென்னுமரம் இருப்பையிற் செல்லாமற் றலைமைபெறுமற் றன்னுடைய மாவென்னும் பேரைப் பெற்றுநிற றல்.

இவை பதி பசு பாச மூன்றினுடனு மாமாறென்னையெனின்? பதி தனக்கந்நியமான ஆன்மாவுமாகாமல், தன்னுடைய சிற்சொரூபமாயும் இராமல், தனது ஏகசத்தியாலே பஞ்சகிருத்தியம் பண்ணுதல் தன்னியல்பு.

ஆன்மாவும் ஆகாமல், பஞ்சகிருத்தியமும் பண்ணுமல், சிற்சொரூபமாயிருத்தல் பொதுவியல்பாம்.

ஆன்மா தனக்கந்நியமான பாசங்களுடனு மாகாமற் றன்னுடைய ஆன்மவர்க்கத்துடனுங் கூடாமற், சம்பிரதாயம்பெற்றவழி சீவன் முத்தனென்றுபெயர் பெறுதல் தன்னியல்பாம். சம்பிரதாயம்=அநுக்கிரகம்.

“கேவல சகலசுத்த மென்னுமூன் றவத்தையான்மா, மேவுவன் கேவலந்தன் னுண்மையெப் பொறிகளெல்லாங், காவலன் கொடுத்தபோது சகலனுமலங்களெல்லா, மோவின வாயிராமற் றனதுள சத்தியாலே” பஞ்சகிருத்தியம்பண்ணுதல் தன்னியல்பு.

இனி ஆன்மாவு மாகாமற் பஞ்சகிருத்தியமும்பண்ணுமல் சிற்சுகவியல் “போதுசுத்தமுடைய னுற்பவந்துடைத்தே” என்பனவற்றாலறிக. சித் - ௪ - சூ, ௩௭ —செ.

தனக்கந்நியமான பாசங்களுடனுமாகாமற், சீவன் முத்தனென்னும் பேரும்பெறாமற் றன்னுடைய சுபாவத்தே நிற்றல் பொதுவியல்பாம்.

தற்சுபாவமாவது “உயிரெனப்படுவதிந்த வுடலின்வே றுளதாயுற்றுச், செயிருறு மிச்சாஞானச் செய்திக ளுடையதாகிப், பயிலுறு மின்பதுன்பப்பலன்களுநுகரும்பார்க்கிற், றுயிலொடு மஞ்சவத்தைப்படுமுண்மை துரியாதீதம்” சித்-௩-சூ, ௧—செ.

மாயை தனக்கந்நியமான கன்மங்களுமாகாமல், றன்னுடையசுபாவத்தினும் நில்லாமல், கரணமுதலாகிய பெயர்பெற்றுக் கலைமுதலாகிய தத்துவங்களைக்கொடுத்து நிற்றல் தன்னியல்பு.

மாயை கன்மங்களுமாகாமல் கத்தாவேவல்வழிநின்று கலைமுதலாகிய தத்துவங்களையுங்கொடாமல், தன்னுடைய சுபாவத்தேநிற்றல் பொதுவியல்பாம். “நித்தமா யருவாயேக நிலையதா யகிலத்துக்கு, வித்துமா” என்பதனில் “மாயை மயக்கமுஞ்செய்யுமன்றே” என்பதனாலறிக. சித் - ௨ - சூ, ௫௩ —செ.

விந்து மோகினி மானென்று கூறப்பட்ட உபாதானமென்று [illegible]

"விந்துவின் மாயையாகி மாயையி னவ்வியத்தம், வந்திடும் விந்து தன்பால் வைகரி யாதிமாயை, முந்திடுமராகமாதி முக்குண மாதிமூலந், தந்திடு மாஞ்சிவன்றன் சந்நிதிதன்னி னின்றே. என்பதனு லுபாதான மூன்று மறிக. சித் - க-சூ, கக—செ. (ரு)

உயிருடனுணர்வுவாயி லொளியுருவாதிபற்றிச், செயிருறுவிகற்பமின்றித் தெரிவதிந்திரியக்காட்சி, யயர்விலிந் திரியஞானமைம்புலன் சார்ந்துயிர்க்கண், மயர்வறவந்த ஞான மானதக்காண்டலாமே.

இ-ள். உயிருடனுணர்வுவாயி லொளியுருவாதிபற்றிச், செயிருறு விகற்பமின்றித் தெரிவதிந்திரியக்காட்சி - ஆன்மாதனக்குடனாகிய வறிவிடமாகப்பற்றி யொளியாகிய உருபமுதலாயினவற்றைக் குற்றமுறும் விகற்பமின்றியறிவது வாயிற்காட்சியாம்.

ஒளியாகிய உருவென்க. உருவாதி, உருபம்-சத்தம் - பரிசம்-இரதம்-கந்தம் - இவையைந்துமாம். வாயிலிடமும் புலனுமாகும், வாயிற்பற்றியென்க. இவையிற்றின தன்மையாகிய பொருளைப் பகுத்தறியாம லிந்திரியங்களோடு முற்றுநில்லாமல் ஆன்மா அஞ்ஞானத்தால் அறிவதை இந்திரியக் காட்சியென்றார். "விண்டலில்லா வறிவாகும் விகற்பமில்லாக் காட்சியே" என்றதற்கு மிதற்கும் வேறுபாடென்னையெனின்? இது ஆன்மா அஞ்ஞானத்தாலறிவது, அது பரஞானத்தாலறிவது. (உ-ம்) "பரஞானத்தாற் பரத்தைத்தரிசித்தார் பரமே பார்த்திருப்பர் பதார்த்தங்கள்பாரார் பார்க்க, வருஞானம் பலஞான மஞ்ஞான விகற்பம் வாச்சியவாசகஞானம் வைந்தவற்றின் கலக்கம், தருஞானம் போக ஞாதிரு ஞானஞேயந் தங்கிய ஞானஞ்சங்கற்பனைஞானமாகுந், திருஞானமிவையெல்லாங் கடந்தசிவஞானமாதலாற் சிவன் முத்தர் சிவமேகண்டிருப்பர்" என்பதனுலறிக. சித் - கக - சூ, உ—செ.

அயர்வில்இந்திரியஞான மைம்புலன்சார்ந்துயிர்க்கண், மயர்வறவந்தஞான மானதக்காண்டலாமே' எ-து. அப்படி விகற்பமறக்கண்ட விந்திரியக்காட்சி கண்முதலாகிய புலனைந்தையுஞ்சார்ந்து ஆன்மாவினிடத்தே மயக்கமறவந்த ஞானம் மனத்தாற்காணும் மானதக் காட்சியாம். எ-று.

இது பாசஞானமெனவறிக. "வேதசாத்திரமிருதிபுராணகலைஞானம் விரும்பசபைவைகரிபாதித் திறங்கண்மேலா, நாதமுடிவானவெல்லாம் பாசஞான மனுகியான்மா விவை கீழ்நாடலாலே, காதலினானின்பிரமமென்னுஞானங் கருதுபசுஞானமிவனுடலிற்கட்டுண், போதியுணர்ந்தொன்றுன்றாயுணர்ந்திடலாற்பசுவா மொன்றாகச்சிவனியல்பினுணர்ந்திடுவன்காணே" என்பதனாலுமறிக. சித் - ௯ - ௬ உ-செ. (௬)

அருந்தின்பதுன்பமுள்ளத் தறிவினுக்காகமாதி, தருந்தன்வேதனையாங்காட்சி சமாதியால் மலங்கள்வாட்டிப், பொருந்திய தேசகால மியல்பகல்பொருள்களெல்லா, மிருந்துணர்கின்றஞான மியோகநற் காண்டலாமே.

இ-ள். அருந்தின்பதுன்பமுள்ளத் தறிவினுக்காகமாதி தருந்தன்வேதனையாங்காட்சி எ-து. ஆன்மஞானத்துக்கு இச்சாஞானக்கிரியைகள்தரு மின்பதுன்பங்களை யருந்துதல் தன் வேதனைக்காட்சியாம். (அது ஆன்மா தான் அந்தந்த விஷயங்களை நின்றுபுசிக்குமவதரம்)

சமாதியால் மலங்கள்வாட்டிப்பொருந்திய தேசகாலமியல்பகல் பொருள்களெல்லா மிருந்துணர்கின்றஞான மியோகநற் காண்டலாமே - இயமம்-நியமம்-ஆசனம்-பிராணாயாமம் -பிரத்தியாகாரம் - தாரணை-தியானங்களுடனேகூடிய சமாதியாலே இந்திரியங்கள் சீவியாதபடியகற்றிப் பொருத்தமுடைய

த்தாகிய தேசகாலசுபாவங்களும் விரிந்தபொருள்களையு மோரிடத்தேயிருந்தறிகின்றவறிவு நல்லயோகத்தாற்காணும் யோகக்காட்சியாம். எ-று.

இது அணிமா - மகிமா - இலகுமா - கிரிமா-பிராப்தி - பிராகாமியம் - ஈசத்துவம் - வசித்துவம் என்னு மட்டமா சித்தி முதலாயின பொருந்தி விந்து நாத சொரூபமாகிய வுண்மையைப்பார்த்திருப்போரது தன்மையாம். இத்தன்மையையுடையோ ரெல்லாத்தேசத்துமுண்டாகிய செல்காலம் வருங்காலங்களும் அவ்விடங்களிலுண்டாகிய சுபாவங்களும் பொருள்களுங் கண்டிருப்பனொன்றதாம்.

இனி யிவையொழிந்து கண்டுணராமை, உணர்ந்ததையுணர்தல், நினைப்புஎனச் சில போலிகளுங் கூறுப. அவை வருமாறு:—

கண்டுணராமையாவது—சிலவற்றைக் கண் டதன்பெய ரறியாதிருத்தல்.

உணர்ந்ததை யுணர்தலாவது முன்பு குளிர்வந்துற்றகாலத்து நெருப்பு மருந்தொன்ற றிந்தான் பின்பதற் கிதுமருந்தென்றுள்ளங் கொள்ளல்.

நினைப்பாவது - குழவிப்பருவத்தே தந்தை தாயையிழந்தோன்காரணங்கருதாது நினக்கின்னூர் தந்தை தாயென்று பிறர் சொல்வதனைக் கருதிக்கோடல்.

இம்முறைமைப்போலிகள் மேல்வருமாற்றால் அறிக. பரபட்சம் உலோகாயிதன் மறுப்பு (க) "உள்ளதாவதுகண்டதென்றுரைகொண்ட தென்னுலகத்துநீ,பிள்ளையாய்வளர்கின்றநாளுனைப் பெற்றதாயொடுதந்தையைக், கள்ளமேபுரிகாலனுருபி ...

ணவின்டொருகாளையாய்,மெள்ளவேயுளரென்றுகொண்டு விரு ம்புமாறுவிளம்பிடே" இதுநினைப்பு.

பிரத்தியக்ஷ முடிந்தது.

" பக்கமூன்றின்மூன்றேது வுடையபொருளைப்பார்த்துணரத், தக்கஞானந்தன்பொருட்டாம் பிறர்பொருட்டாமநுமானம், தொக்கவிவற்றுற்பிறர்தெளியச்சொல்லலாகுமச்சொல்லும், மிக்கவந்நுவயத்திஞெடு வெதிரேகச்சொலெனவிரண்டாம்.

(இ-ள்) பக்கமூன்றின் - பட்சம், சபட்சம்,விபட்சம் என்னு மூன்றிடத்தினும்.

மூன்றேதுவுடையபொருளைப் பார்த்துணரத்தக்கஞானந் தன்பொருட்டாம் - ஏதுவு நிமித்தமுங் காரணமுமாகும் இயல்பு, காரியம், அநுபலத்தி, என்னுமூன்றேதுவுடையபொருளைக் கண்டறியத்தக்க வறிவு தன்னுடையபொருட்டாம்.

பிறர்பொருட்டாம் - பிறரறியும்பொருட்டு

அநுமானந் தொக்கவிவற்றுற் பிறர்தெளியச் சொல்லலாகும் - காரியமுதலாயின ஏதுக்கொண்டு காரணத்தைக் காண்பது பிறர்மனந்தெளிய வுரைக்கலாகும், பிறர்பொருட் டநுமானமாம்.

அச்சொல்லு மிக்கவந்நுவயத்திஞெடு வெதிரேகச்சொலெனவிரண்டாம் - அப்படிச்சொல்வது மிகுந்த வொற்றுமைப்பட்ட சொல்லுடனே வேற்றுமைப்பட்ட சொல்லென விரண்டாம். எ-று.

அந்வயம் - பொருத்தமுடையது, வெதிரேகம்-பொருந்தாதது. இவை விரிக்குமாற்றுலறிக. (அ)

மூன்றுபக்கம் பக்கநிகர் பக்கநிகரில் பக்கமெனத், தோன் றும் பக்கந் துணிபொருளுக் கிடமாமுவமை நிகர் பக்க, மான் றபொருள்சென் றடையாது விடமாநிகரில்பக்கமுத, லேன்றவி ரண்டும் பொருளுண்மைக் கிடமாமொன்று பொருளின்றாம்

இ-ள். மூன்றுபக்கம் - முன்சொன்ன மூன்றுபக்கம்.

பக்க நிகர்பக்கம்நிகரில்பக்கமெனத் தோன்றும் - பக்கமென் றும், ஒத்தபக்கமென்றும், ஒவ்வாதபக்கமென்றும், தோன்றப் படுவதாகும். அவை பட்சம், சபட்சம், விபட்சம்என்பவையாம்.

பக்கந் துணிபொருளுக்கிடமாம்-பட்சமாவது சாதநங்கொ ண்டு சாத்தியத்தைத் துணியும்பொருளுக் கிடமாயிருக்கும்.

அஃதாவது, இத்தமலை தன்னிடத்தே நெருப்பையுடைத்தெ ன்று சுட்டிக் கூறுதற்கிடமாவது. அது - சுபாவவேது, அஃதெ த்தாலென்னில்? புகையாலென்றல் காரியவேது.

உவமை நிகர்பக்கம் - சபட்சமாவது, ஒன்றை யுவமித்துக்கா ட்டுமிடமாம்.

ஆன்றபொருள் சென்றடையாத விடமாம் நிகரில் பக்கம் - விபட்சமாவது, சாத்தியமாகியபொருள் சென்று கூடாதவிட மாம்.

முதலேன்ற விரண்டும் பொருளுண்மைக்கிடமாம் - முன் சொல்லப்பட்ட பட்சம் சபட்சம் இரண்டும், சாத்தியப் பொ ருளுண்டாதற்கிடமாம்.

ஒன்றுபொருளின்றாம் - விபட்சம்சாத்தியமாகிய பொருள் சா திப்பதற் கிடமல்லவாம். எ-று.

இவை மேல்வரும் புறனடைச் சூத்திரத்தாலறிக. (௬)

ஏது மூன்று மியல்பு காரியத்தோடநுப லத்தியவை, யோதினியல்பு மாமரத்தைக் காட்டலுறுகாரியம் புகைதன், ஆதியானவனல் காட்ட லாகுமநுபலத்தியது, சீதமின்மை பனியின்மை காட்டலாகுஞ் செப்பிடினே.

இ-ள். ஏதுமூன்றுமியல்புகாரியத்தோடநுபலத்தி - முன் சொன்னவேதுக்கள்மூன்றும் இயல்பேது, காரிய வேது, அநுபலத்தியேதுவென்றும்.

அவையோதில் - அவையிற்றைமுறைமையாகச் சொல்லில்.

இயல்புமாமரத்தைக்காட்டல் - இயல்பேது மாவென்பதுமரத்தைக்காட்டி நிற்றல்.

அஃதாவது, பொருளுண்மைசுட்டலாம். அதுவொன்றுண்டெனச்சுட்டப்படுதல். அது,பதியுண்டு, பசுவுண்டு, பாசமுண்டென்று சுட்டப்படுதலாம்.

உறுகாரியம் புகைதன்ஆதியானவனல்காட்டலாகும் - மிக்க காரியமாகிய புகை, காரணமாகிய நெருப்பைக்காட்டுந்தன்மையாம்.

என்றது, பிரபஞ்சங் காரியமாயிருத்தலால், காரியம் செய்வோனின்றி யில்லையாதலால், காரியம் கத்தாவைக்காட்டிற்று. பசுவுக்கு தேக மசேதநமாதலா லிந்த தேகத்தை நடத்துவாநொருசேதன்னிய னுண்டென்று காட்டிற்று. பாசத்துக்குக் காரணமின்றிக் காரியந்தோன்றாதென்பதனாற் காரியமாகியபிரபஞ்சங் காரணமாகியமாயையைக் காட்டிற்று.

அநுபலத்தியது சீதமின்மைபனியின்மை காட்டல்போலுஞ் செப்பிடினே - அநுபலத்தியேதுவாவது, குளிரில்லாமை பனியில்லாமையைக் காட்டுதல்போலும் சொல்லுமிடத்து எ-று.

என்றது யாதொன்று யாதொன்று காரணமில்லையாகிறது காரியமுமில்லை என்பதாம்.

எனவே கத்தாவாகியகாரணம் இல்லையாகிற் பிரபஞ்சகாரியமுமில்லை, ஆன்மாவில்லையாகிற் றேகமுமில்லை, மாயையில்லையாகிற் பிரபஞ்சமுமில்லை என்றதாம். மண் இல்லையாகின் கடமில்லை என்பதுபோல். (௧௦)

புகையாலனலுண்டடுக்களைபோ லென்னப்புகறலந்நுவயம், வகையாமனலில்லாவிடத்துப் புகையின்றுகுமலரினொடு, முகையார்நீரிற்போலென்று மொழிதல்வெதிரேகச்சொலிவை, தொகையாருறுப்பைந் தொடுங்கூடச் சொல்லுவாரு முளர்துணிந்தே

இ-ள். புகையாலனலுண்டு - புகையுண்டாதலா லம்மலையிடத்துநெருப்புண்டு.

இது பிரதிஞ்ஞை - பிரதிஞ்ஞையெனினும் பட்சமெனினும், மொக்கும். அஃதெங்ஙனேயென்னில்?

அடுக்களைபோல் - அட்டிலிடத்துப் புகையுமனலுங்கூடக் காணுந்தன்மைபோல்.

இதுதிட்டாந்தம். திட்டாந்தமெனினும் - சபட்சமெனினும், ஒத்த பட்சமெனினு மொக்கும்.

என்னப்புகற லந்நுவயம் - என்றிப்படிச்சொல்லுவ தொற்றுமைப்பாட்டையறியவியற்றியது. அந்வயம்.

வகையாமனலில்லாவிடத்துப்புகையின்றுகும் - கூறுபடுத்திச்சொல்லும் நெருப்பில்லாதவிடத்துப் புகையில்லையாம். அஃதென்போலவென்னில்?

மலரிணொடுமுகையார்நீரிற் போலென்று மொழிதல்வெதிரேகச்சொல் - மலரினுடனே முகை, நிறைந்தநீரில்லாவிடத் தில்லையாறுற்போல என்றுகூறுதல் வேற்றுமைப்பாட்டையுடைய சொல்லாம். வேதிரேகச்சொல்.

முகை - தாமரை. வெதிரேகமெனினும் விபட்சமெனினும்—ஒவ்வாதபட்சமெனினும்— மீட்சிமொழியெனினும்—ஒழிபு—எனினும் ஒக்கும். அதுஇரண்டாவதுவலியுறுத்தல். அது நெருப்பையுடைத்தல்லாத தியாதோரிடம், அவ்விடத்துப்புகையில்லை: புனலில்லாதவிடத்துத் தாமரையில்லாதாற்போல வென்று பொருளினது மீட்சிமொழியாய்த் தநுமியதிட்டாந்தத்திற்கு நன்ருகிய காரியவேதுவாயிற்று. இனிவிசுவம்பொய்யென்றல் தன்னுடையப்பட்சம். அஃதென்னென்னில்? பண்ணப்படுதலான்: என்பது, பட்சத்தின் கண்ணேயுள்ளதாகிய தோரியுல்பாகியவேது. யாதுபொருள் யாதொருவன்காரியமாகச்செய்யப்பட்டது, அநித்தம். அதுஎன்போலவென்னில் கடம்போலவென்றல் காரியவேதுவாகியசபட்சமாம். யாதொன்று பண்ணப்படாதது, அனித்தமல்ல. என்போலவென்னில்? பதி பசு பாசம்போலவென்றல், விபட்சம். யாதோரிடத்துப்புகையுள்ளதவ்விடத்து நெருப்புண்டென்னு மந்நுவயத்தாலும், யாதோரிடத்துநெருப்பில்லை யவ்விடத்துப்புகையில்லை, புனலில்லாவிடத்துத் தாமரையில்லாதாற்போலவென்னும் வெதிரேகத்தாலும், புகை நெருப்பையுஞ்சாதித் திடமுஞ்சாதித்தவாறுபோல, யாதொன்றுகாரியமாயுள்ள தவ்விடத்துக் காரணமுண்டென்னும்அந்நுவயத்தானும்; யாதோரிடத்துக்காரணமில்லையவ்விடத்துக்காரியமில்லையென்னும் வெதிரேகத்தானுங்: காரியமானபிரபஞ்சம் தனக்குக்காரணமான மாயையுஞ் சாதித்துத், தோற்றுவிக்குங்கர்த்தாவையுஞ் சாதித்ததெனவறிக.

இவை தொகையாருறுப்பைந்தொடுங்கூடச் சொல்லுவாருமு ளர்துணிந்தே - இப்படிச்சொல்லப்பட்டவிவை தொகுதிபொ ருந்திய வைந்தவயவத்தோடுங்கூடச் சொல்லுவாரு முண்டு தெளிந்து. எ-று.

ஐந்தவயவமாவது—பட்சம் - ஏது - திட்டாந்தம் - உபநய ம் - நிகமனம்.

இனி பட்சமாவது, மலைநெருப்பையுடைத்தென்றல்.

ஏதுவாவது,காணாதநெருப்பை மலையுடைத்தென்ற தென்னை யென விணுயவழிக், காரணமாகியநெருப்பினது காரியமாகப் பு கையவ்விடத்துத்தோன்றுதலாலே யது அதற்குப் பொருந்திய காரியவேது.

திட்டாந்தமாவது, அஃதென்போ லவென்னில், புகை யுள்ள விடத்தே நெருப்புண்டாம், அடுக்களைப்போலவென்ன ச்செப்புதல்.

உபநயமாவது, மேற்கூறியவேதுவைப் பட்சத்தேவருவித் தல். அதுமலைபுகையுடைத்தென்றல்.

நிகமனமாவது, மேற்கூறியபட்சத்திடத்துப்புகையுடைத்தா காலால் நெருப்புடைத்தெனக்கூட்டுதல். இது அந்தவேது வை இரண்டாவதும் வலியுறுத்தலாம்.

சொல்லுவாருமுளர் என்றவுவமையாற் சொல்லாதாருமுள ரென்பதாம். அதுஉபநயமும் நிகமனமும் முன்சொன்னமூன்றி லுமடங்குமாதலாலெனவறிக. எனவேயவைமூன்றுஞ் சிறப்பு டையவாம் (உ-ம்) "பூபூதராதி-யோவரவுஞற்று மொருவனையு டைத்துப்- பொருவிரிகாரியமாதலிற்கடம்போ-லென்னிற்கோ தின்றிருங்கடமதனை -டியற்றியவொருவனை பொருங்குடன்க ண்டோ -னெழிந்திகலிகிரு கடங்-கண்டாலிவையு மவனை

னக்கொண்டான் - குண்டோவுலக முயற்றுடனொருவற்-கண்டு மாறறிவு முண்டிவனெனவெனிற்—கண்டதில்மான முனக்குக் கொண்டல் கோள் - கிரிவளர்தூம மதனிலெரிவள-ரட்டிலொண்புகை யயலனலுணர்ந்து - மோட்டிளைப்பிறங்க லொள்ளழலோட்டிய - தென்னைவிசேடசமனியத் தியாகிற்பனெனில் -விசேடமென்னின் மன்றேகாட்சி - யலதிலை சமனிய மாட்சியதென்றிடிற் - செயலொடுசெய்வோற் காண்டோன்மன்ற-மானவிதந்தனி னென்றுவோதுவ - னொருவன்றீதுரு செயலென்றற்றேல் - மாகமாகியவினையா லெற்றேபாக - மியைதலிற் கடவற்றினு மொண்குண மன்னலில் - அவைபோலாகிய வழியுடழிபவை - செயலென்றேதுருபிதுந் தீதறுசெயலே"—இதை ஞானமிர்தத்துப் பதியிலக்கணஞ்சாதிக்கு மிடத்திந்த வைந்துறுப்பும் வந்தவாறுகாண்க.

இப்பொருள் முன்விரித்தமுறையே பதிபசுபாச மூன்றுக்கும் வருமாறு விரித்துப் பொருளுரைக்குமாறறிக. (கக)

போது நாற்றத்தாலறிதல் பூர்வக்காட்சி யநுமானம், ஓது முறையாலறிவினள வுணர்தல் கருதலநுமானம், நீதியான் முற்கன்ம பல நிகழ்வதிப்போதிச்செய்திக், காதியாக வரும்பயனென் றறிதலுரையர் லநுமானம்

இ-ள். போதுநாற்றகதாலறிதல் பூர்வக்காட்சியநுமானம்- ஒருபூவைக்காணுதிருக்க இநனதுமணத்தாலே யின்னபூவென்பது பண்டுகண்டுணர்ந்த வநுமானம்.

ஓதுமுறையா லறிவினளவுணர்தல் கருதலநுமானம்- ஒருவன்சொல்லும் வசநத்தா லவனுடைய வறிவினெல்லையையறிவது கருத்தநுமானம்.

நீதியான் முற்கன்மபலம் நிகழ்வதிப்போதிச்செய்திக் காதியாகவரும்பயனென்றறித லுரையாலநுமானம் - இந்த சநநத்

தீவிந்தத்தொழிலுக்குத் தோற்றமாய்வருகின்ற பிரையோசக முறையாக முன்புசெய்த புண்ணியபாவங்களினுடைய பிரையோசகத் தோற்றமென்றறிவது சாத்திரப்பிரமாணமாம். எ-று

இது, பிரத்தியட்ச வநுமானமும், கருத லநுமானமும், சாத்திர வநுமானமுங் கூறியவாறறிக. (கஉ)

"அனாதியே யமலனாய வறிவனூலாகமந்தான், பினாதி மாறின்றிப்பேணல் தந்திர மந்திரங்கள், மனாதிகளடக்கித் தெய்வம் வழிபடும் வாய்மையாகும், தனாதி யீறிலாதான்றன்மை யுணர்த்துவ துபதேசந்தான்

இ-ள். அனாதியே யமலனாய வறிவனூ லாகமந்தான் பினாதி மாறின்றிப் பேணல் தந்திரம் - எக்காலத்தும் நின்மலனாகிய சர்வஞ்ஞன் அருளிச்செய்யப்பட்ட சாத்திரங்களைப் பின்னொடு முன்மலையாமல்விரும்பிக் கற்றறிவது தந்திர கலையென்றுபெயராம்.

மந்திரங்கள்மனாதிகளடக்கித் தெய்வம் வழிபடும் வாய்மையாகும் - மனமுதலாயின கருவிகளையடக்கித் தான் வழிபடுதெய்வத்தை யுச்சரிப்பன மந்திர கலைகளாகும்.

தனாதியீறிலாதான் றன்மையுணர்த்துவ துபதேசந்தான் - தனக்கு முதலு முடிவுமில்லாத கத்தாவினுடைய வுண்மையையறிவிப்ப துபதேசகலை. எ-று. (கங)

ஈண்டுப் பக்கப்போலிநான் கேதுப்போலி பொருமூன்றாய், வேண்டு மெழுமூன்றாக விளங் குவமைப்போலி யீரொன்பான், காண்டுந்தோல் வித்தானமிரண் டிருபத்திரண்டாங் கருதிலிவை, யாண்டுமொழிவ ரவைபெல்லா மளக்கிலறுபத்தைந்தாகும்.

இ-ள். ஈண்டுப்பக்கப் போலி நான்கு-இவ்விடத்து முன் செய

ன்ன பக்கப்போலி நான்கு.

போலியென்பது வடமொழிச்கு ஆபாசமென்றதாம்.

ஏதுப்போலி யொரு மூன்ருய் வேண்டு மெழுமூன்ருக - ஏதுப்போலியாவ தொருமூன்றுவகையா யிருபத்தொன்ருக விரும்பிவரும்.

ஆக விருபத்தொன்றும் நாலும் இருபத்தைந்து. இது பக்கப் போலி.

விளங்கு உவமைப்போலி யீரொன்பான் - விளக்கமுடைய திட்டாந்தப்போலி பதினெட்டு.

ஆக விருபத்தைந்தும் பதினெட்டும் நாற்பத்துமூன்று.

காண்டுந்தோல்வித்தான மிரண்டிருபத்திரண்டாம் - காண் பேமாகிய விபக்கத்தான மிரண்டு வகையாய் இரண்டுகூறுபாடாய் இருபத்திரண்டாம்.

சுருதிலிவை யாண்டுமொழிவ ரவையெல்லாமளக்கி லறுபத்தைந்தாகும் - விசாரிக்கில் இவையெல்லா மந்தந்த விடங்களிலே சொல்லாநிற்பர்கள். அவையெல்லாந்தொகைகூட்டி யறுபத்தைந்தாம். எ-று.

ஆக-சஙு—ம், உஉ—ம், சுரு.

ஆண்டு மொழிவரென்றது, பக்கம்-ஏது-திட்டாந்தம்-வெதிரேகம் என்னு நாலிடத்திலும் என்றதாம்.

அவற்றுட் சில வருமாறு:—

பக்கப்போலி நான்காவது—அப்பிரசித்த விசேடணம், அப்பிரசித்தி விசேடியம், அப்பிரசித்தோபயம், அப்பரிசித்த சம்பந்தம்.

அப்பிரசித்த விசேடணமாவது—[அப்பிரசித்தம் - பிரசித்தமல்லாதது. விசேடணம்-துணிவு.] அஃதாவது, தத்தமக்கு மாத்திரம் தமக்குள்ள சாத்தியா சாத்தியமாயுள்ள துணிவு தமதறியாதிருத்தல். அஃது பௌத்தன் தனக்குமாறாகிய சாங்கியனைக்குறித்துச் சத்தத்துக்குக் கேடுண்டென்றால், அவனுலகத்துக்குப் பொருளெல்லாவற்றையுங் கேடில்லையாகக் கொண்ட கோட்பாடறியாது, சிலபொருளைக் கேடுண்டென்று கொண்டாற்போல, சத்தமொன்றினையு மெடுத்துக் கேடுண்டென்றமையால், அவனது விசேடணமாகிய சாத்திய தன்மந்தெரியாததாம். இதனாலே சாங்கிய னித்தவாதியெனவும், பௌத்தன் அநித்தவாதியெனவு மறிக.

அப்பிரசித்தி விசேடியமாவது—தம்முடைய வெதிரிக்குத் தாங்கூறுந்தன்மை தெரியாதிருத்தல். அஃதாவது, சாங்கியன் மாறாநின்ற பௌத்தனைக்குறித்து ஆத்மா சைதன்னியவானென்றால் அவன் ஆன்மாவென்பதொன்றில்லையென்னும் வாதியாதலின், அவன் ஆன்மாவாகிற தன்மை தெரியாதிருத்தலாம். எனவே சாங்கியன் ஆன்மவாதியெனவறிக.

அப்பிரசித்தோபயமாவது—[உபயம்-இரண்டு] அஃதாவது, தமக்கு மாறாயினோர்க்குள்ள தன்மியும்-சாதகமாகிய தன்மமுமாகிய அவ்விரண்டு மாறானோர் நினையாமையாலவை தெரியாதிருத்தல். அது வைசேடிகன் பௌத்தனைக் குறித்துச் சுகமுதலாகிய காரியத்துக்குக் காரணமாகியது ஆன்மாவென்றால், சுகமுதலாகிய காரியமுங் காரணமாகியஆன்மாவும் அவ்விரண்டும் அவனினையாமையால், அவனது தன்ம தன்மி யிரண்டுந் தெரியாதாயிற்று. இதனாலே வைசேடிகன் சுகதுக்கமும் ஆன்மாவுங்கொண்டான், பௌத்தன் அவ்விரண்டுங் கொண்டிலனெனவறிக.

அப்பிரசித்தசம்பந்தமாவது—தமக்கு மாறுய்நின்றவ ஞாராய்ந்து துணிந்தபொருளைத் தானுமவனுக்குப்பொருந்தச் சாதித்துக்கொடுத்தல். அஃதாவது, சாங்கியன் றனக்குமாறுநின்ற பௌத்தனைக்குறித்துச் சத்தமநித்த மென்றுகூறின் பௌத்தன்கோட்பாடு மதுவாதலின் வேறவனுக்குச்சாதிக்கவேண்டுவதில்லையாயிற்று.

இன்னுமிவைநாலுமின்றி வருவனவுமுள.

அவையாவன:—பிரத்தியட்சவிருத்தம், அநுமானவிருத்தம், சுவசனவிருத்தம், உலகவிருத்தம், ஆகமவிருத்தம்,ஆகவிருத்தம் ஐந்தாம். [விருத்தம் - மாறு.]

அவற்றுள்; பிரத்தியட்சவிருத்தமாவது—[விருத்தம்-மாறு] பொருந்திய காட்சியைமாறுகொள்ளுதல். அது, சத்தஞ்செய்தலா லறியப்படாதென்றல்.

அநுமானவிருத்தமாவது—கருதலாகியபிரமாணத்தை மாறுபடக்கூறல். அஃதாவது, எல்லாருக்கும் புலப்பட வநித்தமாகிய கடத்தை நித்தமெனக்கூறல்.

சுவசனவிருத்தமாவது—தான்கூறியசொற்றனே தனக்குமாறுயடக்கூறல். அஃதாவது, என்தாய் மலடியென்றல். [சுவசனம்-தன்சொல்.]

உலகவிருத்தமாவது—உலகத்தார்கூறுங்கூற்றுக்குமாறுகக்கூறல். அஃதாவது, மதிசந்திரனல்லவென்றல்.

ஆகமவிருத்தமாவது—தனது நூற்பொருளுக்கு மாறுபடக்கூறல். அஃதாவது, நித்தஞ்சாதிக்கும் வாதியாயுள்ள வைசேடிகன் அநித்தமாகிய சத்தத்தை நித்தமென்றுகூறல்.

இவையொன்பதும் பக்கப்போலி.

பக்கப்போலிமுற்றிற்று.

இனிஏதுப்போலிவருமாறு:—

ஏதுப்போலிமூன்றுகூறாய்வருமென்றது—அசித்தமென்றும், அநேகாந்திகமென்றும், விருத்தமென்றும்வரும்.

அவற்றுள், அசித்தமாவது—உபயாசித்தம், அந்நியதாசித்தம், சந்தேகாசித்தம், ஆச்சரியாசித்தம், எனநாலாம்.

அவற்றுள், உபயாசித்தமாவது— [அசித்தம் சித்தத்துக்குப்பிரகாசமல்லாதது, உபயம்- இரண்டு=சாதநமாகியவேது விரண்டுவாதிகளுக்குமில்லையாதல்.] அஃதாவது, சத்தம் அநித்தம். அஃதெத்தாலென்னில்? கண்ணுக்குத் தோற்றுதலா லென்றதாம்.

அந்நியதாசித்தமாவது—தனக்குமாறாய்நின்றவாதிக்குப்பொருந்தியவேதுவல்லவாயிருத்தல். அஃதாவது, சத்தம்பண்ணப்படுதலால் அநித்தமெனமாறாய்நின்றோன்கூறில், சத்தமறைதலும் வெளிப்படுதலு மல்லது பண்ணப்படுதல் சாங்கியன் கொள்ளாமையின், சத்தம்பண்ணப்படுதலாகச்சொல்லுதல் அவனுக்கு அசித்தமாயிற்று எனவேஅவ்வாதிகளுக்குப்பொருந்தினவேதுவேகொண்டு பொருள்சாதிக்கவேண்டுமென்றுகொள்க. சாங்கியனுக்குச் சத்தத்துக்குட்பொருளெல்லா மறைதலல்லது கேடில்லையென்ப தவன்துணிவானவாறுகாண்க.

சந்தேகாசித்தமாவது—கூறுநின்றவேதுஐயமாய்நிற்கிறபொருள் சாதித்தல். அஃதாவது, ஆவியோ பனியோ தோன்றுகின்றதென ஐயமுறுநிற்ப, அதுபுகை அவ்விடத்தேநெருப்புண்டென்றுகூறுதல்.

ஆச்சரியாசித்தமாவது—மாறாய்நின்றவாதிகருத்தறிய வேதுவிற்குப்பொருந்திய தன்மியில்லையாகிய வேதுவைக்காட்டல்.

அஃதாவது, சாங்கியன் ஆகாசம் சத்தமாகியகுணத்தாலே குணியாமென்னில்? ஆகாசம் பொருளல்லவென்னும் பௌத்தனுக்கு அதனது குணியாகியதந்மி யசித்தமாயிற்று.

அசித்திவேது முடிந்தது.

அநேகாந்திகம்வருமாறு:—

அநேகாந்திகம் - ஒன்றுபலவாதல். எனவே, அறிவிரண்டிற்கு நிற்றலின் அநேகாந்திகமாயிற்று.

அநேகாந்திகம்—சாதாரணம், அசாதாரணம், சபக்கதேசவிருத்திவிபக்கவியாபி, விபக்கதேசவிருத்தி சபக்கவியாபி, உபயதேசதேசவிருத்தி, விருத்தாவியவசாரி, எனவாறும்.

அவற்றுள், சாதாரணமாவது—பொருள்சாதித்தற்குக்கூறுமேது சபக்கத்திற்கும் விபக்கத்திற்கும் பொதுவாயிருத்தல். அஃதாவது, சத்தம் நித்தமறிபபடுதலாலென்று கூறுதல். அவ்வறிபப்படுவது நித்த மநித்தமென்று சொல்லப்பட்டவிரண்டிற்கும் பொருந்தும். அதுபொருந்துமாறு, கடம்போன்றவநித்தத்தை யறியுமறிவோ ஆகாசத்தைப்போன்ற நித்தத்தையறியுமறிவோ வென்றுகூறுதலாம். இதனை லாகாசம்நித்தமெனறு கொண்டானெனவறிக.

அசாதாரணமாவது—தான்பொருந்திய பக்கத்துண்டாகியவேது, சபக்கத்தின்கண்ணும் விபக்கத்தின்கண்ணுமில்லையாதல். அஃதாவது, சத்தம் அநித்தம் கேட்கப்படுதலாலென்றுகூறின் கேட்கப்படுதலாகிய வேது சத்தமாகியபக்கத்தின்கண்ணே யுண்டாவதல்லது ஆகாசமாகிய சபக்கத்தின்கண்ணும் கடமாகியவிபக்கத்தின்கண்ணு மின்மையாகலி னையம்பொருந்தி அநேகாந்திகமாயிற்று.

சபக்கதேகவிருத்தி விபக்ஷவியாபியாவது—பக்கத்துக்கூறியவேது சபக்கத்துண்டாய் விபக்கத்துக்கண்ணுமிருத்தல்வேண்டும். அவ்வாறன்றிச் சபக்கத்தின்கண் ணொருகூற்றின்கண்ணுண்டாய் விபக்கத்துக்கண் முழுதுமுண்டாதல். அஃதாவது, சத்தந்தொழிலிடைத்தோன்றுவதாகும்; அநித்தமாதலானெனக் கூறியவழி, யவ்வநித்தமெனமேற்கூறியவேதுச் செயலிடைத்தோன்றுமைக்குச் சபக்கமாகிய மின் ஆகாசமென்னு மிரண்டினுள்ளும், அநித்தவேது மின்னின்கட்புலப்பட்டு ஆகாசத்துக்கட்புலப்படாதாகலின், அவ்வநித்தங் கடமுதலாயினவற்றிற் பொருந்துதலிற் கடம்போலேயழிந்து செயலிடைத் தோன்றுமோ? மின்போலேயழிந்து செயலிடைத் தோன்றுதோவென்று கூறுதலாம்.

இவையெல்லா மாகாசமழியாதெனக்கொண்ட பௌத்தன் கூறுங் கூற்றெனவறிக.

விபக்கதேகவிருத்தி சபக்ஷவியாபியாவது— பக்கத்துக்கூறியவேது விபக்கத்துக்கண் ணொருகூற்றின்கண்ணுண்டாய்ச் சபக்கத்துக்கண் முழுதும்பொருந்துதல். அஃதாயது, சத்தஞ்செயலிடைத்தோன்றும் அநித்தமாதலானென்றவழி அவ்வநித்தவேது சத்தந்தோன்றுதலாகிய பக்கத்திற்கும், விபக்கமான மின் ஆகாசமென்னு மிரண்டினுள்ளு மின்னின்கட்புலப்பா டாகாசத்தின்கட் புலப்படாது. சபக்கமான கடமுதலாயவற்றில் முழுதுங்கிடைத்தலா லேகாந்தமல்ல. அது மின்போல அநித்தமாய் தொழிலிடைத் தோன்றுதோ? கடம்போல அநித்தமாய்த் தோன்றுமோவெனக் கூறுதலாம்.

உபயதேகதேசவிருத்தியாவது— கூறப்படுமேது சபக்கத்தின்கண்ணும் விபக்கத்தின்கண்ணு மோரிடத்துநிகழ்தல். அஃதாவது, சத்த நித்தம் அமூர்த்தமாதலானென்று கூறியவ

ழி, அமூர்த்தமாகியவேது நித்தத்துக்குச் சபக்கமாகிய வாகாச பரமாணுவிரண்டினு மாகாசத்தின்கணிகழ்ந்து ரூபமாகியபரமாணுவின்க ணிகழாமையானும், அநித்தமாகிய விபக்கமான கடஞ் சுகமுதலாயினவற்றில் அநித்தமானசுகத்தின்கண்ணே அமூர்த்தவேதுநிகழ்ந்து அநித்தமானகடத்தின்கண்ணே அமூர்த்தநிகழாமையானும், நித்த மநித்தமென்று சொல்லப்பட்ட சபக்க விபக்கத்துக்க ளிரண்டினுமோ விடத்து நிகழ்ந்தமையா னேகாந்தமல்லவாய் அமூர்த்தமாகிய வாகாசம்போல நித்தமாகிய அமூர்த்தமாகிய சுகம்போல அநித்தமோ வென்றுகூறுதலாம்.

[மூர்த்தம் - உருபம், அமூர்த்தம் - உருபமில்லாதது.]

விருத்தர்வியவகாரியாவது—சொல்லப்படு மொருபொருட்டானே மாறுபட்டுவரு மேதுவிரண்டிற்கு மிடங்கொடுத்தல். அஃதாவது, சத்த மநித்தந் தொழிலிடைத்தோன்றலால். அதற்குப்பொருந்திய திட்டாந்தம்யாதெனில்? அத்தொழிலிடைததோன்றற்கு சபக்கமாயுள்ள கடாதியென்ன; சத்தத்தினு மநித்தஞ்சாதிப்பானாகிய வைசேடிகனும், நிற்கச் சத்தப்பிரமித்த மநித்தங்கேட்கப்படுதலாற் சத்தத்துவமெனப் பெயர்பெற்ற சத்தப்பிரமம்போலவெனக்கூறுதலின் இவ்வாறிரண்டு மொருபொருளின்கண்ணே மாறுபாடாகிய அநித்தநித்தங்கள்கூறப்படுதலின் ஐயநிகழ் நேகாந்தமல்லவாயிற்று.

அநேகாந்தமாகியவேதுப்போலி முடிந்தது.

இனிவிருத்தம்வருமாறு:—

விருத்தம்— தன்மசொரூபவிபரீதசாதநம், தன்மவிசேடவிபரீதசாதநம், தன்மிசொரூப விபரீதசாதநம், தன்மிவிசேடவிபரீதசாதநம், எனநாலாம்.

அவற்றுள், தன்மசொரூபவிபரீத சாதநமாவது—தான் கூறியவேதுவினாலே சாத்தியமாகக் கருதப்பட்ட பொருளினது வடிவுகெடுதல். அஃதாவது, சத்தம் நித்தம், பண்ணப்படுதலாலென்றால்; பண்ணப்படும்பொருள் அநித்தமாதலிற் சொல்லப்பட்டவேது நித்தத்தைவிட்டு அநித்தஞ்சாதித்தலால் மாறுபாடாயிற்றென வறிக.

தன்மவிசேட விபரீதசாதநமாவது— தான்கூறியவேதுத் துணியப்பட்ட பொருளின்கண்ணுளதாகிய சிறப்புக்கெடச் சாதித்தல். அஃதாவது, கரணமுதலாகிய விந்திரியங்கள் பிறனுக்காவாகிய ஆன்மாவினுடைய பொருளென்பது பக்கமும், அஃதெத்தாலென்னில்? தொக்குநிற்றலினென்பது ஏதுவும், அஃதெனபோலவென்னில்? சயனாசனங்கள்போலவென்ற சபக்கமுங்கூறிபவழி; தொக்குநிற்றலினென்றவேது சயனாசனங்களின் கூட்டம் பிறனுக்குப பொருளானாற்போல, கண்முதலிய விந்திரியங்களும் பிறனுடைய பொருளாகச் சாதித்துச் சயனாசனத்து ளவயவங்களையுடைய புருடனைப்போலக் கண்முதலிந்திரியத்திற்குப் புருடனாகச்சாதிக்கிற அவயவமில்லாத ஆன்மாவை யவயவமுளதாகச் சாதித்தலின், அச்சாதித்தல்தான் தன்மியின்கணுளதாகிய சிறப்பைக்கெடுத்தலின் மாறுபாடாயிற்று. [தன்மத்தையுடையது தன்மி.]

தன்மிசொரூபவிபரீத சாதநமாவது—[விபரீதம் - மாறுபாடு.] தான் துணிந்துகூறப்பட்ட தன்மியாகிய பொருளினது வடிவைத் தான்கூறிய வேதுத் தானேமாறுபடுத்தல். அஃதாவது, உண்டென்று சொல்லப்பட்ட வுண்மைப்பொருளானது பொருளுமன்று பண்புமன்று தொழிலுமன்று எனக்கூறியதன்னுடைய பக்கத்துக்கு, எத்தாலென்னில்? தானொருபொருளுமாய்ப் பண்புக்குந்தொழிலுக்கும் வேறுதலாலென வேது

கூடி ; அஃதென்போலவென்ன; சாமாநியமாகிய பொதுவும் விசேடியமாகிய சிறப்பும்போலத் திட்டாந்தங்கூற, பொருளும் பண்பும் தொழிலு மொன்றாய்நின் றவையிற்றினிடத்துமிற்கும். உண்டென்றுசொல்லப்பட்ட உண்மை யவற்றின் வேறுதலா லென்றுகாட்டப்பட்ட வேதுப்பொருளும், பண்பும், தொழிலும், என்றுசொல்லப்பட்ட மூன்றினுடையஉண்மைத்தன்மை யேதுப்படுத்திக்காட்டப் பொதுவாகியவுண்மையி லுண்மைசாதிக்கப்படும் பொருட்கண் ணில்லாமையிற் காட்டப்பட்ட திட்டாந்தத்திற் பொதுவாகிய சாமாநியத்தை யொழிந்து சிறப்புப் பிறிதொன்றி லாமையானும், உண்டென்று பகர்ந்த உண்மைத்தன்மையை யில்லாமை யாக்குதலால் வேறுதலென்னுமேது மாறுகொண்டதாயிற்று.

இதற்கு ஏது, வேறுதல். திட்டாந்தம், பொதுவும் சிறப்பும்.

தன்மிவிசேடவிபரீத சாதநமாவது—தன்மியுடைய விசேடமின்மைசாதித்தல். அஃதாவது, பாவமாகிய உண்மைப் பொருள், பொருளுமல்ல பண்புமல்ல தொழிலுமல்ல வென்னுந் தன்னுடைய பக்கத்திற்கு, தானொருபொருளாய்ப் பண்புக்குந் தொழிலுக்கும் வேறுதலாலென முன்னங்காட்டிய வேதுவே யிதற்கு ஏதுவாதலில், பாவமாகிய வுண்மை தன்னை யுள்ளதென்றறிவித்தது. அதன்கண்ணே யுளதாயிருப்பதோர் தொழிலாதலால் குணங் கன்மங்களோ டொற்றுமைப்படுதலி னிவற்றொடு வேறுதலென்று காட்டப்பட்ட வேதுவினது விசேடத்தைக் கெடுத்தலாதலால் மாறுண்டாயிற்று.

விருத்தவேது முடிந்தது.

ஏதுப்போலி மூன்றுவகையானும்வந்தது, பதினாறு மேலும்படி வருவனவற்றுற்காண்க.

ஏதுப்போலி முடிந்தது.

திட்டாந்தப்போலி வருமாறு:—

திட்டாந்தமு மிருவகைப்படும். அவைவருமாறு.—சாதநதன்மவிகலம், சாத்தியதன்மவிகலம், உபயதன்மவிகலம். ஐயஅந்நுவயம், விபரீதவந்நுவயம் என சாதன்மியதிட்டாந்த மைந்தாம்; சாத்தியவியாவிருத்தி, சாதநவியாவிருத்தி, உபயவியாவிருத்தி, ஐயவெதிரேகம், விபரீதவெதிரேகம் என வைதன்மியதிட்டாந்த மைந்தாம். ஆகப்பத்தாம்.

சாதநதன்மவிகலமாவது—[விகலம்-சுருங்கல்.] சாதநமாயுள்ள பொருளுஞ் சாத்தியமாயுள்ளபொருளு மிரண்டுமெடுத்துக்காட்டின்கண்ணே யுளதாகவேண்டும். அவ்வாறன்றிச் சாதநங்குறைவுபடவருவது, சத்தம், நித்தம், வடிவுடைத்தல்லவாதலால். அஃதெங்ஙனேயென்னில்? யாதொருபொருள் வடிவுடைத்தல்லாதது அப்பொருள் நித்தமாதல் காண்டல் பொருந்திற்று,பரமாணுக்கண்ணே யெனக்கூறியவழித்திட்டாந்தமாகக் காட்டப்பட்ட பரமாணு நித்தமாகிய தன்மையையுடைத்தாய வடிவுடைத்தாதலின், சாத்திய தன்மம் நித்தத்துவங் குறைவின்றி, சாதநதன்மம் வடிவின்மை குறைவுபடுதலாயிற்று. இவன் பரமாணு அழியாது வடிவுடைத்தென்று கொண்டவனென வறிக.

சாத்திய தன்மவிகலமாவது—காட்டப்பட்ட திட்டாந்தத்திலே சாத்தியதன்மங் குறைவுபடுதல். அஃதாவது, சாத்தியமாயுள்ளபொருளுஞ் சாதநமாயுள்ள ஏதுவு மிரண்டு மெடுத்துக்காட்டின் கண்ணே யுளதாகவேண்டும். அவ்வாறன்றிச் சாதநமாயுள்ள வேதுநிறைந்து சாத்தியமாயுள்ளபொருள் குறைபட வருதலாம். வருமாறு, சத்தம் நித்தம். அஃதெங்ஙனேயென்னில்? அமூர்த்தமாதலால். அஃதென்போலவென்னில்? யாதொருபொருள் வடிவில்லாதது நித்தம், புத்தியைப்போலவெ

ன்றால்? எடுத்துக் காட்டாகக் காட்டப்பட்ட புத்தி வடிவில் லைபால் நின்றே அநித்தமாதலால், சாதநம் வடிவில்லாமை நிறைந்து, சாதிக்கப்படுவதான நித்தத்துவங் குறைவுபாடாயிற்று.

உபயதன்ம விகலமாவது—காட்டப்பட்ட திட்டாந்தத்திலே சாத்தியமாயுள்ள துணிபொருளுஞ் சாதநமாயுள்ள வேதுவும் நிறையவேண்டும். அவ்வாறொழிந்து, அவ்விரண்டுங் குறைவுபடுதல்.

இந்த வுபய தன்மவிகலம் உள்பொருட்கண்ணும் இல்பொருட் கண்ணும் வரும்.

அவற்றுள், உள்பொருட்கண்வரும் உபயதன்மவிகலமாவது—துணியப்பட்ட பொருட்கண்ணே சாத்தியமாயுள்ள பொருளுஞ் சாதநமாயுள்ள வேதுவுமாகிப் பொருந்தவருமிரண்டுங் குறைவுபடக் காட்டுதலாம். அஃதாவது, சத்தம் நித்தம் என்னும் பக்கமும்-வடிவின்மையாலென்னு மேதுவுங் கூறியவழி, யாதொரு பொருள் யாதொருவடிவில்லாதது நித்தம் கடம்போலெனக் கூறில், அவ்வாறெடுத்துக் காட்டப்பட்ட கடந் தானுண்டாகிச் சாதிக்கப் படுவதாயுள்ள நித்தத்துவமுஞ் சாதநமாயுள்ள வடிவின்மையு மிரண்டுங் குறைவுபட்டது.

இல்பொருட்கண்வரும் உபயதன்ம விகலமாவது—இல்லாத பொருளின் கண்ணே, சாத்தியமாகிய துணிபொருள் சாதந மாகியபொதுவு மாகிய விரண்டுங் குறையக்காட்டுதல். அஃதாவது, சத்தம் நித்தம் வடிவின்மையா லென்றவழி யாதொருபொருள் யாதொருபொருள் வடிவுடைத்தல்லாதது நித்தம் ஆகாசம்போலவென்னு மெடுத்துக்காட்டின் கண்ணே சாதிக்கப்படும் பொருளினதியல்பாகிய நித்தமுஞ் சாதனமாயுள்

ள பொருளினதியல்பாகிய வடிவின்மையுமாகிய விரண்டும் ஆகாசம்பொருளல்ல வென்னும் பௌத்தனுக்கு, அவ்வாகாசத்தின் கண்ணில்லாமையாலே குறைவுபடும். உண்டென்னுஞ்சாங்கியனுக்கும் அவ்வாகாசம் அநித்தமாய் வடிவுடைத்தாதலால் அவனுக்குங் குறைவுபடும்.

ஐபவந்நுவயமாவது — சாத்தியமாகியபொருளுஞ் சாதநமாகியவேதுவுந் தம்மிற்பொருந்துங் கூட்டவளவு கூறுதே யந்தச் சாத்தியத்தன்மையைக் காட்டுதல். அஃதாவது, சத்தம் அநித்தம், பண்ணப்படுதலால். யாதொருபொருள் யாதொருபொருள் பண்ணப்படுவது அநித்தமென்றுகூறு மொற்றுமைப்பாடுகூறுதே, கடத்தின்கண்ணே பண்ணப்படுதலும் அநித்தமுங் காணப்பட்டதென்று கூறியவழி, அவ்விரண்டிற்கு மொற்றுமைப்பாடுதெரியாதாகும். ஆதலா லையமாயிற்று.

விபரீதவந்நுவயமாவது— பண்ணப்பட்ட கடமுதலாயினவற்றினும், பண்ணப்படாத மின்முதலாயினவற்றினும், இவ்விரண்டுகூற்றின் கண்ணுங்கிடக்கும் அநித்தத்திற்கும் பொதுவாகிய சாத்தியதன்மத்தாலே, கடமுதலாயின அநர்த்தப் பொருட்கட் கிடக்கும் பண்ணப்படுவதாய சாதநதன்மத்தை யறுதியிடுதல். அஃதாவது, சத்தம் அநித்தம், பண்ணப்படுதலாலெவின்? யாதொருபொருள் யாதொருபொருள் பண்ணப்படும் அநித்தமெனச் சாதநதன்மத்தாலே சாத்தியதன்மத்தைக் கருதி, யாதொருபொருள் யாதொருபொருள் பண்ணடுவதென விபக்கமாகிய சாத்தியதன்மத்தாலே சாதநதன்மத்தைக் குறித்தல். அந்தப்பொதுவாகிய சாதநஞ் சாத்தியத்தையின்றியும் நிகழ்தலின் மாறுபாடாயிற்று.

சாதன்மியதிட்டாந்த முடிந்தது.

இனி வைதன்மியதிட்டாந்தம் வருமாறு:—

சாத்திய வியாவிருத்தியாவது—[வியாவிருத்தி - மீளுதல்.] சாதநதன்மமாகியவேது மீண்டு, சாத்தியதன்மமாகிய பொருள் மீளாதொழிதல். அஃதாவது, சத்தம் நித்தம் வடிவில்லையாதலி னென்றால், யாதொருபொருள் யாதொருபொருள் நித்தமாயுள்ளது வடிவில்லை, அஃதென்போலவெனில், பரமாணுவைப்போல வென்றுகூறில், அவ்வாறு வைதன்மியவேது வெடுத்துக்காட்டாகக் காட்டப்பட்ட பரமாணு நித்தமாய் வடிவுடைத்தாதலால் அச்சாதநம் வடிவுடைத்தல்லாமை மீண்டு சாத்தியமாயுள்ள பொருள் மீளாதொழிதலை யுடைத்தாயிற்று.

சாதநவியாவிருத்தியாவது— காட்டப்பட்ட வைதன்மிய வெடுத்துக்காட்டின்கட் சாத்தியமாகியபொருள் மீண்டு சாதநமாகியபொருள் மீளாதொழில். அஃதாவது, சத்த மநித்தம் வடிவுடைத்தாதலி னென்றால், யாதொருபொருள் யாதொருபொருள்நித்தமுமல்ல வடிவுடைத்துமல்ல தன்மம் போலவென்றால், வைதன்மிய வெடுத்துக்காட்டாகக் காட்டப்பட்ட தன்மம் வடிவுடைத்தல்லவாய் நின்று அநித்தமாதலிற் சாதிக்கப்படும் பொருளாகிய அநித்த மீண்டு வடிவுடைத்தல்லாமை மீளாதொழியலாயிற்று. [தன்மம்—புண்ணியம்] அழியாமனின்றாட்டுதலின் அநித்தமன்றென்றார்.

உபயவியாவிருத்தி யிருவகைப்படும். அவை யுள்பொளிருன்கண்ணு மில்பொருளின்கண்ணும் வரும்.

உள்பொருட்கண் உபயவியாவிருத்தியாவது—உள்பொருட்கண்ணே சாத்தியமாயுள்ள பொருளுஞ் சாதநமாயுள்ள வேதுவு மீளாதபடி வைதன்மியதிட்டாந்த மெடுத்துக் காட்டாகக் காட்டப்படுதல். அஃதாவது, சத்தமநித்தம் மூர்த்தமாதலாலெனறவழி யாதொருபொருள் அநித்தமுமல்ல அது வடிவுடை

த்துமல்ல; ஆகாசம்போலவென்று வைதன்மிய வெடுத்துக்காட்டாகக் காட்டியவழி, ஆகாசம் பொருளென்னுஞ் சாங்கியன்முதலாயினார்க்கு, ஆகாசத்தின்கண்ணே நித்தமும் மூர்த்தமும் மிரண்டுங் கார்யமாகில், சாத்தியமாகிய பொருளினது நித்தமுஞ் சாதநமாகிய வேதுவினது வடிவின்மையுங் கண்டிலவாயிற்று.

இப்பொருட்கண் உபயவியாவிருத்தியாவது— சத்தநித்தம் அமூர்த்தமாதலாலென்றவழி, யாதொருபொருள் யாதொருபொருள்நித்தமுமல்ல வடிவுடைத்தென்றுமல்ல ஆகாசம்போலவென வைதன்மிய வெடுத்துக்காட்டாகக்காட்டில்; ஆகாசம் பொருளல்லவென்னும் பௌத்தனுக்கு ஆகாசந்தானே யின்மையானால், சாத்தியமாகிய பொருளினது நித்தமுஞ், சாதநமாகிய வேதுவினது வடிவுண்மையு மிரண்டு மீட்சி மீளாமையு மில்லையாயிற்று. நித்தமுமல்ல வடிவுடைத் தன்றுமன்றென்றது, அநித்தமுமாய் வடிவுடைத்தாயிருக்குமென்றதாம்.

ஐயவெதிரேகமாவது—சாத்தியமாகிய பொருளில்லாதவிடத்துச் சாதநமாகிய வேதுவின்மை சொல்லாதேவிடுதலாம். அஃதாவது, சத்த மநித்தம்பண்ணப்படாமையாலென்றால், யாதொருபொருள் யாதொருபொருள் அநித்தமுமல்ல பண்ணப்படுவதல்லாததுமல்லவென்னும் வேற்றுமைவாய்பாடு தெரியச்சொல்லாது, கடத்தின்கண்ணே பண்ணப்படுதலும் அநித்தமுங் கண்டேமாதலா னென்றவழி, யவ்வேற்றுமை வாய்பாடு தெரியாதாயிற்று.

விபரீதவெதிரேகமாவது—பிரிக்கும்பொருளைப் பிரிக்கும்வாய்பாட்டாற் பிரியாது தலைதடுமாறாகக்கூறல். அஃதாவது; சத்தம்அநித்தம் மூர்த்தமாதலானென நின்றவிடத்து, யாதொருபொருள் யாதொருபொருள்நித்தமுமில்லை யவ்விடத்துமூர்த்த

முமில்லையென்றதே,யாதோரிடத்து அழூர்த்தமில்லை யவ்விடத்து நித்தமுமில்லையென்றால் வெதிரேக மாறுபடுமெனக்கொள்க.

மேலு மிவ்வாறுவரும் போலிப்பொருள்களெல்லாம் வந்துழிக்காண்க.

அளவை முடிந்தது.

---

## அளவைச் சிறப்பு.

பண்ணில்லாற் கில்லாத பாடற் பயன்போன்றுங்
கண்ணில்லாற் கில்லாக் கவின்போன்று—மெண்ணிலா
வஞ்சொ லளவை யறியா தவற்கில்லைச்
செஞ்சொ லளவின் சிறப்பு.

## ஆசிரியர்வணக்கம்.

எண்ணிறந்த கல்விதனை யெண்ணியா விட்டாலும்
விண்ணிறைந்த கீர்த்தி விளைந்தாலுங்—கண்ணிறைந்து
பேரின்ப வெள்ளம் பெறக்கிடையா நெஞ்சமே
சீரின்ப வாசானைத் தேடு.

## தனியன்.

பெத்தமறு பாண்டிப் பெருமாள் சிவஞான
சித்தி யளவைக்குந் தேர்ந்துணர்ந்து - முத்தித்
திடமுடைய வண்மைச் சிவஞான போதத்
துடனெழுதி னானல் லுரை.

அளவைக்கு
பாண்டிப்பெருமாள் உரை
முடிந்தது.

கக-வது, 'அவனவளது' என்னுஞ்சூத்திரத்துக் குதாரணம் வருமாறு.

வெண்பா.

பூதாதி யீறு முதலுந் துணையாகப்
பேதாய் திதியாகும் பெற்றிமையி—ஞேதாரோ
வொன்ஞென்றிற் ருேன்றி யுளதா யிறக்கண்டு
மன்றென்று முண்டென்ன வாய்ந்து.

இது பிரபஞ்சம்நித்தமென்றும், தோற்றமுமீறுஞ் சுபாவமென்றும்சார்பிற்றோன்றுமென்றும்,சொல்வோர்க்கு; அவையப்படியல்ல, ஒருகர்த்தாவுண்டென்கிறது.

இ-ள். பேதா அறிவில்லாதவனே.
ய் எ-து.

என்றது, பிரபஞ்ச மநாதியேநித்தம், தோற்றமு மீறுமில்லையென்கிற வறியாதவனே !

பூதாதி திதி யாகும் பெற்றிமையில் எ-து. பிரபஞ்சம் நிற்கின்ற முறைமையிலே.

ஈறு முதலுந் துணையாக வோதாரோ எ-து. சங்காரமுந் தோற்றமு முண்டாக யாவருஞ் சொல்லாரோ? சொன்னதொக்கும்.

அநாதிநித்தமலத் தொன்றுதலும் இறுதலு மியல்பு, தோற்றிலோர்சார்பிலேதோன்றும், அதற்கொரு சத்தாவுமில்லை யென்பையாகில் ?

ஒன் றொன்றி ஒருபொருளிலே யொருபொருள் தோன்
றிரொன்றியுளதா றி நின்றழிவதனைப் பிரத்தியக்கமாகக்கண்,
பிறக் கண்டு மன் டுவருகச்செயும், நீ சொல்லுஞ் சுபாவமுந்
றென்று முன் சார்புமல்லவென்றும், அந்தமென்று தொ
டென்ன வாய்ந் ழிலுக்கு மொரு கர்த்தா உண்டென்றும்,
... ...என்-று. ஆராய்ந்து யாவருஞ்சொல்லாநிகளோ,
யான் சொல்லவேணுமோ என்-று.

ன்னவும் என்றும் உம்மை தொக்கு நின்றது.

ஒ...ோ என்றதனை யிரண்டிடத்துங் கூட்டுக. அது தாப்
பிசை.

இதற்கு சிவஞானசித்தியார் ௧௨-இல், ௨-ம்.

"உதிப்பது மிறுமுண்டென் றுரைப்பதிங் கென்னைமுன்னோர்
மதித்துல கநாதியாக மன்னிய தென்பரொன்னி
லிதுக்கியா னநுமானுதி யெடேனிப்பூ தாதியெல்லாம்
விதிப்படி தோற்றிமாயக் காணலா ன மேதினிக்கே". (௨)

"இயல்புகாண் ...ோற்றிமாய்கை யென்றிடி னியல்பினுக்குச்
செயலதின் றியல்புசெய்தி செய்தியே லியல்பதின்று
இயல்பதாம் பூதந்தானே யியற்றிடுஞ் செய்திஎன்னிற் [ல்"
செயல்செய்வா னொருவன்வேண்டுஞ் செயற்படுஞ் சேதனத்தா

"நிலம்புன லனல்காலகாண ...றுத்திடு ...ழிக்குமாக்கும்
...லந் தரு மொருவனிங்குப் பண்ணிட வேண்டாவென்னி
நிலங்கிய தோற்றனிற்ற லீறிவை யிசைதலாலே
நலங்கிளர் தோற்றநாசந் தனக்கிலா நாதன் வேண்டும்". (௩)

'சார்பினிற் றோற்றமெல்லாந் தருபவ னில்லையென்னிற்
...றரினில் ...தற்கோதோற்ற முள்ளதற் கோர்செப்பா

யோரினில் லதுவுந்தோன்று துள்ளதே லுதிக்கவேண்டாஞ்
சோர்விலா திரண்டுமன்றி நிற்பது தோன்றுமன்றே". (௫)

என்பதனால் இதன்வழி நூலார் விரித்துரைத்தவா றறிக.

இது, பிரபஞ்சமொருகர்த்தாவை யுடைத்தென்னும் பக்கமும், அஃதெத்தாலெனின்? காரியமாயிருத்தலால் என்னுமேதுவும், அந்நுவயமாகிய சாதநசாத்தியப் பொருட்டாயினவா றறிக. (௧)

---

சிவஞானமுனிவர் உரை.

எ-று. உ-ம். எ-னின். உள்ளதன்பால் அவ்விரண்டுங் கிடத்தல் யாங்ஙனம் என்னுங் கடாவையாசங்கித்து ஏதுவைவலியுறுத்துத னுதலிற்று.

இ-ள். பேதாய். எ-து. காட்சியளவைகளானும் அறியப்படாத மடவோனே—பூதாதி. எ-து. பூதமுதற்காரணமாகவுடைய பிரபஞ்சத்திற்கு—திதி ஈறும்முதலும் துணை ஆக ஆகும். எ-து. திதி, நிகழ்வழி நாசமும் உற்பத்தியுந் தனக்குத் துணைக்காரணமாகக்கொண்டே நிகழாநிற்கும். அற்றாயினும் ஒன்று தோன்ற ஒன்று நிற்ப ஒன்றழிவதன்றி ஒருங்கே தோன்றி ஒருங்கே நின்று ஒருங்கேயழியக் கண்டிலமாலெனின்;—ஒன்று ஒன்றின்பெற்றிமையின்தோன்றி உளதாய் இற கண்டும். எ-று. ஒவ்வொரு காலவிசேடத்திற் சாதிபற்றி ஒருங்கே தோன்றி ஒருங்கே நின்று ஒருங்கேயழிவதனைக் கண் வைத்தும்—என்றும் அன்று உண்டு என்ன ஆய்ந்து ஓதாரோ எ-து. என்றாயினும் அதற்குரியகாலம் வருமென்று உலக நிற்கும் அங்ஙனமாதலுண்டென்று அக்காட்சிபற்றி ஆராய்ந் சொல்லார்களோ உன்னைப்போலுமடமையில்லாதோர் எ-

பூதாதி அன்மொழித்தொகை. பூதத்துக்கு மேலுளவாய தத்துவங்கள் உலோகாயதருக்கு உடம்பாடன்மையின், பூதமுதலாய தத்துவங்களைவுரைத்தல் ஈண்டைக்கேலாமையறிக.

, பூதாதிக்கென நான்கனுருபு விரித்துரைக்க; அது பின்னருஞ்சென்றியையும். ஆகுமென்பது முற்றுவினை.

ஈண்டுப் பெற்றிமை என்றது சாதியை.

ஓகாரம் எதிர்மறை.

ஒன்றொன்றினென்பது "ஒன்றொன்றாப் பார்த்துணர்வ தன்ஊமே" என்றாற்போல அடுக்குமொழி; அது காலவிசேடமாதல் என்று மன்றெனப் பின்வருதலாற் பெற்றாம்.

ஒருங்கேயென்பது சொல்லெச்சம்.

ஒன்றொன்றிற்றோன்றியுளதாயிறுதலாவது "பயில்வித்தெல்லாங் - காரிடமதனிற் காட்டுமங்குராங் கழியும் வேனில்" என்பதனானறிக. சித் - சு - க - சு, கூ—செ.

"கண்டும்" உம்மைசிறப்பு.

 க—சூ, முதலதிகரணம் முடிந்தது.

---

இலையித்த தன்னி விலேபித்த தாமலத்தா
விலேபித்த வாறுளதா வேண்டு - மிலேபித்த
தத்திதிபி லென்னி லழியா தவையழிவ
தத்திதியு மாதியுமா மங்கு.

க-து. இல்லதற்கு ஏது சங்கரிப்புண்டபிரபஞ்சஞ் சங்கரித்தகத்தாவாலொழிந்து தோன்றுதென்பதாம். எனவேஇல்லதற்குத் தோற்றமில்லையாதலானும், உள்ளது தோற்றுவிக்கவேண்டா வாதலானும், உள்ளதுமில்லதுமா யிருப்பது தோன்று

மென்பதுந்தோன்றுமிடத்துச்செய்வோனையொழிந்து காரியப் படாதென்பதூஉம், மண்ணிற்கடாதி யொழிந்துபடாநின்றோன். ருதவாறுபோலத்தோன்றுமிடத்தல்லது தோன்றாதென்பதூஉ ம், கத்தாவினிடத் தொடுங்காது மாயையிலே யொடுங்குமென் பதூஉம், ஆதலாற் சங்காரகத்தாவேமுதல்வனென்பதூஉங் கூ றுகின்றார்.

இ-ள். இலயித் சங்கரித்த கர்த்தாவாலே.

த தன்

னில் எ-து.

இலயித்த தா சங்கரிப்புண்டபிரபஞ்சம் உண்டாம்.

ம். எ-து.

அஃதென்போலவென்னில்? ஒருவன் கற்றசொல்லும் பொ ருளும் அவன் கருத்திலே யொடுங்கி வேண்டினவிடத்தே விரி யுமாறுபோலவும், சாக்கிராதியாகிய அவத்தைகள் ...மாவி னிடத்திலே யொடுங்கித் தோன்றுமாறுபோலவும் ஆம்.

அஃதப்படியாகில், கர்த்தாவினிடத்தே யொடுங்கின பிர பஞ்ச மீளவுந் தோன்றுவானே னென்கின்றாயாகில்?

மலத்தா லிலே மாயையிலே யொடுங்கி மீளவுமந்தமு யித்தவா றுளதா றைமையிலே தோன்றும்.

வேண்டும் எ-து.

எனவே, கர்த்தாவினிடத்துத் தோன்றாது மாயை யுபாதா னமென்பதாயிற்று.

அவ்வாறென்றது, உள்ளது மில்லதுமாகிய பூதாதி தோன் றுமென்பதூஉம்,மண்ணிற் கடாதியொழிந்து படாதி தோன் றுபோலத் தோன்றுவதல்லது தோன்றாதென்பதூஉமாம்.

இலயித்தது அத்திதியிலென்னில் எ-து.

பிரபஞ்சஞ் சேரச் சங்காரப்படாது சில நிற்கச் சிலசங்காரப்படும். அந்தச்சங்காரப் பட்டது நின்றவையிற்றிலே மீளவுமுண்டாம் என்கின்றாயாகில்?

அழியா தவை யழிவ தத்திதியு மாதியுமா மங்கு எ-து.

மகாசங்காரத்து, நீயழியாமற் சிலநிற்கு மென்று சொல்கின்றவையெல்லாஞ் சேர வழியும், நிற்றலும் தோற்றமு மவையிற்றுக் குண்டாகையால். எ-று.

இப்பொருள் சித்தியார் - க—கூ.

"......பொருளுஞ் சொல்லுங்கருத்தினிலொடுங்கித் தோ...மும், பெற்றியுஞ் சாக்கிராதி யுயிரினிற் பிறந்தொடுக்க, முற்றதும் போலவெல்லா வுலகமு முதித்தொடுங்கப், பற்றொடு பற்றதின்றி நின்றனன் பரனுமன்றே." (நூக)

"உயிரவை யொடுங்கிப்பின்னு முத்......னான்பாலென்னிற், செயிருறு மலத்திலுருகுஞ் சிதைந்ததே தென்னிற்சித்தத், துயர்மொழி காரியங்க ளழியுங்கா ரணங்கிடக்கும், பயிருகாரியம்பின் பண்டுபோற் பண்ணுமீசன்". (நூஉ)

"......மின்றி நின்றதொன் றுளதேலுண்டா - மில் ...... தோற்றமு மிசையாதாகு, முள்ளகா ரணத்துள் ...... காரிய முதிக்குமன்னி, மில்லாதாம் படங்கடாதி யெழிறரு மியற்றுவாருஞ்." (கூ)

"ஒருபொரு ளொருவனின்றி யு......தாகுமென்னிற், ...ரு ......நின்றேலுண்டாம், ...ருவின் றிலதுகாரிய முதலுள தாகுமென்னிற், கருதகா...மு முண்டாத் தோற்...முஞ் சத்தாவாலாம்" (எ)

"ஓரிட மழியப்பின்னு மோரிட நிற்குமொக்கப், பாரிடமழிவதின்று மென்றிடிற் பயில்வித்தெல்லாங், காரிடமதனிற் காட்டு மங்குரங் கழியும் வேனில், சீருடைத் தலகுகாலஞ் சேர்ந்திடப் பெயர்ந்துசெல்லும்". (௧)

என்பன வற்று விதன்வழி நூலார் விரித்துரைத்தவாறறிக.

இனி, இவையி சங்கரிப்புண்ட பிரபஞ்சம் அளிக்கின்றத்த தத்திதியி கத்தாவாலே யென்கின்றுயாகில்? சங்கரிப்லென்னில் எ-து. புணரது அவை யழிவது அந்த வளித்தலும்படைத்தலும் சங்காரத்தே சங்கரிப்புண்ணும்.

அத்திகியு மாதி அளித்தலும் படைத்தலும் சங்காரயுமா மங்கு எ-து. கத்தாவினிடத்தேயாம். எனபொரு முளர்.

சங்கார கத்தாவே கத்தாவென்றும் மாயையுபாதானமென்றுங் கூறலிற் றன்னுடைய பக்கமாயிற்று. இந்தப்பக்கத்துக்கு ஏதுவுந் திட்டாந்தமும் மேல்வருவனவற்று லறிக. (௨)

---

சிவஞானமுனிவர் உரை.

இலயித்த தன்னி லிலயித்த தாமலத்தா
லிலயித்த வாறுளதா வேண்டும்

எ-து. உ-ம். எ-னின். உலகம் உள்ளதாயின் உள்ளதற்கு உண்டாகவேண்டுவதில்லையாகலாற் சற்காரியவாதம் அடாதெனப் புத்தர் கூறுங்கடாவையாசங்கித்து இல்லதற்குத்தோற்றமின்மையின் என்றவேதுவை வலியுறுத்ததனுதலிற்று.

இ-ள், இலயித்தது இலயித்த தன்னில் ஆம். எ-து. உள்ளதாயினுஞ் சங்காரகாலத்திலொடுக்கிய தாகலான் அவ்வொடுங்கியவுலகம் தானொடுங்குதற்கு நிலைக்களமான சங்காரகருத்

தாவினின்றும் படைப்புக்காலத்தின் மீளவுளதாம். அற்றேல் ஒடுங்கியது ஒடுங்கியவாறே யொழியாது மீளவுண்டாகவேண்டாம்: வேண்டுமாயின், முன்னொடுங்காது நிலைபெறலே யமையும்: அவ்வாறன்றி ஒடுங்கி மீளவுளதாவது எற்றுக்கெனின்;—மலத்தால். எ-து. உள்ளதாகிய உலகம் கருமமலம் பரிபாகமாதற்பொருட்டு ஒடுங்கி ஆணவமலம் பரிபாகமாதற்பொருட்டு மீளவுமுண்டாம். அற்றேல் முன்னின்ற பிரபஞ்சம் நாசமாக வேறு தோன்றுமென்னாமல் அதுவே ஒடுங்கி நின்று மீளவுளதாமென்றற்குப் பிரமாணம் என்னையெனின்;—இலயித்தவாறு உளதாதல் வேண்டும். எ-து. எஃதெவ்வாறு நின்றொடுங்கிற்று அஃதவ்வொடுங்கியவாறே உளதாதல் எல்லாராலும் விரும்பப்படும். எ-று.

எனவே அந்நியமில்லையாயின் நெற்கமுகாய்நீளாது நெல்லாய் நீளுதற்கு ஏதுவென்னையென்னுந் தருக்கமே அதனையறிவுறுத்துமென்றவாறாயிற்று. சற்காரியவாதத்தினியல்பு "தந்து முதல்காரகம்" என்னும் ஞானாமிர்தத்தினுங் காண்க

இதனானே, இல்லதுமுள்ளதுமல்லாத பொருளொன்றுமென்னுஞ் சூனியவாதிகளும், இல்லதுமுள்ளதுமாய பொருளொன்றென்னும் அநேகாந்தவாதிகளும் மறுக்கப்பட்டவாறறிக.

இலயித்த, தத்திதியி லென்னி னழியா தவையழிவ
தத்திதியு மாதியுமா மங்கு.

எ-து. உ-ம். எ-னின். இனிச் சற்காரியவாதத்தின் அவ்வக்காரியங்கள் தத்தமுதற்காரணத்தொடுங்குமெனவே கோடலின், உலகிற்கு முதற்காரணமாகிய மூலப்பகுதி வாசுதேவனுருவாகலான், உலகம் அவன்மாட்டொடுங்குமென்றலே அமைவுடைத்தன்றி முதற்காரணத்தின் வேறாய நிமித்தகாரணமெனக் கொண்ட சங்காரகருத்தாவின் மாட்டொடுங்குமென்றல்

பொருந்தாதெனப் பாஞ்சராத்திரிகள் கூறுங்கடாவை யாசங்கித்து; ஒடுங்கின சங்காரத்தின் எனவும் இலயித்தந்தன்னில் எனவும் கூறிப் போந்த குறிப்பேதுவை விரித்துணர்த்துகின்றது.

இ-ள். இலயித்தது அத்தியில் என்னின். எ-து. 'உலகமொடுங்கியது அந்தமூலப்பகுதிவடிவாய திதிகர்த்தாவின் கண்ணன்மையாயின்,—அவை அறியாது. எ-று. நீ அங்ஙனங்கொள்ளினும் மூலப்பகுதிக்கு மேலுள்ள புவனங்கள் அதனாற் வியாபிக்கப்படாமையிற் றோன்ற ஏகதேசமாத்திரையே ஒடுங்கொடுங்குவதன்றி மாயாகாரியத்தொகுதி முழுவதூஉம் ஒண்டொடுங்காது. அற்றேல், மாயாகாரியத்தொகுதி முழுவதூஉம் யாண்டொடுங்குமெனின்,—அத்தியும் ஆதியும்' ஆம் அங்கு அறிவரு. எ-று. அந்தத் திதிக்கடவுளும் படைப்புக்கடவுளும் தோன்றுதற்குக் காரணமாகிய அச்சங்காரக்கடவுளிடத்தே அவ்வொடுக்கமேயொடுக்கட அறிவதாம் அத்தொகுதி, எ-று.

இவ்வெண்பாவினை "செய்யுட்க ளோசை சிதையுங்காலீரளபு—மையப்பா டின்றி யணையுமா—மைதீரொற், றின்றியுஞ் செய்யுட் கெடினொற்றை யுண்டாக்கு—குன்றுமேலொற்றளபுங் கொள்" என்பதுபோல இரண்டதிகாரணப்பொருள்படுமாறு இருதொடராக வைத்துரையாக்காற் பொருளிபைபுபடாண்மையறிக.

இலயித்த வென்னும் பெயரெச்சம் தன்னென்னும் இடப்பெயரோடு முடிந்தது.

இலயித்ததென்றது ஏதுப்பொருண்மை யுணரநின்ற பெயர் இலயித்ததெனச் சற்காரிய வாதங் கூறவே இலயித்த வவத்தையின் அவ்வக்காரிய சத்தி சமூகமாய்ச் சூக்குமமாய் நிற்பதொன்றுண்டு. அதுவே முதற்காரணமெனப் பிரபஞ்சத்திற்கு முதற்காரணமாகிய மாயையுண்மையும் பெறப்பட்டது.

ஆவென்பது முதனிலைத்தொழிற்பெயர். வேண்டுமெனச் செயப்படுபொருளைச் செய்ததுபோலக் கூறினார்.

உவை தொகுதி; அஃறிணைப்பன்மைப்பெயரொன்பார்க்கு அ[illegible] அழி[illegible]ன்னும் ஒருமைகளோடியையாமையும் உத்தரமாகாமையுமுணர்க.

திதியும் ஆதியும் ஆகுபெயர். ஆமங்கு பெயரெச்சமுடிபு.

இ[illegible]பமதத்தையும் மறுத்தற்பொருட்டுப் படைப்புக்கடவுளையும் உடன் கூறினார்.

நிமித்தகாரணனாகிய முதல்வன் உலகிற்கு முதற்காரணனல்லனாயினும் முதற்காரணமாகிய மாயைக்கு ஆதாரமாய்நிற்றலின், உலகம் ஆண்டொடுங்கி ஆண்டுநின்று தோன்றுதல் அமையுமென்பது வருகின்ற வெண்பாவிற் பெறப்படும்.

---

வித்துண்டா மூல முளைத்தவா தாரகமா
மத்தன்று ணிற்ற லவர்வினையால் - வித்தகமாம்
வேட்டுவனு மப்புழுப்போல் வேண்டுருவைத் தான்
கொடுத்துக், கூட்டரனே மண்போற் குளிர்ந்து. (௫)

க-து. மாயையிடத்துள்ளது தோன்றுமென்பதூஉம், அது தோன்றுமிடத்து வினைக்கீடாகத் தோன்றுமென்பதூஉம், தோற்றுவிப்போன் தன்னுடைய சத்தியாலே தோற்றுவிப்பனென்பதூஉம், ஆன்மா வழிந்து தோன்றுதென்பதூஉம், கூறுகின்றது.

இ-ள். வித்து ... அங்குரந் தோன்றினவாற்றாலே (அது ... ண்டா ... தோன்றத்தக்க) வித்தையுள்ளதாம்.
மூலமு

ஒத்த
வா எ-
து.

எ-து. பிரபஞ்சந் தோன்றி நின்றழியும், நீர் சொல்லுகின்ற மாயை யுபாதானமாக ஒடுங்குவது தோற்றுவ தாகாது. அஃ தென்போல வென்னில்? ஒரு மரத்தின்கணுண்டாகிய சாகை முதலியன வுதிர்ந்து மீளவும் அதன் கண்ணே புக்குப் புறப்ப டாதாற்போல வென்போற்கு, அந்தச் சாகைமுதலியன அத ற்குக் காரணமாகிய வித்துண்டாகவே யுண்டென்றதாம். எ னவே வித்தில்லையாகிற் சாகைமுதலியனவு மில்லையாமென்ப தாயிற்று.

தாரகமாமத்தன்ருள் எ-து. (அந்தமாயைக்குத்தாரகம்யாதென்னில் கர்த்தாவினுடைய பராசத்தி தாரகமாம் அஃதென்போல வென்னில்?

மண்போற்குளிர்ந்து. எ-து. ஈரத்தையுடைய மண்போலக் குளிர்ந்து. எ-று.

குளிர்ந்த வெனத்திரிக்க.

ஈரம்-கர்த்தா—மண்-சத்தி.

அந்தக்கர்த்தா நிற்கின்றபடி யெப்படி யென்கின்ருயாகில்?

நிற்றல் வித்தகமாம் எ-து. அவனிற்கின்ற முறைமை சொல்லக்கூடாது, ஆச்சரியமாயிருக்கும்.

"சீலமோ வுலகம்போலக் கொண்ணீ, நிலைசெயக் கடவுட் கண்ணே" என்பதனாலறிக. சித் - சுப - க—கு, ௬௩—செ.

அவர் வினையால் எ-து. (ஆன்மாக்கள்) அவரவர் செய்த கன்மத்தாலே.

அரன் வேண்டுருவைத் தான் கொடுத்துக் கூட்டும் வேட்டுவனு மப்புழுப் போல். எ-து.

சங்காரகத்தா வேண்டின ரூபத்தைக் கூட்டு முறைமை வேட்டுவளியனு லாகத்தக்க புழுப்போலும். எ-று.

இ-அ. மாயாகாரியந் தோன்றி யழியு மாறுபோல ஆன்மாவுந் தோன்றுவ தழிவதா மென்போருக் கில்லையென்று மறுத்தலாம். அஃதாவது, வேட்டுவளிய னிருந்த புழுவுக் குயிருந் தேகமுங் கொடுத்ததில்லை. உயிர் நிற்க உருபம் வேறுச்சியது. அதுபோல, ஆன்மாநிற்க வதன்வினைக்கீடாக வேண்டினருபத்தைக் கொடுப்பனென்றதாம்.

இதனை, அச்சுமாருதென்போருக்குக் காட்டுவாருமுளர் அது இரண்டாஞ் சூத்திரத்தே வருகின்ற தாதலாற் புனருத்தி கூறுமெனவறிக. எனவே, மாயை முதற்காரணம், சத்தி துணைக்காரணம், கத்தா நிமித்தகாரணன் என்றுராயிற்று.

அது, "காரியங் காரணங்கள் முதல்துணை நிமித்தங்கண்டாய், பாரிற்மண் டிரிகைபண்ணு மவன்முதல் துணைநிமித்தம்,— நேரின்மன் மாயையாகத் திரிகைதன் சத்தியாக,—வாரியன் குலாலனும்பின் றச்சுவ னகிலமெல்லாம்" என்பதனாலறிக.

சித்-க-சூ, உஅ—செ.

மாயை யென்றது சுத்தமாயையும் அசுத்தமாயையும்.

மாயை யுபாதான மென்னுந் துணிபொருட் பக்கத்துக்குப் பிரபஞ்சங் காரியமாய் வருதலாலெனக் காரியம் ஏதுவும் வித்துமுளையும் போலவெனச் சபக்கமும், வித்தில்லையாகில் இலைமுதலாயின வில்லையென விபக்கமும், கூறியவாறறிக.

ஆன்மா வழிந்து தோன்று தென்னும் பக்கத்துக்குப், புழுட்போல வென்னுஞ் சபக்கம் கூறியவாறு காண்க.

மாயைக்குத் தாரகஞ் சத்தியென்னும் பக்கத்துக்கு மண்போல வென்னும் சபக்கம் கூறியவாறு காண்க.

சித்தியார் க—கு.

"தோற்றமு நிலையுமீறு மாயையின் செருமமதென்றே, சாற்றிடு முலகம்விந்துச் சாகாதி யணுக்களாக,வேற்றதே லீண்டிநிற்கு மில்லதே யிசைவதின்றும், மாற்றநீ மறந்தாயித்தால் மாயையை மதித்திடாயே" (கச)

"மாயையி னுள்ளவஞ்சம் வருவது போவதாகும், நீயிதிங் கில்லையென்னி லிகழ்ந்திடுமுயலிற்கோடு, போயுகு மிலைகளெல்லா மரங்களிற் புக்குப்போதி, ஞயிடு மதுவுமென்னிற் காரணங் கிடக்கவாமே" (கரு)

"விந்துவின் மாயையாகி மாயையி னவ்வியத்தம்,வந்திடும் விந்துதன்பால் வைகரி யாதிமாயை, முந்திடு மராகமாதி முக்குண மாதிமூலந், தந்திடுஞ் சிவனவன்றன் சந்நிதி தன்னில்நின்றே" (கசு)

'வைகரி செவியிற்கேட்ப தாயத்த வசநமாகி, மெய்தரு முதானவாயு மேவிட விளைந்தவன்னம், பொய்யற வடைவுடைத்தாய்ப் புந்திகா ரணமதாகி, யையமில் பிராணவாயு வடைந்தெழுந் தடைவுடைத்தாம்" (உ0)

"உள்ளுணர் வோசையாகிச் செவியினி லுறுதல்செய்யா, தொடரிய பிராணவாயு விருத்தியை யுடையதன்றித், தெள்ளிய வக்கரங்கள் சிந்திடுஞ் செயலதின்றி, மெள்ளவே யெழுமத்தாகு மத்திமை வேறதாயே" (உக)

"வேற்றுமைப் பட்டவன்னம் வெவ்வேறு விபாகமாகித், தோ ற்றுத லடைவொடுக்கிச் சொயம்பிர காசமாகிச், சாற்றிய ம யிலினண்டந் தரித்திடுஞ் சலமேபோன்றநங், காற்றவே யுடைய தாகிப் பைசந்தி யமர்ந்துநிற்கும்" (௨௨)

"சூக்கும வாக்கத்துள்ளே சோதியா யழிவதின்றி, யாக்கிடு மதிகாரத்துக் கழிவினைத் தன்னைக்கண்டால், நீக்கமி லறிவான ந்த முதன்மைநித் தியமுடைத்தாய்ப், போக்கொடு வரவினை ப்பு விகாரமும் புருடனின்றும்" (௨௩)

"மண்ணினிற் கடாதியெல்லாம் வருவது குலாலனாலே, பெ ண்ணிய வுருவமெல்லா மியற்றுவ னீசன்றானுங், கண்ணுகா ரியங்களெல்லாங் காரண மதனிற்காண்பன், பண்ணுவ தெங் கேநின்றிங் கென்றிடிற் பகரக்கேளாய்" (௨௪)

என்பதென விதன்வழிநூலா ரிப்பொருளுரைத்தவாறு கா ண்க. (௩)

---

சிவஞான முனிவர் உரை.

எ—து. உ—ம். எ—னின். உலகந் தனக்கு முதற்காரணமாகிய மாயையிலொடுங்குவதன்றி நிமித்தகாரணன் ஒருவனுண்டெனக் கொள்ளினும் அவன்மாட்டொடுங்குமென்றல் பொருந்தாமை யின், யாது யாண்டொடுங்கும் அஃதுதனிலுற்பத்தியாம் என் னும் அவிநாபாவத்தான் மாயையிலொடுக்கிய உலகத்தை மா யையே தோற்றுவிக்கும் இதற்கோரிறைவன்வேண்டா எனச் சாங்கியநூலார் மதம்பற்றி நிகழுங்கடாவையாசங்கித்து உள் ளதற்குச் செய்வோரின்றிச் செய்வினையின்மையின் என்றுமே துவை வலியுறுத்துத லுதலிற்று.

இ—ள். மண்போல் குளிர்ந்து வித்து உண்டா மூலம் முளை த்தவா தாரகம் ஆம் அத்தன் தாள் நிற்றல் அவர் வினையால்

வித்தகம் ஆம். எ-று. மாயையும் உலகமும் வித்தும் அங்குரமும் போலுமாகலின் வித்துக்கு ஆதாரமாகிய நிலங் குளிர்ந்தவழி அதன்கண் வித்துள்ளதாகஅதனினின்றும் அங்குரந்தோன்றிய வாறுபோல மேலவெண்பாவின் 'இலயித்தது' என்றதனாற் பெறப்பட்ட மாயை தனக்காதாரமாய் நின்று தோற்றுவிக்கும் இறைவனது சத்தியின்கணுள்ளதாய் நிற்றலால், அச்சத்தி சங்கற்பித்தவழி அவரவர் வினைக்கீடாக அவ்வவக்காரியங்களை அவ்வவ்வியல்பிற் பிறழாமற் பயக்குஞ் சதுர்ப்பாடுடைத்தாம்: அல்லுழி உடைத்தன்று. நிலங் குளிர்ந்தவழி அதன்கட்கிடந்தன்றி வித்து முளைபைத் தோற்றுத வாறுபோலும். ஆகலான் மாயையினொடுங்கித் தோன்றியஉலகம் அதற்காதாரமாய் நின்ற இறைவன் சத்தியினொடுங்கித் தோன்றியதேயாம். எ-று.

ஆகலானென்பது முதல் குறிப்பெச்சம். இது கிழங்கினின்றுந் தோன்றிய தாமரையைப் * பங்கமென்பதனானுமறிக. வழிநூலாசிரியர் "உயிரவை யொடுங்கிப் பின்னு முதிப்பதெனரன்பால்." எ-ம். "உலகவ னுருவிற்றேன்றி யொடுங்கிடும்." எ-ம். ஓதியதூஉம், உலகவ னுருவிற்றேன்றி யொடுங்குமாறு வாதுளாகமத்தில் வகுத்தோதிய தூஉம், இவ்வியல்பு நோக்கியென்க. இஃதறியாதார் இன்றேரன்னவற்றைத் தத்தமக்கு வேண்டியவாறே யுரைப்ப. சித்-க—கு, ௩உ - உஅ.

* பங்கம்-ஜம்=பங்கஜம். பங்கம் - சேறு, ஜம் - சனித்தல்-தோன்றல்=சேற்றில் தோன்றியது.

உவமவினை பொருளினும் பொருளை உவமையினுஞ் சென்றியையும்.

உண்டாகவெனச் சற்காரியத்தை வலியுறுத்துதல், வித்தில்வழி நிலத்தினின்றும் அங்குரந் தோன்றுதலாறுபோல, மாயை

யில்வழிப் பிரமத்தினின்றும் உலகந்தோன்றுமெனப் பரிணாமவாதிகளையும், மாயை அநிர்வசனமென்னும் மாயாவாதிகளையும், வித்துநிலனும்போலென்றதனுன் மாயை முதல்வனின் வேறுபொருளன்றென்னுஞ் சிவாத்துவிதசைவர் பாஞ்சராத்திரிகளையும், மறுத்தவாருயிற்று.

முதல்வன் பலவேறு வகைப்படச் சங்கற்பித்தவாறென்னையென்னுங்கடாவை யாசங்கித்து, அவர் வினையாலென்ருர்.

வித்தகம் விசித்திரமென் றுரைப்பினு மமையும்.

அற்றேல், தன்வயத்தானன்றி வினைவயத்தாற் ருேற்றுவிப்பான் இறைவனுகானெனின்.

வேட்டுவன் ஆம் அப்புழுப்போல் வேண்டு உருவைத்தான் கொடுத்துக் கூட்டானே. எ-து. வேட்டுவனுகலே விரும்பும் புழுவிற்கு வேட்டுவன் விரும்பிய வடிவினைக் கொடுக்குமாறுபோல, இறைவனும் அவரவர் வேண்டுமுருவினைக் கொடுத்து அவ்வினைக்குத் தக்க பயன்களையுங் கூட்டுவனுகலான் அதுகொண்டு சுதந்திரத்திற் கிழுக்கென்னை. எ-று.

ஆகலான் அதுகொண்டு சுதந்திரற் கிழுக்கென்னை யென்பது குறிப்பெச்சம்.

போம் அரை. குளிர்ந்த வழியென்பது குளிர்ந்தெனத் திரிந்து நின்றது.

நிற்றலினென்னும் ஐந்தாவது விகாரத்தாற்ருெக்கது. ஏகாரம் எதிர்மறை.

---

நோக்காது நோக்கி நொடித்தன்றே காலத்திற்
ருேக்காது நின்றுளத்திற் கண்டிறைவ - ஞேக்காதே

'கண்ட நனவுணர்விற் கண்ட கனவுணரக்
கண்டவனி னிற்றின்றுங் கட்டு (அ)

இது, கத்தா பிரபஞ்சகிருத்தியஞ் செய்கின்ற முறைமையும், அந்தக்கிருத்தியமெல்லா மநுக்கிரகமென்றும், அப்படிக் கிருத்தியஞ்செய்கைச்சே அதிலொரு சற்றும் பிரயோசனமின்றி விகாரமற் றிருப்பனென்கின்றதுங் கூறுகின்றது.

இ-ள். இறை . . கத்தா.
வன். எ-
து.

அன்றே. எ-து. அநாதியிலே.

காலத்திற் று காலம்போல வென்றிநுந் தாக்காது எ க்காது நின் றுள ல்லாவான்மாக்க ளிடத்திநும் ஒக்கநின்று த்திற்கண்டு. எ- அவரவர்செய்த கன்மங்களைப்பார்த்து.
து.

காலம்போல வென்றது, செல்காலம் வருகாலம் நிகழ்கால ம்போல வென்றதாம். அந்தமூன்றுகாலமுங் காண்பார்க்குக் காலமாய் நின்றதல்லது அது தானசைவின்றி நிற்றல் போ லத் தற்சுபாவங் குறையாமல் நிற்பனென்பதாம்.

கார்காலம் வேனிற்காலம் போலவென்றுமாம். அது, கார்காலத்துண்டாம் பலங்கள் வேனிற்காலத் துண்டாகாது, வேனிற்காலத் துண்டாம் பலங்கள் கார்காலத்துக்குண்டா காது. அவ்வாறுபோலப் பக்குவமறிந்து செய்வனென்பது மாம்.

எனவே காலங் கத்தாவென்போருக்கு அல்லவென்பது மா யிற்று.

தாக்காது நின்றெனவே பற்றின்றி நிற்றல்கூறினர்.
உளத்தினின்றெனவேசர்வான்மாக்களிடத்தும் பக்கப் பிரதி பக்கமற நிற்றல் கூறினர்.

கண்டெனவே-நித்த முத்த சுத்தனாய் சிற்சொரூபனாய் அவிகாரியாயுள்ள கத்தா பார்த்தானென்பதனால், சர்வான்மாக்களும் பிறவியி லழுந்தாமல் முத்திபெறவேணுமென்று பார்த்தான் என்பதாம். எனவே அவன் கிருத்தியமெல்லா மநுக்கிரமென்பதுவுங் கூறினர்.

நோக்காது நோக்கி. எ-து. — அளியாமலளித்து.

நொடித்து. எ-து. — அழியாமலழித்து.

ஆக்காதே.எ-து. — படையாதே படைத்து.

நோக்காமனோக்கி யென்பதனாலே நொடியாமனொடித்து ஆக்காதேயாக்கியெனக் கூறுக.

இன்றுங் கட்டிற்று எ-து. — இப்பொழு தித்தன்மைத்தாகச் செய்யுந் செயலித்தன்மைத்து. அஃதெந் தன்மை யெனில்?

கண்டகனவுணர்விற் கண்ட நனவுணக் கண்டவனின் எ-து. — தான் கண்ட கனவைச் சுத்தகத்துவங்களால் அறிந்த வறிவாலே முன்பு கண்டுபோந்த நனவிலே விளங்கக்கண்டவனைப் போல யறிந்தனன். எ-று.

எ-து. கனவுகண்ட புருஷனுக்கு அது புசிகல்லவாய்க் காணுமிடத்துப் பொய்யல்லவுமாய் நனவில் மெய்யல்லவுமாய் அதி லொருபிரயோசனமின்றி யிருந்தாற்போல, பிரபஞ்சங்

காரியப்பட்டு வருகச்சே புதிதல்லவுமாய்ப் பொய்யுமல்லவாய் மெய்யுமல்லவாய்த் தனக்கொரு பிரயோசநமு மின்றி யிருப்பனென்பதாம்.

எனவே விகாரம் அவிகாரமின்றி யிருப்பனென்பதூஉங் கூறி ஞராயிற்று.

காலத்தின் என்னும் இன்னும், கண்டவனின் என்னும் இன்னும், உவமைக்கண் வந்தன.

கத்தா கிருத்தியஞ் செய்கைச்சே பற்றற் றிருப்பனென்னும் பக்கத்துக்குக் காலம்போல வென்னுஞ் சபக்கமும், தனக் கொரு பிரயோசநமு மின்றி அவிகாரியா யிருப்பனென்னும் பக்கத் துக்குக் கனவுகண்டவனைப் போலுமென்னுஞ் சபக்கமுங் காட் டியவாறு காண்க. இப்படிக் கிருத்தியமுஞ் செய்கின்ற கத்தா வினுடைய சத்தி பலவோவென்றும், சத்தியினுடைய வடிவே தென்றும் வினவியவாறும். "ஒன்றதா யிச்சாஞானக் கிரியையெ ன்றொரு மூன்றாகி, நின்றிடுஞ் சத்தி" (சுங) என்று நிறுத்தி யவாறு மிதன்க ணடக்கிக் கூறுக.

இற்று என்பதனால் "சத்திதான் பலவோவென்னிற்றானொன் றே யநேகமாகி, வைத்திடும்" (சுக) "சத்திதன் வடிவேதென்னி ல் தடையிலா ஞானமாகும்" (சுஉ) என்பனவற்றாலறிக.

"தோற்றுவித் தளித்துப்பின்னுந் துடைத்தருள் தொழில்கண் மூன்றும்" (ஙங) "உரைத்தவத் தொழில்கள்மூன்று மூவருக் குல கமோத, வரைத்தொரு வனுக்கேயாக்கி" (ஙச) "இறுதியாங் கா லந்தன்னி லொருவனே" (ஙரு) "சொன்னவித் தொழில்க ளெ ன்னக் காரியந்தோற்றவென்னில்" (ஙசு) "அழிப்பிளைப் பாற்ற லாக்கம்" (ஙஎ) "காலமே கடவுளாகக் கண்டனந் தொழிலுக் கென்னில்" (சுo) என்பன விதன்வழி நூலார் சித்தியார், க—ரு இல் விரித்துரைத்தவாறறிக. (ச

சிவஞானமுனிவர் உரை.

எ-து. உ-ம். எ-வின். மேலையுதாரணத்திற்கூறியவாற்று லகிற்கு முதற்கடவுள் உண்டெனக்கொள்ளினும்அவன் படைப்பு முதலியன தொழில் செய்வானாயின் விகாரமெய்தி அதனிற்பந்தமுறுவா னென்னுமவர்மதம்பற்றி நிகழுங்கடாவை யாசங்கித்து ஏதுவை வலியுறுத்துத னுதலிற்று.

இ-ள். இறைவன். எ-து. முதல்வன்—காலத்தின் தாக்காதுநின்று. எ-று. இறப்பு நிகழ்வு எதிர்வு முதலியனவாய் வேறுபட்டு எல்லாத்தொழிலுஞ்செய்துந் தனக்கு விகாரமின்றி நிற்குங்காலம்போல விகாரப்படாது நின்று,—ஆக்காதே கண்டு. எ-து. பிரபஞ்சத்தைக் கரணத்தாற்படையாது சங்கற்பமாத்திரத்தானே படைத்து,—நோக்காது நோக்கி கொடுத்து. எ-து. அவ்வாறே காவாது காத்து அழிபாதழித்தலால்,—இன்று ஆம் கட்டு. எ-து. இவ் வமலனுக்குப் பந்தமில்முதல்—உளத்தில் கண்டநனவு உணர்வில் கண்ட கனவுஉணரக் கண்டவனில் இற்று. எ-து. கற்றநூற்சொல்லும் பொருளும் உள்ளத்திற் றோன்றுங்கால் உள்ளம் அவற்றிற்றொடக்குண்ணுதவாறுபோலும், கனவின்கட் கண்டவற்றைப் புறத்துவிடயங்களையறிந்து வந்த நனவுணர்வின்கண்ணே விளங்கவறிந்தவன் அப்பொழுது அவற்றிற் றொடக்குண்ணுதவாறுபோலுமித்தன்மைத்து. எ-று.

எனவே, இஃதிவ்வாறாக வென்றெண்ணுதலாகிய சங்கற்பமாத்திரையாற் செய்வதூஉம் கரணத்தாற்செய்வதூஉ மென வினைமுதல் இருவகைப்படுமென்பதூஉம்; கரணத்தானன்றிச் செய்யமாட்டாத குயவன் முதலியோர் சங்கற்பமாத்திரையாற்செய்யுமுதல்வனுக்கு வினைமுதலாதற் பொதுமைபற்றி

ஒருபுடையுவமையாதலன்றி முற்றுவமையாதல் செல்லாமை யானும், சங்கற்பமாத்திரையாற் செய்யுஞ் செய்திக்குக் கட்டு ண்டன்முதலிய குற்றங்கள் பகைப்பொருளாகலானும், அவை யாண்டுளவாதற்கோரியை பின்றென்பதூஉம் கூறி ஏதுவை வலி யுறுத்தவாறு காண்க.

ஆக்குதல் - படைத்தல் - காண்டலும் அது. நோக்குதல்-கா த்தல். நொடித்தல்-அழித்தல்; அது "நொடித்தான்மலை", என் பதனானுமறிக.

அக்காது நோக்காது என்றமையால் நொடியாதென்பதுவ ருவித்துரைக்கப்பட்டது. நொடித்தலான் என்பது நொடித் தெனத்திரிந்தது.

அன்றே அசை; அநாதியேயெனினுமமையும்.

இன்மூன்றும் உவமவுருபுகள்.

உளத்தினென்பதற்குச் சங்கற்பத்தாலென்றுரைப்பினுமமை யும்.

இன்றுங்கட்டு என்பது "அருங்கேடன்" என்பதுபோல நி ன்றது.

 ச—சூ, இரண்டாமதிகரண முடிந்தது.

---

ஒன்றலா வொன்று ளுளதாகி நின்றவா
றென்றலா வொன்றிலவை யீறுத—லொன்றலா
வீறே முதலதனி லீறலா வொன்றுபல
வாறே தொழும்பாகு மங்கு. (சு)

இது, பிரபஞ்சந் தோன்றி நின்றொடுங்குவது மாயையி லேயாகில், அந்த மாயையேயமையாதோ? கர்த்தா வேண்டு மோ? என்போருக்கு மாயை சடமென்று சாதிக்கின்றது.

இ-ள். ஒன்ற லாவொன்று ளதாகி நின்ற வாறுஎ-து. இதுவென்று சுட்டிக் காணப்படாதுமாய், பிரபஞ்ச கிருத்தியத்தைச் செய்கையிலாலே காணப்படுவானுமாகிய கத்தாவால் பிரபஞ்சந்தோன்றி நின்ற முறைமையாலே

ஒன்றலாவொன்றி லவையிருந்தல் எ-து. இதுவென்று சுட்டிக்காணப்படாதுமாய், பிரபஞ்சகிருத்தியத்துக் குபாதானமுமாய் நிற்றலாலே, காணப்படுவதாகிய மாயையிலே யவை சென் றொடுங்குதலையுடைத்து.

அவையென்றது தோற்றலும் நிற்றலுமாகியஅவை. "ஆதியோ...யமேதகுமாயை" என்னு ஞானமிர்தத்தில் "அளவினைவலி...ற்று" என்பதனு லறிக.

ஒன்றலா வி...ற முதல் எ-து. அப்படியாகில் இதுவென்று சுட்டிக் காணப்படாததாய் எல்லாஞ்சென்றொடுங்குதற்கிடமாகியமாயையே முதன்மை யுடைத்து.

முதன்மை - தலைமை. எ-து. கத்தா வேண்டாவென்றாலும். ...து, பிரபஞ்சகிருத்தியஞ் சாதநங்கொண்டே சாத்தியமாகி... கத்தாவையுங் கண்டேம், அதுபோல மாயையுங்கண்டேம், ...தலா வொருதன்மையாயிருந்தது. அவ்விரண்டினுக்கு மத்த...மையா லொன்றேயமையாதோ? அஃதன்றியும், எல்லாந்...தான்றி நின் றொடுங்குமிட மாயையாயிருந்தது; கத்தா இது...னே, வேறுவேண்டாவென்றதாம்.

அதனில். எ-து. அந்த மாயையினிடத்து நீசொல்லுகின்ற கர்த்தத்துவமில்லை.

ஈறலாவொன்று எ-து. பிரபஞ்சம் அழியும்பொழுது தானுங் கூடவழியாதோ? கர்த்தத்துவ மின்றி சடமாயிருக்குமென்பையாகில்? அது அழியாத தொருபொருள்.

அன்று எ-து. அதுதா னெக்காலத் துள்ளதென்பையாகில்? அநாதி.

பலவாறேநேர் அது எல்லாமுறைமையாலுங் கத்தாவுக் கூம்பாகும். எ-து. கேவற்ஞெழில் செய்துவரும். எ-று.

பலவாற்றானு மென்றது அசித்தாகையானுந் தனக்கெனவொருசுதந்திரமில்லையானு மென்றதாம்.

அன்றியும் அருவிலே யுருவந்தோன்றுமோ வென்றும், விந்துவின்கண் ணுண்டாகியகாரியஞ்செவ்வாறென்றும், சத்தாவுக் கவை யுருபமாஞ லாகாதோ? ஒன்றலா வொன்ருசவேனு மோவென்றும், வினுயினுர்க்குக் கூறலுமாம். இப்பொருள் "அருவினி லுருவந்தோன்றி யங்காங்கிபாவமாகி" "அருவுருவி ஞதாகும் விகாரமுமவிகாரத்தில், வருவதுமில்லையென்னில்" 'வித்தைகளவித்தையீசர் சதாசிவமென்றிவர்க்கு" "மூவகையணுக்களுக்கு முறைமையால்விந்துநாத, மேவியதில்லையாகில்" "பந்தமும் வீடுமாய பதபதார்த்தங்களல்லான்" "உலகினையீன்றுநின்ற தரனுருவென்பதோரா" "வித்தையோடீசர்சாதாக்கியஞ்சத்திசிவம்" "சிவனுருவருவுமல்லன் சித்தினேடசித்துமல்லன்" என்பன பலவு மிதன்க ணடங்கியதாதலால் வழிநூலார் விரித்துரைத்தவாறறிக,

சித் - க—ரு, உஎ - உ௮ - உ௯ - உ௬ - ௪௪ - ௪௮ - ௬௬ - எ0—செ.

தொழும்பாகு மென்றதனால் மாயாகாரியமு மழியாதென்பதாம். இப்பொருள் "கருது காரணமுண்டாகக் காரியமுள்ளதாகி வருதலாலநாதியைய மற்றொருகடவுளித்தைத் தருதலாலாதியாக்ச் சாற்றலுமாகும்" என்பதனாலறிக.

மாயை சத்தாவல்லவென்பதற்கு "புத்திமாக்காரியத்தாற் பூதாதிபுருடன்றனு - மத்தனுகரணப்பெற்று லறிதலா மவற்றைமாயை" என்னும்வழிநூலானும். "என்னையிதுவெனி னுலகுக்குபாதானமில்லை யிறைவனலதெனி னசித்துச் சித்தினிடத்துதியா, மன்னியுமெனில் முதல்வனென்கொ லென்னில்மாயைதான் சித்துருவாய்மருவமாட்டா" என்னுஞ் சார்புநூலானுமறிக.

சித்-க—ரு, கரு - கஎ - சிவப்பிரகாசம் பொது-கக-செ.

இவை யைந்துவெண்பாவானுஞ் சத்தாவுக்கும் மாயைக்கும் பக்ஷமேது திட்டாந்தம் உபநயனம் நிகமனம் கூறியவாறறிக.

அஃதெப்படியென்னில், பூதாதி என்பதனில்ஒரு சத்தா உ உண்டென்னும் பக்ஷமும், அஃதெத்தாலென்னில் பிரபஞ்சங்காரியமாயிருத்தலா லக்காரியத்தைச் செய்யா னுண்டென்பதனால் காரிய ஏதுவும், நோக்காதென்பதனிற் காலம்போலவும் கனவுகண்டவன்போலவும் என்னுந் திட்டாந்தமும், இவ்வெண்பாவில் உபநயன நிகமனமுங் கூறினார்.

இலயித்ததன்னில் என்பதனில் மாயையுண்டென்னும் பக்ஷமும், வித்துண்டாமென்பதனிற் காரியமாயிருத்தலாலென்னு ஏதுவும், வித்துமுளையும்போலவென்னும் திட்டாந்தமும், இந்தவெண்பாவில் உபநயன நிகமனமுங் கூறியவாறுங்காண்க.

இவைசாமானியமாகிய பொருட்போல விசேடமாகிய சாதகசாத்தியப் பொருட்டாயினவாறு காண்க. (ரு)

சிவஞானமுனிவர் உரை.

எ-து. உ-ம். எ-னின். அங்ஙனமாயினும், சுட்டுணர்வாகிய பிரபஞ்சம் பலவாயினாற்போலச் சுட்டுணர்வின்றிநின்றசங்காரமும் பலவுளவெனக் கோடும், ஒன்றேயென்றற்குப் பிரமாணமென்னை யென்னுங்கடாவை யாசங்கித்து ஏதுவை வலியுறுத்துதனுதலிற்று.

இ-ள். அவை. எ-து. சேதநப்பிரபஞ்சத்தொகுதி—ஒன்று அலா ஒன்றால். எ-து. உருவும் அருவுமென்னும் அவ்விருகூற்றுப் பிரபஞ்சத்துள் ஒன்றல்லாத ஒப்பற்ற பரம்பொருளாலே—உளது ஆகி நின்றவாறு. எ-து. சிருட்டிப்பட்டுத் திதிப்பட்டவாறே—ஒன்று அலா ஒன்றில் ஈறுதல். எ-து. அந்தப்பரம்பொருளின்கண்ணே சங்காரப்படுதலால்—ஒன்று அலா ஈறே முதல். எ-து. அச்சங்காரக்கடவுளொருவனே உலகிற்கு முதற்கடவுள். அற்றேல், இவ்வாறு முத்தொழிற்படுஞ் சேதநப்பிரபஞ்சம் வீடுபெற்றவழிச் சுட்டுணர்வின்றிச் சிவசமமாமென வேதத்தும் ஆகமத்தும் ஓதுதலின் அவ்வழி அவையும் முதற்கடவுளாமென்றற்கு இழுக்கென்னையெனின்?—அதனில் ஈறு அலா ஒன்று. எ-து. அப்பரம்பொருள்போல் அழிவின்றி நித்தமாய சேதநப்பிரபஞ்சம்—அங்கு எ-து. வீடுபேற்றின்கண்ணும்—பலவாறே தொழும்பு ஆகும். எ-து. பலவாற்றானும் பரம்பொருளுக்கு அடிமையாம். எ-று.

இது சொற்பொருட்பின்வருநிலை.

காரியப்பிரபஞ்சஞ் சடமாதலானும், சேதநப்பிரபஞ்சம் அவிச்சையாற் கட்டுற்றுச் சுட்டுணர்விற்றாய் நிற்றலானும், இவற்றைத் தொழிற்படுத்தற்கு இவற்றின் வேறாய் ஒருமுதற்கடவுளுண்டென்பது பெற்றாம். பெறவே, பிரபஞ்சம் விசித்திர

காரியமாய்க் காணப்படுதலின், இவ்வாறு நடாத்தும் முதற்கடவுள் முற்றுணர்வும் அளவிலாற்றலும் பேரருளுஞ் சுதந்திரமும் முதலிய நிரதிசயகுணங்களுடையனென்பதூஉம் பெறப்பட்டது: படவே, இத்தன்மையனாகிய முதற்கடவுளொருவனே அமையுமாகலின் வேறு மத்தன்மையருண்டெனக்கொள்ளின் மிகையென்னுங் குற்றமாம்: அல்லதூஉம், இலக்கணத்துள் ஒருவாற்றானும் வேற்றுமையில்வழி இலக்கியம்பலவாதல் செல்லாதென்னுங் கருத்தால், ஒன்றலாவொன்றுஎன வரையறுத்தோதினர்.

ஈறே முதலென்றது முடிந்தது முடித்தல். ஈறு ஆகுபெயர். இறந்ததழீஇய எச்சவும்மை விகாரத்தாற்றொக்கது.

பலவாற்றவன, இருணீங்கிய வழியுங் கண்ணுக்குக் காட்சி ஞாயிற்றை யின்றியமையாத வாறுபோல, மலநீங்கிய முத்தி நிலையினும் ஆன்மாவுக்கு அறிவு வியஞ்சகமாய் உடனின்றறிவிக்கு முதல்வனை யின்றியமையாதவாறும், கண்படிகம் ஆகாயம்போலச் சார்ந்ததன் வண்ணமாயன்றி முதல்வன்போலத் தனித்துநிற்கு மியல்பில்லாதவாறும், முதல்வன்போல் ஐந்தொழிற்கும் வினைமுதலா முரிமையின்றிச் சிவாநுபவ மொன்றினுக்கே யுரித்தாயவாறும், சமவியாபகமாயினும் முதல்வனைநோக்கத் தூலவறிவாகலான் விளக்கொளியுட் கண்ணொளிபோல முதல்வனின் வியாப்பியமா யன்றி நில்லாதவாறும் முதலாயின. அற்றேல், முத்திநிலையின் ஆன்மாச் சிவமாமென்னுஞ் சுருதிக்குப் பொருளென்னையெனின்? அஃது உண்மை யதிகாரத்துட் பெறப்படும். இதனானே சிவசமவாதி சங்கிராந்தவாதி உற்பத்திவாதி ஆவேச வாதி மதங்களும் மறுக்கப்பட்டன.

பதியுண்மைக்குப் பிரமாணங்கூறுவார் மலத்துளதாம் எனப் புனருற்பத்திக் கேதுக்கூறுமுகத்தான் மலத்துண்மைக்குப்

பிரமாணமும் உடன் கூறினார். அதனை ஈண்டு வேறோரதிகரணமாக வைத்துரையாராயினார்; அதிகரணத்திற்குரிய ஐயப்பாடு முதலியனவெல்லாஞ் சகசமலத்துணராதென அதனிலக்கணங்கூறும் வழிப் பெறப்படுதலால், ஈண்டு மிகைபட வேறோதல் வேண்டாமையின்.

 க—சூ, மூன்றுமதிகரண முடிந்தது.

க—சூ, தொகைப்பொருள்.

இச்சூத்திரத் ததிகரணங்களாற்போந்த தொகைப்பொருளாவது:—தோற்றக்கேடுகள் தன்மை காட்சி முதலியஅளவைகளான அறிய வாராமையிற் பிரபஞ்சம் நித்தப்பொருளேயாம். அன்றித் தோன்றி யழியுமெனக் கொள்ளினும், இல்பொருள் தத்தஞ் சார்பிற் றோன்றி நின் றழிதல் இயற்கையெனவமையும்; செயற்கை யென்றற்கு ஓரேதுவின்மையின். மற்றுள்பொருளாயின், அதுவேயமையும், இறைவன் வேண்டா; இரண்டின் பொருள்கோடல் மிகையாகலின். வேண்டுமாயினும், மாயோன் முதலிய கடவுளரில் ஒருவனேயமையும் அவனையொழித்துச் சங்கார கருத்தா முதற்கடவுளென்றதற்குப் பிரமாண மென்னை? பிரமாணமுண்டாயினும், அவ்விசித்திரமாய பிரபஞ்சம் ஒருவனாற் செய்தல் கூடாமையின், மற்றும் அவ்வியல்பினராய முதற்கடவுளர் உளராதல்வேண்டும் என உலோகாயதர் மீமாஞ்சகர் புத்தர் சமணர் சாங்கியர் பாஞ்சராத்திரிகள் அநேகேசுரவாதிகள் மதம்பற்றிப் பூர்வபக்க நிகழ்ந்தவழி அவரை மறுத்துச் சித்தாந்தஞ் செய்து முதற்கடவுள தன்மை பொதுவகையானுஞ் சிறப்புவகையானுங் கருதலளவையின் வைத்துணர்த்திய வாறென வுணர்க.

இவ்வாறு சூத்திரந்தோறும் உணர்ந் துரைத்துக்கொள்க

---

 க—சூ, முடிந்தது.

# உ — சூத்திரம்.



அவையே தானே யாயிரு வினையிற்
போக்கு வரவு புரிய வாணையி
னீக்க மின்றி நிற்கு மன்றே.

இ-ள். அவையே தானே யாய் எ-து. — கத்தா முன்கூறப்பட்ட அவனவளது வெனும் பிரபஞ்சமாய்.

ஆய் எனவே அல்லவாயென்பதூஉம், விட்டுநீங்காமலும் கூறப்பட்டது. எனவே ஆயுமா யல்லவுமா யுடனுமாகு மென்பதாம். [தான் = கத்தா.]

இருவினையிற் போக்குவரவு புரிய வாணையின் எ-து. — தன்னுடைய வாக்கினையாலே, யான்மாக்கள் முன்புள்ள புண்ணியபாவங்களினாலே யிறந்து பிறந்துவர.

நீக்கமின்றி நிற்கு மன்றே எ-து. — ஒழிவற நிறைந்துநிற்பன் அநாதிசுபாவமாக எ-று.

இது, கத்தா பிரபஞ்சமெல்லாமாய் அவையல்லவுமாய் அவற்றிற் குடனுமாய், தானவையிற்றிற் சிறிதுந்தோய்வின்றியொழிவறக்கலந்து ஆன்மாக்கள் முன்புசெய்த கன்மங்களுக்கீடாகத் தன்னுடைய சத்தியாலே பிறந்திறந்துவர, அநாதிசுத்தனுமொழிவற நிற்பனென்றதாம்.

(உ௩ம்.)

"உலகெலாமாகிவேறா யுடனுமாயொளியாயோங்கி
யலகிலாவுயிர்கள்கன்மத் தாணையினமர்ந்துசெல்லத்
தலைவனாயவற்றின்செய்தி தனக்கெய்தலின்றித்தானே
நிலவுசீரமலனாகி நின்றனனீங்காதெங்கும்".

என்ற வழிநூற்சூத்திரமுங் காண்க. சித் - உ—சூ, க—செ

---

சிவஞானமுனிவர் உரை.

இச்சூத்திரத்தின் பிண்டப்பொழிப்பு. மேலைச்சூத்திரத்து எடுத்துக்கொண்ட சங்காரகாரணனாகிய முதல்வன் தலைப்பிறால் உடலின் உயிர்போல் அவ்வுயிர்களேயாய், பொருட்டன்மையாற் கண்ணின் அருக்கன்போல் அவற்றின் வேறுமாய், உயிர்க்கு உயிராதற்றன்மையாற் கண்ணொளியின் ஆன்மபோதம்போல் உடனுமாய் நின்று, ஆணையென்னும் பரியாயப் பெயருடைய தனது சிற்சத்தியான் வரும் இருவினைகளான் அவை இறத்தல் பிறத்தல்களைப் புரியும் வண்ணம் அவ்வாணையிற் பிரிப்பின்றிச் சமவேதமாய் நிற்பன். எ-று.

அவையே தானே யாயென்பதனை இரட்டுற மொழிந்து கொண்டுரைக்க. இக்கருத்தே பற்றி "உலகெலா மாகி வேறாயுடனுமாய்" என்றார் வழிநூலாசிரியரும். சித் - உ—சூ, க—செ.

மேலைச்சூத்திரத்தின் 'அந்தமாதி' என்புழி விகாரத்தாற் றொக்க பிரிநிலையேகாரத்தான் விலக்கப்பட்டு நின்ற சேதனப் பிரபஞ்சத்தை ஈண்டு அவையெனச் சுட்டிக்கூறினார்.

'ஒடுங்கியுளதாம்' என்றதற்கேற்ப ஈண்டும் போக்கினை முற்கூறினார்.

புரிதல் எப்பொழுதும் மேற்கோடல்.

ஆணையினென்பது சிங்கநோக்காய் இருவினையென்பதனோடு ம் நீக்கமின்றி யென்பதனோடும் இயைந்து பொருடந்து நின்ற து. ஆண்டு 'இன்னுருபு முன்னர் ஏதுப்பொருட்கண்ணும், பி ன்னர் நீக்கப்பொருட் கண்ணுமாய் நின்றது. இன்னென்ப து சாரியையெனக் கொண்டு ஈரிடத்தும் ஏற்கு முருபுகள் விரி த்துரைத்தலு மொன்று.

அன்றே அசை; அநாதியே இவ்வாறு நிற்குமெனினு மமையு ம். ஆய்ப் புரிய நிற்குமெனவே, அச்செயல்களெல்லாம் முதல் வன் கரணத்தானன்றிச் சங்கற்பமாத்திரத்தாற் செய்வனெ ன்பது பெறப்பட்டது,

இதனானே மேல் 'அந்தம்' என்று உத்தேசமா யெடுத்துக் கொண்ட முதல்வனுக்கு இலக்கணங் கூறியவாறுமாயிற்று. இ து தடத்தலக்கணமெனப்படும் பொதுவியல்பு.

ஆணியினிருவினையினெனவே, தனது சிற்சத்தி துணைக்கார ணம், இருவினையும் அதன்வழித்தாய துணைக்காரணம். இரு வினையினெனவே அதற்குப் பற்றுக்கோடுண்டென்பதூஉம் பெ ற்றுமாகலின், அது முதற்காரணமென்பதூஉம் இருவினையிற் போக்குவரவுபுரியவெனவே ஒடுங்கியின் மீளவுளதாங்கால் இ ருவினைகட்சேற்பப் பலவேறுவகைப்பட்டு விரியுமென்பதூஉம் போந்தவாறு காண்க.

---

கட்டி முறுப்புங் கரணமுங் கொண்டுள்ள
மிட்டதொரு பேரமைக்க வென்னென்றுங் - கொட்டி
யவனுள மாயில்லா னுளமவனு மாட்டா
தவனுளமா யல்லனுமா மங்கு. (க)

இது, சர்வான்மாக்களிடத்துங் கத்தா விரண்டறநிற்கின்ற முறைமை கூறுகின்றது.

இ-ள். கட்டு முறுப்புங் கரணமுங்கொண் டுள்ளமிட்ட தொரு பேரழைக்க வென்னென்றுங்கு எ-து. என்புதோல்நரம்பிறைச்சி முதலாயினவ ற்றாற் கட்டப்பட்டதேகத்தையுங் கரணங்களையுங்கொண்டுநின்று ஆன்மா தேகத்துக்கிட்டதொருபெயரையொருவன்சொல்லி யழைக்கத் தானவையாய்நின் றென்னென்றாற்போல.

ஒட்டி யவ னுள மாகில்லான் எ-து. சர்வான்மாக்களிடத்தும் வேறறக்கலந்துநிற்கின்ற கத்தா அப்படிநின்றானாகினும். அந்தவான்மாக்க ளாவா னொருவனல்லன்.

உள மவ னாமாட்டாது. எ-து. அப்படி வேறறக்கலந்து நிற்கின்ற வான்மாக்களும், அந்தக்கத்தா வாகமாட்டாது.

அவ னுளமாயல்லனுமா மங்கு எ-து. கத்தா வான்மாவுமா யல்லவுமாய் நிற்பன் பெத்தமாகியவிடத்து எ-று.

ஆன்மாக்களிடத்தே கத்தா வேறறக்கலந்து நின்றும் நீங்கி நிற்பனென்னும்பக்கத்துக்கு, தேகத்துடனே ஆன்மா வேறறக்கலந்துநின்று நீங்குகின்றமை சபக்கமாயினவாறுகாண்க

எனவே ஆன்மாவுந் தேகமும் வேறென்பது முரைக்கூறிற்று நாயிற்று.

அது "ஒன்றினமுடித்தல்" என்னுந்தந்திரயுத்தியால் தத்துவாதிகளாய் நிற்கின்ற கத்தாவைப் பாசபெத்தனாகிய ஆன்மாவோ டுவமித்தார். "சீவனுமிச்சாஞானச் செய்தியாற்சிவனையொப்பன்" என்பதனாலறிக. சித் - க—ரு, சுஉ - செ. அஃதெங்ஙனேயென்னில்? ஆன்மாவுங் கத்தாவைப் போலக் கத்தத்துவமுஞ் சர்வஞ்ஞத்துவமு முடையவனாகையானும், போக்குவரவின்றி யிருத்தலானு மவையவங்களுடனே கூடவும் நீங்கவும் வல்லனாதலானும், வியாத்தி வியாபகங்களை யுடையவனாதலானுமெனக்கொள்க. அஃதெங்ஙனேயென்னில்? கர்த்தத்துவமாவது, தான்செய்தபுண்ணிய பாவங்களைத் தப்பாமற் புசிக்கைக்குக் கத்தாவாதல். சர்வஞ்ஞத்துவமாவது, பெத்தமுத்திக ளிரண்டினுடைய அநுபவத்திசையிலுண்டாகிய சர்வஞ்ஞத்துவம் போக்குவரவின்றியிருத்தல். அதாவது, யாதோரவத்தை யடைந்ததாயினும் பெத்தத்தை விட்டுநீங்காமல் அவயவங்களுடனே கூடவும் நீங்கவும் வல்லனாவது யாதொருவிடயங்களினும்நின்று புசிக்குமிடத் தவையவையாய்நின்று புசித்துப் பின்பவையிற்றைநீங்கி விகற்பிக்க வல்லனாதல். வியாத்திவியாபகமுடையனாவது, கன்மம்புசித்தாற்குப் பொருந்தியபதி யாதோரிடம் அந்தந்தவிடங்களிலே நிறைந்துநிற்கையுடையனாதலுமாம், "உருவொடுகருவியெல்லா முயிர்கொடுநின்றுவேறாய், வருவதுபோலவீச னுயிர்களின்மருவி" என்றூர்வழிநூலார். சித் - உ—ரு, ௬ - செ. (க)

சிவஞானமுனிவர் உரை.

எ-து. உ-ம். எ-னின். ஒருபொருள் மூவகையியல்பையு முடைத்தாதல் யாங்ஙனம் என்னுங்கடாவை யாசங்கித்து அவற்றுள் அவையேயாதலை உவமைமுகத்தான் வலியுறுத்துதனுதலிற்று.

இ-ள். உள்ளம் கட்டும் உறுப்பும் கரணமுங்கொண்டு. எ-து. உயிர் நரம்பு முதலியவற்றாற் பிணிக்கப்படும் உடம்பினையும் ஐம்பொறி முதலிய கருவிகளையுங் கைக்கொண்டுநின்று,— இட்டது ஒருபேர் அழைக்க என் என்றாங்கு. எ-து. சாத்தா கொற்றா எனஉடம்பிற் கிட்ட பெயராற் பிறரழைத்தவழித் தான் என்னையென வந்து நிற்றல் காண்டுமன்றே, இருவர் கைகோத்து நின்றுழியும் அவருள் அழைக்கப்பட்டோனேயன்றி ஏனோன் என்னையென்றல் உலகத்தின்மையின், அவ்வாறன்றி உடம்பின் பெயரான் அழைத்தவழி உயிர் என்னென்றற்குக் காரணம் பிறிதோராற்றாற் பெறப்படாமையின், அருத்தாபத்தி யளவையயினே அவ்வுயிர் உடம்பெனத் தானென வேற்றுமையின்றி அபேதமாய் நிற்றல் பெற்றாம். அதுபோல—ஒட்டி. எ-து. முதல்வன் உயிர்களின் அபேதமாய் ஒட்டி நிற்போனும்—அங்கு அவன் உளம் ஆகில்லான் உளம்அவனுமாட்டாது அவன் உளம் ஆய் அல்லனும் ஆம். எ-து. அவ்வாறொட்டிய வழி உயிர் உயிரோ, உடம்பு உடம்பே, உயிர் உடம்பாயொழியாது, உடம்பு உயிராகமாட்டாது. அவ்வாறாயினும், உயிர் உடம்பாயும் அதனின் வேறாயுநிற்கும். உடம்பு அங்ஙனநில்லாது, அதுபோல முதல்வன் முதல்வனே, உயிர் உயிரே, முதல்வன் உயிராயொழியான், உயிர்முதல்வனாகமாட்டாது. அவ்வாறாயினும் முதல்வன் உயிராயும் அதனின் வேறாயுநிற்பன். உயிர் அங்ஙனநில்லாது. எ-று.

அவனுளமாகில்லானுளமவனுமாட்டா தவனுளமாயல்லனுமா மங்கு என்றது ஒன்ருயும் ஒனறன்மைக்கு அநுபவங்காட்டிய வாறு.

, உறுப்பு ஆகுபெயர். ஏவனென்பது என்னென மரீஇயிற்று. ஒட்டியெனபது பெயர்; வினையெச்சமாகக் கொள்ளிற் சிறப்பு ம்மை விரித்துரைக்க.

ஒட்டுதல் - பொருந்துதல். அங்கு - அதுபோல.

---

ஒன்றென்ற தொன்றேகா ணென்றே பதிபசுவா
மொன்றென்ற நீபாசத் தோடுளைகா - ணென்றின்ரு,
லக்கரங்க ளின்ரு மகரவுயி ரின்றே
யிக்கிரமத் தென்னு மிருக்கு.

இது, வேதத்திற் கத்தாவு மான்மாவு மிரண்டல்லவெனக் கூறியதென்போற் கிரண்டென்பதூஉம், ஆன்மாவுக்குக் கத்தா வையொழிந்து சேட்டையில்லையென்பதூஉங் கூறுகின்றது.

இ-ள். ஒன்றெ ன்றதொ ன்றேகா ன்ன எ-து. (வேதங்களெல்லாம் ஒன்றென்றுசொல் ல நீர் ஆன்மாக்களோடுங் கத்தா நிற்ப னென்று இரண்டாகச் சொல்கின்றதென்னை யென்பாயாகில்)? அந்தவேதங்க ளொன் றென்று சொல்லுகின்றது ஒத்தாரு மிக்கா ருமின்றி நித்தமுத்த சுத்தனுயிருக்கின்ற தனிமுதலைக்காண்.

ஒன்றே பதி ா-து. நாளுென்றென்று சொன்னது மது தாவென்னையாகில்? அந்தத் தனி முத லே கத்தா, அது ஆன்மாவல்லவென்ற ாம்.

கரு

இது வேதத்திற் கடாகாச வாகாசம்போலச் சீவான்மா
வென்றும், பரமான்மாவென்றும், பேர்வேற்றுமையொழிந்து
ஒருவனே யுள்ளதென்று சொல்வோரைமறுத்தது.

நீ பசுவாமொ ஒன்றென்றுசொல்கின்ற நீதான்காண்
ன்றென்ற நீ பா ஆன்மா. பாசபெத்தன்காண் நீ.
சத்தோடுளே கா
ண் எ-து.

நீ பாசபெத்தனெனவே அவன் சுத்தனென்பது மீட்சிமொ
ழியாயிற்று.

அக்கரங்களி அகரமாகிய வுயிரில்லையாகில் நின்றவக்
ன்ற மகர வுயி கரங்க ளோசைபெறுதலில்லையாம்.
ரின்றேல் எ-து.

ஒன்றின்ற லி சுத்தாவில்லையாகி லான்மாக்களுஞ் சே
க் கிரமத் தென் ட்டையில்லை, இந்த முறைமைபோல வெ
னு மிருக்கு எ-து. ன்னும் வேதங்கள் எ-று.

'அக்கரங்களின்றே லகரவுயிரின்றும்' என்றுபாடமாயின், அ
க்கரங்களில்லையாகி லகரவுயிருமில்லையாமென்க. அதுஆன்மா
க்களில்லையாகில் கத்தாவுமில்லையென்றதாம். எ-து. கத்தா
வையுணர்வாரில்லையென்றதாம்" மெய்யினியக்கம்அகரமொடுசி
வணும்"தொல்காப்பியம் எழுத்ததிகாரம்.மொழிமரபு கஉ—ரு.

கத்தாவுமான்மாவும் வேறறநிற்கின்றபக்கத்துக்கும், கத்தா
வையின்றி யான்மாச்சேட்டையில்லை யென்னும்பக்கத்துக்கும்
'அகாரமு மக்கரங்களுஞ்சபக்கமாயினவாறுகாண்க." ஒன்றெ
னமறைகளெல்லா முரைத்திடவுயிர்க ளொன்றி, நின்றனனெ
ன் றுபன்மை நிகழ்த்துவதென்னையென்னின்" என்றார்வழிநூ
லார். சித் - உரு, உ—௭.

சிவஞானமுனிவர் உரை.

எ-து. உ-ம். எ-னின். வேதத்துள் அத்துவிதமென்றதூஉ மன்றி ஏகமெனவுமோதுதலின் அதற்கு மறுதலைப்பாய் உயிர்க ளோடொட்டி நிற்பனெனப் பேதப்படக் கூறுவதென்னை எ ன்னுங்கடாவை யாசங்கித்து அச்சொற்குத் தாற்பரியங்கூறு முகத்தால் தானேயாதலை வலியுறுத்துத னுதலிற்று.

இ-ள். இருக்கு ஒன்று என்றது ஒன்றே காண். எ-து. வேதம் ஒன்றென்றதற்குப் பொருள் ஒன்றென்பதேயாம்; வே றுபொருள்படாது.—ஒன்றேபதி. எ-து. அதற்குத் தாற்ப ரியம் பதிப்பொருளொன்றே; இரண்டில்லையென்பதாம்—ஒன் றுஎன்றநீ பசுவாம். எ-து. இஃதறியாது ஒன்றென்று சொ ல்லுகின்ற நீ அப்பதிப்பொருளின் வேறாய பசுவென்றறிவாயா க. பதியுஞ் சேதநமாக யானுஞ்சேதநமாக என்னைப் பசு வென்றதென்னையெனின்—பாசத்தோடு உளைகாண். எ-து. நீ மலத்தோடு கட்டுற்று நின்றாயாகலிற் பசுவெனப்பட்டனை. அற்றேல் இவ்வாறு வேற்றுமைகூறிற் பிரமமில்லையாயின் ஒரு பொருளுமில்லையென்னும் வேதத்திற்குத் தாற்பரியமென்னை யெனின்—அகரவுயிர் இன்றேல் அக்கரங்கள் இன்று ஆம்இக் கிரமத்து ஒன்று இன்று என்னும். எ-து. அகரவுயிரில்லையா யின் அக்கரங்களில்லையாமென்னும் இம்முறைபற்றி, வேதம் பி ரமப்பொருள் இல்லையாயின் ஒருபொருளுமில்லையென்றோதும் அத்தனை. எ-று.

ஒன்றின்றாலக்கரங்களின்றே மகரவுயிரின்றேலிக்கிரமத்தென் னும் என்றது வேறாகியும் வேறன்மைக்கு அநுபவங்காட்டிய வாறு.

இக்கிரமத்தாலென உருபு விரித்துரைக்க. இன்றென்னுமொ ருமை அப்பண்பின் மேனின்றது. காணென்பதனை மேலே கூட்டு க. ஆம் - அசை.

பண்ணையு மோசையும் போலப் பழமதுவு
மெண்ணுஞ் சுவையும்போ லெங்குமா - மண்ணருள்
அத்துவித மாத லருமறைக ளொன்றென்னா
தத்துவித மென்றறையு மாங்கு.

இது, சத்தாவு மான்மாவு மிரண்டறநின்ற கலப்புக்கூறுகின்றது.

இ-ள். பண்ணையு மோசையும் போலப் பழமதுவு மெண்ணுஞ் சுவையும் போலெங்குமா மண்ணருள் அத்துவிதம் எ-து. சத்தா வவ னவ ளது வெனும் பிரபஞ்சமெல்லா மொழிவறநிறைந்து இரண்டல்லவொன்றெனநிற்றல், பண்ணுக்கு நாதநின்ற வையிற்றின்சொருபங்களைநிறைவித்தாற்போலவும், பழமு மதிற்சொல்லப்பட்ட விரதமும்போலும்.

பண்ணு மோசையும் பாடுவாரையின்றி யில்லாமையால், முதல் மூன்றாயிற்று. எனவே, மாயைமுதலியவற்றை இரண்டறநின்று தன்னுடைய விச்சா ஞானக்கிரியைகளைக்கொண்டு தன்மை முன்னிலை படர்க்கையாலேநின்று நடத்துவனென்றதாம்.

பழமுமிரதமுமென்றது பழ மிரதத்தைப்பிரிந்திராது, இரதம் பழத்தைப்பிரிந்திராது, பழத்திலே யிரதநிறைந்துநிற்கும் அதுபோலப் பதியும் பிரபஞ்சமும் அநாதியிலே யிப்படியிருக்குமென்றதாம்.

ஆதலால் எ-து. இப்படியாதலாலே.

அருமறைகளொன்றென்று சொல்லாதுவிதமென்றறையுமாங்கு. எ-து.
அரியவேதங்களொன்றென்று சொல்லாமலிரண்டல்லவென்று சொல்கின்றது; அத்துவிதமென் சொல்லி முடிக்குமிடத்து. எ-று.

எ-து. ஒன்றென்னுஞ் சொல்லில்லாமல் இரண்டல்லவென்றது எவ்வாறென்னில், இரண்டல்லவென்ற சொல்லாலேயொன்றென்னில் அப்படிச்சொல்லுகின்றதொன் றுண்டாகையாலே ஒன்றல்ல. ஆனாலிரண்டல்லவென்றசொல்லாலே யிரண்டுமல்ல; எனவே ஒன்றுமல்லவாய் வேறறக்கலந்து நிற்கின்றமுறைமை கூறலாம். அதுசபுஞ்சகமென்றாற்போலவாம். கத்தா பிரபஞ்சத்தை வேறறநின்று சேட்டிப்பிக்கின்றானென்னும் பக்கத்துக்குப் பண்ணுமோசையும் சபக்கமாக்கி, வேறறவநாதியிலே நிற்கின்ற பக்கத்துக்குப் பழமுமிரதமுஞ் சபக்கமாயினவா றறிக. (௩)

---

சிவஞானமுனிவர் உரை.

எ-து. உ-ம். எ-னின். வேதம் ஏகமாயபிரமத்தை ஏகமென்றொழியாது பிரமம் அத்துவிதமெனவும் ஓரோரிடங்களின் ஓதுதலின் அத்துவிதம் இருபொருட்கண்ணதென்பார்க்கு ஏகமாய பிரமத்தை அத்துவிதமென்றல் பொருந்தாதாய்முடியும் என்னுங்கடாவை யாசங்கித்து அதனை நீக்குமுகத்தானே அவையே தானேயாதலை வலியுறுத்துத னுதலிற்று.

இ-ள். பண்ணையும் ஓசையும் போலப் பழமதுவும் எண்ணும் சுவையும்போல் எங்கும் ஆம் அண்ணல் தாள் அத்துவிதம் ஆதல். எ-து. பண்ணும் அதனின் வேறன்றியெண்ணப்படும் இசையும்போலவும், பழமும் அதனின் வேறன்றியெண்ணப்படுஞ்

சுவையும்போலவும், யாங்கணும் வியாபகமாய முதல்வன் றிரு வருள் உயிர்களின் வேற்றுமையின்றி நிற்பதாகலான்—அரு மறைகள் ஒன்று என்னாது அத்துவிதம் என்று ஆங்கு அறையும். எ-து. வேதங்கள் ஏகமென்னாது பிரமம் அத்துவிதம் என்று அவ்விடங்களிற் கூறும். எ-று.

ஆண்டுப் பிரமம் அத்துவிதமென்றது பிரமம் உயிர்களின் வேற்றுமையின்றி நிற்குமென்னும் பொருட்டாகலான், அஃதேக மென்பதோடு முரணுமாறில்லையென்பதாம்.

பண்ணையென்னும் ஐகாரம் பகுதிப்பொருள்விகுதி. பண்-பாலைப்பண் முதலாயின.

எங்குமாமண்ணருள்ளென விசேடித்தது, குண குணிகள்போல் உடனாயும் அவ்வாறுடனாகாமைக்கு அநுபவங்காட்டியவாறு. வியாப்பிய வியாபகமாதலொட்புமையாத்திரைபேபற்றிக் குண குணிகளை உவமை கூறினாரென்பது.

---

அரக்கொடு சேர்த்தி யணைத்தவக் கற்போ
லுருக்கி யுடங்கியைந்து நின்று - பிரிப்பின்றித்
தானே யுலகாம் தமியே னுளம்புகுதல்
யானே யுலகென்ப வின்று. (௪)

இது, அத்துவித மென்றதனை யொன்றென்றதாக் கருதி ஏகனாமென்போரை மறுத்து முன்சொன்னதனையே வலியுறுத்தியது.

இ-ள். அரக் பொன்மெழுகுடனே மணலையுங்கூட்டி
கொடு ப்பிடித்த சாணைபோல வட்டிலிங்கங்
சேர்த்தி கூட்டி மாணிக்கத்துடனே சேர்ந்த வெண்

யிணைந்த வங் கற் போல் எ-று.

கற்போல வென்பாருமுளர்.

உருக்கி யுடங்கி யைந்து நின்றுபி ரிப்பின்றித்தானே யுலகாம். எ-று.

கத்தாவும், பிரபஞ்சத்தைச் சேட்டிப்பித்து வேறறக் கலந்து நிறைந்து நின்று தானே பிரபஞ்சமென்னும்படியா யிருப்பன். [உருக்கல் - சேட்டிப்பித்தல்.]

தமியேனுளம் புகுதல் யானே யுலகென்ப வின்று எ-து.

இந்திரியங்களைநீங்கி யான்தமியனானவிடத் தென்னிடத்திலே புகுதலாலே, யான் பிரபஞ்சரூபியென்று சொல்வே னிப்பொழுது. எ-று.

உருக்கி யென்பதனை யுளம்புகுத்தலுடனே நெகிழ்வித்தெனக் கூட்டுவாருமுளர். புகுதல் - புதிதாகப் புக்கதன்று, அநாதியிலேயேகிபவித்து நின்றமுறைமை. முன்புதோன்றும. வி ந்திரியங்களை நீங்கியவிடத்தே காண்டலா லிப்பொழுது பிரகாசித்ததெனவறிக.

பிரபஞ்சமுங் கத்தாவும் அத்துவிதமாய் நின்றமுறைமை இந்த நாலுவெண்பாவிலுங்கூறியவாறறிக.

கத்தாவும் பிரபஞ்சமும் வேறறக்கலந்து அத்துவிதமாய்நிற்பனென்னும் பக்கத்துக்கு, அரக்கொடு கூட்டிப்பிடித்த சாணை சபக்ஷமாயினவாறறிக.

இக்கவிகளை விவ்வாறு விரித்துரைத்தமையான் வழிநூலார் விரியாதவாறறிக. ஆதலாலே விரியாதது விரித்துரைத்தாரெனவறிக. எனவே இரண்டுநூலும் ஒன்றென்றுயிற்று. இனி வெண்பாவுக்கு விருத்தமாகவு மொருவிருத்தத்தே யிரண்டுவெண்பா வடக்கியும் வருவன மேலேகாண்க. (௪)

சிவஞானமுனிவர் உரை.

“ என்-து. உ-ம். என்-னின். இங்ஙனம் வெவ்வேறுவமையெடுத்துக்காட்டின் அநேகாந்தவாதமாமென்னுங்கடாவை யாசங்கித்து, அஃதாகாமை உவமைமுகத்தான் விளக்கி மூன்றனையும் ஒருங்கே வலியுறுத்துத னுதலிற்று.

இ-ள். உருக்கி அரக்கொடு சேர்த்தி அணைத்த அக்கற்போல் உடங்கு இயைந்து நின்று பிரிப்பு இன்றித் தானே உலகு ஆம். என்-து. அரக்கை யுருக்கி அதனோடு சேர்த்து அணைத்த கற்பொடி அவ்வரக்கினோ டொன்றாய் ஒருங்கியைந்து நீக்கமின்றி நின்றாற்போல, முதல்வன் உயிர்களின் ஒருங்குகூடி நின்று நீக்கமின்றி உடனாகலால், தானேயாம், உலகேயாம், தானே உலகேயாம். அற்றேல், வாமதேவமுனிவன் முதலியோர் யானே யுலகெல்லாமாயினேன் எனக் கூறுதலானும், சர்வஞானோத்தரத்தில் யானே யெல்லாமாய் அல்லனுமாய் உடனுமாய் நின்றேன் என்று உயிர் கண்மேல் வைத்தோதுதலானும், உயிர்களும் இவ்விலக்கணத்தனவாவான் செல்லும்போலு மெனின்;—தமியேன் உளம் புகுதல் யானே உலகு என்பன் இன்று. என்-க. அம்முதல்வன் பாசக்கூட்டத்தி னீங்கித் தனியாய் நின்ற என்னகத்துச் சோகம்பாவனையாற் புகுந்து வேற்றுமையின்றித் தோன்றலான் யானே யுலகெல்லா மென் பேறுயினேன்; இம்முத்திகாலத்து. ஆகலின், அதுபற்றி உயிர்களும் அவ்வாறுவான் சேறலின்று. எ - று.

அதுபற்றி உயிர்களும் அவ்வாறுவான்சேறலின் றென்பது குறிப்பெச்சம்.

இவ்வொற்றுமைபற்றியன்றே அருச்சுனர்கு கீதைநூல் செவியறிவுறுத்தகண்ணன் யானேயுலகெல்லாமாயினேனென்றதூஉ

ம், முதல்வனது விச்சுவரூபத்தைத் தான்காட்டியதூஉம், ஏனை
யவற்றைக்கைவிட்டு என்னையே வழிபடுகவென்றதூஉம்; அதனை
உறுதியாகக்கொண்ட அருச்சுனன் அவன் கூறிய கருத்துநோ
க்கிச் சாங்காறுஞ் சிவபூசைசெய்ததூஉம், கண்ணன்மேலிட்
ட போதுகள் முதல்வன் திருமுடிமேற் கண்டதூஉமென்க. க
ண்ணன் உபமன்னியமுனிபாற் சிவதீக்ஷையுற்றுத் தன்னையுந் த
லைவனையுமுணர்ந்தோனாகலிற் சிவோகம்பாவனையைத் தலைப்ப
ட்டோனாதலறிக.

கலப்பாய்நிற்றலான் உலகேயாமென்பார் உடங்கியைந்து எ
னவும், பொருட்டன்மையால் வேறுநிற்றலால் தானே யாமெ
ன்பார் நின்று எனவும், உயிர்க்குயிராய் நிற்றலால் தானேயு
மகாமென்பார் பிரிப்பின்றி எனவுங் கூறினார்.

ஈண்டும் இரட்டுறமொழிந்து கொண்டுரைக்க.

இன்றியென்னுஞ் செய்தெனெச்சக்குறிப்பு மழைபெய்து கு
ள நிறைந்தது என்புழிப்போலக் காரண காரியப்பொருட்டா
ய் நின்றது.

இவ்வதிகரணத்தானே பேதமென்றும் அபேதமென்றும் பே
தாபேதமென்றும் பிணங்குஞ்சமயிகளையெல்லாம்மறுத்து, அ
ம்மூவகையியல்புந் தன்கட்டோன்ற நிற்கும் அத்துவிதத்தன்
மை ஏதுக்களானும் உவமைகளானும் உணர்த்தியவாறு. புடைநூ
லாசிரியரும் இவ்வதிகரணப்பொருளேபற்றி புறச்சமயத்தவர்
க்கிருளாய்—தெரிக்கலுற்றும்" எனவகுத்தோதினார். சிவப்பி
ரகாசம். பாயிரம் - எ—செ.

 உ—கு, முதலதிகரண முடிந்தது.

உள்ளதே தோற்ற வுயிரணையு மவ்வுடலி
னுள்ளதா முற்செய்வினை யுள்ளடைவே - வள்ளலவன்
செய்பவர் செய்திப் பயன்விளக்குஞ் செய்யேபோற்
செய்வன் செயலணையா சென்று. (௫)

இது, கத்தாவினுடைய வாக்கினையாலே யொழிந்து ஆன்மாக்களுக்குப் புண்ணியபாவங் கூடாதென்பதுவும், அது கூடுமிடத்து முன்புள்ளதொழிந்து கூடாதென்பதுவும், கூட்டுமிடத்து விருப்புவெறுப்பின்றிக் கூட்டுவனென்பதுவுங் கூறுகின்றது.

இ-ள். உள்ளதேதோற்ற வுயிரணையு மவ்வுடலின் எ-து. முன்புள்ள கன்மத்துக்குப் பொருந்தியுள்ள தொருதேகம்வந்துதோன்ற, அந்தத் தேகத்தே ஆன்மாச்சென்று பொருந்தும்.

உள்ளதா முற்செய்வினை எ-து. அநாதிசுத்தனாயிருக்கின்ற ஆன்மாவுக்குக் கன்மமுண்டானபடி யெனென்கின்றாயாகின்? அநாதிசுத்தனல்ல, முன்புசெய்தவினை அநாதியிலே யுள்ளதாயிருக்கும்.

உள்ளடைவே எ-து. தேகத்தை யுண்டாக்குவது கன்மமாயிருந்து கன்மந் தேகமின்றி யுண்டானவாறெங்ஙனேயென்று சொல்வையாகில்? முன்புபோந்த முறைமையால். அஃதாவது, முன்பெடுத்த தேகம் கன்மத்தையுண்டாக்கும், அந்தக் கன்மம் தேகத்தையுண்டாக்கும், ஆதலால் இவையொன்றுக்கொன்று தொன்றுதொட்டு வித்து மரமும்போலவும், விளைவும் உணவும் வித்தையும்போலவும் வருமென்றதாம்.

வள்ளலவன் எ-து. [வள்ளல் அவன் - கத்தா] வள்ளலென்றும் விரும்பியது கொடுப்பனென்பதாம்.

அது பெத்தமுத்தி யிரண்டையுங் கொடுத்தல். தான்சொன்ன வேதாகமங்களின்வழியே யொழுகாதோர்க்குப் பெத்தத்தைக் கொடுப்பனென்றும், வழிபடுவோர்க்கு முத்தியைக் கொடுப்பனென்பதுமாம்.

செய்பவர் செய்திப்பயன்விளைக்குஞ் செய்யேபோற் செய்வன் எ-து. பெத்தமுத்திகளைக் கொடுக்கின்ற முறைமை யெப்படியென்னில்? யாதொரு வேளாண்மையைச் செய்யுமவர்கள் செய்த பிரயோசனத்தைக் கொடுக்குஞ் செய்போலக் கொடுப்பன்.

அது செந்நெலிடப் பூநிவிளையாதென்பதாம். எனவே கர்த்தாவுக்கு விருப்புவெறுப் பில்லையென்பதாயிற்று.

செயலணையா சென்று எ-து. இப்படிச் செய்கிறவன் விகாரியாகானோ வென்னில்? விகாரியாகான். அவன் சந்நிதிமாத்திரத்தே நடக்கும். அந்தச்செய் விகாரமின்றியிருக்க வதுவிளைந்தாற்போல வென்றதாம். எ-று.

தழைமுதலிய இடுவார்க்குப் பயன்மிகக்கொடுத்தும், இடாதோருக்குக் குறையக்கொடுத்தும் செய்யும்செயல்போல வென்பாருமுளர். அது உவமையன்று, "இருவினை யின்பதுன்பம்" "பேறிழவின்பமோடு பிணிமூப்புச்சாக்காடென்னும்" "உடற்செய்கன்மமிந்த வுடல்வந்தவாறேதென்னில்" "முற்செயல்வினையாலிந்த முயற்சியோடநுபவித்தா - லிற்செயல்பலிக்குமாறென்" "மேலைக்குவித்துமாகி விளைந்தவையுணவுமாகி - ஞாலத்துவருமாபோல" "அருளினாலுரைத்த நூலின்" "மருத்துவனு

ாத்த நூலின் வழிவரிற்பிணிகள்வாரா" "மண்ணுளேசிலவியாதி மருத்துவனருத்தியோடுங் - திண்ணமாயறுத்துக்கீறித் தீர்த்திடும்" என்பனவழிநூலாரிந்தவெண்பாவால் விரித்தவாறறிக. சித் - உ—ரு, ச - கூ - கO - கக - கஉ - ௩௩ - ௩ச - ௩ரு—செ.

கத்தா விருப்புவெறுப்பின்றி ஆன்மாக்களைப் பிரித்துக் கூட்டுவனெனன்னும்பக்கமும், அஃதெத்தாலென்னில்? வினையாலென்னுமேதுவும், அஃதென்போலவென்னில்? செய்போலவென்னும் சபக்கமும், வினையில்லையாயிற் செயலில்லை யென்னும்விபக்கமும் கூறியவாறுகாண்க. (ரு)

---

சிவஞானமுனிவர் உரை.

எ-து. உ-ம். எ-னின். வினை உண்டென்பதற்கும், அதுவே உயிர்க்குப் பயனாய் வருமென்றற்கும், மேல் வினையேறுமாற்றிற்கும், அது முதல்வனையின்றி யமையாமைச்கும், பிரமாண மென்னையென்னுங் கடாவை யாசங்கித்து ஏதுவை வலியுறுத்துத லுதலிற்று.

இ-ள். உள்ளதே தோற்ற. எ-து. இல்லது தோன்றாதென்பது மேற்கூறிப்போந்தமையான், முன் உள்ளதாய புண்ணிய பாவமென்னும் இரு கூற்றுச் சஞ்சிதவினையே தன் பயனாகிய இன்பதுன்பங்களையும், அவை நுகர்தற்குரிய நிலைக்களமாகிய உடம்பினையுந் தோற்றுவிப்ப,—உயிர் அவ்வுடலின் அணையும். எ-து. அவ்வின்ப துன்பநுகர்ச்சி சடத்துக்குக் கூடாமையிற் சித்தாகிய உயிரே அவ்வுடம்பிற் பொருந்தி அவற்றையநுபவிக்கும். முன் வினையை ஈண்டநுபவித்தொழிந்தால் மேலைக்கு வினையுண்டாமாறியாங்ஙனமெனின்?—முன் செய் வினை உள் அடைவே உள்ளதாம். எ-து. முன் செய்த வி

னை அநுபவித்தற் கேதுவான முறைமையிலே மேலைக்கு வினையுளதாம். அற்றேல், அவ்வினையே பயனாக வருமெனவமையும் முதல்வன் எற்றுக்கெனின்?—செய்பவர் செய்திப் பயன் விளைக்குஞ் செய்யேபோல். எ-து. உழவர் செய்யுந் தொழிற்குத் தக்கபயனை விளைநிலம் விளைவிப்பதன்றி அத்தொழிற்றானே விளைவிக்க மாட்டாததுபோல—வள்ளலவன் செய்வன். எ-து. உணவும் வித்துமாய்த் தொன்று தொட்டு வரும் அவ்வினைகளை வள்ளலாகிய முதல்வனே அவ்வுயிர்கட்குக் கூட்டுவன்:—செயல் சென்று அணையா. எ-து. அவ்வாறன்றி வினை தானே உயிர்கட்குப் பயனாய் வந்து பொருந்தமாட்டாது. எ-று.

வள்ளலென்றார், தற்பயன் குறியாது "வேண்டுவார் வேண்டிய" வாறே நல்கும் அருளுடைமை நோக்கி. திருநாவுக்கரசுநாயனார் திருமறைக்காட்டுத்திருத்தாண்டகம்,க—செ. "தூண்டு சுடரனைய;".

உள்ளடைவு உன்னுதற்கேதுவாகிய அடைவென விரியும். ஏகாரம் ஏழாவதன்பொருட்கண் வந்தது. உள்ளுதல் ஈண்டநுபவித்தல். அதற்கேதுவாகிய முறைமையாவன, அநுபவித்தற்குத் துணைக்காரணமாகிய விருப்பு வெறுப்புக்கள். அவற்றின் சுணுண்டாமாறு முன்னர்க்காட்டுதும்.

மேல் முதல்வனுக்கு வினை வேண்டப்படுமென்பதற்கு அரசனையுவமைகூறினார்; ஈண்டு வினை முதல்வனையின்றியமையாதென்பது உணர்த்துதற்கு உழவுதொழிலையுவமை கூறினாரெனக் கொள்க.

---

அவ்வினையிற் செய்வதனி லவ்வினைஞர் தாஞ்சென்றங்
கவ்வினையிற் காந்த பசாசம்போ - லவ்வினையைப்

போரம ஹூட்டும் பிராணி னுகராரோ
லார்தா மறிந்தணைப்பா ராங்கு.

இது, ஆன்மா கன்மத்துக்கீடாயின தேகத்தைத் தானே பொருந்து மென்போர்க்கும், கன்மந் தானேசென் றெருந்த கத்தைப்பொருந்தும் கத்தாவேண்டாவென்போர்க்கும், அவையி ற்றைமறுத்துக் கத்தாவாலொழிந்தாகா தென்றது.

இ-ள். அவ்வி முன்புண்டான கன்மம்போலப் பின்புந் னையிற் கன்மத்தைச் செய்யுமிடத்து.
செய்வ
தனில்.
எ-து.

இன்-உவமம் பொருள். என்றது முன்புண்டான கன்மம் புசித்துவருகச்சே யவனையறியாமல் ஆகாமிய மேறுமாபோ லென்றதாம். எனவே முன்பு நா மின்னகன்மஞ்செய்தே மின்னகன்மம் புசிக்கின்றோம் மேலுமின்னகன்மஞ் செய்துகொள்ளுகின்றோமெ ன்று ஆன்மா வறியாதென்றதாம். கன்மமு மின்னகன்மஞ் செய்தா னின்னதூட்டவேணும் மேலுமின்னதுசென்று பொருந்தவேணுமென்று மறியாதென்றுமாம்.

அவ் வினைஞர் பிராரத்தகன்மத்தைப் புசிப்பதான வர் தாஞ்சென்றங் ன்மாக்கள் தாம் புசிப்பதான கன்மத்திலே சவ்வினையி லவ் கூடி யந்தக் கன்மபலங்களை.
வினைபை எ-து.

காந்த பசாச காந்தத்தையு மிரும்பையு முகமொக்க ம்போற் போரா வொருவன் கூட்டுமாபோலக் கூட்டித் கப் ம ஹூட்டும் பி பாமற் புசிப்பிக்குங் கத்தாவாலே புசியா ராணி னுகரரோ களாகில்.
ல் எ-து.

என்றது - காந்தமும் வலித்துக்கொள்ளுந் தன்மையுடைத்து, பசாசமும் வலிகொடுக்குந் தன்மையுடைத்து, அவ்விரண்டு மொருதானத்திலேகிடக்கச்சே காந்தமும் வலித்துக்கொண்டதில்லை; பசாசமும் வலிகொடுத்ததில்லை; அவ்விரண்டையு மொருவன் முகநோக்கப் பிடித்தபொழுது காந்தமும் வலித்துக்கொண்டது, பாசமும் வலிகொடுத்ததுபோல வென்றதாம்.

ஆர்தா மறிந் யாவர்தா மவையிற்றை யறிந்துகூட்டத்தப்பா ராங் வல்லார், அந் தந்த யோனிகடோறும் அங்கு எ-து. தந்த வுலகங்கடோறும். எ-று.

என்பது, முன்புசெய்தவினைப் புசிக்குமிடத்து அந்தவினையையுடையவர்கள் தாமாயறிந்து அந்தவினையைக் கூடிப்புசிக்கமாட்டார்கள். அந்தவினை தானறிந்துசென்று வினையுடையவர்களைக் கூடமாட்டாது. புசித்துவருகின்ற முறைமையுண்டாகையாலே ஆன்மாக்கள் செய்கின்ற கன்மங்களெல்லாங் கத்தாவே யறிந்து பக்குவாபக்குவங்களுக் கிடாகக் கூட்டிப்புசிப்பிப்பனென்றதாம். ஆர்தானென்றது வேறொரு தெய்வமில்லை யென்பதாம். அது "யாதொரு தெய்வங்கண்டீர் அத்தெய்வமாகி யெங்கு-மாதொருபாகனார் தாம் வருவர்" "இங்கு நான் சிலர்க்குப்பூசை யியற்றினால்" "காண்பவன் சிவனேயாகில்" "தாபரசங்கமங்கள்" "அரனடிக்கன்பர்"—என்பன விதன்வழிநூலால் விரித்தவாறறிக. சித்-உ—கூ, உஎ-உசு - உஎ உஅ—௫௪.

ஆன்மாக்கள் செய்த கன்மங்களை யறிந்து கூடிநுகர்விப்பனென்றதற்கு "இதமகிதங்களெல்லா மிறைவனே" "இறைவனிங்கேற்பதென்னை" "நிக்கிரகங்கடானும்தேசத்தால்" "தந்தைதாய்பெற்ற தத்தம் புதல்வர்கள்" என்பனவற்றாலறிக. "இம்

மையின் முயற்சியானே" "இருவினைச்செயலின்" என்பன மூன்செய்த கன்மம் புசிப்பதறிக. "செயல்களே பலத்தைச் செய்யும்" "செய்தவர் மனத்தே யெல்லாச்செய்தியும்" "தானஞ்செய்பொருடரித்தோர்" "உலகுடல் கரணங்கால முறுபல" என்பனவற்றாற் கத்தா கூட்டுமாறறிக. அவ்வவ்யோனிதோறு மவ்வவ்விடங்கடோறும். எ-து. ஆன்மாவு மறியாது கன்மமுமறியாதென்பதறிக. சித் - உ—ரு, கங - கச - கரு - கசு - எ - அ - கஎ - உ0 - உக-உஉ—செ.

இப்படியிந்த வெண்பாவா லப்பலபொருளும் விரித்தவாறறிக.

கத்தா கன்மத்துக்கிடான தேகத்தை யான்மாக்களுக்குக் கூட்டுவனென்னுந் துணிபொருட் பக்கத்துக்கு, காந்தமும் பசாசமும்போலவென்னுஞ் சபக்கமும்; கூட்டானேற்கூட்டாதென்னும் விபக்கமும் வந்தவாறு காண்க. (சு)

---

சிவஞானமுனிவர் உரை.

எ-து. உ-ம். எ-னின். இருவினை சடமாகலிற் சென்றணையமாட்டாவாயினும், உயிர்கள் சேதநமாகலின் அவையே அவற்றது பயனை யறிந்து எடுத்துக்கொண்டு நுகரும்; வள்ளல் எற்றுக்கு என்னுங் கடாவை யாசங்கித்து அதனை வலியுறுத்துத னுதலிற்று.

இ-ள். காந்த பசாசம்போல். எ-து. ஒருவனெடுத்து நேரொக்கப் பிடித்தவழி இரும்பினை வலித்துக்கொள்ளுங் காந்தம்போல—அவ்வினையைப் பேராமல் ஊட்டும் பிரானின். எ-து. அவ்வினைப்பயன்களைப் பிறழாமல் நுகர்விக்கும் முதல்வனல்—அவ்வினைஞர் தாம். எ-து. அவ்வினைகளைச் செய்

யும் ஆன்மாக்கடாம்—அவ்வினையைச் செய்வதனிற் சென்று அவ்வினையை நுகராரேல் ஆர் தாம் அறிந்து அணைப்பார். எ-று. அவற்றைச் செய்தற்கு நிலைக்களமாகிய உடம்பின்கட்பொருந்தி அவற்றதுபயனை அநுபவிப்பர்; அவ்வாறநுபவியாராயின், வேறே எவர்தாம் அவற்றையறிந்துகூட்டுவார்—ஆங்கு. எ-து. அறிவுஞ் சுதந்திரமுமின்றி மலத்தின் மறைப்புண்டு கிடக்கும் அப்பெத்தகாலத்து. எ-று.

ஒருவருமில்லை யென்பதாம்.

ஆன்மாக்களுக்குத் தமக்கென அறிவின்மையானும், வினை சடமாகலானும்,'மாயை தாரகமாமத்தன்றுணிற்றல்'எனப்போந்தமையானும், முதல்வனே 'அறிந்தணைப்பன், எனப் பாரிசேடவளவை கூறுவார், 'பிரானினுகராரே லார்தா மறிந்தணைப்பார், என்றார். இது சொற்பொருட் பின்வருநிலை.

---

நெல்லிற் குமியு நிகழ்செம்பினிற் களிம்புஞ்
சொல்லிற் புதிதன்று தொன்மையே - வல்லி
மலகன்ம மன்றுளவாம் வள்ளலார் பொன்வா
ளலர்சோகம் செய்கைமலத் தாம். (௬)

இது, ஆணவ மாயை கன்மமென்னு மூன்றுமலமு மநாதி, கர்த்தா சருவஞ்ஞன், ஆன்மா கிஞ்சிஞ்ஞன் என்பதுவும், கர்த்தா அவிகாரியென்பதுவும் கூறுகின்றது.

இ-ள். நெல்லிற் குமியும் நிகழ் செம்பினிற் களிம்பு — நெல்லுக்கு முளையுந் தவிடு முமியுமநாதியே, செம்புக்குக் களிம்பு சொல்லுமிடத்துப் புதிதாகவுள்ளதல்ல, அநாதியிலேயுண்டானது.

ஞ் சொல்லி
ற் புதிதன்று
தொன்மை
யே எ-து.

ஏகாரம் தேற்றம்.

| | |
|---|---|
| வல்லி மல கன்ம மன்றுளவாம். எ-து. | விலங்காகிய கன்மமலமும் ஆணவமலமு மாயாமலமு மவைபோல வநாதியிலே யுள்ளதாம். |
| வள்ளலார் செய்கை எ-து. | கத்தா வினையிற்றைச் செய்யுஞ்செயல். ஆல் - அசை. |
| பொன் வாளலர் சோகம் செய்கை எ-து. | ஆதித்தனுடைய கிரணங்கள் அலர்வனவற்றை யலர்த்தியும், குவிவனவற்றைக் குவித்துஞ்செய்யுஞ் செயல்போலும். |

இப்படிச்செய்யவேண்டிய தென்னையெனின் ?

| | |
|---|---|
| மலத்தாம் எ-து. | ஆணவமலத்தைப் புசிக்குதல் காரணமாகவாம். |

மலமூன்று மொருகாலத்துளதென்பதுதோன்ற நெல்லுக் குமியும் செம்பிற்களிம்பும்போல வென்றும். எனவே, ஆன்மா வநாதிமலசம்பந்தனாய் வினைக்கீடாகக் கத்தாகூட்டின தேகத்தேநின்று பிராரத்தகன்மம் புசிப்பதென்பதனால் கிஞ்சிஞ்ஞத்துவமும், கத்தாவுக்குச் சர்வஞ்ஞத்துவமுங் கூறினார்

ஆதித்தனுடைய சந்நிதியிலே யலர்வனவலர்ந்து குவிவன குவிந்துவர அவன் விகாரமற்றிருந்தாற்போல, கத்தாவும் விகாரமற்றிருப்பது கூறினார்.

ஆதித்தனுடைய ஒருகிரணம் பலவிதமானாற்போலக் கத்தாவினுடைய சிற்சத்தியும் பலவிதம். ஆண்டும், அப்பொழுது கத்தாவும் போகாதிகாரவானாகி யிச்சாஞானக்கிரியைகளையுடையவனாவன். அப்பொழுது அந்தச் சிற்சத்தி இச்சாசத்தியென்றும், ஞானசத்தியென்றும், கிரியாசத்தியென்றும் பெயரையுடைத்தாம். "ஒன்றதாயிச்சாஞானக் கிரியையென்றொருமூன்றாகி - நின்றிடுஞ்சத்தி" என்றார்வழிநூலார். சித் - க—சூ, சுரு—செ.

மல மநாதியென்பதற்கு "ஒன்றதாயநேகசத்தி யுடையதாயுடனாயாதி யன்றதா" யென்றார். சித் - உ—சூ, அ—செ.

மாயாமல மநாதியென்பதற்கு "நித்தமாயருவாயேகநிலையதா' 'என்றார். சித் - உ—சூ, ருரு—செ.

கன்மமலமநாதியென்பதற்கு "தன்மமோடதன்மமாகித் தானிருபயனும்" அஃதெத்தாலென்னில் ? ஆன்மாக்களினுடைய கன்மங்களுக்கிடாக வுண்டான தேகத்திலேநின்றும் - லயம்போகாதிகாரையாய் "தந்து-நன்மைதீமையினுமின்ப துன்பினுநாடிக்காண" என்றார் சித் - உ—சூ, ருசு—செ.

கன்மமென்றது புண்ணியபாவங்கள். அது "இருவினைச்செயல்காணிம்மை யிரும்பொருளின்டம்வேண்டி - வருவினைசெய்யுங்காலை" என்பதனாலறிக. சித் - உ—சூ, அ—செ.

மாயையென்ற தியாதென்னில் ? சுத்தமாயையும் அசுத்தமாயையும்.

இவையொன்றோ விரண்டோவென்னில் ? அவை யொன்றாயிருக்கச்சே யிரண்டாயிருக்கும்.

அஃதென்போலவென்னில் ? கண்ணாடியி லிருபுறமும்போல

ஆனாற் சுத்தமாயையிலுள்ளவை யெவை, அசுத்தமாயையிலுள்ளவை யெவையென்னில்?

சுத்தவித்தை - ஈசுரம் - சாதாக்கியம்-சத்தி - சிவம் - இவையைந்துஞ் சுத்தமாயையிலே தோன்றும். சூக்குமை - பைசந்தி - மத்திமை - வைகரியாதியாகியகலைகளுந் தோன்றும்.

அது ஞானமாய்நின்றபொழுது சிவமென்றுபெயராம்.

கிரியையாய்நின்றபொழுது சத்தியென்றுபெயராம்.

அந்தஞானமுங் கிரியையுந் தம்மிற் சமமொத்து நின்றபொழுது சதாசிவமென்றுபெயராம்.

அதில் ஞானங்குறைந்து கிரியையதிகமானபொழுது மகேசமென்றுபெயராம்.

அதிற் கிரியைகுறைந்து ஞானமதிகமானபொழுது உருத்திரமாம்.

அது சுத்தவித்தை. இவையிற்றுக்கு முற்பிற்பாடில்லை, நின்ற நின்ற நிலைகளிலே பெயர்பெற்றன.

அன்றியும், விந்துவி லாயிரத்தொன்றிலே ஞானந்தோன்றியதென்றும், ஞானத்தி லாயிரத்தொன்றிலே கிரியைதோன்றிடதென்றும், இப்படி யிப்படி தோன்றினகிரமஞ் சொல்லுவாருமுளர். "வித்தைக ளவித்தை யீசர் சதாசிவ ரென்றிவர்க்கு வைத்துறும்பதங்கள்" சித் - க—கூ, உரு—செ. "ஞானமேயானபோது சிவன்ருழில் ஞானமொக்கில்"-கூரு. "வித்தையோ டீசர் சாதாக்கியஞ் சத்தி சிவங்களைந்தும்-சுத்ததத்துவஞ் சிவன்றன் சுதந்தரவடிவமாகும்"- கூகூ. என்பனவற்ருலறிக.

விந்துவின் மாயையாகி யென்பதனாற் சுத்தமாயை யசுத்தமாயை யிரண்டும் வேறல்லவென்பதறிக.

இனி, காலமுதலாகப் பிருதிவியந்தமாக வசுத்தமாயையிலே தோன்றும். அவைதோன்றுமாறு:

மாயையிலே காலமும் நியதியுங் கலையும் வித்தையு மராகமும் புருடனும் இவைதோன்றும்.

ஆக மாயையுட னேழு.

இவை, சுத்தமு மசுத்தமுமா யிருக்கும்.

முன்சொன்னகலையிலே மூலப்பிரகிருதிதோன்றும்.

அந்த மூலப்பிரகிருதியிலே இராசத - தாமத - சாத்துவிக மென்னும் மூன்றுகுணமுந்தோன்றும்.

அந்த மூலப்பிரகிருதியாகிய அவ்வியத்தத்திலே, சித்தமும் புத்தியுந் தோன்றும்.

அவ்வியத்தம் - மூலப்பிரகிருதி - மகான் - என்பனஒருபெயர்.

அந்தப்புத்தியிலே யாங்காரந்தோன்றும்.

அந்தவாங்காரம், பூதாதியாங்காரம் - வைகரியாங்காரம் - தைசதவாங்காரமென மூன்றும்.

தைசதவாங்காரத்தே, மனந்தோன்றும்.

வைகரியாங்காரத்திலே,ஞானேந்திரியமுங் கன்மேந்திரியமுந் தோன்றும்.

ஞானேந்திரியமாவன:—செவி-மெய் - கண் - வாய் - மூக்கு,

இவையிற்றின் விடயம்:—சத்த - பரிச - ரூப - ரச - கந்தம்

கன்மேந்திரியங்களாவன:—வாக்கு-பாத - பாணி - பாயுரு-உபத்தம்.

இவையிற்றின விடயமாவன:—வசன-கமன - தான - விசர்க்க-ஆனந்தம்.

முன்சொன்ன பூதாதியாங்காரத்தே, சத்த பரிச ரூப இரத கந்த மைந்துந் தோன்றும்.

சத்தத்திலே ஆகாசந் தோன்றும்.

பரிசத்திலே வாயு தோன்றும்.

உருபத்திலே தேயுதோன்றும்.

இரதத்திலே அப்புதோன்றும்.

கந்தத்திலே பிருதிவிதோன்றும்:

இந்தச்சத்தாதியும் வசனாதியும் ஒன்றுக்கொன்று ஆதாரமாம். ஆலும் விழுதும்போலென வறிக.

இப்பொருள் "மாயையிற்காலமோடு நியதிபின்கலாதிதோன்றி" "விச்சையிலராகந்தோன்றி" "வருங்குணவடிவாய்" "சித்தமாமவ்வியத்தம்" "ஆங்காரம் புத்தியின்கண்ணுதித்து" "மனமதுதைசதத்தின்வந்து" "நற்செவிதுவக்குக்கண்ணு" "வாக்கொடுபாதம்பாணி பாயுவோடுபத்தமைந்தும்" "ஓசைநற்பரிசரூபவிரதகந்தங்கள்" "சாற்றிய பஞ்சதன்மாத்திரைகளில்" என்பனவற்றாலறிக. சித் - உ—கூ, ருச - ருகூ - ருஎ - ருஅ - ருகூ - கூ0 - கூக - கூஉ - கூச - கூரு—செ.

ஆகச்சுத்ததத்துவ மைந்தும், வித்தியாதத்துவ மேழும், ஆன்மதத்துவ மிருபத்துநாலுங்கூடி முப்பத்தாறும். "சுத்த தத்துவங்களென்று முன்னமே சொன்னவைந்தும்" "ஐந்துசுத்தத்தின்கீழ்" என்பனவற்றாலறிக. சித் - உ—கூ, கூக-எ0—செ.

இவை தூலசூக்கம் பரமாநிற்கும். "தத்துவரூபமாகுந் தருமுருவானவெல்லாம்" என்பனவற்றாலறிக. எக—செ.

ஒடுங்குமாறுணர்த்துவது "தத்துவமெண்மூன்றுஞ்சென் ற, ன்மதத்துவத்தொடுங்கும்" என்பதனாலறிக. எஉ—செ.

இதிற் சிவ மென்றது - விந்துவை.

ஆணவமலத்தைப் போக்கவென்றது. "எல்லாமாய்த்தத் துவங்க ளியைந்ததெனணுவுக்கென்னில்" என்பதனாலறிக. சித்- உ—சூ. எகூ—செ.

ஆன்மா அநாதிமலசம்பந்தனென்றும், அந்த மலமூன்று மொருகாலத்துள்ளதென்றுங் கூறியபக்கத்துக்கு, நெல்லுக்கு மியுஞ் செம்பினிற்களிம்பும்போலவென்று சபக்கங்காட்டியவா றுகாண்க.

சத்தா வவிகாரியாயிருந்து பிரபஞ்சகிருத்தியம் பண்ணுவ னென்னும் பக்கமும், அஃதெத்தால் ? மலத்தைநீக்கி முத்தி கொடுத்தற்கு எனவே அருள்காரணமாக வென்னுமிமதுவும், அஃதென்போலவென்னில் ? ஆதித்தனைப்போலவென்னுஞ் ச பக்கங்காட்டியவாறறிக.

மலத்தை நீக்கவெனவே முத்திகொடுக்கவென்பது தானே யாயிற்று. "மும்மலநெல்லினுக்கு முளையொடுதவிடுமிப்போ ல்" அன்றிப் பஞ்சமலமுங்கூறுமது. "மாயையின் காரியத் தை மாயேயமலமதென்று" என்பதனாலறிக. இவை விரித் துக்கூறுக. சித் - உ—சூ, அகூ - அஎ—செ. (கூ)

---

சிவஞானமுனிவர் உரை.

எ-து. உ-ம். எ-னின். அவ்வினை ஆதியோ அநாதியோ? ஆதியெனின் முன்பில்லது இடையே தோன்றுமென்பது சற் காரியவாதத்துக்கேலாது; அநாதியெனின்? ஒருவர் கூட்டவே

'ண்டுவதில்லையென்னுங் கடாவை யாசங்கித்து அதனை வலியுறுத்துத னுதலிற்று.

இ-ள். நெல்லிற்கு உமியும் நிகழ் செம்பினில் களிம்பும் சொல்லின் புதிது அன்று தொன்மையே. எ-து. நெல்லின்கணுமியும் செம்பின்கட்களிம்பும் எக்காலத்துளவாயினவென்று ஆராய்ந்து சொல்லுங்கால், அந்நெல்லுஞ் செம்பும் உளவாயின வன்றே உள்ளனவன்றி இடையேவந்தனவல்ல; அதுபோல,—வல்லி மலகன்மம் அன்று உளவாம். எ-து. மாயை மலம் கன்மமென்னு மும்மலங்களும் அநாதியேயுள்ளனவாம்—கமலத்து அலர் சோகம் பொன்வாள் செய் வள்ளலால் ஆம். எ-து. முன்னேயுள்ளதாய தாமரைப்பூ அலர்தலும் கூம்புதலும் ஞாயிற்றினாற் செய்யப்படுமாறுபோல அவை தத்தங் காரியக்களைச் செய்தல் முதல்வனாலேயாம். எ-று.

இஃதெடுத்துக்காட்டுவமை.

புதிதன் றென்பதனைத் தனித்தனிக் கூட்டுக.

தொன்மையி னுள்ளவற்றைத் தொன்மை என் றுபசரித்தார்.

ஏகாரம் பிரிநிலைக்கண் வந்தது.

மாயை இறைவனுக்குப் பரிக்கிரகசத்தியாகலின், வல்லியென்றார்.

வினைக்குத் தொன்மைகூறுவார் இனம்பற்றி மாயைமலங்களுக்குந் தொன்மை கூறினார்.

மூலமலத்தின்காரியம் மோகம் மதமுதலாயின. இருவினையின்காரியம் இன்ப துன்பமுதலாயின. மாயையின்காரியம் தநுகரணமுதலாயின. வள்ளலாலாமெனவே திரோதானசத்தியது உண்மையும்பெற்றாம். அது பாகம் வருவித்தற்பொருட்டு மலத்தின்வழி நின்று மோகமுதலியவற்றைத் தொழிற்படுத்துவதாகிய சிவசங்கற்பத்திற் கேதுவாதல்பற்றி மலமென்

றுபசரித்துக் கூறப்படும். இவ்வாறு மல கன்ம மாயை திரோதானம் மாயாகாரியமென்னும் ஐவகைப்பாசமுங் கண்டுகொள்க.

இவற்றுண் மாயை, சுத்தமாயை அசுத்தமாயையென்றிருவகைப்படும். இவ்விரண்டினுட் சுத்தமாயையின் காரியமே அசுத்தமாயையென்பாரும், சுத்தமாயைபோல அசுத்தமாயையும் அநாதியேயாமென்பாரும், ஒன்றுதானே ஊர்த்துவமாயை அதோமாயையென் றிருவகைப்படுமென்பாரும் எனப் பலதிறத்தர் ஆசிரியர். இனி முதல்வனது கிரியாசத்தியே சுத்தமாயையெனப்படுமென்பாருமுளர். அது முதல்வனுக்குத் தாதான்மியசத்தியாகலிற் பரிக்கிரகசத்தியாகிய சுத்தமாயையாதல் யாண்டையதென்றொழிக.

சுத்தமாயையினின்றும் பஞ்சகலைகளும் நால்வகைவாக்குஞ் சிவதத்துவமைந்துஞ் சுத்தகாலமுதற் சுத்தநிலமீறுகிய முப்பத்தொன்றுந் தோன்றும்.

அசுத்தமாயையினின்றும் அசுத்தகாலமுதல் அசுத்தநிலமீறுகிய முப்பத்தொரு தத்துவங்களுந் தோன்றும்.

இத்தத்துவங்களெல்லாம் பொதுவுஞ்சிறப்பும் பொதுச்சிறப்புமெனத் தனித்தனி மூவகைப்பட்டு உயிர்கடோறும் வெவ்வேறுளவாம்.

கன்மமும் "நாசோற்பத்தி பண்ணிவரு மாதலா லநாதி" என்பதுபற்றிப் பிரபஞ்சம்போலப் பிரவாகாநாதியென்பாரும், சிவப்பிரகாசம், பொது. கசு. நண்ணியிடு. "ஏகனேக னிருள்கரும மாயையிரண்—டாகவிவையாறு தியில்." எ-ம். திருவருட்பயன். அறியுநெறி-உ—செ. "ஆணவ முதலன் றதுபோற் கருமமும்". எ-ம். ஒப்ப வோதுதல்பற்றி மூவகைவி

னைக்கும் முதற்காரணமாய மூலகன்மமொன்று அநாதிநித்தமா யுண்டென்பாருமென்று இருதிறத்தாராசிரியரென்க. இவ்வினை யீட்டப்படுங்கால், மந்திரமுதலிய அத்துவாக்களிடமாக மனம் வாக்குக்காயமென்னும் மூன்ருனீட்டப்பட்டு, தூலகன்மமாய் ஆகாமியமெனப் பெயர் பெற்று, பின்னர்ப் பக்குவமாங்கா றுஞ் சூக்குமகன்மமாய்ப் புத்திதத்துவம் பற்றுக்கோடாக மாயையிற்கிடந்து, சாதி ஆயுள் போகமென்னும் மூன்றற்கு மேதுவாய் முறையே சனகந் தாரகம் போக்கியம் என்னு மூவகைத்தாய், அபூர்வம் சஞ்சிதம் புண்ணியபாவமென்னும் பரியாயப் பெயர் பெற்று, பின்னர்ப் பயன்படுங்கால் ஆதிதைவிகம் ஆத்தியான்மிகம் ஆதிபௌதிகம் என்னு முத்திறத்தாற் பலதிறப்பட்டு, பிராரத்தமெனப்பெயர்பெறும்.

ஆதிபௌதிகமாவதுசடம் வாயிலாக வருவது.

ஆத்தியான்மிகமாவது சடத்தோடுகூடிய சேதநம் வாயிலாக வருவது.

ஆதிதைவிகமாவது ஒருவாயிலானன்றித் தெய்வந்தானே காரணமாகவருவது.

இன்னும் இவ்வினைகள், உலகம் வைதிகம் அத்தியான்மிகம் அதிமார்க்கம் மாந்திரம் என்று ஐவகைப்பட்டு ஒன்றற்கொன்று ஏற்றமுடைத்தாய், முறையே நிவிர்த்திமுதலிய பஞ்சகலைகளி னடங்கி, அசுத்தம் மிச்சிரம் சுத்தமெனப்படும் போகங்களைப் பயப்பிக்குமென்றறிக.

☞ உ—கு, இரண்டாமதிகரண முடிந்தது.

---

கண்ட நனவைக் கனவுணர்விற் ருன்மறந்து
விண்டார்ந் தத்தூடு வினையினுற் - கண்செவிகெட்

டுள்ளதே தோற்ற வுளமணுவாய்ச் சென்றுமனந்
தள்ள விழுங்கருவிற் றான். (எ)

இது, ஆன்மாவுக்குத் தேகம்விட்டால் அறிவில்லையென்றும், மீண்டொருதேகமெடாதென்றும் சொல்வோர்க்கு, அவையுண்டென்கின்றது.

இ-ள். கண்ட நனவைக் கனவுணர்விற் றான்மறந்து எ-து. ஆன்மா முன்புகண்டு பரிசித்துப்போந்த நனவிலுள்ள காரியங்களைத் தான்மறந்து கனவிலே நின்றறியுமறிவைப்போல.

கண்செவி கெட்டு எ-து. கண்செவிமுதலாகிய தூலசரீர மிறந்து.

உளமணுவாய் விண்ணூடேபடர்ந்துசென்று எ-து. ஆன்மா சூக்குமதேகத்துடனே ஆகாயம் வழியாகப்போய்.

வினையினால் எ-து. முன்புசெய்த கன்மங்களாலே.

உள்ளதே தோற்றம் எ-து. நரகசுவர்க்கமுதலிய போகங்களுக்கேற்ற தேகம் வந்துண்டாக.

மனந் தள்ள விழுங் கருவிற் றான். எ-து. மனத்தையும் தோற்பிக்கும்படி விரையக் கர்ப்பாதானத்தே விழும். எ-று.

மனந்தள்ள என்றது மனமுந்தோற்க வென்றதாம்.

மனம் நினைத்தவிடத்தே யோர்மாத்திரைக்குட்செல்லும், அதிலும் விரையச் செல்லுமென்றதாம். "வினைமாண்டுபின் மனமாண்டெறிற்றுடில் பலபகுத்தவிடையிற்சேறல்" என்றார் ஞானாமிர்தத்தினும் "மலமாயைகன்ம மாயேயந்திரோதாயி

மன்னி" என்றார் வழிநூலார். சித் - உ—ரு, அ—செ.

விழுமென்றவும்மையால் விழாமற் பாவமிகுதிகளாலே பாடாணம்போற் கிடக்குமென்பதுமாம் அது "உடல்விடாயோனி பற்றி யுதிப்பினுமுதிக்கும்" என்பதனாலறிக. ௩எ—செ.

"பூதனாசரீரம்போனாற் புரியட்டரூபந்தானே" என்பதனால் நரகசுவர்க்கபோகந் துய்ப்பதறிக. ௩௬—செ.

நனவின்கணுண்டாகிய கனவின்கண்மாறிச் சீவித்தாற்போல ஆன்மா தேசத்துக்கிடான அறிவுமாறி சீவித்து நிற்கும்.

அறிவுகெடாதென்றும், தேகமாறுமென்றும், சூக்குமதேகத்தோடேசென்று நரகசுவர்க்கந்துய்க்குமென்றுங் கூறிய பக்கத்துக்குக் கனவு சபக்கமாயினவாறுகாண்க. (எ)

---

சிவஞானமுனிவர் உரை.

எ-து. உ-ம், எ-னின். புன்றாற்பவ மாங்காற் படும் இயல்புகளுணர்த்தி அதனை வலியுறுத்துத னுதலிற்று. கண் செவி கெட்டு உள்ளதே தோற்ற உளம் அத்தூடு விண்படர்ந்து கண்ட நனவைக் கனவு உணர்வில் தான் மறந்து மனம் தள்ள வினையினால் அணுவாய்ச் சென்று கருவில் விழுந்தான் எனக்கொண்டு கூட்டுக.

இ-ள். கண் செவி கெட்டு உள்ளதே தோற்ற. எ—து. கண் செவி முதலிய உறுப்புக்களையுடைய இவ்வுடம்பு கெட்டவழித் தனக்குக் கேடின்றிப் படைப்புக்காலந் தொடங்கிச் சங்கார காலமளவும் நிலைபெற்றுள்ளதாகிய சூக்குமதேகம் பூதசாரவுடம்பு முதலியனவாய்க் காரியப்பட—உளம் அத்தூடு விண்படர்ந்து. எ—து. உயிரானது அப்பூதசாரமுதலிய உடம்பின்கட் பொருந்தித் துறக்க நிரயங்களிற்சென் றநுபவித்துப் பின்னர்—கண்ட நனவைக் கனவு உணர்வின் தான் மறந்து. எ

-து. நனவின்கட் கண்டவற்றைக் கனுக்காணுங் காலத்து மறந்து அறிவு வேறுபட்டாற்போல, முன்னைக் கண் செவி கெட்டவாறும் உள்ளதே தோற்ற அத்துடு விண்படர்ந்தவாறும் ஆண்டநுபவித்தவாறுமாகிய இன்னோரன்னவற்றை மறந்து அறிவு வேறுபட்டு,—மனந் தள்ள வினையினால் அணுவாய்ச் சென்று கருவில் வீழ்ந்தான். எ-று. முன்னுடம்பு இறக்குங்கால் அடுத்த வினை காட்டுங் கதிநிமித்தம் பற்றி உயிர் அவாவுமாறு மனஞ்செலுத்துதலான் அக்கதிக்கட்சேறற் கேதுவாய் எஞ்சிநின்ற புண்ணியபாவசேடத்தாற் சூக்குமதேக மாத்திரையாய்ச் சென்று அம்மனந் தள்ளிய கதிக்கு அமைந்த அக்கருவின்கட்படும். எ-று.

இன் உவம வுருபு. தான் அசை. மறத்தற்குச் செயப்படுபொருள் அவாய் நிலையான் வந்தது.

விண்படர்ந்தென்னும் உபலக்கணத்தால் நிரயம்படர்ந்தென்பதூஉம் பெறுதும், படர்ந்தெனக் காரியத்தைக் காரணமாக உபசரித்தார்.

அத்துடென்புழி அன்சாரியை விகாரத்தாற் றொக்கது. பொருந்தி யென்பது சொல்லெச்சம். வினை ஆகுபெயர்.

உடம்பு நீங்கிப்போங்கால் முதற்கட் கெடுவன கண்ணுஞ் செவியுமாகலின், அச்சிறப்பு நோக்கிக் கண் செவிகெட்டென்றுபசரித்தார். கெட்டவழியென்பது கெட்டெனத் திரிந்து நின்றது.

ஐம்பெரும் பூதத்தின் காரியமெனப்பட்ட தூலவுடம்பு சூக்கும வுடம்பின் காரியமா மாறென்னையென்னும் ஐயநீக்குதற்கு உள்ளதே தோற்றவென்றார்.

ஏகாரந் தேற்றம்.

ஆகாயமுதலிய தூலபூதங்கள் சத்தமுதலிய சூக்கும பூதங்களின் காரியமாதலின், அதுபற்றியே தன் மாத்திரை மயமாகிய சூக்குமவுடம்பிற் றோன்றுவதாய தூலவுடம்பு ஐம்பெரும் பூதமயமெனப் பட்டதன்றிப் பிறிதில்லையென்பது "பூதனுசரீரம் போனாற் புரியட்ட ரூபந் தானே யாதனு சரீர மாகி" எ-ம். சித் - உ—சூ, ௩௯—செ. "சூக்கும வடிவே தென்னிற் றூலகா ரணம தாகும்" எ-ம். ௪—சூ, ௧0—செ. "தூலமா முருவினுக்குச் சூக்கும முதல்." எ-ம். உ—சூ, ௫0—செ. "மாறிமிவ் வுருவ மெல்லாம் வருவதெங்கேனின் றென்னிற் கூறிய சூக்குமத்தாம்." ௪எ—செ. "விதிப்படி சூக்கு மத்தேயுருவரும்." எ-ம். ௪௯—செ. "மனுதிதரு முடல்." எ-ம். ௧௧—சூ, ௩—செ. வழிநூலாசிரியரும் இவ்வாறே கூறியவாறு காண்க. இஃதறியாதார் தத்தமக்கு வேண்டியவாறே யுரைப்ப. அதுதோன்றுங்கால் "காலமுற்று-நீக்கிடா மரம்பின் வேரோர் நீண்மர நிகழ்த்து" மாறுபோல உ—சூ, ௪அ—செ- "சூக்கும". சூக்குமவுடம்பு கெடாதுநிற்பத்தூலவுடம்பு "வேறுருகுறியாமாரம் வீரசங்கிலியுமா" தல்போல ௪எ—செ. வினைக்கீடாக அச்சுவேறுபட்டு "மதிக்கெழு கலைகள்போலவருவது போவதாம்." ௪௯—செ - "மாறியிவ்வுருவ." என்பதூஉம் வழிநூலாசிரியர் கூறியவாற்றானறிக.

அணு சூக்குமவுடம்பு.

தள்ள தள்ளுதலானென்க.

அக்கருவிலெனச் சுட்டுவருவிக்க.

தான் அசை.

உள்ளதே தோற்றவென்றதனால் உடற்றிரிவும், விண்படர்ந்தென்றதனால் இடத்திரிவும், கண்ட நனவைக் கனவுணர்விற்றான் மறந்தென்றதனால் அறிவுத்திரிவும் பெறப்பட்டன.

உள்ளதே தோற்றவென்றதனால் புதிது புதிதாய்த் தோன்றுதல் பற்றிச் சற்காரிய வாதத்திற்கு இழுக்கின்மையும், அத்துயிவின்படர்ந்தெனவும் அணுவாய்ச் சென்று கருவில் விழுமெனவுங் கூறியதனால் போக்குவரவுபற்றி வியாபகத்துக்கு இழுக்கின்மையும், வினைச்சேடத்தா லென்றதனால் துறக்க நரகங்களின் அநுபவித்தொழிந்தமை பற்றிப் புனருற்பவகாரணத்திற்கு இழுக்கின்மையும், மனந் தள்ளவென்றதனால் அஃதெஞ்சுதற்கேதுவுங் காட்டியவாறு.

வேதத்துட்கூறப்படும் பஞ்சாக்கிநிவித்தையின் இயல்புணர்த்துவார் கண் செவி கெட்டவழி விண் படர்ந்து மறந்தணுவாய்ச் சென்று கருவில் விழுமென்றார். பஞ்சாக்கிநிவித்தையினியல்பு நீலகண்டபாடியத்திற் காண்க.

மறந்து விண்படர்ந்தெனக் கூட்டியுரைப்பாருமுளர். துறக்கநிரயங்களிற்படர்ந்து அநுபவிப்புழி அறிவுதிரியாமை புராணங்களுட்காண்க.

---

அரவுதன் றோலுரிவு மக்கனவும் வேறு
பரகாயம் போய்வருமப் பண்பும் - பரவில்
குடாகாய வாகாயக் கூத்தாட்டா மென்ப
தடாதுள்ளம் போமா றது. (அ)

இது, தூலசூக்குமங்க ளொன்றுகெட்டொன்றுதோன்றுமென்போர்க்கும், அறிவுகெடு மென்போர்க்கும், அச்சுமாறுதென்போர்க்கும், கத்தா ஆன்மாவுமாய்நின்று பின்தோன்றுதென்போர்க்கும், ஏகான்மவாதிகளுக்கும், அவையல்லவென்றும்; அறிவுந்தேகமுமாறிப்பிறக்குமென்றுங் கூறுகின்றது.

இ-ள். உள்ளம் ஆன்மா வொருதேகத்தைவிட் டொரு

போமா தேகத்தை யெடுக்கச்செல்லு முறைமையைத்
றது பர சொல்லில்.
வில் எ-து.

குடாகாய வா குடத்தினின்றவாகாயம் மகாவாகாயத்
காய மடாது தோடே கூடினாற்போலக் கூடுமென்பது
எ-து. பொருந்தாது.

இது வேதாந்தியை மறுத்தது.

கூத்தாட்டா ஒருவன் பலகூத்துக்கட்டி யாடினாற்போ
மென்ப தடா னுமென்பது பொருந்தாது.
து. எ-து.

இது ஏகான்மவாதியை மறுத்தது.

அரவு தன் ரு பாம்பு தன்னுடைய தோலை யுரித்துப்போ
உரிவும் எ-து. ட்டுப்போனாற் போலவும்.

இது, ஒன்றுகெட் டொன்றுதோன்றுமென்போர்க்குக் கூ
றியது.

அஃதாவது, தூலவுடம்பொழிந்து சூக்குமவுடம்பில்லையெ
ன்போற் குண்டென்றதாம். இப்பொருள் "சூக்குமங்கெ
ட்டுத்தூலந்தோன்றிடா" "விதிப்படி சூக்குமத்தேயுருவரு
ம்" "தூலமாமுடம்பினுக்குச் சூக்குமமுதல" என்பனவற்று
லறிக. சித் - உ—கூ, உஅ - சக - ௫0—செ.

அக்கனவும் முன்னர்க்கூறிய கனவுபோலும்.
எ-து.

என்றது, தூலவுடம்புடனேகூடி நனவின்கண் கண்டுகேட்
டுண்டுயிர்த்துற்றறிந்த அறிவுகெடாமற் கனவின்கட் சூக்கும
தேகத்துடனே கூடிநின்றாற்போல வென்றதாம்.

எனவே, அறிவுகெடாதென்று மீளவும் வலியுறுத்திக் கூறி
யவாறறிக.

வேறு பரகா தம்முடைய வுடம்பு வேறாகப் பரகாயப்
யம் போய்வரு பிரவேசம் பண்ணுதலைச் செய்வோருடைய
ம்ப்பண்பும் எ- முறைமையும்போலும். எ-று.
று.

எனவே, அச்சுமாறாதென்போருக்குக் கூறியதாம்.

இப்பொருள் "சங்கமந்தாபரங்கள் சரர்களாய்த் துப்பவொன்
னில்" "வண்டுகளாகிமாறு மயிற்குட்டி" "அகலிகை கல்லதா
னாள்" "செப்பினாப்மாற வேறு"—"அவ்வவ யோனிதோறும்"
என்பனவற்றா லறிக. சித்-உ—௬, சக-சங-சச-சரு-சகூ—
செ.

சூக்குமங் கெடாதென்றும், அறிவுகெடாதென்றும், அச்சு
மாறாதென்றும், கூறியபக்கத்துக்கு; அரவுபோலவும், அக்கன
வுபோலவும், பரகாயப் பிரவேசம்போலவும், கூறிய சபக்கங்
காண்க. "பன்னக மண்டசங்கள்" என்பனவற்றா லறிக. சி
த்-உ—௬, ஙஅ—செ. (௬)

---

சிவஞானமுனிவர் உரை.

எ-து. உ-ம். எ-னின். உயிர்க்குப் புனருற்பவமாகாமை
க்கு வாதிகளான் எடுத்துக் காட்டப்படுங் குடாகாய வாகா
ய வுவமைக்குப் பொருள்கூறி, மேலதனை வலியுறுத்தூத னுதலி
ற்று.

இ-ள். அரவு தன் தோல் உரிவும் அக்கனவும் பரகாயம் போ
ய் வரும் அப்பண்பும் பரவில் வேறு. எ-து. கண் செவி கெ
ட்டவழி உள்ளதே தோற்ற அத்துடுவின் படர்தற்குப் பாம்பு

தோலுரித்துப் புதிதொருதோல் போர்த்துச் சேறலும், புருடன் நனவுடம்பி னீங்கிக் கனவுடம்பிற் சேறலும், யோகிகள் தம்முடம்பு நீங்கிப் பரகாயத்திற் சென்று மீடலுமாகிய இவ்வுவமைகள் மிக்கு வழங்குதற்கண் இவற்றிற்கு மாறாக—குடாகாய ஆகாயக் கூத்தாட்டு ஆம் என்பது அடாது. எ-து. குடவாகாயங் குடமுடைந்தவழி ஆகாயத்தோடு கூடுமாறு போல்வதோர் கூத்தாட்டாமென்று நீ கூறுதல் பொருந்தாது.—உள்ளம்போம் ஆறு அது. எ-து. சூக்குமவுடம்பு விட்டுப் போமாற்றிற்கே அவ்வுவமையாகலான். எ-று.

எனவே, உடல்விட்டுப் போமாற்றிற்கு இவ்விருவகை யுவமைகளும் ஆகமங்களிற் கூறுதலின், அவை தம்முண் முரணுதவாறு, அரவுதன்றோலுரிவு முதலியன தூலவுடல் விட்டுப் போமாற்றிற்கும், குடாகாயவுவமை சூக்குமவுடம்புவிட்டுப் போமாற்றிற்குமெனக் கோடல் பொருத்தமுடைமையின்; அவ்வேறுபாடுணராது குடாகாயவுவமையுந் தூலவுடம்புவிட்டுப் போமாற்றிற்கே போலுமென மலையற்கவென மேலதனை வலியுறுத்தவாறு காண்க.

மேலைவெண்பாவில் "கண்ட நனவைக் கனவுணர்விற் றான் மறந்து" என்றது அறிவு வேறுபடு முறைமைக்கு எடுத்துக் காட்டியதெனவும், ஈண்டு 'அக்கனவும்' என்றது அதனையே உடல் வேறுபடுமுறைமைக்கு எடுத்துக் காட்டியதெனவுந் தெரிந்து கொள்க.

பரவு முதனிலைத்தொழிற்பெயர். இல்லுருபு தொழினிகழ்ச்சிக்கண் வந்த ஏழாவது.

பரவுதல் எல்லார்க்கும் புலனுமாறு மிக்குநிகழ்தல்.

ஈண்டு உள்ளமென்றது சூக்குமவுடம்பை.

போமாற்றிற்கென்னும் நான்காவது விகாரத்தாற் றொக்க
து; "ஐந்தவித்தா னாற்றல்" என்புழிப்போல.

குளவாம்பல்'குளாம்பலென மரீஇயினாற்போலக் குடவாகா
யங் குடாகாயமென மரீஇயிற்று.

ஆகாயக் கூத்தாட்டென்பது உவமத்தொகை. இதனை உம்
மைத்தொகையாகக் கொண்டு குடாகாய வாகாயமுங் கூத்தா
ட்டும் போலென்றுரைப்பாரு முளர்.

☞ உ—ஞ, மூன்றுமதிகரண முடிந்தது.

---

எங்குமுள னென்றளவை யொன்றன் றிரண்டென்னின்
எங்கு முளனன் றெவற்றெவனும்—அங்கண் [ன்
அவையவ னன்றில்லைப் பொன்னொளிபோ லீசன்
அவையுடமை யாளாநா மங்கு. (௪0)

இது, கத்தா ஏகாந்தம் அநேகாந்தமின்றி அகண்டபூரண
னாய் நிறைந்து நிற்றல் கூறியது.

எங்குமுளனென் றளவை யொன்றன் றிரண்டென்னில். எ-து. கத்தா, அவ னவ ளதுவென்னு மவற்றுள் நிற்கின்றானென்ற பிரமாணத்தாலே ஒருவனல்ல, பலவென்று நீ சொல்வாயாகில்? ஒன்றல்ல வெல்லாம் பலவென்பது தமிழ் நடை.

என்றது,கண்டிக்கப்படா னாதலாலொன்றல்லவென்றதாம்

எங்கு முளன் எ-து. அவ னெவ்விடத்தும் பூரணமாகி நிறைந்து நிற்பன்.

எவற் றெவனு மன்று. எ-து. யாதொருபொருள் யாதொருபொருள்களிலே கண்டிக்கப்பட்டு நிற்பானல்லன்.

எனவே, அகண்ட பரிபூரணனென்றதாம்.

அங்கண் அவை யவ னன்றில்லை. எ-று. அவனவனளது வென்றவை யெல்லாஞ் சத்தாவை யொழிந்து இல்லையாம்.

எனவே கத்தா பிரபஞ்சத்தை நீங்கி நில்லானென்பதாயிற்று. அஃதென்போல வென்னில்?

பொன் னொளி போல். எ-து. ஆதித்தனுடைய பிரகாசம்போல.

என்றது ஆதித்தனுடைய பிரகாசம் எங்குந் தானாய் நிற்கச் செயொன்றி னகப்படாமனின்றது போல வென்றதுவாம்.

அவை யுடைமை யாளாநாமங்கு. எ-து, சத்தாவும் பிரபஞ்சமு மிப்படியாகில், முன் சொன்ன விந்துநாத வடிவாகிய சதாசிவ முதலியவை யெல்லா மெப்படி யென்னில்? அவை யவனுக் குடைமையா யேவற்றொழில் செய்யு மவ்விடத்து. எ-று.

இப்பொருள் "சிவஞ்சத்திநாதம் விந்து சதாசிவன்" "சத்தியாய்விந்து சத்தியாய் மனோன்மனிதானாகி" "சத்திதானாதமாதிதானாகும்" "சிவஞ்சத்தி தன்னை யீன்றும்" என்பனவற்றாலறிக. சித்-உ—கூ, எ௯-எ௫-எகூ-எஎ—௪௪.

அவ்விடத்தென்றது அந்தந்தத் தொழில்களை யவர்கள் செய்யுமிடத் தென்றதாம்.

எனவே யவையிற்றுக்கு மித்தன்மை மயவென்றதாம்.

சத்தா வோரிடத்து மறைந்து நிற்பானுமல்லன், பலவாகக் கண்டிதப்பட்டு நிற்பானுமல்லன், எங்கு மொழிவற நிறைந்து

நிற்பன், என்னுந்துணிபொருட் பக்கத்தற்கு; ஆதித்தனைப்போ லவென்னுஞ் சபக்கங் காட்டியவாறு காண்க.

அவை யுடைமை யாளாநா மங்கு என்பதற்கு அப்படிச் சொல்லப்பட்ட பிரபஞ்ச முடைமையுமா யடிமையுமாய் வருமென் பாருமுளர். (௪0)

---

சிவஞானமுனிவர் உரை.

எ-து. உ-ம். எ-னின். ஏதுவும் மேற்கோளுந் தம்முள் அவிநாபாவமாமாறு யாங்ஙனமென்னுங் கடாவை யாசங்கித்து அதனை வலியுறுத்துத னுதலிற்று.

இ-ள். எங்கும் உளன் என்ற அளவை ஒன்று அன்று. எ-து. யாங்கணும் 'அவையே தானே' என மேற்கூறிய அளவை யானே முதல்வன் ஒரு பொருளாதல் கூடாது. எ-று. ஒன்றுயிற் கங்கைக்கரையினின்ற ஒருவனுடனே காவிரிக்கரையினும் ஒருங்கு நிற்கமாட்டான், அதுபோல ஒருபொருள் ஓரிடத்து ளதாதலன்றி யாங்கணும் வியாபித்து நிற்கமாட்டாதென்பதாம்.—இரண்டு என்னில் எங்கும் உளன் அன்று. எ-று. அற்றேல் முதல்வன் இருபொருளாய் நிற்குமெனக் கோடுமெனின் யாங்கணும் அவையே தானேயாயுளனாதல் கூடாது. எ-று. தன்மாட்டே வேற்றுமையுடையானுக்குப் பிறபொருள்களின் கண் வேற்றுமையின்றி வியாபித்து நிற்றல் சாலாதென்பதாம். அற்றேல் இவ்விரண்டோடு முரணுதலின் எங்குமுளனல்லனெனக் கோடுமெனின்;—எவற்று எவனும் அங்கண் அவை அவன் அன்று இல்லை. எ-து. எவ்விடங்களினுமுள்ள எத்திறப்பொருளுமாகிய அவ்விடத்து அவைசொல்லாம் அகரவுயிரின்றேல் அக்கரங்களில்லையா மாறுபோல அம்முதல்வனை யின்றி யமையா வாகலான் எங்குமுளனல்லனென்றல் பொருந்தாது. எ-று

ஆகலான் எங்குமுளனல்லனென்றல் பொருந்தா தென்பது குறிப்பெச்சம். அற்றேல் வேறு விடுக்குமாறென்னை யெனின்;— ஈசன் பொன் ஒளிபோல். எ—து. எங்குமுளனாகிய முதல்வன் ஞாயிறும் ஒளியும்போல ஒன்றாதற்கும் இரண்டாதற்கும் பொதுவாய்த் தாதான்மியத்தாற் சிவமுஞ் சத்தியுமென் றிசைந்து நிற்கும். எ—று. அற்றேல் பசுபாசங்களும் வியாபகமெனக் கோடலின் அவையும் இம்முறைமை பற்றி ஏகாநேக மிரண்டுமின்றி முதல்வன்போலத் தத்தஞ் சத்திகளோடு தாதான்மியமாய் நிற்குமென்பது பெறப்படுதலான் முதல்வனொடு சமமாவான் செல்லுமெனின்;—அவை உடைமை நாம் ஆள் அங்கு. எ—து. அவ்வாறாயினும் முதல்வனது வியாபகத்தை நோக்கி வியாப்பியமாகலின் அப்பாசங்கள் உடைமையாம்; பசுக்களாகிய நாம் அடிமையாவேம், அம்முதல்வன் மாட்டு. எ—று.

அன்றெனப் பாடமோதுவாருமுளர்.

பாசங்கள் உடைமையாமாறும் பசுக்கள் அடிமையாமாறும் 'தாரகமா மத்தன்றணிற்றல்' எ-ம். 'அதனி லீறலாவொன்று பலவாறே தொழும்பாகும்' எ-ம். மேற்பெறப்பட்டமையின், அவற்றை ஈண்டெடுத்துக் காட்டி ஆசங்கை நீக்கியவாறு.

என்றவென்னும் பெயரெச்சத்து அகரம் விகாரத்தாற் றொக்கது. "புகழ்புரிந்து" என்புழிப்போல. அவையான் என ஆனுருபு விரித்துரைக்க.

ஒன்றன்று உளனன்று என்புழி ஒன்று உளனென்னுந் தருமிவாசகங்கள் ஆகுபெயரால் அத்தருமங்களின்மேனின்றனவாகலான் உளனென்பதும் அஃறிணை யொருமையோடு முடிந்தது.

அன்மை கூடாமைப்பொருட்டு.

எவற்றெவனு மென்பது ஏழாம்வேற்றுமைத் தொகை. அஃ

றிணைக் கண்வரும் எவனென்னும் வினாவினைக் குறிப்புச்சொற் ஈண்டுப் பெயர்த்தன்மைப்பட்டு எவனுமென எஞ்சாப்பொரு ண்மை யுணர்த்தி நின்றது.

அன்றியென்னும் வினையெச்சம் செய்யுளாகலின் அன்றெனத் திரிந்தது.

இன்மை ஈண்டு அமையாமைப்பொருட்டு.

பொன் ஆகுபெயர்.

ஆம் என்பது உடைமையோ டியையும்.

பொன்னொளிபோ லீசனென்பது தொகை யுவமமாகலிற் பொது வியல்பு விரித்துரைக்கப்பட்டது.

இவ்வதிகரணத்தாற் போந்த தொகைப்பொருள், முதல்வ ன் வியாபகனாதலின் வியாபகப்பொருட்கு ஒன்றாய் நிற்றல்கூ டாது; அது கூடாமைபற்றி இரண்டாய் நிற்பனெனின் வி யாபகனாதல் கூடாது; வியாபியல்லனெனின் பசுபாசங்கள் அ வனையின்றியமைதல் கூடாது; ஆகலான், முதல்வனொருவனே ஞாயிறுமொளியும்போலச் சிவமுஞ்சத்தியுமெனத் தாதான்மிய த்தால் இருதிறப்பட்டுச் சருவவியாபியாய்ப் பொதுமையினிற் பனெனச் சமவேதமாய் நிற்குமாறு தெளிவிக்குமுகத்தானே தாதான்மியசத்தி யுண்மைக்குப் பிரமாணங் கூறியவாறுமென் றுணர்க. அஃதாமாறு,—தன்னை விளக்குவதூஉம், விடயங்களை விளக்குவதூஉம், தானேயாகிய ஞாயிறொன்றுதானே விடயங் களை விளக்குழிக் கதிரோனவுந் தன்னைவிளக்குழிக் கதிரோனெ னவுந் தாதான்மியத்தால் இருதிறப்பட்டியைந்து நிற்றல்போ ல, புறப்பொருளை நோக்காது அறிவுமாத்திரையாய்த் தன்னி யல்பினிற்பதூஉம், புறப்பொருளை நோக்கிநின்றுணர்த்துவதூஉ

னாகிய இருதன்மையையுடைய பேறறிவாய சைதந்நியமொன்றே அங்ஙனம் புறப்பொருளை நோக்கி நிற்குநிலையிற் சத்தியெனவும், புறப்பொருளை நோக்காது அறிவுமாத்திரையாய் நிற்குநிலையிற் சிவமெனவும், தாதான்மியத்தால் இருதிறப்பட்டியைந்து நிற்குமெனவுணர்க.

இனித் தீயின்சத்தியொன்றுதானே சுடுதல் அடுதல் முதலிய தொழில் வேறுபாட்டால் சுடுஞ்சத்தி அடுஞ்சத்தி யென்றற்றொடக்கத்துப் பலவேறுவகைப்படுமாறுபோல, சிவசத்தியொன்றே காரியவேறுபாட்டால் பரை ஆதி இச்சை ஞானம் கிரியை யென்று ஐவகைச்சத்திகளாயும்; முறையே ஐந்தும் நான்கும் எட்டும் பதின்மூன்றும் எட்டுமாகிய கூறுபாடுடைய ஈசானிமுதலிய ஐவகைச்சத்திகளாயும், ஆரணி செனனி முதலிய மூவகைச் சத்திகளாயும், நிவிர்த்தி பிரதிட்டை முதலிய ஐவகைச் சத்திகளாயும், வாமை சேட்டைமுதலிய அட்டசத்திகளாயும், பரவாகீசுவரி அபரவாகீசுவரி மனோன்மனி மகேசை உமை திரு வாணியென எழுவகைச் சிவபேதங்கட்கும் முறையே எழுவகைச்சத்திகளாயும், அத்தியான்மிகமெனப்படும் உன்மனை சமனை முதலிய கலைகளாயும், இன்னும் பலவேறுவகைப் பட்டு நிற்கும். அவ்வச்சத்திகளோடு புணர்ந்த சிவமும் அவ்வாறே பலவகைப்பெயர் பெற்று நிற்கும். அவ்வச்சத்திகட்கு இடமாய விந்துவும் அங்ஙனம் பலவேறுவகையான் விருத்திப்பட்டு அப்பெயர்பெறும். இவற்றினியல்பெல்லாம் ஆகமங்களுட்காண்க.

 உ—ரு, நான்காமதிகரண முடிந்தது.

---

 இரண்டாஞ்சூத்திர முடிந்தது.



## ௩-சூத்திரம்.



உளதில தென்றலி னெனதுட லென்றலி
னைம்புல னொடுக்க மறிதலிற் கண்படில்
உண்டிவினை யின்மையி னுணர்த்த வுணர்தலின்
மாயா வியந்திர தநுவினு ளான்மா.

இச்சூத்திர மென்னுதலிற்றோவெனின், ஆன்மரூபகம் சாதிக்கின்றது.

இ-ள். மாயா வியந்திர தநு வினு ளான்மா வுளது. எ-து. — மாயை முதலிய தத்துவங்களாலே யியந்திரிக்கப்பட்ட வுடம்பிலே ஆன்மா வுண்டு. அஃதெத்தாலென்னில் ?

இல தென்றலி னுளது. எ-து. — இல்லை யென்று சொல்லுகையால் உளது.

இல்லை யென்கையா லுள்ளதாமென்ப தெங்ஙனே யென்னில்? இல்லை யென்று சொல்லப்பட்ட தொன்றுண்டே, அதுதான் ஆன்மாவென்றதாம்.

எனதுட லென்றலி னுளது. எ-து. — என்னுடைய வுடம்பென்று சொல்லுகையா லுண்டு.

அஃதெங்ஙனே யென்னில்? என்னுடைய பொருளென்றவை யெல்லாம் வேறொன்றற்போல வென்றதாம்.

ஐம்புல னறிதலி னுளது. எ-து. — சத்தமுதலாகிய வைம்புலன்களையு மறிதலா லுளது.

து.

ஒடுக்க மறித சாக்கிரமுதலாகிய வவத்தைகளிலே யொ
ழி னுளது. எ டுங்கு முறைமை யறிதலா னுண்டு.
- து.

கண்படி னு துயிலுமிடத் தூனு முற்சாகமு மில்லை
ண்டி வினையின் யாதலா னுண்டு.
மையி னுளது.
எ - து.

உணர்த்த வு அறிவிக்க வறிகையா னுண்டு.
ணர்தலி னுளது.
எ - து.

உளதென்பதனை யெவ்விடத்துங் கூட்டுக.

"புனைவுறுசெய்யுட் பொருளையொருவழி வினைநின்றுவிள க்கினது விளக்கெனப் படுமே-முதலிடைகடையென மூவகை யான"—என்பதனால் இதனு ளான்மா வுண்டென்னும் பக்கத் துக்கு, சபக்கமுங் காட்டியவாறு காண்க. இவை மேல்வரு ம் வெண்பாக்களில் விரித்துக் கூறுமாறு காண்க.

---

சிவஞானமுனிவர் உரை.

இச்சூத்திரத்தின் பிண்டப்பொழிப்பு. இலதென்றன்முதலி யஅறுவகையேதுக்களானும் மாயாவியந்திரதநுவென்னும் பெய ரடையாற்பெறப்படும் குறிப்பேதுவானும் இவற்றின்வேறாய் இ வ்வுடம்பினுள் உயிரெனப்படுவதொன்றுண்டு. எ-று.

இது பூட்டுவிற்பொருள்கோள்.

உளதென்றது சாதியொருமை. அறிதலினென்றது ஐம்புல னொடுஞ் சென்றியையும்.

சுறுவினுள்ளான்மாவுளதென்றேனும், காணப்பட்ட உடம்பாற் காணப்படாத உயிருக்குண்மை கூறவேண்டுதலின், இவ்வுடம்பு சூனியமுதலியவற்றின் வேறாய் ஆன்மாவையுடைத்தென உடம்பின்மேல் வைத்தோதுதல் ஆசிரியர்கருத்து. அற்றாகலினன்றே பதியுண்மை உலகின்மேல் வைத்தோதியதூஉமென்பது.

---

இனி, "இலரென்றலின்" எ-று. பிரமாணம்.

அன்றன் றெனநின் றனைத்தும்விட் டஞ்செழுத்தாய்
நின்றொன் றுளததுவே நீயனைத்தும் - நின்றின்று
தர்ப்பணம்போற் காட்டலாற் சார்மாயை நீயல்லை
தற்பரமு மல்லை தனி. (க)

இது, பதி பசு பாசமாகிய முதல் மூன்று மில்லை, உடம்பே யறியுமென்றவனைப் பற்றி அந்த மூன்று முதலு முண்டென்றும், உடம்பறியாது அந்த உடம்புக்கு வேறாகிய வான்மா வறியுமென்பதுவும், கூறுகின்றது.

இ-ள். அஞ்செழுத்தாய் நின்று. எ-து. — *ல - வ - ர - ய - அ - என்னு மஞ்செழுத்தையு முடைய பூதங்களுடனே கூடி யது வது வென்னும்படி நின்று.

அனைத்து மன்றன்றென விட்டு நின்றொன்றுள ததுவே நீ. எ-து. — அப்படி நின்றவை யெல்லாத்தையு மிது வல்ல விதுவல்லவென்று நீங்கி நின்றதொன்றுண்டே அதுதான்காணான்மா.

அனைத்தும் நின்றின்று தர்ப் — இந்திரியங்களெல்லாவற்றினு மிப்பொழுது கூடிநின்று கண்ணாடி யடுத்ததொன்றை

*உண்மைவிளக்கம் ௬—செ.

பிணம்போற் காட்டலாற் சார் மாயை நீயல்லை. எ-து. க்காட்டி நிற்கச்சேயந்தக்கண்ணாடி யடுத்த தாகாத தன்மைபோலத் தேகாதி யவயவங் களைப் பொருந்தி உன்னைக் காட்டுதலாலே உன்னைப் பொருந்தி வருகிற மாயையின் காரியமாயுள்ளவை நீயல்லை.

தற்பரமு மல்லை தனி. எ-து. ஆறு லேம்புலன்க ளிடமாகநின் றெல்லாத்தையு மறிவேன் யானாகில் யானேகத்தாவென்பையாகில், யாதொன்றுக்கு மேலாயுள்ள தியாதொன்று அதற்கு மேலாயுள்ள தந்தட்பரம். அதுவுமல்லை நீ தனியொருமுதல்காண். எ-று.

கண்ணாடி யடுத்ததனைக் காட்டி நின்றாற்போல வென்றுமாம். அஃதாவது, சடமாயுள்ள வவயவங்க ளான்மாவுக் குண்டாகிய விகாரங்களாலே பொருந்திய வின்ப துன்பங்களைக் காட்டி நிற்குமென்றதாம். இனி, கண்ணாடியைக் காண்பானொருவனுக்கு ஆதித்தப் பிரகாசமின்றிக் காண வொண்ணதாற்போல, ஆன்மா விந்திரியங்க ளிடமாகநின்று சீவிக்கு மிடத்துக் கத்தாவா லொழிந்து சீவியாதென்பதுவுங் கூறினாராயிற்று. எனவே மூன்றுமுதலுந் தரிசிப்பித்தவாறு காண்க. கண்ணாடியை யொருவனெடுத்து நடத்தினாற்போலத் தேகத்தையு மொருவனெடுத்து நடத்துவனென்பதாம். எனவே ஆதித்தனில்லையாகிற் கண்ணாடியாலுஞ் சேட்டை யில்லையென்றதாயிற்று. "உடலின்வேறுயிரோனிந்த வுடலன் றேவுணர்வதென்னில்"—"தோற்பாவைக் கூத்துந்தொல்லைமரப்பாவையியக்க" என்றார்வழிநூலார். சித் - ரு—கூ, உ. ச —கூ, உச—செ.

பூதங்களிடமாகநின் றான்மா சீவிக்குமிடத்துக் கத்தாவின்றிச் சீவியாதென்றுங் கூறிய பக்கத்துக்கு, கண்ணாடியும் அந்தப்பொருளும் ஆதித்தனும் போலவென்னும் சபக்கமும், அந்த

பொருளு மாதித்தனு மில்லாதபொழுது கண்ணாடிக்குச் சேட்டை யில்லையென்னும் விபக்கமுங் காட்டியவாறு காண்க. (க)

---

சிவஞானமுனிவர் உரை.

எ-து. உ-ம். எ-னின். அவ்வறிவை உடல் பொறி விடய முதலியவற்றின் வேறாகப்பிரித்துக் காணுமாறும், அதுவே உயிராமாறுந் தெரித்துணர்த்தி, அதனை வலியுறுத்துதனுதலிற்று.

இ-ள். அனைத்தும் நின்று. எ-து. உடல் பொறி விடயமுதலிய அனைத்தினும் அதுவது தானாகநின்று—அன்று அன்று என விட்டு. எ-து. முறையானே இது நானன்று இது நானன்றென ஒரோவொன்றாகக் கண்டு நீக்கியவழி—அஞ்செழுத்தாய் ஒன்று நின்றுளது. எ-து. அவ்விடத்து அகரமுதலிய சூக்குமபஞ்சாக்கர ரூபமாயறிந்து வந்ததோரறிவு நிலைபெற்றுளதன்றே—அதுவே நீ. எ-து. அதுவுநானன்றெனக் கழிப்பின் அங்ஙனங் கழித்த உணர்வு வேறுண்டெனப்பட்டு மேலும் வரம்பின்றிப்போமாகலிற்சூக்குமபஞ்சாக்கரரூபமாய் நின்றறிந்து வந்த அவ்வறிவுதானே நீயென்பதறிவாயாக. அற்றேல் மாயையமுஞ் சிவமுமுளவென்பது மேலைச்சூத்திரங்களாற் சாதிக்கப்பட்டமையின் அவையே அவ்வறிவினையு மறிந்து நீக்குமென வமையுமாகலான் வரம்பின்றியோடுமா றில்லையாலெனின்;—சார்மாயை. எ-து. நின்னாற் சாரப்பட்ட மாயை—அனைத்தும் நின்று இன்று தர்ப்பணம்போல் காட்டலான் நீ அல்லை. எ-து. நிலமுதலிய காரியமனைத்துமாய் நின்றொடுவிரவி நின்று இப்பெத்தகாலத்துக் கண்ணுக்குக் கண்ணாடிபோல் உனக்கறிவை விளக்கி நிற்றன் மாத்திரையே யன்றி அறிவதன்றாகலான் நீ அம்மாயையல்லை.—தற்பரமும் அல்லை. எ-து. மாயையான் விளங்கி யறியும் நீ அதற்கு அதீதமாகிய சிவமுமல்லை:—தனி. எ-து. அவற்றின்வேறு. எ-று.

விட்டவழியென்பது விட்டெனத் திரிந்துநின்றது.

அவ்வறிவாவது இதுவென்றுணர்த்துவார் அன்றன்றெனநின்றனைத்தும் விட்டவழியென ஏதுப்பொருளை அநுவதித்து அஞ்செழுத்தாயொன்று நின்றுளதென அடையாளங் கூறினார். அஞ்செழுத்தாய் நின்றறியுமாறு வருகின்ற சூத்திரத்துட்பெறப்படும். இதற்குப் பிறசொல்லாங் கூறியது கூறலென்னும் வழுப்பட மேலுமோரியை பின்றி யுரைத்தார்.

அனைத்துநின் றென்புழி முன்னர்க்கண் ணுருபும் பின்னர் ஆக்கச்சொல்லுந் தந்துரைக்க. ஏகாரந் தேற்றம். தற்பரமென்றது குறிப்பேதுவாய் நின்றபெயர்.

அனைத்து நின்றின்று தர்ப்பணம்போற் காட்டலால் சார்மாயை நீயல்லை தற்பரமுமல்லை தனியென்றதனுனே வருகின்ற அதிகரணங்களுக் கெல்லாந் தோற்றுவாய் செய்தவாறு மாயிற்று.

☞ ங—கு, முதலதிகரண முடிந்தது.

---

'எனதுடலென்றலின். எ-கு. பிரமாணம்.'

எனதென்ற மாட்டி னெனதலா தென்று
னுனதலா வுன்கைகா லாக்கை - எனதென்றும்
என்னறிவ தென்று முரைத்துநீ நிற்றிகா
ணுன்னிலவை வேறா முணர். (உ)

இது, உடம்பறியாதாகி லுணர்வறியாதோ வென்போருக்கு உடம்பு முயிரு மறியாதென்கின்றது.

(இ-ள்.) என ஒருவன் றன்னுடைய பதார்த்தத்தை எதென்ற ன்னுடையதென்று சொன்னபடியாலே.
மாட்டி

ல். எ-று.

எனதலா தெ ன்றுது. எ-து. தன்னுடைய பதார்த்தமல்லா தொழிந்தென்னுடைய பதார்த்த மல்லவென்று சொல்லாது.

எனவே தன்னுடைய பதார்த்தத்தைத் தன்னுடையதென்றும், தன்னுடையதல்லா ததனைத் தன்னுடைய தல்லவென்றும், சொல்வ துலகவழக்கம் என்றதாம். ஆதலால்,

உனதலா வுன்னை காலாக்கை யென தென்று மென்னறிவ தென்று முரைத்து நீ நிற்றியால் உன்னி லவை வேரு முணர். எ-து. உன்னுடைய தல்லாதகையுங் காலையு முடம்பையும் என்னுடைய தென்றும், உன்னுடையதல்லாத வறிவை என்னுடைய வறிவென்றும், நீசொல்லி நிற்கின்ருய். யாதொருபொருளென்னுடையதென்றது அது தனக்குவேருமாதலால் உனக்கு மவை வேருயிருக்கும்; விசாரித்துப் பார். எ-று.

"எனதென்ற மாட்டி லெனதலா தென்ருது"—என்றதற்கு என்னுடைய தல்லவென்று சொல்லாதே என்னுடைய தென்று சொன்னபடியாலே யென்றுமாம்.

அறியப்படுவன யாவையும் அறிந்து யானினைந்தேன், யான் செய்தேன், யான்சொன்னேன், என்று வருகையால்; அறிவையுடையது வேறென்றதாம். "என்னுடல் பொறிபிராணன்"— "பொன்னணி யாடைமாலை" "உடலியானல்லேனிந்த வுணர்வியானல்லவான கடனியாதென்னி" "புந்தியை மனமதென்று மனமது புந்தியென்றும்" என்ருர் வழிநூலார். சித்-சூ—சூ, உடு-உகூ-உஎ-உஅ—செ.

எனவே ஆன்மா தேகாதியுடனே கூடி மனோ வாக்காலே ய

நிந்துரைத்துச்செப் தறிவினுக்கும் ஆதாரமாய் நிற்குமெனவறிக.

இந, "எனதுடலென்றலி" னென்றதற்கு சாதநசாத்தியப்பொருட்டாகச் சம்பிரதாய திட்டியாக உடம்புக்கு ஆன்மா வேறென்னும் பக்கத்துக்கு, உலகவழக்கம் சபக்கமாயினவாறு காண்க. (உ)

---

சிவஞானமுனிவர் உரை.

எ-து. உ-ம். எ-னின். பதி மனை முதலியபொருள்கள் தம்மின் வேறுதல் கண்டு பிறிதின் கிழமைப்பொருள்பட எனதென்றாற் போலன்றிக் கை கான் முதலியவற்றைத் தற்கிழமைப் பொருள்பட எனதென்று கூறிநிற்றலின், அவ்விரு வேறுமொழியுந் தம்முளொக்குமாறென்னையென்னுங்கடாவை யாசங்கித்து அதனைவலியுறுத்துத னுதலிற்று.

இ-ள். எனது அலாது என்றது எனது என்றமாட்டின். எ-து. நீ உலோகாயதநூல் கேட்குமுன்னெல்லாம் பதி மனைவிமுதலிய புறட்பொருளையே உயிரெனக்கொண்டு மயங்கி நின்றாயன்றே, அக்காலத்து அவற்றை எனதன்றென வேறுகாணாது தனித்தனி எனதென்றே தற்கிழமைப்பொருளாகக் கூறிக்கொண்டு நின்றாற்போல,—உனது அலாது உன் கை கால் யாக்கை எனது என்றும் என் அறிவது என்றும் உரைத்து நீ நிற்றிகாண். எ-து. உனதன்றாகிய உன் கைகால் யாக்கைகளைத் தனித்தனி எனதென்றும் அங்ஙனமறிந்த பாசவறிவை என்னறிவதென்றுந் தற்கிழமைப்பொருளாகக் கூறிக்கொண்டு நீயொருபொருள் வேறு நிற்கின்றாய் காண்:—உன்னில். எ-து. உலோகாயதநூல் ஆராய்ந்த பின்னர்ப் பதி மனைவி முதலிய பொருள்கள் உனக்கு வேறுதல் கண்டாற்போலக் கை கால் முத

லியவற்றி னியல்புகளையும் ஏதுக்கண் முதலியவற்றான் ஆராய்ந்து பார்த்தியாயின்,—அவை வேறாம் உணர். எ-து. அக்கை கான் முதலியன உனக்கு அந்நியமாம் அதனை யறிவாயாக. எ-று.

இன் உவமவுருபு.

உனதலா தென்பதனைக் கை கால் யாக்கைகளோடு தனித்தனி கூட்டுக.

க—சூ, இரண்டாமதிகரண முடிந்தது.

---

"ஐம்புலனறிதலின்" என்றதற்குப் பிரமாணம்.

ஒன்றறிந்த தொன்றறியா தாகி யுடன்மன்னி
யன்றும் புலனாய வஞ்செழுத்தை - ஒன்றறிந்
துள்ளதே யாகி யதுநீ தனித்தனிகண்
டுள்ளலவை யொன்றல்லை யோர். (ரு.)

இது, ஐம்பொறி யொழிய வான்மா வில்லையென்போர்க்குண்டென்கின்றது.

| | |
|---|---|
| இ-ள். ஒன்றறிந்த தொன் றறியாதாகி யுடன் மன்னி யன்றும் புலன். எ-து. | செவி மெய் வாய் கண் மூக்காகிய பொறிகளுடலிலே யோரிந்திரிய மறிந்ததனை யோரிந்திரிய மறியாதாகி மாறுபடும். |
| ஆய வஞ்செழுத்தை யொன்றறிந்த துள்ளதேயாகியது. நீ, எ-து. | ஐந்து பொறிகளுக்கும் விடயமாகிய சத்த பரிச ரூப ரச கந்தங்களைந்தையும் அறிந்ததொன்றுண்டே அப்படியுண்டாகியதுதான்காண் நீ. |

நீ யென்றது ஆன்மா. அப்பொழுதும் பொறிகளன்றோ அறிந்த தென்கின்றாயாகில்?

தனித்தனி க ண் டுள்ளவவை யொன்றல்லை யோர். எ-து. பொறிகளோர்தந்தமக்கு இடமான வைந்தையுந் தனியே தனியே கண்டித்து, செவிக்கு விடயமிது, கண்ணுக்கு விடயமிது, மெய்க்கு விடயமிது, வாக்குக்கு விடயமிது, மூக்குக்கு விடயமிது என்று நினைத்தலால்; அவையிற்றி லொன்றல்லை, நீ விசாரித்துப்பார். எ-று.

என்றது, அந்தந்த விடயங்களிலே போகியவிடத் தழுந்தி குட்சித்தறிந்து பின்பு நீங்கினவிடத் தவையிற்றைக் கருதி நிற்றலாலே, நிச்சயகத்தா வேறொருவன் வேறேயுண் டதனை யுனக்கேற்க விசாரித்துப் பாரென்றதாம். "அறிவதைம்பொறியே யென்னில்" என்றார் வழிநூலார். சித்-ந—கு, ந—செ.

இது சாதந சாத்தியப்பொருட்டாகச் சம்பிரதாய திட்டியால் அறிவித்தது. (ந)

---

சிவஞானமுனிவர் உரை.

எ-து. உ-ம். எ-னின். இந்திரியங்கள் ஒன்றறிந்த தொன்றறியா தென்றதொக்கும், ஐந்துமைந்துயிரெனக் கோடலின் அதனானெமக்காவ தோரிழுக்கில்லை; இனி இவ்வைந்தையுங் கொண்டு ஐம்புலனையும் ஒருபொருளே யறியுமெனின்? அதற்குப் பிரமாணங் கண்டிலம்: குடத்தைக் கண்ட யானே அதனைத் தீண்டினேனென மறித்துணர்வு நிகழ்தல் ஐந்துமோருடம்பின் கண்ணே நிலைபெறு மொற்றுமைபற்றியமையுமெனக் கோடுமென்னுங்கடாவையாசங்கித்து அதனை வலியுறுத்துத னுதலிற்று.

இ-ள். உடல் மன்னி ஒன்று அறிந்தது ஒன்று அறியாதாகி

ள-து. உடம்பின்கண்ணே நிலைபெற்று ஒருவிடயத்தை யறிந்த இந்திரியம் மற்றொருவிடயத்தை அறியாதாய்—அன்றும் புலன் ஆய் அவ் அஞ்செழுத்தை. எ-து. அங்ஙனந் தம்முண் மாறுபடுஞ் சத்தமுதலிய புலன்களைச் சூக்குமபஞ்சாக்கரத்தாற் செலுத்தப்பட்டாராய்ந் தறிகின்ற அவ்வைம்பொறிகளின் றொழிற்பாட்டை—அறிதல் ஒன்று உள்ளதேயாகில். எ-து. கண் உருவத்தையறிவது செவி ஓசையையறிவதென்று இவ்வாறுணர்தலையுடையதோர் பொருள் இல்லதோ உள்ளதோவென விஞயினார்க்கு இல்லதெனின் இவ்வறிவு நிகழாதாதல் வேண்டுமாகலான் உள்ளதேயாமெனின்—அது நீ. எ-து. அவ்வாறுணர்வதியாது அதுவே நீயாகியவான்மா. அவ்வாறுணர்வனவும் அவ்விந்திரியங்களேயென்றற் படுமிழுக்கென்னையெனின்—அவை தனித்தனி கண்டு உள்ளல். எ-து. அவ்விந்திரியங்கள் தத்தம்விடயங்களை வேறு வேறு கண்டறிதன்மாத்திரையேயன்றி இத்தொழிற்பாட்டையுடையேம் யாமெனவும் அறியமாட்டாவாகலான்—ஒன்று அல்லை ஓர். எ-து. அவ்வைந்தின் றொழிற்பாட்டையுமறிந்து அவற்றின வரும் பயனகொள்வதாய நீ யவற்றின் வேறுவை அதனையாராய்ந்தறிவாயாக. எ-று.

ஆகியென்னுஞ் சிறப்புவினை ஆயென்னும் பொதுவினையோடு முடிந்தது; இவனுமிவளுஞ் சிற்றிலிழைத்துஞ் சிறுபறையடைந்தும் விளையாடுப என்றாற்போல. ஆயென்பது வினைத்தொகை. அவ்வஞ்செழுத்தென்க. அஞ்செழுத்தாற் செலுத்தப்பட்ட பொறியை ஆகுபெயரான் அஞ்செழுத்தென்றார் அஃதிருமடியாகுபெயராய் ஐம்பொறியின் றொழிற்பாட்டை யுணர்த்தி நின்றது.

உள்ளல் உள்ளலானென்க.

இம்மூன்றதிகரணங்களானுஞ் சாக்கிரத்திலிகழுமியல்புபற்றி ஆன்மாவினுண்மை சாதிக்கப்பட்டது.

☞ ௩—சூ, மூன்றுமதிகரண முடிந்தது.

---

"ஒடுக்க மறிதலின் என்றதற்குப் பிரமாணம்."

அவ்வுடலி னின்றுயிர்ப்ப வைம்பொறிக டாங்கிடப்பச்
செவ்வி தினவ்வுடலிற் சென்றொடுங்கி - அவ்வுடலின்
வேறொன்று கொண்டு விளையாடி மீண்டதனை
மாறலுட னியல்லை மற்று. (௪)

இது, பிராணவாயு வறியுமென்போர்க்கு அது அறியாதென்கின்றது.

(இ-ள்.) அந்தக் கரணங்களைக் கருவியாகக்கொண்டு பிராணவாயு வறியுமென்கின்றாயாகில்?

அவ்வுடலில். எ-து. முன்ன ரல்லவென்ற சொன்ன உடம்பிலே.

ஐம்பொறிக டாங்கிடப்ப. எ-து, செவி முதலாகிய பொறிகளைந்துஞ் சேட்டையின்றிக் கிடப்ப.

நின்றுயிர்ப்ப. எ - து, பிராணவாயு நின்று உச்சுவாச நிச்சுவாசஞ்செய்ய.

செவ்வி தினவ்வுடலிற் சென்றொடுங்கி. எ - து. முறைமையாக அந்தந்த வுடம்பிலே சென்றொடுங்கி,

அவ்வுடலி னென்றது உணர்த்து முறைமையின்றி ஆன்மா சாக்கிரமுதலாகிய அவத்தைகளிலே யொடுங்குமிடத்து அந்த ந்த வவத்தைகளுக் குண்டாகிய கருவிக ளாந்தந்தவிடத்துக் கு டம்பா மாதலாலென் வறிக.

அவ்வுடலின் வேறொன்றுகொண்டு விளையாடி மீண்டதனை மாறலுடன். எ-து. அப்படி அவத்தைப்பட்ட அவ்வுடம்பிலே வேறோருடம்பையெடுத்துக்கொண்டு நின்று கனவிலேவியாபித்து மீண்டும் அதனையுடனேமாறுகையால்.

நீயல்லை. எ-து. நீ யந்தப்பிராணவாயு வல்லை.

மற்று. எ-து. கருவியென்ற அந்தக் கரணங்களும், அதற்கு.

"மற்றென்கிளவி வினைமாற் றசைநிலை"—இது வினைமாற்று. தொல்காப்பியம் சொல்லதிகாரம் இடையியல் - கச—கூ.

உடனீயல்லை யென்றது உடம்பு நீயல்லை யென்பாரு முளர். அன்றியும், உடம்பும் நீயல்லை, பொறிகளும் நீயல்லை, பிராணவாயும் நீயல்லை, என உடனோதுவாரு முளர். அது புனருத்தியாம் "அறிந்திடும் பிராணவாயு" என்றார் வழிநூலார். சித்-ரு—ஆ, ச—டுச.

இதுவும், சாதந சாத்தியப்பொருட்டாகச் சம்பிரதாய திட்டையாலறிவித்தது. (ச)

---

சிவஞானமுனிவர் உரை.

எ-து. உ-ம். எ-னின். கனவின்கட் செல்லுமாறும், ஆண்டு நிகழுமாறும், மீள்வருமாறுமுணர்த்தி; அதனை வலியுறுத்துத லுதலிற்று.

இ-ள். அவ்வுடலின் நின்று உயிர்ப்ப ஐம்பொறிகள் தாம் கிடப்ப. எ-து. மேல் உயிரன்றெனக் கூறிப்போந்த தூலவுடம்பினின்று உயிர்ப்பனவாய ஐம்பொறிகள் ஆண்டே உயிர்ப்பொழிந்து கிடப்ப—அடங்கிச் செவ்விதின் அவ்வுடலில் சென்று. எ-து. அவை யங்ஙனங்கிடந்தவழிப்புறத்து நிகழுந்தொழிற்பாடெல்லாமடங்கி அவ்வுடம்பினுள்ளால் வருத்தமின்றிச் சென்று—அவ்வுடலின் வேறு ஒன்று கொண்டு விளையாடி. எ-து. அத்தூலவுடம்புபோல அதனின் வேருயதோருடம்பைபெடுத்துக்கொண்டு வேருேரான்ருற்கண்டு கேட்டு உண்டு உயிர்த்து உற்று விளையாடி—மீண்டு அதனை மாறல். எ-று. மீளவதனை மாறி மேற்சேறலான்—நீ உடல் அல்லை மற்று. எ-து. நீ அச்சூக்குமதேகமல்லை அதனின் வேருவை. எ-று.

உயிர்ப்பவென்றது அன்பெருத அகரவிற்றுப் பலவறிசொல் உயிர்த்தல் தொழிற்படுதல்.

தாமும் மற்றும் அசை.

மீண்டு மீள.

மாறல் மாறலானென்க.

இவ்வதிகரணத்தாற் சொப்பனத்தினிகழு மியல்புபற்றி உயிருண்மை சாதிக்கப்பட்டது.

 ௩—ரு, நான்காமதிகரண முடிந்தது.

---

"கண்படி லுண்டி வினையின்மையின்" என்றதற்குப் பிரமாணம்.

கண்டறியு மிவ்வுடலே காட்டொடுங்கக் காணுதே
யுண்டி வினையின்றி யுயிர்த்தலாற் - கண்டறியு

முள்ளம்வே றுண்டா யொடுங்கா துடனண்ணி
லுள்ளதா முண்டிவினை யூண். (௫)

இது, அவயவம் பொருளென்போர்க்கும், அரிசனமும் நீறுங் கூடினவிடத்தே யொரு சிவப்பெழுந்தாற்போலப் பூதக்கூட்டத்தேயோரறிவு தோன்று மென்போர்க்கும், அவையல்ல வென்கின்றது.

இ-ள். கண்ட எல்லாப்பொருளையுங்கண்டறியு மென்ற றியு மிவ் விந்த வுடம்பு காட்டுகின்றவ னொடுங்கின வுட்லே பொழுது காண்பதில்லை.

காட் டொடுங்க
க்காணாதே எ-து.

இது அவயவம் பொருளென்போரை மறுத்தது. அஃதெப்படியென்னில்? கண்ணாகிய கருவியுங் காட்டுகின்ற வொளியு முண்டாயிருக்கக் கருத்து வேறாய் நின்றவிடத்துக் கண் ணொருபொருளையுங் காணாதபடியாலே அறிவுவந்து கூடிற்றில்லையாம். பின்பு கண் யாதொருபொருளையுங் கண்டறிகையில் அறிவுவந்து பொருந்திய தாம். கையாற் கண்டறிகின்ற கண்ணுக்குக் கருதி அறிகின்ற வறிவு வேறே யுண்டென்றதாம்.

உண்டி வினையி உறக்கத்தி லூணு முற்சாகமுமின்றிக் கின்றி யுயிர்த்த டங் துயிர்க்கையினாலே யிந்த வுடம்பிலே லாற் கண்டறியு நின்று கண்டறிவது ஆன்மா.

முள்ளம் எ-து.

என்றது அவத்தைப்பட்டவிடத்துச் சுத்ததத்துவங்களையநுபவிக்கை யுடம்புக்கில்லை யாதலாலும், விழித்தவிடத் தவற்றைஅநுபவிக்கை யுண்டாகையாலும், அப்படியொருகாலத்தே அநுபவித்து மொருகாலத்தே யநுபவியாதிருந்ததவும் ஆன்மா வென்றதாம்.

இதனையொருபசமாக்கி நீகண்டறியுமென்ற விந்தவுடம்பு காட்டுகின்றவான்மா அவத்தைகளிலே யொடுங்கினபொழு தொருபொருளையுங்காணமல் ஊணுமுற்சாகமுமின்றிக்கிடந்து உச்சுவாசம் நிச்சுவாசஞ்செய்கையாலே கண்டறிவதுஆன்மா வென்று கூறுவாருமுளர்.

வேறுண்டா பூதக்கூட்டத்தே யறிவுண்டாமாகில் அயொடுங்கா துட ந்தவறி வொரு காலத்து மொடுங்காமலொ னண்ணி லுள்ள ன்றுபட்டுப் பொருந்தி யவத்தைகளினு மூதா முண்டிவினை னு முற்சாகமுமுண்டாம் எ-று.
யூண் எ-து.

எனவே, உறக்கத்தில் ஊணு முற்சாகமுமின்றி விழித்தபொழுதுண்டாய்வருதலால், நீசொல்லுகின்ற தல்லவென்பதாயிற்று.

இதுவுங் காரியங்கொண்டு காரணமறிதலாற் சாதநசாத்தியப்பொருளானவாறறிக. "கண்டுணர்புரு-ன்வேறு கனவுகண்டொடுங்கி" என்றுர்வழிநூலார். சித்-ச—சூ, ௩௦—செ. (ரு)

---

சிவஞானமுனிவர் உரை.

எ-து. உ-ம். எ-னின். துயிலிடத்துக் கருவிகளெல்லாமொடுங்குதலின் இன்பதுன்ப நுகர்ச்சியுஞ் சேட்டையும் பிரகிருதிக்கில்லையாயினவாகலான் அதுபற்றிப் பிராணவாயுவையான்மாவென்றற் கிழுக்சென்னையென்னுங் கடாவை யாசங்கித்து அதனைவலியுறுத்துத னுதலிற்று.

இ-ள். கண்டு அறியும் இவ்வுடலே. எ-து. கண்டறிதற்கு நிலைக்களமான இவ்வுடம்பின்கண்ணே—காட்டுக் காணுதேயொடுங்க. எ-து. காட்டாய கருவிகள் தொழிற்படாதே யொ

ங்கவும்—உண்டிவினை இன்றி. எ-து. அவையொடுங்கியவ ழி உண்டியும் வினையும் பிரகிருதிக்கில்லையாகவும்—உயிர்த்தலான். எ-து. பிராணவாயு நிலைபெற்று இயங்குதலான்,—கண்டு அறியும் உள்ளம்வேறு உண்டு. எ-து. கண்டறியு முரிமையையுடைய உயிர் பிராணவாயுவின் வேருயுண்டு—ஒடுங்காது உடல் நண்ணில் ஊன் உண்டி வினை உள்ளதாம். எ-து. அவ்வுயிரொடுங்காது அவ்வுடலின்கண்ணெய்திற்றாயின் அவ்வுடம்பு கருவிகளின் றொழிற்பாட்டானாய உண்டியும் வினையுமுடைத்தாம்:—ஆய். எ-று. அதனையாராய்ந்தறிவாயாக. எ-று.

இது அருத்தாபத்தியளவை.

கண்டறிதல் ஒருபொருட்பன்மொழி.

இன்றியென்னும் வினைக்குறிப்புச் செயவெனச்சத்திரிபு. சிறப்பும்மைகள் தொக்கன- அவை "அறிந்திடா துடலுறக்கத் தரிவின்மை கரண மின்மை—யறிந்திடு முதலியாகி னதுநிற்கக் கரணம் போகா" என்னும் பொருள் விளைத்து நின்றன.

சித் - ௩ - சூ, ௬—செ. "அறிந்திடும்"

ஊன் ஆகுபெயர்.

உயிர் வேறுண்டென்றதனை வலியுறுத்துவார் உடம்பாட்டு முகத்தானு மோதினார்.

இவ்வதிகரணத்தானே சுழுத்தி துரியங்களி னிகழுமியல்புபற்றி உயிருண்மை சாதிக்கப்பட்டது. இதுகாறுஞ் சார்மாயையினியல்லையென்றதனை வலியுறுத்தியவாறு.

 ௩—சூ, ஐந்தாமதிகரண முடிந்தது.

---

"உணர்த்தவுணர்தலின்" என்றதற்குப்பிரமாணம்.

அறிந்து மறிவதே யாயு மறியா
தறிந்ததையும் விட்டங் கடங்கி - யறிந்த

தெதுவறிவு மன்றுகு மெய்கண்டா னென்றி
னதுவதுதா னென்னு மகம். (சு)

இது, ஒருவனே சீவான்மாவுமாய் நிற்கையிற் கட்பேதமொழிந்து சர்வபேதமில்லையென்போற் குண்டென்கின்றது.

| | |
|---|---|
| இ-ள். அறிந்தும். எ-து. | ஒருவன் சில பொருள்களை யறிந்தும். |
| அறிவதே யாயும். எ-து. | மேலு மறியத்தக்க பொருளை யறிய வறிவிக்கத் தக்காரைத் தேடியும். |
| அறியாது. எ-து. | சில பொருள்களை யறியாமலிருந்தும். |
| அறிந்ததையும் விட் டடங்கி யறிந்தது எ-து. | முன்பு அறிந்தவற்றையு மறியாமல் விட்டுச் சாக்கிர முதலாகிய அவத்தைகளிலே யடங்கி விழித்தவாறே யறிந்தவது. |
| ஏது வறிவு மன்றுகும் எ-து. | எல்லாத்தையு மொருகாலத்தி லறிகின்ற கத்தாவல்லவாம். |
| மெய் கண்டான் எ-து. | சத்தியத்தைத் தரிசித்தவன். |
| அதுதான் எ-து. | அப்படி யறிகின்றவதுதான். |
| அகம் ஒன்றின் எ-து. | ஆன்மா ஒன்றி னது வென்னும் கத்தாவினுடைய வடிமையென்று சொல்வன் எ-று. |

எனவே கத்தா சர்வஞ்ஞன், அவத்தைகளிற்படாதவன், சுகதுக்கங்களில்லாதவன்,

ஆன்மாகிஞ்சிஞ்ஞன், அறிவிக்கஅறிபவன், அவத்தைகளிலே
பட்டுச் சுகதுக்கங்களையநுபவிப்பவன், ஆதலாற் சிவான்மா ப
ரமான்மாவென்றதாம். சிவாத்துவிதியைமறுத்ததுமாம். "அ
றிந்திடுமான்மாவொன்றை யொன்றினாலறிதலானும்-அறிந்த
வைமறத்தலானு மறிவிக்க" என்றார்வழிநூலார். சித் - டு—
சூ, ரு—செ.

இதுவுங்காரியங்கொண்டு காரணமறிதலாற் சாதநசாத்திய
ப்பொருட்டாயினவாறறிக. (சு)

---

சிவஞானமுனிவர் உரை.

எ-து. உ-ம். எ-னின். கருவிகளோடு கூடியவழியும் அ
விச்சை நீங்காமையின் விடயங்கண்மாத்திரையேயறியுமன்றி
த் தன்னியல்பறியுமாறில்லை, அஃதுபதேசத்தாலறியற்பாலதே
யாமாகலான் அதுபற்றி இழுக்கென்னையென்னுங்கடாவை யா
சங்கித்து, அதனையும் மேற்கூறிய நியாயத்தா னுடம்பட்டு இன்
னுமொருதாற்பரிய முறைக்குமுகத்தானே விடயங்களையறிவு
ழியும் படும் வேறுபாடுகூறி அதனை வலியுறுத்துதனுதலிற்று.
அவனறிந்தாங் கறியுமாறும் உயிர் மறந்து மறந்தறியு மாறும்
தெரித்துணர்த்தி வலியுறுத்துத னுதலிற் றெனினு மமையும்.

இ-ள். அறிந்தும் அறிவதே ஆயும் அறியாது. எ-து. கரு
விகளெல்லாவற்றோடுங் கூடிச் சாக்கிரத்தானத்தினின்று வி
டயங்களையறியுமிடத்தும் ஒருங்கேயறியமாட்டாது ஒன்றனை
யேயறிந்தும் ஒன்றனையறியப்புகுவதாயும் முன்னறிந்ததொன்
றனை அறியாதொழிந்தும்—அறிந்ததையும் விட்டுஅங்கு அடங்கி-
எ-து. இங்ஙனமொரோவொன்றாக அறியப்பட்ட விடயத்
தையும் இடையீடன்றி அறியமாட்டாது விட்டுவிட்டாங்கே ஐ
ந்தவத்தைப்பட்டடங்கி—அறிந்தது எது. எ-து. மீளவறிந்து

வருதல் கண்கூடாகக் காணப்படுதலான் அங்ஙனமறிந்து வந்தப் பொருள் யாது அதுசடமன்றென்பது மேற்காட்டப்பட்டது முன்னருங் காட்டப்படும்—அறிவும் அன்று. எ-து. ஒன்றாக இயல்பாகவுணர்தலே பேரறிவாகலின் அதுவுமன்றாம்—மெய் கண்டான் ஒன்றின். எ-து. இனிமெய்யாகிய சித்தாந்தநெறி யினையுணர்ந்தோன் வேறென்னையோவென மனமொருங்கியா ராயுமாயின்—அது அது தான்என்னும் அகம் ஆகும். எ-து. காட்டுமொளிக்கு வேறாய கண்ணொளிபோல அவ்வறிவிற்கு வேறாய் அதுவதுவே தானெனச் சார்ந்ததின்வண்ணமாய் நின் றறியுமியல்பையுடைய உயிராம். எ-று.

அறிந்தும் அறிவதேயாயும் என்னும் உம்மைகள் எண்ணின்க ண் வந்தன. அறியாதுமென்னு மெண்ணும்மை விகாரத்தாற் றொக்கது. அறிந்ததையுமென்னுமும்மை இழிவுசிறப்பு அறி வுமென்னுமும்மை இறந்தததழீஇயது. ஏகாரம் அசைநிலை

அங்கு உணர்த்துமுறைமைத் தானமாகிய இலாடத்தி னென் றவாறு.

அறிந்ததையும் விட்டடங்கடங்கி யறியுமாறு வருகின்ற சூத்தி ரத்திறுதியினும், அதுவதுதானெனச் சார்ந்ததின்வண்ணமா மாறு உண்மையதிகாரத்தும் பெறப்படும்.

அறிந்துமறிவதேயாயு மறியாதறிந்ததையும் விட்டடங்கடங்கிய றிந்ததெது என்பதற்கு ஓதியதனை ஓதியபொழுதேயுணர்ந்தும் பலகாலோதியுணர்வதாயும் பலகாலோதியு முணர்தலின்றியும் உணர்ந்ததனையும்பின்னர் மறந்தொழிந்தும் இவ்வாறோதியுண ர்ந்ததியாதென் றுரைத்தலுமொன்று. இப்பொருட்கு அடங் கியென்புழியும் எண்ணும்மை விரித்துரைக்க.

இங்ஙனம் மூவகைப்படுத்துரைக்கவே, உணர்த்தவுணர்தலெ ன்னுமேதுவான் முறையே அதீதத்தின்கணிகழு மியல்புபற்றிரு

ம் சுத்ததினிகழுமியல்புபற்றியும் உணர்த்துமுறைமைக்கணிகழு மியல்புபற்றியும் உயிருண்மை சாதிக்கப்பட்டது. இது தற்பர முமல்லை தனியென்றதனை வலியுறுத்தியவாறுகாண்க.

விஞ்ஞானமே ஆன்மாவென்னும் புத்தறின் யோகாசாரன் மதத்தை மறுத்தற்கெழுந்தது இவ்வதிகரணமெனக்கொண்டு அதற்கியையவுரைப்பாருமுளர்.

 ௩—ரு, ஆறுமதிகரண முடிந்தது

---

"மாயாவியந்திர தநுவினுளான்மா" என்றதற்குப்பிரமாணம்,

கலையாதி மண்ணுந்தங் காணிலவை மாயை
நிலையாவாந் தீபமே போலு - மலையாமல்
ஞானத்தை முன்னுணர்ந்து நாடி லதுதநுவாய்
தானத்தின் வேறாகுந் தான், (எ)

இது, மாயையாலே வியந்திரிக்கப்பட்ட வுடம்பு வேறுவே றுபேர்களைக் கொண்டு நிற்றலா லான்மாவுண்டென்கின்றது. அஃதாவது, சித்துத்தானே உலகமாய்ப்பரிணமித்துஞ் சிவனுகி யும்நிற்குமாதலா லெல்லாஞ் சித்தென்போர்க்கு, அஃதப்படிய ன்றென்று கூறுகின்றது.

இ-ள். கலையாதி மண்ணுந்தங் காணிலவைமாயை நிலையாவாம் எ-று. கலை - காலம் - நியதி - வித்தை - ராகம் புருடன், மனோ - புத்தி - யாங்காரம் - சித்தம், செவி - மெய் - கண் - வாய் - மூக்கு, வாக்கு - பாதம் - பாணி - பாயுரு - உபத்தம், சத்த - பரிச - ரூப - ரச - கந்தம், ஆகாயம் - வாயு - தேயு - அப்பு - பிருதிவி, இவை மாயாசரீரமாய்த் தோன்றி நின்றொடுங்கும்.

தீடமே போலும் எ-து. விளக்கிருக்கிற விடத்தையும் விளக்கென்றுற்போலும்.

அலையாமல் ஞானத்தை முன் னுணர்ந்து எ-து. தனக்கொரு கேடின்றிச் சிவனுடைய ஞானத்தை யிடமாக நின்றறிந்து.

நாடி லறு தறுவாய் எ-து. விசாரிக்கில் அந்தக்கலையாதி மண்ணுந் தந் தனக்குடம்பாய்.

தான் எ-து. ஆன்மா.

அத்தின் வேருகும் எ-து. அவையிற்றுக்கு வேருகும் எ-று.

தான் - அசை. தீபமேபோலுமென்றது தகழியும் எண்ணெயுந் திரியுங்கூடி நின்றெறிந்ததீபத்தைச் சேர விளக்கென்றுற்போலு மென்றதாம்.

எனவே, தேசத்துடனேகூடிநின்றொழிய வறியாதென்பது கூறினர்.

ஞானத்தைமுன்னுணர்ந் தென்றது தேகாதியுடனேகூடி நின்றறியினுஞ் சிவனலொழிந் தறியாதென்பது கூறினாராயிற்று.

எனவே, கலையாதிமண்ணுந்தமசித்து ஆன்மாவல்லவென்றுங் கூறினர். "அறிவுடல்சிந்தையான்மா வறிதலால்" எனமுர்வழிநூலார். சித் - சஎ—சூ, உகூ—செ.

ஆன்மா தேகாதியிடமாகநின்று அறியுமென்னும்பக்கத்துக்கு தீபம்போலுமென்னுஞ் சபக்கங்காட்டியவாறு காண்க

சிவஞானமுனிவர் உரை.

எ-து. உ-ம். எ-னின். அவை தனித்தனி வெவ்வேறு பெயர் பெறினுந் தொக்க சமுதாயத்தின்கண் ஆன்மாவென்ப பெயர் பெறுமெனக் கோடுமாகலின், அதுபற்றி யிழுக்கென்னையெனுங் கடாவை யாசங்கித்து அவை வெவ்வேறு பெயர்பெறும்வழியும் அவர் கூறியவாறு பெயர்பெறுது வேறுபெயர் பெறுமாறும், அவைமாயா காரியங்களேயாமாறும், அவை தொக்க சமுதாயத்தினும் ஆன்மாவெனப் பெயர்பெறுது வேறுபெயர் பெறுமாறு முணர்த்தி; அதனை வலியுறுத்துத னுதலிற்று.

இ-ள். ஞாணின் கலை ஆதி மண் அந்தம். எ-து. அங்ஙனஞ் சமுதாயமாதற் குரியவை யாவையென்று அளவைகளானறியப்புகிற் கலைமுத னிலமீருகிய தத்துவங்களேயாம்:—அவை மாயை நிலையாவாம். எ-து. அவையனைத்தும் மாயையின் காரியங்களாகலின் நிலையுதலின்றிச் சிலகால நின்றழிவனவாம்:—ஞானத்தை அலையாமல் முன் உணர்ந்து நாடில். எ-து. அவை தொக்க சமுதாயத்தின் விளங்கித் தோன்றுவதாய ஞானத்தினியல்பை அசையாமற் கருத்தை யொருக்கி முன்னுணர்ந்து பின் அச்சமுதாயத்தை யாதென்றுராயின்,—அது தீபமே போலத் தறுவாம். எ-து. அச்சமுதாயங் கண்ணுக்கு விளக்குப்போலஉயிர்க்குத்தூலசூக்குமபரங்களாகிய உடம்பாம்.—தான் அத்தின் வேறு ஆரும் தான். எ-து. ஆதலாற் கண் விளக்கின் வேருயினுற்போல உயிர் அவ்வுடம்பின் வேரும். எ-று.

ஆமென்பது மேலுஞ் சென்றியையுட்.

மாயை ஆகுபெயர்.

தானென்பது முன்னைய தெழுவாய்; பின்னையது அசை.

அதனினென்பது அத்தினென மரீஇயிற்று. "இத்தை மெய்

யெனக் கருதி" என்புழிப்போல.

இதனானே தனியென்றதனை வலியுறுத்தவாறு.

☞ ௩—௬, ஏழாமதிகரண முடிந்தது.

இவ்வாறு மூன்றுசூத்திரத்தானும் சைவாகமங்களுட் கூறப்படும் பதிமுதலிய பொருள்களதுண்மை அநுமான வளவையான் வலியுறுத்தப்பட்டது. ஆகம வளவையே யமையுமாகலின் அநுமானவளவை மிகையாம் போலுமெனின்? ஆகாது: மந்த வுணர்வுடைய மாணுக்கர்க்கு வேற்றுச் சமய நூல்களை நோக்கியவழிச் சைவாகமப்பொருளின் மலைவு நிகழாமைப்பொருட்டும், கேட்டல் சிந்தித்தல் தெளிதல் நிட்டையென்னு நான்குவகையானன்றி ஆகமங்களைக் கேட்ட துணையானே அநுபவங் கூடாமையிற் சிந்தனை செய்து வன்மை மென்மையுணர்ந்து தெளிந்துகோடற்பொருட்டும் கருதலளவையும் வேண்டப்படுமாகலானென்க.

---

☞ மூன்றுஞ் சூத்திர முடிந்தது.

பொதுவியல்பு-பிரமாணவியன் முற்றிற்று.



# ச—சூத்திரம்.



அந்தக் கரண மவற்றினொன் றன்றவை
சந்தித்த தான்மாச் சகசமலத் துணரா
தமைச்சர சேய்ப்பநின் றைந்தவத் தைத்தே

இதுவும், ஆன்மரூபகஞ் சாதிக்கின்றது. இச்சூத்திரம் வேறு கூற வேண்டிய தென்னையெனின்? அவைபோலின்றி யிவை நீக்கமற்றவை யாதலால், பிறித்துக் கூறல் அருமைபற்றிக் கூறினார் எனவறிக.

இ-ள். ஆன்மா. ஆன்மா
எ-து.

| | |
|---|---|
| அந்தக்கரண மவற்றி னொன் றன்று எ-து. | மனோ புத்தி யாங்கார சித்தமென்னும் அவையிற்றி லொன்றல்ல. |
| அவை சந்தித்தது. எ-து. | அவற்றுடனே கூடி நீக்கமற நின்றது. |
| சகச மலத் துணராது. எ-து. | செம்பிற்களிம்புபோலச் சகசமாய் நிற்கின்ற மூலமலத்தாலே ஒன்றையு மறியாது. |
| அமைச்சர சேய்ப்ப நின் றைந் தவத்தைத் தே. எ-து. | மந்திரிகள் முதலாயுள்ள பரிவாரத்தையு மிராசாவையும் போல நின்று ஐந்தவத்தையிலே பொருந்தும். எ-று. |

அந்தக் கரண மென்றது - உட் கரண மென்றதாம்.
எனவே, புறக்கரணங்கூறி உட்கரணங் கூறுமாறாயிற்று.

---

சிவஞானமுனிவர் உரை.

## பொதுவியல்பு— இலக்கணவியல்.

இச்சூத்திரத்தின் பிண்டப்பொழிப்பு. ஆன்மா அந்தக்கரணங்களாகிய மனம் புத்தி அகங்காரஞ் சித்தமென்னுநான்கனுள் ஒன்றன்றாயினும், நுண்ணுணர்வின்மையின் சூழ்ச்சித்துணைவராகிய அமைச்சரோடு கூடிநின்று தன்னாழினடாத்தும் அரசன்போல; சகசமலத்தினான் உணர்வின்றிக் கஞ்சுகம்போலுங் கலாதிகளாற் பொதுவகையான் உணர்வுநிகழினும் சிறப்புவகையான் நிகழுமாறு அவற்றாற் பெறப்படாமையின், சிறப்புவகையானுணருமாறு தனக்குச் சூழ்ச்சித்துணையாகிய அவ்வந்தக்கரணங்களோடு கூடி நின்று சாக்கிரமுதலிய ஐந்தவத்தையுடைத்தாம். எ-று.

எனவே, அங்ஙனநின்று அஞ்சவத்தைப்படுதல் ஆன்மாவுக்கிலக்கணமென்றவாறாயிற்று. இஃது உயிர்க்குத் தடத்தலக்கணமெனப்படும் பொதுவியல்பு.

ஒன்றன்றாயினும் சகசமலத்து உணராது அமைச்சரசேய்ப்ப அவற்றொடு சந்தித்துநின்று அஞ்சவத்தைத்தாமெனவிபையும்.

உணராது சந்தித்ததென்பது காரணகாரியப்பொருட்டாய் நின்றது. சந்தித்தது வினையெச்சமுற்று.

இவ்வாறன்றி ஆன்மா அவற்றினொன்றன்றாயினும் சகசமலத்துணராமையால் அவற்றொடு சந்தித்தது சந்தித்தவழி அவையுந் தானும் அமைச்சரசேய்ப்ப நிற்றலான் ஐந்தவத்தைத்

தாயிற்று எனவதிகரணம் பகுத்துக்கோடற்கேற்ப வேறுவேறு வினைமுடிபு செய்துரைத்தலுமொன்று.

வடமொழிச்சூத்திரத்தோதுதலின் ஈண்டும் ஆயினுமெனவருவித்து ஒருதொடராக வைத்துரைக்க. அந்தககரணம்வற்றின்றன்றாயினுமெனவே, அவற்றின்றன்றாதலும் அநுவாதமுகத்தால் ஈண்டேபெற்றாம். இஃதுணராதார் அந்தக்கரணமவற்றி னென்றன்றென்றதனை வேறுதொடராக வைத்துரைப்ப. அங்ஙனமுரைப்பின், முன் வருவனவற்றை அவாய்நின்று ஒருபொருண்மேல் வாராமையின் ஒருசூத்திரமாதற்கேலாமையறிக.

அவை சந்தித்ததென்புழி ஓடு உருபு விகாரத்தாற்றொக்கது; இரண்டாவது விரிப்பினுமமையும்.

ஆன்மா வென்பது மேலைச்சூத்திரத்தினின்றும் வருவித்துரைக்கற்பாலதாகவும், ஈண்டு வேறோதியது ஒத்து வேறுதல்பற்றியென்றுணர்க.

ஆன்மாவென்னுஞ் சொற்குப் பொருள் வியாபகமென்பதூஉம் சித்தசித்தென்பதூஉமாம்.

மலத்து மலத்தாலெனவிரிக்க.

அமைச்சரசு அமைச்சரோடு கூடிய அரசென உருபும் பொருளும் உடன்றொக்கன.

காரணப்பொருட்டாய நின்றென்னும் வினையெச்சம் அஞ்சவத்தைத்தென்னும் வினைக்குறிப்புமுற்றோடு முடிந்தது.

---

இனி, "அந்தக்கரண மவற்றினொன்றன்று"
என்றதற்குப் பிரமாணம்.

மன்மாதி யாலுணர்தன் மன்னு புலன்கண்
மனமாதி மன்புலனி னல்ல - மனமே

லுதித்தொன்றை யுள்ள முணர்த லதனி
னுதிக்குங் கடற்றிரையே யொத்து. (௩)

இது, அந்தக்கரண மறியுமென்போர்க்கு அவையறியாது ஆன்மா வறியுமென்கின்றது.

இ-ள். மனமாதியா னுணர்தன் மன்னு புலன்கள். எ-து. மனோ புத்தி யாங்காரஞ் சித்தத்தினாலே கன்மத்துக்கீடாகப் பொருந்தினதொரு விடயத்தை யறிதலை யுடைத்து.

அந்தக்கரணங்களிலே செவி மெய் கண் வாய் மூக்காகிய ஞானேந்திரியங்கள்.

மனமாதி மன்புலனி னல்ல எ-து. ஞானேந்திரியங்கள் அந்தக்கரணங்களை உட்கரணமாகக்கொண்டு அறிந்ததாயினும், அந்தக்கரணங்கடா மன்னிலையாகிய ஞானேந்திரியங்களி லொன்றல்ல.

மனமேல் உதித் தொன்றை யுள்ளமுணர்த லதனின். எ-து. மனமுதலாகியவவையுங் கன்மத்துக் கீடாகிய தொருபொருளிடத்தே தோன்றி ஆன்மாவாலே யறியுந்தன்மை அந்த ஞானேந்திரியங்களைப்போலும்.

உள்ளத்தாலுணர்தல் மூன்றும் வேற்றுமை. இன்பொருள். எனவே, இந்திரியங்களுக்கு மனாதியுட் கரணம், மனாதிகளுக்குக் கலாதியுட் கரணமெனவரும்.

உதிக்குங் கடற்றிரையே யொத்து. எ-து. கடலுந் திரையும்போலு மெழுந்திருக்கும். எ-று.

ஆன்மா ஒரு பொருளையறியுமிடத்து மனுதி யவ்விடத் துதிக்குமென்ற தெப்படியென்னில்? உதிக்கும்படி, கடலுங் கடலிடத்துத் திரையும்போல வுதிக்கும்.

கடல் - ஆன்மா, திரை - அந்தக்கரணம், காற்று - கன்மம், ஆகாசம் - விடயம்.

கன்மத்துக்கிடானதொரு விடயத்தை மனுதியுட் கரணமாக ஒருபுலனிலே நின்று ஆன்மா வறியுமென்முர். "உணர்வன கரணமென்னில்" என்முர் வழிநூலார். சித் - சா—சு, க—செ. அந்தக்கரணங்களாலே ஞானேந்திரியங்க ளறியுமறிவினும் ஞானேந்திரியங்களி லொன்றல்ல அந்தக்கரணங்களென்னும் டக்கத்துக்கு; ஆன்மாவாலே அந்தக்கரணங்களறியு மறிவினும் அந்தக்கரணங்களி லொன்றல்ல ஆன்மாவென்பது சபக்கமாயினவாறுகாண்க.

அந்தக்கரணங்களைக்கொண்டு ஆன்மாவறியுமென்னும் பட்சத்துக்கு, கடலுந் திரையும் சபக்கமாயினவாறு காண்க. அது, புண்ணியபாவங்களைப் பொருந்திக் கன்மத்துக்குப் பொருந்தினதொரு விடயத்தை யறுதியிட்டு நிற்கு மென்பதாம். (க)

---

சிவஞானமுனிவர் உரை.

எ-து. உ-ம். எ-னின். அவ்வந்தக்கரணங்கள் தம்மிற்கீழுள்ளவற்றை நோக்கிச் சித்தாமாறும், தம்மின்மேலுள்ளவற்றை நோக்கியுந் தம்மைநோக்கியும் அசித்தாமாறுந் தெரித்துணர்த்தி; ஏதுவை வலியுறுத்துத னுதலிற்று.

இ-ள். மனம் ஆதியால் உணர்தல் மன்னு புலன்கள். எ-து. மனமுதலிய அந்தக்கரணங்களாலுணரப்படுவன ஐம்பொறிக

ளாற்றரப்பட்டுப் புறத்தே நிலைபெற்ற விடயங்களாம்:—உள்ளம் உணர்தல் மனம் மேல் உதித்த ஒன்றை. எ-து. ஆன்மாவுணர்வது மனத்துக்கு மேலெனப்படும் புத்தியிற்றோன்றிய தொன்றனையாம்:—கடற்றிறையை ஒத்து உதிக்கும், எ-து. அவ்விருவேறுணர்வுங் கடலிடையெழுந்து கரைசாருந் திரைபோலப் பரம்பரையின் ஆன்மாவின்மாட்டு வந்து தோன்றும்:—அதனின் மனம் ஆதி மன் புலனின் அல்லன். எ-து. அதனானே மன முதலியன அவ்விடயங்களின் வேறாயினாற்போல ஆன்மாவும் அம்மனமுதலியவற்றின் வேறாம். எ-று.

உதிக்குமென்னும் பயனிலைக்கு உணர்தலிரண்டும் எழுவாய்.

செவ்வெண்டொகை விகாரத்தாற் றொக்கது.

புலனின் இன் உவமவுருபு.

அல்லனென ஆடூஉவறிசொல்லாற் கூறியது வடமொழி மதம்பற்றி.

உதித்தவென்னும் பெயரெச்சவீறு விகாரத்தாற்றொக்கது.

புத்தியிற்றோன்றிய தொன்றாவது சுகதுக்கமோகரூபவிடயம்.

பரம்பரையிற் றோன்றுதலாவது முன்னர் வாயிற் காட்சியுணர்வு தோன்றி அதன்பின் மானதக்காட்சியுணர்வு தோன்றி அதன்பின்னர்த் தன்வேதனைக்காட்சியுணர்வு உயிரின்கண் வந்து தோன்றுதல்.

இதனானே அந்தக்கரணங் கீழுள்ளவற்றை நோக்கிச் சித்தாமாறும், மேலுள்ளவற்றை நோக்கி அசித்தாமாறும், உயிர் அவ்வாறன்றி யாண்டுஞ் சித்தாமாறுங் கண்டுகொள்க.

---

"அவைசந்தித்ததான்மா" என்பதற்குப்பிரமாணம்.

சிந்தித்தாஞ் சித்தந் தெளியாதா மாங்காரம்
புந்தியா யாய்ந்து மனமாகும் - பந்தித்து
வெவ்வேறு தானே துணிந்துள்ள மிவ்வேறு
மவ்வேறும் போதுபோ லாங்கு. (உ)

அந்தக்கரணங்களின் சொரூபமும், அவையிற்றுக்கு ஆன்மா வேறென்றுங் கூறுகின்றது.

| | |
|---|---|
| இ-ள். சிந்தித்தாஞ் சித்தம் எ-து. | சித்தம் நினைதலை யுடைத்தாம். |
| தெளியாதா மாங்காரம். எ-து. | அகங்கார மகந்தைக்கிடமா யானென தென்பதுடைத்தா யென்னை யொப்பாரில்லை யென்றெழுந்திருந்து தெளியாமலை யுடைத்தாம். |
| புந்தியா யாய்ந்து. எ-து. | புத்தியா யாராய்ந்து நிற்றலையுடைத்தாம். |
| மன மாகும் பந்தித்து. எ-து. | மன மொருபொருளை நினைவதுஞ் செய்து பற்றுதலையு முடைத்தாம். |

பற்றுதல் - பகுத்தறிந்து துணியாமலையமாய் நிற்றல். இப்பொருள் "சித்தமாமவ்வியத்தஞ் சிந்தனையதுவுஞ்செய்யும் "ஆங்காரம்புத்தியின்க ணுதித்தகந்தைக்கு வித்தாய்". மன மதைசதத்தின் வந்தொருபொருளைமுந்தி—நினைவதுஞ் செய்தங்கைய நிலைமையினிற்கும்". என்பனவற்றாலறிக. சித் - உ—கு, ௫அ - ௫௬ - ௬0—செ.

வெவ்வேறுதா இப்படி யுள்ளவையிற்றுடன் அதுவதுவானை துணிந் து வாய் நின்று அவற்றினது செயல்களை வேள்ளம். எ-து. றுவேருகவறிந் தறுதியிடுவது ஆன்மா.

வேறு வேருக வறிந்து அறுதியிட்டதெப்படியென்னில்? சித்தத்துக்குப் பற்றுதல் தொழிலென்றும், அகங்காரத்துக்கு வொன்றையுந் தெரியாமை யெழுந்திருக்கை தொழிலென்றும், புத்திக்கு ஆராய்வது தொழிலென்றும், மனத்துக்குப் பற்றுதல் தொழிலென்றும் அறிந்து, அவையிற்றுக்கு வேருதலாம்.

அஃதெங்ஙனேயென்னில்? கைப்பதொன்று கைக்கின்றேமென் றறியாது. புளிப்பதொன்று புளிக்கின்றேமென் றறியாது. உவர்ப்பதொன்று உவர்ப்பேமென் றறியாது. அவையிற்றினுடைய வறுவகைஇரதங்களையுமறிந்து இதுகைத்தது, இது புளித்தது, இது தித்தித்தது, இது துவர்த்தது, இது கார்த்தது, இது உவர்த்ததென் றொருவன் சொன்னாற்போல்ப வென்றதாம்.

இவ் வேரும் எ-து. இந்த அந்தக்கரணங்களாலே ஆன்மாவும் வேறுவேறு குணங்களை யுடைத்தாம். அஃதென்போல வென்னில்?

அவ் வேரும் போதுபோலா அப்படி வேறுவேறு குணங்களாய் நிற்கின்ற ஆதித்தன்போல அவ்விடத்து. எ-றுங்கு. எ-து.

அவ்வேருதல் - உதயகாலம், உச்சிக்காலம், அபராங்கிய காலம், இவையில் ஒரு தன்மையாகிய ஆதித்தன் வேறுவேறு குணமாய் நின்ருற்போல வென்றதாம்.

அவ்விடத்தென்றது, அந்தக்கரணங்களுடனேகூடி யொன்ருயழுந்தித் தன்மயமின்றி யவயிற்றினுடைய சொரூபகுணமாய் நிற்குமிடத்தென்றதாம்.

'அவை சந்தித்த தான்மா' என்றது. ஆன்மா அந்தக்கரணங்களுக்கு வேறென்று மவையிற்றுடனேகூடினபொழுதுங் குணம்வேறுபடுமென்றுங் கூறியபக்கத்துக்கு, ஆதித்தன் காலங்களுச்குவேறென்றுங் காலங்களாலே குணம் வேறுபடுமென்பது சபக்கமாயிற்று. இவை நீக்கற்கரிதாய்த் தகளியுந் திரியு நெய்யுந் தீபமும் போல நிற்குமெனவறிக. இப்படியறிந்தவர் தம்மையறிந்தவர். "தம்மையிற்றமக்கொருகேடில்லை" யென்ருர் பிறரும்; "கருவியாமனமும்புத்தி" என்ருர் வழிநூலார். சித் - ச—சு, ந—செ. (உ)

---

சிவஞானமுனிவர் உரை.

எ-து. உ-ம். எ-னின். மேற்பொதுவகையாற் கூறிப்போந்த அந்தக்கரணங்களினியல்பு சிறப்புவகையாற்கூறுமுகத்தான், மானதக்காட்சியுள்ளுங் கடற்றிரைபோலப் பரம்பரையின் வெவ்வேருயுணர்வு நிகழுமாறுணர்த்தி உயிர்வேருதலை வலியுறுத்துத லுதலிற்று.

இ-ள். உள்ளம். எ-து. புருடதத்துவமெனநின்றவுயிர்—ஆங்கு. எ-து. வாயிற்காட்சியாற் கண்டவிடயங்களினென்றனை மனமாதியானுணரும் மானதக்காட்சியின்கண்ணும் ஒருபெற்றித்தாதலின்றி—சித்தமாய்ச் சிந்தித்து. எ-து. சித்தமாய் நின்று இஃதியாதாகற்பாற்றெனச் சிந்தித்தும்,—மனம் ஆகிப் பந்தித்து. எ-து. அதன்பின் மனமாய் நின்று இஃதின்னதாகற்பாற்றெனப் பற்றியும்,—ஆங்காரம் ஆய்த் தெளியாது. எ-து. அதன்பின் ஆங்காரமாய் நின்று இஃதாமோ

அன்றே இதனை யின்னதெனத்தெளிவேன்யானெனத் தெளிவு பிறவாதெழுந்தும்,—புந்தியாய் ஆய்ந்து. எ-து. அதன்பின்னர்ப் புத்தியாய்நின்று இஃதின்னதெனத் தெளிந்தும்,—வெவ்வேறு தானே துணிந்து இவ்வேறும். எ-து. இங்ஙனம் வெவ்வேறாகவே யுணர்தலான் அவ்வாறுணரும் புருடன் இவ்வந்தக்கரணங்களின் வேறும்—போது அவ்வேறும் போல். எ-து. ஞாயிறுமுதலியவற்றோடு கூடிநின்று நாழிகை நாள் பக்கந் திங்கள் யாண்டு முதலியனவாய்ப்படும் பாகுபாடுசெய்யுங் காலதத்துவம் அஞ்ஞாயிறுமுதலிய வற்றின் வேறாயினாற்போல். எ-று.

ஆய்தல் ஈண்டு நிச்சயித்தற்பொருட்டு.

துணிதலென்பது அறிதலென்னும் பொருண்மாத்திரையாய் நின்றது.

தான் அசை. ஏகாரந் தேற்றம்.

இவ் அவ் என்பன வகரவீற்றஃறிணைப் பன்மைச் சுட்டுப்பெயர்.

வேறும் போதுபோலெனவே, ஆண்டு நீக்கப்பொருள் ஞாயிறுமுதலியனவென்பது தானே விளங்குமென்பது நோக்கி அவ்வெனச்சுட்டிபொழிந்தார். சாரியையும் உருபும் உடன்றொக்கன.

சிறம்பும்மை விகாரத்தாற் றொக்கது. ஆங்கும் வெவ்வேறு தானே துணிந்தெனவே மானதக்காட்சியும், இங்ஙன நால்வேறுவகைத்தாய் ஒன்றற்கொன்று முறையே ஏதுவும் பயனுமாய்க் கடற்றிரைபோலப் பரம்பரையிற் றோன்றுமென்ற வாறாயிற்று.

செய்யுளாகலின் முறைபிறழ வைத்தார்.

அகார வுகார மகங்காரம் புத்தி
மகார மனஞ்சித்தம் விந்துப் - பகாதிவற்றை
நாத முளவடிவா நாடிற் பிரணவமாம்
போதங் கடற்றிரையே போன்று. (௫)

இது, அந்தக்கரணங்களுக்கு அக்கரங்கள் சோரூபமாமாறு கூறுகின்றது.

| | |
|---|---|
| இ-ள். அகார வுகார மகங்காரம் புத்தி. எ-து. | (இது, நிரை நிரை.) அகாரமாகிய அக்கரம் அகங்காரத்துக்குச் சொரூபம், உகாரம் புத்திக்குச் சொரூபம். |
| மகார மனம். எ-து. | மகாரம் மனதுக்குச் சொரூபம். |
| சித்தம் விந்து. எ-து. | விந்து சித்தத்துக்குச் சொரூபம். |
| பகாதிவற்றை நாத முளவடிவாம். எ-து. | இந்த அக்கரங்களை நீங்காதாகிய நாதம் ஆன்மாவுக்குச் சொரூபமாம். |
| நாடிற் பிரணவமாம். எ-து. | இந்தவக்கரங்களைந்தும் விசாரிக்கில் பிரணவமாம். |
| போதங் கடற்றிரையே போன்று. எ-து. | இவை கூடினவவதரத்தில் ஆன்மாவுக்குண்டாமறிவு கடலிடத்துத் திரை யுகளித்தெழுந்திருந்தாற்போலும். எ-று. |

அந்தக்கரணங்களையு மக்கரங்களையும் ஆன்மா பிரியாமனின்று உச்சாரணம் பண்ணுமிடத்து நாத முருபமாய்ப் பிரணவ முருவேசரிக்கும்பொழுது ஆன்மாவுக்குப் போதக் கடற்றிரை போலு மென்றதாம்.

அது, சந்திராதித்தர்க் கூட்டமாகிய வுவாவிலே கடல் கிளர்ந்தெழுந்தாற்போலு மென்றதாம்.

விந்துவினுண்டாகிய தோற்றக்கிரமத்திற் சூக்குமை, பைசந்தி, மத்திமை, வைகரி என்னும் வாக்குகளுளும் அந்தக்கரணங்களிலே பிரவேசித்து நிற்குமாகையினாலும், அந்தக்கரணங்களுக்கு அக்கரங்கள் வடிவானவாறறிக.

பிரணவத்தை யுச்சரிக்குமிடத்து உச்சாரணம் நாதசொரூபமாகையில் ஆன்மாவுக்குச் சோரூபம் பிரமநாதமென்பாரொனவறிக.

இப்படி அக்கரங்களு மந்தக்கரணங்களும் வேறறநின்று வேறானாற்போல ஆன்மாவும் அந்தக்கரணங்களும் ஏகிபவித்துநின்று வேறுமென்பதுணர்க. "அவ்வுடனுவ்வுமவ்வு மனம் புத்தியாங்காரங்கள்" என்றார் வழிநூலார். சித் - ச—சூ, ௩—செ.

அந்தக்கரணங்களும் அக்கரங்களும்கூடிச் சீவிக்கும் அவதரத்தில் ஆன்மபோதம் வெகுவிதமாக வெழுந்திருக்குமென்னும் பக்கத்துக்கு, கடலுந் திரையுமென்பது சபக்கமாயினவாறு காண்க. (௩)

---

சிவஞானமுனிவர் வுரை.

எ-து. உ-ம். எ-னின். அம்மானதக்காட்சியினிகழுஞ் சவிகற்ப வுணர்விற்கேதுவாய் அவற்றையுடனின்று செலுத்து

ம் அக்கரங்களிவையென்பதும் அவற்றானுணர்வு மாறிமாறித் தோன்றுமாறு முணர்த்துதனுதலிற்று.

இ-ள். வெ-டை.

"மன்னு மகார மனஞ்செலுத்தும் புத்தியினை—யுன்னுமுகார முபகரிக்கு—முன்னாகு—மாங்காரந் தன்னை யகாரஞ் செலுத்தியிடு—நீங்காத சித்தம் விந்துநேர்.,, என்பவாகலானும், ஈண்டோதிய முறையே முறையெனவும், "அவ்வுடனுவ்வுமவ்வு மனம்புத்தி யகங்கா ரங்கள்,, என வழிநூலாசிரியரோதிய எதிர்நிரனிறைப் பொருளெனவுங் கொள்க. "அவ்வுட னுவ்வு மவ்வு மனழ்புத்தி யகங்கா ரங்கள்,, என்றதே முறையெனக் கொண்டு அதற்கியையக் கொண்டுகூட்டி யுரைப்பாருமுளர்.

துகளறுபோதம். கச—செ. சித் - ச - சூ, ௩—செ.
பகாதிவற்றை நாடிற் பிரணவமாமெனவும் போன்றுமெனவுங் கூட்டுக.

அந்தக்கரணங்களைச் செலுத்தும் அக்கரங்களைக் கூறுவார் ஒப்புமைபற்றிப் புருடனைச் செலுத்தும் அக்கரமும் உடன்கூறினார்.

உடனின்று செலுத்துதல்பற்றி அபேதமாக வைத்தோதப்பட்டன.

"நிகழ்ந்திடும் வாக்கு நான்கு நிவிர்த்தாதிகலையைப்பற்றி" சித் - க—சூ, உச—செ. அகரமுதலிய பஞ்சகலைவடிவாய் நின்று இவற்றை வேறுவேறு செலுத்துதல்பற்றிக் கணந்தொறும் நினைப்பு மறப்புமாகிய சகலகேவலங்கள் அதிநுட்பமாய்க் கறங்கோலைபோல மாறி மாறி நிகழுமெனவும், மாசகலத்தின் கட் கணந்தோறும் அங்ஙனமுணர்வுதித்தும் ஒடுங்கியும் வருதல் சமுத்திரத்தின்கட் புதிது புதிதாய்த் திரைதோன்

தியும் ஒடுங்கியும் வருமாறுபோலுமெனவுமுணர்க. கடற்றிரையுவமை மேற் பரம்பரையாய் உணர்வு வருதற்கெடுத்துக்காட்டினார்; ஈண்டுப் புதிது புதிதாய் வருதற்கெடுத்துக்காட்டினார்: ஆதலாற் புனருத்தியின்மை யுணர்க.

---

எண்ணில் வோங்காரத் தீசர் சதாசிவமாம்
நண்ணிய விந்துவொடு நாதத்துக் - கண்ணிற்
பகரயன்மா லோடு பரம னதிதெய்வ
மகரவுக ரம்மகரத் தாம். (ச)

இது, அக்கரங்கள் சடமாகையால் அதிதேவதைகளை யொழிந்து பிரேரகப்படாதென்கின்றது. எனவே, அந்தக்கரணங்களு மிவையிற்றைக்கூடி நிற்பினுஞ் சடமாகையால் ஆன்மாவை யொழிந்து பிரேரகப்படாதென்பதாம்.

இ-ள். எண்ணில் எ-து. முன் சொன்ன

ஓங்காரத்து நண்ணிய. எ-து. பிரணவத்தைப் பொருந்திய.

விந்துவொடு நாதத்துக்கு. எ-து. விந்துவுக்கும் நாதத்துக்கும்.

அதிதெய்வம். எ-து. மிக்க தெய்வம் - பொருந்திய தெய்வமென்றுமாம்.

ஈசர் சதாசிவமாம். எ-து. ஈசுர தேவரும் சதாசிவ தேவருமாம்.

விந்துவுக்கு ஈசுரதேவர், நாதத்துக்கு சதாசிவதேவர்.

கண்ணில், எ-து. கருதில்.

பக ரயன் மா சொல்லப்பட்ட பிரமாவும் விட்டுணுவு லோடு பரமன். ம் உருத்திரனும் அதி தெய்வம். ஏ-து.

அகர வுகரம் அகாரத்துக்கும் உகாரத்துக்கும் மகா மகரத்தாம். எ- ரத்துக்குமாம். எ-று.

அகாரத்துக்குப் பிரமா, உகாரத்துக்கு விட்டுணு, மகாரத்துக்கு உருத்திரன்; இவைநினைநினைஎண்ணில் ஓங்காரமென்பதற்கு ஒங்காரத்துக்குத்தெய்வ மெண்ணில்லை: இந்தத்தெய்வமெல்லாமென்றும்ாம்.

கண்ணில்என்றவிதப்பால், அக்கரங்கள் பொருந்திய பிரணவத்தாற் பிரயோசநம் அக்கரங்களுக்குமில்லை பிரணவத்துக்குமில்லை அவற்றை யறிவோனுக்குப் பிரயோசநமாயிற்று; அதுபோலஅந்தக்கரணங்களுக்கு அக்கரங்களாலு மதிதேவதைகளாலும் பிரயோசநமில்லை: அக்கரங்களுக்கும் அதிதேவதைகளுக்கும் அந்தக்கரணங்களாற் பிரயோசநமில்லை, ஆன்மாவுக்கே பிரயோசநமென்பதாம். எனவே, அந்தக்கரணங்களும் அக்கரங்களும் அதிதேவதைகளும் தத்துவங்களாம் ஆன்மாவுக்கென்பதறிக. "தத்துவரூபமாகுந் தருமுருவானவெல்லாம்". சித் - உ— கூ, எக—செ. "அயனரியானுமீசர் சதாசிவமதிதெய்வங்கள்". என்றார் வழிநூலார். சித் - ௨—கூ, ௨—செ.

மனாதிகளுக்குச் சொரூப மக்கரங்களென்பதுவும், அக்கரங்களுக்கு அதிதேவதைகள் சதாசிவதேவர் முதலாயினரென்பதுவுஞ் சாத்திரப்பிரமாணமென வறிக.

அந்தக்கரணங்களைப் பிரிக்கவரிதாகையா லிப்படி யிந்த நாலு வெண்பாவாலுங் கூறினார் என வுணர்க. (ச)

---

சிவஞானமுனிவர் உரை.

எ-து. உ-ம். எ-னின். அவ்வக்கரங்களுஞ் சடமாகலின் அவற்றை யதிட்டிக்கும் அதிதெய்வங்கள் இவையென்பதுணர்த்துதனுதலிற்று.

இ-ள். எண்ணில்வோங்காரத்து நண்ணியவிந்துவொடு நாதத்ததிதெய்வங் கண்ணில் ஈசரொடு கூறியசதாசிவமாம். அகரவுகரமகரத்ததிதெய்வங்கண்ணிற் பகரயன்மாலோடு பரமனும். எ-று.

எண்ணில்வோங்காரம் எண்ணத்தின்கண் நிலவிய ஓங்காரமென வினைத்தொகை. எண்ணம் ஈண்டு மானதக் காட்சி.

ஒடு எண்ணின்கண் வந்தது.

ஈண்டு அயன் மால் பரமனென்றது சுத்தவித்தையின் வைகுவாரை. பரமன்=உருத்திரன். அகரவுகரம் மகரத்தாமென்புழி மகரம் இசைப்பொருட்டாய் ஒற்றில்வழி யொற்றாய்வந்தது.

 ௨—கூ, முதலதிகரணமுடிந்தது.

---

இனி, "சகசமலத்துணரா" என்பதற்குப் பிரமாணம்.

மாயா தநுவிளக்காய் மற் றுள்ளங் காணுதே
லாயாதா மொன்றை யதுவதுவாய் - வீயாத [போற்
வன்னிதனைத் தன்னுண் மறைத்தொன்றுங் காட்டம்
றன்னைமல மன்றணைத ருன். (ரு)

இது, சுத்தனாகிய வான்மாவை யுடம்புமறைத்த தென்போருக்கும், புருடனே யறிவனென்போருக்கும், ஆன்மாவினுடைய சொரூப சுபாவமும் மல மாயைகளினுடைய சொரூப சுபாவமுங் கூறுகின்றது.

இ-ள். மாயா தநு விளக்காய் மற்றுள்ளங் காணுதே லாயாதா மொன்றை யதுவதுவாய், எ-து. ஆன்மா மாயையினுடைய சொரூபங் காட்டாகக்கொண்டு காணுதாகில் அந்தந்தவிடயங்களாய் நின்றொரு கன்மத்தைப் புசித்தறியமாட்டாது. (மற்று அசை.)

வன்னிதனைத் தன்னுண் மறைத் தொன்றுங் காட்டம்போற் றன்னைமல மன்றணைத றுன் வீயாது. எ-து. அக்கினியைக் காட்டமறைத்தும் அக்கினி கெடாதுபோல, ஆன்மாவையநாதியிலே மல மறைத்துநிற்றலை யுடைத்து. அப்படியாயினும் அந்த அக்கினி கெடாமனின்றாற்போல ஆன்மாவுந் தன்னுடையசைதந்நியங் கெடாது. எ-று.

இது, மலமென்பதொன்றில்லை மாயையினுடைய் காரியமேயுள்ளதென்றும், மாயை யான்மாவினுடைய ஞானக்கிரியைகளை மறைத்துநிற்குமென்றும், சுத்தமாம் ஆன்மாவினுடைய அறிவை யுடம்புமறைத்ததென்றுங் கூறுவோர்க்கு, "போதகாரியமறைத்து நிற்றலாற்புகல்மலங்கா ணுதலாங்குணமேயாகவுயிரினுள்விரவலாலே" "பருதியைமுகில்மறைப்பப் பாயொளிபதுங்கினாற்போ லுருவுயிர்மறைக்கின்ஞானக் கிரியைகளொளிக்குமாகும்". "புருடன்றன்குணமவித்தை யெனிற்சட

ம்புருடனுகும்— குருடன்றன்கண்ணிற்குற்றம் கண்ணின்றன் குணமோகூருய்". என்று மலமாகியவிருளை மாயைவிளக்கா கநின்று நீக்காதாகி லொன்றையும் ஆன்மாக் காணுதென்று கூறியவாறு காண்க. சித் - உ—ரு, அசு - அ௩ - அ௫— செ.

என்றது, மாயை ஆன்மாவுக்குத் தநுகரணபுவநபோகங்க ளாய் நிற்றலானும், ஆன்மா சைதந்நியமான இச்சாஞானக்கிரி கைகள் கலாதிகளையும் கொண்டொழிந் தொன்றைச் சீவியா தாகையானும், அவையிற்றினுடைய சீவிப்பாலே பிருதிவி முத லாகிய தத்துவங்களுடனே அந்தந்த விடங்களிலேநின்று சீவி க்குமிடத்து மாயையின் மயக்கிலே யழுந்தி ஆணவமலத்தாலே யிரதிக்கப்பட்டுத் தன்மயமாகையை யடைந்துநின்று புசித்தல் வேண்டுகையால் கலாதிகளையும் அந்தக்கரணங்களையும் ஒ ழிந்து ஆன்மாவினுடைய விச்சாஞானக்கிரியை சீவியாதென்ற து. கலை சித்தத்துச்குட்கருவியாய்நின்றுகிரியையையெழுப்பவே ண்டுகையாலும், வித்தை புத்திக்குட் கருவியாய்நின்று ஞான த்தை யெழுப்பவேண்டுகையாலும், இராக மனதுக்கும் அகங் காரத்துக்கு முட்கருவியாய்நின் றிச்சையை யெழுப்பவேண் டுகையானுமெனவறிக.

இச்சாஞானக்கிரியையாவது:— கிரியை யான் செய்தேன் பிறர்செய்தா ரென்னுதி யானெனன்கை. ஞானம் யாதொன் றினும் அழுந்தினவிடத் துண்டானவறிவு. இச்சை இவ்விரண் டினும் புற்றுமிச்சை.

ஆனல் அந்தக்கிரியையும் ஞானமுமே யமையாதோ இச் சைவேணுமோவென்னில்? வேண்டிற்று. ஞானக்கிரியைகளி னுடைய சீவிப் பிச்சையையொழிந் தெழுந்திராதாகையானு ம், அந்த ஞானத்துக்குங் கிரியைக்கு முபாதாரமிச்சையாத,

லானும், ஞானக்கிரியைகளினிடமாக ஆன்மா நிற்கும் அவதர மிச்சையேவடிவாகையானு மெனவறிக.

இப்படிக்கொத்த விச்சையொழிந் தில்லையாதலாற் கிரியை முன்னாயிருக்கவு மிச்சையை முன்னாகக்கூறினார்.

தன்மயம். எ-து. ஞானத்தையும் ஞாதிருவையும் ஞேயத்தையும்.

ஞானமென்றது ஆன்மஞானத்தை, ஞாதிருவென்றது அந்த ஞானத்தையுடைய ஆன்மாவை, ஞேயமென்றது அந்த ஞானத்தாலே யறியப்பட்ட விடயத்தை.

இவையிற்றினின்ற தன்மையைத் தன்மயமென்றார். இவை யவ்விடத்தில்லையோவென்னில்? நேராகவில்லையன்று, உள்ளது தோன்றுது. அஃதெங்ஙனேயென்னில்? நாமிதனைப் புசிக்கின்றேமென்னும் அறிவும் புசித்தேமென்று அவையிற்றி னல்லதி து தீயதிதுவென்று சொல்லப்பட்ட விசற்பஅறிவு மவ்விடத்தில்லையாதலால் அந்த அவதரத்துக் கில்லையென வறிக.

இப்படி மாயாபோகங்களைப் புசிக்கும் அவதரத்தும், அவ்விடத் தவையின்றி அத்துவிதமாயிருக்குமென்பது சுவாநுபூதியாலறிக.

சுவாநுபூதி யென்றது யாதொரு காரியத்தைச் செய்து செய்தகாரியந் தனக்கான பிரயோசநம் இப்படி இப்படியெனக் காண்கை.

யாதொரு விடயத்திலும் அழுந்தின திசையிற் காட்சியை இப்படியிவையிற்றைத் தரிசிக்கப்பட்டது முத்தித்திசையிலு மொக்குமாதலால், பெத்தமுத்தியிரண்டிலும் இப்படி அல்லை

யாமலிருக்கவேண்டு மென்னும் இடம் அறிவித்தானென வறிக.

ஆன்மபோதத்தை மலமறைத்து நிற்கின்றதென்னும் பக்கத்துக்கு, காட்டமும் வன்னியுமென்று காட்டிய சபக்கங் காண்க.

மலமிருளு மாயைவிளக்கு மெனவறிக. "புகலுமலமொழித்தற்கு" என்றார் சார்பு நூலார். சிவப்பிரகாசம் - பொது உடு—செ. "யானேயின்னனுயினேன்" என்னும் ஞானாமிர்தத்தில் "பெருமலமும் பிறழாமாயையு - மற்றவற்பிணிப்பேயாயினேனற்றவை - யிரண்டெனவிசைத்த லெனின் தெருண்டிசின்-யாண்டுமொருவா தொழிவதுமீண்டுப் - பிரிந்துபுணர்ந்தையும் பெற்றித்திருந்தது—மொன்றேபோலும் நன்றுநனியுணர-மறைத்தற்றொழில் பூண்பதுமதனைக்—குறைத்தற்செய்திக் குலவுவதோரிடை—யிரண்டலவென்பதெ னிருளருளிரிசுடர்—முரண்டரநின்ற முழுமலமாயை" என்றார். (ரு)

---

சிவஞானமுனிவர் உரை.

எ-து. உ-ம். எ-னின். ஆகந்துகமலமே ஞானதிரோதகமாதலமையும் வேறுமோர்மலமுண்டென்றல் மிகைபோலுமென ஐக்கவாதசைவர் முதலியோர் மதம்பற்றி நிகழுங்கடாவையாசங்கித்து, ஆகந்துகமலத்தானுஞ் சகசமலத்தானுஞ் செயப்படுங்காரியங்கட்குத் தம்முள் வேற்றுமை பெரிதாமாறுணர்த்துமுகத்தான் ஏதுவை வலியுறுத்துத லுதலிற்று.

இ-ள். உள்ளம் மாயா தநு விளக்கு ஆக் காணுதேல் ஒன்றை ஆயாது ஆம். எ-து. உயிர் ஆகந்துகமலமெனப்படும் மாயாகாரியமாகிய உடம்பு தனக்குக் காட்டாகக்கொண்டு காணுதாயின் ஒருவிடயத்தையுமறிவதில்லையாம்—மலம் தன்னை அன்

று அணைதல் தான். எ-து. சகசமலம் உயிரை அநாதியேப ற்றிநிற்றல்—அது அது ஆய் வீயாத வன்னிதனைத் தன்னுள்ம றைத்து ஒன்று ஆம் காட்டம் போல். எ-து. காட்டமுந லியவற்றுள் அதுவதுவேயாய்நின்றுந் தனக்குக் கேடில்லாத வன்னியைத் தனக்குண் மறைத்துவைத்து ஒன்றேயாய்நிற்குங் காட்டம்போலும். எ-று.

எனவே, காட்டாய் நின்று விடயங்களையறியும்வண்ணம் உயிர்க்கறிவை விளக்குதல் மாயையின் செய்தி; அவ்வறிவைத் தடை செய்துகொண்டு நிற்றல் மலத்தின் செய்தி: இவ்விரண்டும் இங்ஙனம் ஒளியுமிருளும்போல் இகலி நிற்பனவாகலான் அத்தன்மைத்தாய மாயை இத்தன்மைத்தாயமலமாதல் யாண்டையதென மறுத்தவாறாயிற்று.

மற்றென்பது மலமன்றணைதலென்பதனோடியைந்து வினைமாற்றின்கண் வந்தது.

முற்றும்மை சிறப்பும்மைகள் தொக்கன.

ஆமுந் தானுங் கட்டுரைக்கண் வந்த அசை.

வன்னி அது அதுவாதல், காட்டத்துண்மறைந்துழிக் காட்டமேயாயுஞ் சூரியகாந்தத்துண்மறைந்துழி அதுவேயாயும் இவ்வாறே அவ்வவற்றின் மறைந்துழித் தானென்பதொன்றில்லையென்னும்படி நிற்றல். அங்ஙனமாகியும் வீயாமை, கடைதன்முதலிய தொழிற்பாடு நிகழ்ந்தவழித் தோன்றுதலாற் பெற்றும். தன்னுண் மறைத்தல் வன்னியென்பதொன்றில்லையென்னும்படி பொதிந்துகொண்டு தானேயாதல். ஒன்றுங்காட்டம் ஒன்றேபோல் அத்துவிதமாங் காட்டமென்றவாறு. இவ்வாறு உவமைக்கோதிய அடைபுந்தொழிலும் இயையும் பொருட்கண்ணுங் கூறிக்கொள்க.

மாயை கன்மங்கள்போல ஆதியன்றெனக் காலத்தானும் வேற்றுமைகூறுவார் அன்றணைதலென்றார்.

இங்ஙனங் கூறிப்போந்த மலமாவது ஞானாபாவமென்பாரும், பிராந்திஞானமென்பாரும், தமோகுணமென்பாரும், பஞ்சக்கிலேசத்துள் ஒன்றாகிய அவிச்சையென்பாரும், மாயை கன்மங்களென்பாரும், சிவசத்தியென்பாரும், உயிர்க்குணமென்பாருமாய், அவ்வச்சமயநூல்பற்றி மயங்குவாருமுளர். அம்மலத்திற்குப் பற்றுக்கோடாகிய சூனியமுதலியவற்றின் வேறெனப்பட்ட ஆன்மாவும் இயற்கையாற் சடமென்பாரும், அறிவுமாத்திரையேயெனக் குணிப்பொருளன்றென்பாரும், சுதந்தரவறிவுடைத்தென்பாரும், அவ்வுடம்பளவிற்றென்பாரும், அணுவளவிற்றென்பாரும், உருவென்பாரும், அருவென்பாரும், உருவருவென்பாருமாய், இன்னும் பலதிறப்படக்கூறி மயங்குவாருமுளர். அவையெல்லாம் பொருந்தாமை ஆகமங்களுட்காண்க. ஈண்டுரைப்பிற் பெருகும்.

இச்சகசமலம் ஞானதிரோதகமாய்த் திரவியமாய் அறியாமைக்குணத்ததாய்ச் செம்பிற்களிம்புபோல உயிரின் குற்றமாய் அநாதிபந்தமாய்ச் சடமுமாய்ப் பலவுமாயின் அழிவெய்துமாகலின், அநாதிபந்தமாதல் பெறப்படாமையின்; ஒன்றேயாய் விஞ்ஞானகலர் பிரளயாகலர் சகலரென்னும் உயிர்ப்பாகுபாட்டிற்கேதுவாய் உயிர்கடோறுந் தனித்தனி வெவ்வேறாய் மறைத்து நின்று தத்தங்காலவெல்லையி னீங்குவனவாகிய சத்திகள் பலபலவுடைத்தாய் உயிர்கண் மூன்றவத்தைகளும் படுதற்கு மூலகாரணமாய் நித்தமாய் வியாபகமாய் வியாபகவுயிர் அணுத்தன்மைப்படுமாறு செய்தலின் ஆணவமென்னும் பெயர்த்தாய்ப் பசுத்துவம் பசுநிகாரம் மிருத்தியுமூர்ச்சைமலம் அஞ்சனம் அவித்தை ஆவிருதியென்றற்றொடக்கத்துக் காரணக்குறிகளுமுடைத்தாய் நிற்பதெனவும், படலம் படர்ந்த கண்

ஞாயிற்றின் சந்நிதியினிற்பினும் படலத்தான் அவ்வொளியை யிழந்து இருளினமுழுந்துமாறுபோல் முதல்வன் சந்நிதியினிற்பி னுஞ் சோபான்முறையின் அறிவிக்க அறியுந்தன்மைத்தாயஉயி ர் அநாதியேயறிவித்தால் அறியமாட்டாமையின் அம்மாட்டா மையான் அவ்வறிவை இழந்து அறியாமையாய் அழுந்துதலின் அஃதவ்வுயிர்க்குப் பந்தமாயிற்றெனவுமுணர்க. அநாதியே மலத்தினீங்குதல் முதல்வன்வினையாய் அநாதிமுத்தத்தன்மை யென எண்குணங்களுள் வைத்தெண்ணப்படுவதென்பது சிவாகமங்களுக்கெல்லாம் ஒப்பமுடிந்தாற்போல அநாதியே மலத்தைப்பற்றுதல் உயிரின் வினையாய் உயிர்க்குற்றங்களுள் வைத்தெண்ணப்படுவ தென்பதூஉம் அவற்றிற்கெல்லாம் ஒப்பமுடிந்தது. ஈண்டுப்படுங் கடாவிடைகளெல்லாம் ஈரிடத்துமொக்கும்.

☞ ச—௫, இரண்டாமதிகரணமுடிந்தது.

---

இனி, 'அமைச்சரசேய்ப்பநின் றைந்தவத்தைத்தே"
என்பதற்குப் பிரமாணம்.

ஒன்றணையா மூலத் துயிரணையு நாபியினில்
சென்றணையுஞ் சித்த மிதயத்தின் - மன்றவே
ஐயைந்தாங் கண்டத்து நன்னுதலில் வாக்காதி
மெய்யாதி விட்டகன்று வேறு. (௬)

என்றது, அந்தக்கரணங்கள் அமைச்சாகவும், வாயில்காப் பா ரொற்றுட்கள் தூதா ளத்தாளிகள் புரோகிதர் ஐவரும் ஞானேந்திரியங்களாகவும், யானைப்படை குதிரைப்படை தேர்ப்படை காலாள் சேனுபதியர் ஐவருங் கன்மேந்திரியங் களாகவும், சத்தாதி வசனுதி விடயங்கள்பத்து மேவலாட்க

ளாகவும், பிராணவாயு முதலிய வாயுக்கள் உறுதிச் சுற்றமாக வும் உடைய ஆன்மாவாகிய அரசன் என்றதாம். இராசா பவனிபோய்த் தன்னுடைய கோயிலுட்புகுமளவில் வாயில் தோறும் நிற்குமவர்களை நிறுத்தி அந்தப்புரத்தில் தானேபுகு மாப்போல, கருவிகரணாதிகளுடனே உணர்த்துமுறையிலே வியாபரித்த ஆன்மா சாக்கிரஞ் சொப்பனஞ் சுழுத்தி துரியந் துரியாதீதமென்கின்ற அவத்தைகளைப்பொருந்தி இலாடங் கண்டமிதயம் நாபி மூலாதாரமாகிய விடயங்களை யடையுமளவில்; அவையிற்றில் நிற்குங் கருவிகரணாதிகளை முறைமையிலே நிறுத்தி யடைவனென்றதாம்.

இது, ஆன்மஞானத்தை மலமறைத்துநின்ற அவதரத்தின் செய்தி கூறுகின்றது.

இ-ள். ஒன்ற மூலத்து ஆன்மா வொருகருவியையும் ஊணயா பொருந்தா.

மூலத்து

எ-து.

அதீதத்துக்குத் தானமாகிய மூலாதாரத்தில் என்றது. கருவிகரணாதிகள் ஒன்றுமின்றி யொன்றையுமறியாமல் பிருதிவித்தானமாகிய மூலாதாரத்தே அவ்வியத்தனாய்க் கிடப்பனென்றதாம். எனவே, அவ்வியத்தம் அவ்விடத்தொரு கருவியாயினவாறறிக. ஒன்றணையான் என்றது அறிகருவி யொன்றணையானென்றதாம்.

உயிரணையு துரியாவஸ்தையில் நாபித்தானத்திலே பிநாபியினில். ராணவாயுவை வந்துபொருந்தும்.

எ-து.

நாபி துரியத்தானமாகையாலும் நாபிக்குக்கீழ் பிராணவாயு வியங்காதாகையானு மேலியங்குவதாம். அப்புவையொழி

தெழுந்திராதாகையானும் அந்த அப்புவுக்குத்தானம் நாபியா கையாலும் எனவறிக. எனவே கருவி இரண்டாயிற்று.

சென்றணையு அந்தத்தானத்தை நீங்கிச்சென்று சுழுத் ஞ் சித்தமிதய தியி லிதயத்தானத்தே சித்தத்தைக்கூடும். த்தின். எ-று.

இதயந்தொடங்கி நாபிக்குமேல் சுழுத்தித்தானமாகையா னும், சித்த நினைவுக்கு உபாதானமாகையானும், நினைவெழுந்தி ருக்கவேண்டுமெவதர மக்கினியெழுப்பவேண்டுமாகையானும், அக் கினிக்குத்தாந மிதயமாகையானும், என்றதாம். எனவே, கரு வி மூன்றாயிற்று.

மன்றவே ஐ நிச்சயமாகச் சொப்பனத்திற் கண்டத்தா யைந்தாங் கண் னத்தே யிருபத்தைந்து கருவியுடனேயாம். டத்து. உ-று.

சத்தாதி யைந்தும், வசனாதி யைந்தும், பிராணாதியான வாயுக்கள் பத்தும், மனாதி நாலும், புருடனுமெனவறிக.

இந்தஇருபத்தைந்து மிவ்விடத்தாமென்றது, கண்டந்தொ டங்கி யிதயமளவாகச் சொப்பனத்தானமாகையானும், அதி லே கண்டத்துக்குக்கீழ் இதயத்துக்குமேற் பாதியளவா க மனசுக்குத் தானமாகையானும், மனம் வசனமுதலாயினவ ற்றுக்கு உபாதானமாகையானும், நின்றபாதிதொடங்கி யிதயத் தளவும் புத்திக்குத் தானமாகையானும், புத்தியிலே பூதாதி யாங்காரந் தோன்றுகையானும், அந்த வாங்காரம் சத்த முதலானவற்றுக்கும் வாயுக்களொன்பதுக்கும் உபாதானமா கையானும், இவை தான் வாயுவிடமாகச் சீவிக்கையாலுமென வறிக.

நன் னுதலில் வாக்காதி மெய் யாதியாம்.எ-து. சாக்கிரத்தானமாகிய நன்ருகிய நுதலிலே வாக்குப் பாதம் பாணி பாயுரு உபத்தமாகிய கன்மேந்திரியங்களைந்தும், மெய் வாய் கண் மூக்குச் செவியாகிய ஞானேந்திரியங்களைந்துமாகிய பத்துடனுமாம்.

ஆமென்பதனை யிரண்டிடத்துங்கூட்டுக.

ஆகச் சாக்கிரத்துக்குக் கருவி முப்பத்தஞ்சாயினவாருமென்றது, நுதலிலேதொடங்கித் தாலுமூலத்தளவுஞ்சாக்கிரத்தானமாகையானும்,தைசதவாங்காரத்துக்குத்தானஞ் சோத்திராதிகளுடையதானமாகையானும், வைசரியாங்காரத்துக்குத்தானந் தாலுமூல தந்தோட்டங்களாகையானும், ஞானேந்திரியங்களும் கன்மேந்திரியங்களு மிந்தஆங்காரங்களிலே தோன்றுகையானும், அவைதான் சீவிக்குமிடத் தாகாசமிடமாகச் சீவிக்கையானுமெனவறிக.

விட்டகன்று வேறு. எ-து. உணர்த்து முறைமையிற் கூடிநின்ற தத்துவத்தைச் சுத்தவித்தை-ஈசுரம்-சாதாக்கியம்-சத்தி-சிவமென்னுஞ்சுத்ததத்துவங்களைந்தும், கலை கால நியதி வித்தை யராகம் மாயையென்னும் வித்தியாதத்துவங்களாறையும், பிருதிவி அப்புத் தேயு வாயு வாகாசமென்னு மைந்தையும், விட்டு நீங்கிச் சைதந்நியரகிதனாய் எ-று.

எனவே, உணர்த்துமுறைமையிற் கருவிபதினாலு மடங்கிற்றென்பதாயிற்று.

இவையிற்றை நீங்குமவதரம் ஆன்மாவுக்குண்டாகிய அறிவு தானந்தோறுங் கெடுமெனவறிக. "புருடனேயறிவனுகிற் பொறிபுலனுகி" "படைகொடுபவனி போந்தும் பார்மன்னன் புகுதும்போது." "சாக்கிர முப்பத்தைந்து நுதலினில்" என்ருர்

வழிநூலார். சித்-சூ—௫, ௩௧-௩௨-௩௩—செ.

"சால்கொடுத்திருகை முட்டிவாழிய" என்னு ஞானாமிர்தத்தா லிவ்விரிவுகாண்க. (௬)

---

சிவஞானமுனிவர் உரை.

எ-து. உ-ம். எ-னின். தத்துவங்கள் தொழிற்படுதற்கண்நிகழும் அவத்தை வேறுபாடு தெரித்துணர்த்தி அஃதேதுவாதலை வலியுறுத்துதனுதலிற்று. நல்நுதலில் வாக்காதி மெய்யாதி மன்ற ஏய் ஐயைந்தாம் கண்டத்தின் வாக்காதி மெய்யாதி விட்டு அகன்று வேறு ஐயைந்தாம் இதயத்திற் சித்தஞ் சென்றணையும் நாபியினில் உயிர் அணையும் அணையா மூலத்து ஒன்று என வினையும்.

இ-ள். சாக்கிரத்தானமெனப்படும் இலாடத்திற் புறவிந்திரியம் பத்தினையுந் தேற்றமாகப் பொருந்திய இருபத்தைந்து கருவி தொழிற்படும், சொப்பனத்தானமெனப்படுங் கண்டத்தின் அப்பத்தினையும் விட்டு நீங்கிவேறாய் இருபத்தைந்து கருவி தொழிற்படும், சுழுத்தித்தானமெனப்படும் இதயத்தின்அவற்றுள் இருபத்திரண்டு கருவிகளை விட்டு நீங்கி முன்னர்க் கூறப்படும் இரண்டு கருவிகளோடு கூடிய சித்தந் தொழிற்படும், துரியத்தானமெனப்படும் உந்தியிற் சித்தத்தையும் விட்டு நீங்கி முன்னர்க் கூறப்படும் புருடதத்துவத்தோடு பிராணவாயுக் கூடித்தொழிற்படும்; இக்கருவிகளொன்றும் அணையாத அதீதத்தானமெனப்படும் மூலாதாரத்திற் புருடனொன்றே நிலைபெறும். எ-று.

எனவே, இலாடத்தானமுதலிய ஐந்தினுநிற்குங் கருவிகள் முறையே முப்பத்தைந்தும் இருபத்தைந்தும் மூன்றும் இரண்டும் ஒன்றுமொன்பது போந்தவாறுணர்க.

மன்றவென்பது தேற்றப்பொருட்டாகிய இடைச்சொல்.

ஏய்தல் பொருந்துதல்; வினைத்தொகை.

வாக்காதி மெய்யாதியை யென இரண்டாவது விரித்துரைக்க. அஃதீரிடத்துஞ் சென்றியையும்.

வருகின்ற சூத்திரத்தின் மெய் வாய் கண் மூக்கு எனச்செய்யுட்கேற்ப மெய்யை முற்கூறுதலின் அம்முறைபற்றி ஈண்டுச் செவியாதியென்னாது மெய்யாதியென்றார். அவற்றோடுகூடிய இருபத்தைந்தாவன; அவ்விந்திரியம் பத்துக்கும் விடயமாகிய வசனாதி சத்தாதி பத்தும், அவற்றினுக்கு உட்கருவியாகிய அந்தக்கரணங்களான்கும், அவற்றோடு கூடிய அவத்தையுறுவதாகிய புருடனொன்றும். அஃதவத்தையுறுதற்குரிய மதுகைக்கேதுவாய் அங்காரத்தாற் செலுத்தப்படும் பிராணாதிவாயுக்கள் பத்துமென இவை. ஈண்டுச் சத்தாதியென்றது வசனாதிபோலும் விடயங்களையெனக்கொள்க. எனவே, பூதங்களின் கூறாய் அவற்றுடனின்று தேராழிக்குத் தேருறுப்புப்போல இந்திரியங்களின் றொழிற்பாட்டுக்கு மதுகையை விளைத்து நிற்பனவாய புறக்கருவியறுபதில் ஈண்டுக் கூறிப்போந்த விடயங்கள் பத்தும் வாயுக்கள் பத்தும்ஒழித் தொழிந்த புறக்கருவிகள் நாற்பதும் அவற்றையுடைய பூதங்களைந்தும் அவற்றிற்கு வலியாயுடனிற்பனவாய சூக்குமபூதமெனப்படுந் தன்மாத்திரைகளைந்துமென்னும் ஐம்பதுகருவிகளும் கீழ்நோக்கிய சாக்கிரத்தானத்தில் தமது சத்திடங்கி விளக்கீடாகத் தொழிற்படாதொழியுமெனவும், அவை யொழிந்தவழி அவத்தைக்கேதுவாய் நின்ற ஏனைப் பொறிமுதலிய முப்பத்துநான்கும் அவற்றோடு கூடிய புருடதத்துவமும் இருவகைப்பூதங்களானும் புறக்கருவிகளானுந் தரப்படும் மதுகையின்மையின் ஆண்டுப் பொறிகளின் றொழிற்பாடு மெத்தென நிகழுமெனவுங்கொள்

ந. கலாதிகளுஞ் சுத்ததத்துவமும் அவத்தைக் கேதுவாகாமை யான் உடனெண்ணாராயினர். ஏனையவும் விரிந்த நூல்களுட்கூ றியவாறுபற்றி உணர்ந்துகொள்க.

---

இலாடத்தே சாக்கிரத்தை யெய்திய வுள்ள
மிலாடத்தே யைந்தவத்தை யெய்து - மிலாடத்தே
யவ்வவ் விந்திரியத் தத்துறைகள் கண்டடைவே
யவ்வவற்றை நீங்கிலது வாங்கு. (எ)

இதுமேலா லவத்தையுந் தெரிசநாவத்தையுங் கேவல சகல சுத்தமுங் கூறுகின்றது.

இ-ள். இலாடத்தே சாக்கிரத்தை யெய்திய வுள்ள மிலாடத்தே யைந்தவத்தை யெய்தும். இலாடத் தானத்தே சாக்கிராவத்தையைப் பொருந்தின ஆன்மா கீழாலவத்தையைப் பொருந்தினாற்போல அந்த விலாடத் தானந்தன்னிலே சாக்கிரமுதலாயுள்ள வைந் தவத்தையும் பொருந்தும்.

எ-று.

அஃதாவது, மலத்தினுடைய சொரூபத்திலே மறைந் தரூப சொரூபியாய் மூலாதாரத்திலே அவ்வியத்தனாய்ப் பின்னருண ர்த்து முறைமையிற் கருவிகளைக்கூடி யுணர்ந்து நிற்கின்ற ஆன் மா; அவ்விடத்தேயு மைந்தவத்தைப்படு மூலமலந் தடுத்து நிற் கவென்றதாம். எனவே மல மறைத்தலுந் தடுத்தலுமென வி ரண்டாயினவாறறிக.

ஒருவன் ஒருபொருளைப்போட்டுத்திடுக்கமெய் திமூர்ச்சித்தது அதீதம். அப்பொருளை யெவ்விடத்தே போட்டோமென்னும்

நினைவுமாத்திரந் தோன்றுமை மயங்கிநிற்பது துரியம். அத னை யின்னவிடத்திலேயாயிருக்கும் போட்டோமென் றையப் படுகின்றது சுழுத்தி. இன்னவிடத்திலே போட்டோமென்று துணிந்தவிடஞ் சொப்பனம். அப்பொருளைக் கண்டாற்போல க் கருதியவிடத்திற் சென்றல் சாக்கிரம். கண்டது சகலம். ச கலமாவது உணர்த்து முறைமையினிற்பது. இப்படி யெப்பொ ருட்குங் கூட்டிக்கொள்க.

இலாடத்தே அந்த விலாடத்தானத்தே யந்தந்த வவ யவ்வவ் விந்திரிய த்தைகள்தோறு மந்தந்தக் கருவிகள் கூடியு த் தத்துறைகள் ம் புரிந்தும் நின்றுற்போல வவையிற்றினுடை கண்டடைவே ய ய துறைகளையுங்கண் டவையிற்றையு நீங்கி வ் வவற்றை நீங் லவ்விடத்ததுவாம். எ-று.

கிலதுவாங்கு.எ-

று.

துறையாவது, சுத்ததத்துவங்களுடனே கூடி நின்றறியுமவ த்தைக ளைந்துமாம்.

அஃதாவது, சுத்தவித்தை யீசுரம் சாதாக்கியம் சத்தி சிவம் ஆகிய வைந்துடனுங் கூடி மேலாலவத்தையைத்தரிசிப்பது சாக் கிரம்.

அதிலே சுத்த வித்தைநீங்கி யீசுரஞ் சாதாக்கியஞ் சத்தி சி வத்துடனே கூடிநிற்றல் சொப்பனம்.

அதிலே யீசுரம் நீங்கிச் சாதாக்கியஞ் சத்தி சிவ மிவற்றுட னே கூடி நிற்றல் சுழுத்தி.

அதிலே சாதாக்கியம் நீங்கிச் சத்தி சிவத்துடனே கூடி நிற் றல் துரியம்.

அதிலே சத்தியும் நீங்கிச் சிவத்துடனே நிற்றல் அதீதம்.

அதீதத்திலே சிவதத்துவமு நீங்கி யருள்தாரகமாக நிற்றல் நின்மலாவத்தையாம்.

அவற்றை நீங்கிலதுவாங்கு. எ-து. திருவருள் தாரகமாமென்றதாம். எனவே நின்மலாவத்தையு மைந்தெனவறிக. இந்த நின்மலாவத்தை யைந்து முபதேசத்தாலறிக. "இருவகைச்சாக்கிராதி யவத்தைகளியல்புதானும்" எனவும் "அறிதரு முதலவத்தை யடைதரு மிடத்தேயைந்துஞ் செறிதரும்" எனவும் "ஐந்துசாக்கிரத்தினான்கு கனவினிற் சுழுனைமூன்று வந்திடுந் துரியந் தன்னி லிரண்டொன்று துரியாதீதம்" எனவும் வழிநூலார் கூறியவாற்றானு மறிக. சித்-ச—௬, ௩௪-௩௫-௩௬—செ

தத்துவாதீத பரசிவன் றனது மிந்தச் சுத்தாவத்தைகளையு நீங்கி அருள் தாரகமான விடமெனவறிக. இந்த வவத்தையைந்தும் புரியுமிடத்து மயக்கவிகற்பம் வாராம லிருக்கவேண்டுகையால் கேவல சகலமுங்கூறினார். "சாக்கிரத்தே யதீதத்தைப் புரிந்தவர்க ளுலகிற் சர்வ சங்க நிவிர்த்திவந்த தபோதனர்களவர்கள்—பாக்கியத்தைப் பகர்வதுவென்" என்றும் சித்-அ—௬, ௩௫—செ. "பொற்புறு கருவியாவும் புணராமே யறிவிலாமற்-சொற்பெறு மதீதம் வந்து தோன்றுமே தோன்றிநின்ற - சிற்பர மதனுளுள்ள செயலுறுத்திட வுதிக்கும் - தற்பரமாகி நிற்றல் சாக்கிராதீதந்தானே"; எனவும் சிவப்பிரகாசம் - உண்மை - ௩௭—செ. கூறியவை யிந்த வவத்தையெனவறிக. எனவே யிதுவும் நிட்டையல்லவென்றார்.

நிட்டையாவது, சுத்தா வவத்தைகூடி அருள்தாரகமாகநின்று விசுவம் பொய்யாய்த் தன்னையுஞ் சிவனையுந் தோன்றாமல் ஞேயத்திலே யழுந்துதலாம். இது மேல்வருமாற்றாலறிக.

கேவலமாவது, கண்ணிருளைச்சேட்டித்துக் காட்சியில்லையாய்த் தானொடுங்குவதுஞ் செய்யாமல் வெறுமனே யிருளாய் நி

ன்ருற்போலக் கருவிகளுஞ் சீவியாம லவத்தைக்கும்படாம லா ணவ மலமாகிய விருளூ மான்மாவுங் கூடிநிற்குமவதரம். உ-ம். "அறிவிலன் மூர்த்தனித்த னராகாதி குணங்களோடுஞ், செறிவி லன் கலாதியோடுஞ் சேர்விலன்செயல்களில்லான், குறியிலன்க த்தாவல்லன் போகத்துக் கொள்கையில்லான், பிறிவிலன் மல த்தினோடும் வியாபிகேவலத்திலான்மா"—என்பதனு லறிக. சி த்-சூ—ரு, ௩அ—செ.

சகலமாவது, கலாதிகளுடனே கூடிப் போக போக்கியத்தி லே போவதுவருவதாய்ச் சத்தாதி விடயத்தைதே பற்றுவது விடுவதாய்க் கன்மத்துக் கீடான யோனிகளிலே பிறப்ப திறப் பதா யுழலாநிற்கும். உ-ம். "உருவினைக் கொண்டுபோகபோ க்கியத் தன்னல்செப்பல், வருசெயல் மருவிச் சத்த மாதியாம் விடயந்தன்னிற், புரிவதுஞ் செய்திங்கெல்லா யோனியும் புக்கு ழன்று, திரிதருஞ்சகலமான வவத்தையிற் சீவன் சென்றே"— என்பதனுலறிக. சித் - சூ—ரு, ௩௯—செ.

சுத்தாவத்தையாவது, கன்மசாம்மியத்தே சத்திநி பாதம் பொருந்திச் சம்பிரதாயம் பெற்று மும்மலங்களும் நீங்கியான்ம போதங்கெட்டுத் திருவருள் தாரகமாதல். இது உபதேசத் தாலறிக. "இருவினைச் செயல்களொப்பி லீசன்றன் சத்திதோ யக், குருவருள்பெற்றுஞான யோகத்தைக்குறுகி முன்னர்த், தி ரிமல மறுத்துப்பண்டைச் சிற்றறி வொழிந்துஞானம் பெருகி நாயகன்றன்பாதம் பெறுவது சுத்தமாமே"—என்பதனுலறிக. சுo—செ. "நீக்கமில தீதமாசு நிறைந்தகேவலமா நீர்மை, சா க்கிரங்கலாதிசேர்ந்த சகல மாந்தன்மையாகும், நீக்கமி விரண் டுங்கூடா தொழியவோர் நிலையில் நீடுஞ், சாக்கிர வதீதஞ்சுத்த த் தகைமையதாகுந்தானே"—என்பதனுலு மறிக. சிவப்பிரகா சம் உண்மை - கஉ—செ. "ஆன்மாவின் வடிவுதானு மநேகா

ர்த்தக்கூட்டமென்னில்” என்பது முதலாக “எங்குந்தான் வி யாபியாய்நின்று” என்பது ஈறுகக்கூறுபடுத்திச் சொல்லும் பொருள்களுமவற்றின் மறுத்துரையும் “அசித்தருவியாபக ம்போல் வியாபகமருவமின்றாய் - வசித்திடவருவியாபி” “மா யையின் வயிற்றின்மன்னி வருஞ்சுகதுக்க” என்பனவற்றாலும றிக. “சூக்குமதேகியாகித் தூலரூபத்தின்மன்னி” என்பன வற்றாலும் வழிநூலார் நிறுத்தியவாறு காண்க. சித் - சூ— ௬, ௫-முதல் - ௧௮-வரை - ௨௧ - ௨௨ - செ. (எ

சிவஞானமுனிவர் உரை.

எ-து. உ-ம். எ-னின். அங்ஙனம் அதீதத்தை யெய்திய புருடன் மீளப் பிரேரக வவத்தையாகிய உணர்த்து முறைமை ச் சாக்கிரத்தைத் தலைப்படுமாறு அநுவாதமுகத்தான் விளக்கி அவ்விடத்தினும் முறைமையிற் செலுத்தும் பிரேரகக் கருவிக ளாந்தின் றொழிற்பாடு பற்றி ஐந்தவத்தை நிகழுமென்பதூஉம் அவை இவையென்பதூஉஞ் சுத்தாவத்தையும் இவைபோலுண் டென்பதூஉங் கூறி அதனை வலியுறுத்துத லுதலிற்று.

இ-ள். இலாடத்தே சாக்கிரத்தை எய்திய உள்ளம். எ-து. இலாடத் தானத்தினீங்கி ஆண்டாண்டவத்தைப்பட்டுக் கீழ்ப் போந்து மூலாதாரத்தினெய்தியபின் மறித்தும் அவ்வாறே ஆ ண்டாண்டவத்தைப் பட்டு மேற்சென்று இலாடத்தானத்தின் உணர்த்து முறைமைச் சாக்கிரத்தைத் தலைப்பட்ட புருடன்— இலாடத்தே ஐந்து அவத்தை எய்தும். எ-து. ஆண்டுஞ் சா சாக்கிரச் சாக்கிரமுதலிய ஐந்தவத்தையுறும்:—இலாடத்தே அ வ்விந்திரியத்து அத்துறைகள் கண்டு. எ-து. அவையாவன அவ்விலாடத்தானத்தின் கண்ணே அவ்வப்பொறிகளான் அவ் வவ்விடயங்களை யுணர்ந்து—அதுவே. எ-து. அப்போதப்

போதே—அவ்வவற்றின் நீங்கல். எ-து. அவ்வவ்விடயங்களி னீங்குதலாம்.—அது ஆங்கு. எ-து. இனி முன்னர்க் கூறப்படுஞ் சுத்தாவத்தையும் இவைபோல ஐவகைப்படும். எ-று.

மேற்செல்வழி ஆண்டாண்டுப்படுமவத்தைகளுங் கீழ்ச்செல்வழிப் போலன்றி விசேடமின்மையின் வகுத்தோதாது இலாடத்தே சாக்கிரத்தை யெய்திய வுள்ளமென அநுவாதமுகத்தாற் கூறியொழிந்தார்.

இழியுங்காலும் ஏறுங்காலுங் கண்டத்தானத்திற் கனாக்காண்டலுண்டென்பது முறையே ஞானாமிர்தத்தினும் போற்றிப்பஃறொடையினுங் காண்க.

அவ்வவ்விந்திரியம் ஆண்டாண்டு விடயித்தற்குரிய இந்திரியம்.

அவ்வவ்விடயம் ஆண்டாண்டுப் புலனாதற்குரிய விடயம்.

கண்டு நீங்கலென விகையும்.

அது அவ்வக்காலம். ஈண்டும் அடுக்கிக் கூறிக்கொள்க.

கண்ணுருபு தொகுத்து ஏகாரம் விரித்தார்.

கண்டதென ஒருமொழியாகவைத் துரைப்பாருமுளர். குற்றியலுகரத்தின்முன் உடம்படுமெய் பெறுதற்கு ஒத்திலாமையானும் பொருட்சிறப்பின்மையானும் அஃதுரையன்மை யறிக.

அப்போதப்போதே நீங்கலாவது விடயங்களைக் கண்ட கண்டபொழுதே அவற்றை அயர்த்துவிடுதல். "ஒன்றன்பாலும் வருபயன் மாறி மாறி வந்திடும்" என வழிநூலாசிரியர் கூறியதும் இவ்வியல்பு நோக்கியென்க. "கரணந்தன்னிற் செயன்முறுங் கண்டுகொண்ணீ" "உந்திடுங் கரணந்தன்னிற் செயன்முறு முணர்ந்து கொள்ளே" என்பனவுமது. இந்நுட்பமு

ணர்ந்து கோடற்குத் தூலாருந்ததி நியாயம் பற்றிக் கைப்பொருளை விழ்த்தித் தெளிதன்முதலிய தூலத்துள் வைத்துக் காட்டுப. சித்-௨-சூ, ௬௪—செ. "ஒருபுலனுகரு" ௪-சூ, ௩௫.செ. "அறிதருமுதல்வ" ௪—சூ, ௩௬—செ. "உந்திடுங்கரணங்".

இனி அருபசொரூபியாய் நிற்புழிப்படும் ஐந்தவத்தையி னியல்பு கூறுதற் கெடுத்துக்கொண்ட இவ்வதிகரணத்தின் அதனுடிமையில்லாத சூத்ரத்தின்கட்படும் ஐந்தவத்தை கூறுதற்கு ஒரிமையில்லையாயினும் அவத்தையெனப்படுவன ஈண்டோதியன மாத்திரையே போலுமென மயங்காமைப்பொருட்டு வேறு மைந்தவத்தையுள அவை முன்னர்க் கூறப்படுமென்னுந் தணையே கூறுவார் அதுவாங்கு என்றெழுந்தார். இக்கருத்தே பற்றி "பிறிவிலா ஞானத் தோரும் பிறப்பற வருளாலாங்கே—குறியொடு மைந்தவத்தை கூடுவர் வீடுகூட" என்றெழுந்தார் வழிநூலாசிரியரும். சித் - ௪—சூ, ௩௫—செ

இவ்விரண்டு வெண்பாக்களானுங் கூறிப்போந்த முத்திறத்தைந்தவத்தைகட்கு முறையே மூலமாய கேவலஞ் சகலஞ்சுத்தமென்ற மூன்றனுள் வைத்துத் தன்னுண்மையெனப்படுங் கேவலத்தினியல்பு சகசமலத்துணராதென்பதனானேபெற்றாம். ஏனைச் சகலத்தினியல்பு வருகின்ற சூத்திரத்தினுஞ் சுத்தத்தினியல்பு அப்பாலைச் சூத்திரத்தினும் பெறுதும்.

☞ ௪—சூ, மூன்றாமதிகரண முடிந்தது.

---

☞ நான்காஞ் சூத்திர முடிந்தது.



## ரு—சூத்திரம்.



விளம்பிய வுள்ளத்து மெய்வாய் கண்மூக்
களந்தளந் தறியா வாங்கவை போலுந்
தாந்த முணர்வின் றமியருள்
காந்தங் கண்ட பசாசத் தவையே. (ரு)

இச்சூத்திர மென்னுதலிற்றோவெனின்? முன்னர்க்கூறிய வான்மாவுக்குண்டாகிய லக்ஷணம் அறிவிக்கையின்பொருட்டு, (எனவே, கத்தா உபகரிக்கின்ற தன்மையும்) கன்ம மாயேய ந்திரோதாயியென்கின்ற பாசங்களினுடைய உருபங்களுஞ் சாதிக்கின்றது.

இ-ள். விளம்பிய வுள்ளத்து மெய்வாய் கண்மூக் களந் தளந்தறியா. எ-து. — முன் சொல்லப்பட்ட ஆன்மாவாலே மெய் வாய் கண் மூக்குச் செவி யென்னும் ஞானேந்திரியங்கள் தத்தமக்குள்ள அறிவு களையறிந்து நிற்கச்சே ஆன்மாவை யறியா.

ஆங்கவைபோலும். எ-து. — அவ்விடத் தவைபோலும்.

தாந்த முணர்வின் றமியருள். எ-து. — ஒப்பில்லாத கத்தாவினுடைய வருளாலே ஆன்மாக்களுந் தத்தமக்குண்டாகிய அறிவையறிந்து கத்தாவை அறியாதிருக்கின்ற தன்மைகள். தத்தமக்குள்ளவாவது

ஞானேந்திரியங்கள் சத்தமுதலா யுள்ளவற்றை விஷயீகரிக்கின்றமாத்திரம். அதுபோல ஆன்மாவு மொருவிடயத்தை யறிகின்றமாத்திரம்.

காந்தங் கண் அருளாலே ஆன்மாக்க ளறிகின்றமுறைட பசாசத் த ை யெப்படியென்னில்? காந்தமும் அதிவை. எ-து. னுடைய சந்நிதியி லிரும்பும்போலும். எ-று.

ஞானேந்திரியங்கள் விஷயீகரிக்குமிடத்து விஷயீகரிப்பித்தவான்மாவே யறியாது, கத்தாவினுடைய அருளாலே ஆன்மாக்கள் அறிந்தறியாம னிற்குமென்றது, ஆன்மாக்கள் பசுத்துவத்தாலே சரீரத்தை கூட்டுகின்ற முறைமையுங் கன்மத்துக்கிடாகக் கலாதிகளாலே அறிகின்றமுறைமையும், அப்படியறிந்து போகங்களைக்கூட்டிப் புசித்துநிற்கின்ற முறைமையும், பின்பு சிவத்துவத்தாலே அவையிற்றை நீக்கிச் சத்தைக்கூடுகின்ற முறைமையும், கத்தாவாலொழிந்துண்டாகாதாகையால் ஆன்மா தானறியாதென்றதாம்.

இனி, இந்திரியங்கள் விஷயீகரிக்குமாத்திரமென்றது, ஆன்மா யாதொன்றையும் உறைந்தறியினல்லது, இந்திரியங்களொருவிடயங்களையும் விஷயீகரித்தறியா மாத்திரத்தென்றதாம். உறைந்தறிகையாவது ஆன்மாச் சைதந்நியங்களையாகேமிக்கபலத்தை யுடைத்தாய் வித்தையாலே தரிசிக்கப்படுவதாம். இப்பொருள் "உயிருடனுணர்வாயி லொளியுருவாதிபற்றி" சித் - அளவை - ௬—செ. என்பதனாலறிக.

இனிக் காந்தமும் இரும்புபோலவென்றது காந்த மிரும்பைப்பிரேரிப்பிக்கைச்சே காந்தத்துக்கு விகார மவிகாரங்களின்றி யிருக்காற்போலக் கத்தாவும் ஆன்மாக்களைப் பிரேரிப்பிக்கைச்சே விகார மவிகாரமற் றிருப்பனென்பதுவுங் கா

ந்தத்தையொழிந் திரும்புபிரேரிப்புண்ணுதார்போலக் கத்தா வையொழிந்து ஆன்மாவுந் தானாகக் காணப்படாதென்பது வுங் கூறியதாம். "பொறிபுலன்கரணமெல்லாம் புருடனாலறிந்தான்மாவை - யறிதரா" என்றார் வழிநூலார். சித், ௩—௬, ௧—சை.

பொறிகள் ஆன்மாவாலேயறிந்து மான்மாவை யறியாதெ ன்னும் பக்கத்துக்கு, அஃதெத்தாலென்னில்? சடமாதலாலெ ன்னு மேதுவந்ததுபோல, ஆன்மாவுங் கத்தாவாலே அறிந்து கத்தாவை யறியாதென்னும் பக்கத்துக்கு ஏது, தானாக வொ ன்றை யறியாதென்னு மேதுவும், கத்தாவினுடைய அறிவுக்கு ஆன்மஅறிவுஞ் சடத்தோடொக்குமென்பதுவும் கூறியவா றறிக. "சிவன்சீவனென்றிரண்டுஞ் சித்தொன்றுமென்னில்" என்பதனில் "இது வசித்தென்றிடிலவனுக்கிதுவுமசித்தாமே" எ ன்பதனாலறிக. சித் - ௧௧—௬, ௧௦—சை.

காந்தமுமிரும்பும் உண்மைப்பிரமாணம்.

இவையிற்றுக்குப் பிரமாணம்.

---

சிவஞானமுனிவர் உரை.

இச்சூத்திரத்தின் பிண்டப்பொழிப்பு. மேலைச்சூத்திரங்க ளின் அங்ஙனங் கூறிப்போந்த உயிரானே மெய் வாய் கண் மூ க்குச் செவியென்பன தத்தம் விடயங்களை இஃதின்னதென் று அளவிட்டறிந்தும் அங்ஙனமறியுந் தம்மையுந் தம்மை யதி ட்டித்து நின்று செலுத்தும் அவ்வுயிரையும் அறியமாட்டா அவ்விந்திரியங்கள்போல் உயிர்களுந் தமதறிவிற்கு வியஞ் சகமாகிய முதல்வனது சிற்சத்தியான் மேற்கூறிப்போந்த இ ருவகை யஞ்சவத்தையினின்று வினைப்பயன்களை யறிந்து அனுப

விக்குந் தம்மையுந் தம்மைச் செலுத்துந் திருவருளையும் அறிய மாட்டா; உயிர்கள் அவ்வாறுணர்தல் காந்தத்தைக்கண்ட இரும்பு அதன் சந்நிதிமாத்திரையின் வலித்துக்கொள்ளப்படுமாறுபோலக் கரணத்தானன்றிச் சங்கற்பத்தான் அதிட்டிக்கு முதல்வன் சந்நிதிமாத்திரையினும் ஆகலான் அதுபற்றி முதல்வன் விகாரியாதலின்று. எ - று.

ஆகலான் அதுபற்றி முதல்வன் விகாரியாத லின்றென்பது குறிப்பெச்சம்.

செவியென்பது சொல்லெச்சம்.

ஐம்பொறிகளைக் கூறியது உபலக்கணமாகலின் ஏனைக்கருவிகளும் அவ்வாறுதல் கொள்ளப்படும். அற்றாகலினன்றே "பொறிபுலன் கரணமெல்லாம் புருடனா லறிந்து" என்றார் வழிநூலாசிரியரும். சித்-நி—சு, க—செ.

விடயங்களை யறிவுழி முதல்வன் உடனின்று செலுத்துவனாயின் அவ்விடயங்களோடொப்ப முதல்வனையும் அறிதல் வேண்டுமென்பாரை நோக்கி, அளந்தறிந்தென் றொழியாது அறியாதென்றார்.

ஆங்கவை ஒருசொன்னீர்மைத்து. தம்முணர்வின் றமியென்றது தமது முதலென்னும் பொருள்பட வந்த ஆறும் வேற்றுமைத்தொகை.

ஈண்டு அருளென்றது ஏற்புழிக்கோடலால் திரோதான சத்தியின்மேனின்றது. அருளாலென விரித்து அளந்தறிந் தறியாவென உவமைக்கோதிய வினையைப் பொருளினுங் கூட்டியுரைக்க.

---

ஐம்பொறியை யாண்டங் கரசா யுளநிற்ப
வைம்பொறிக ளுள்ள மறியாவா - மைம்பொறியிற்
காணுதேற் காணது காணுமுளங் காணுதேற்
காணுகண் கேளா செவி.

இது, இந்திரியங்கள் ஆன்மாவாலொழிந்து விஷயீகரியா தென்பதும், ஆன்மா விந்திரியங்களையொழிந்து ஒருசன்மத் தையு மறிந்து புசியாதென்பதவுங் கூறுகின்றது.

இ-ள். ஐம்பொறியையாண்டங் கரசா யுளநிற்ப வைம்பொறிகளுள்ள மறியாவாம். எ-து. ஆன்மா வைந்திந்திரியங்களையு மேவல் கொண்டு தான் கத்தாவாய்நிற்க அந்தவிந் திரியங்களைந்தும் நா மேவல்செய்கின்றோ மென்றும், நமக்கு ஆன்மா கத்தாவென்று மறியா.

இதிலேவல்கொண்டுநிற்க வென்றது, ஆன்மா அந்த விடயங் களாய்நின்று போகங்களை புசிக்கவேண்டுகையானு மிந்திரியங் கள் தன்மாத்திரைகளை விஷயீகரித்தாலொழிந்து ஆன்மாவும் அந்தந்த விடயங்களாய் நின்று கன்மத்துக்கேடான போகங்க ளைப் புசிக்க இல்லையாதலானுமென்றதாம். ஏவல் கொள்வா னொருவன் அதினுடைய பயன் கொள்வானெனவறிக. "அரு யிர்யாதொன்றுதலின்" என்னும் ஞானமிர்தத்தில் "என்னை பர தந்திரம்" என்றும் "பரதந்திரீயங்களைகழி பந்தஞ்சித்தென நிர்குமாயின் மற்றதுமுத்திகூடுதல் முடியாது" என்றுங் கூறிய வாறுகாண்க.

ஐம்பொறியிற் ஐந்திந்திரியங்களிலேநின் றறியாதாகில்
காணுதேற் கா ஆன்மாவு மொன்றையறியாது.
ணுது. எ-து.

என்றது ஆன்மா ஒருபோகத்தைப் புசிக்குமிடத்துக் கன்மத்துக்கீடாகப் பொருந்தின பொறிகளிலே யொன்றும், பூதங்களிலேந்திலே யொன்றும், மனாதிகணான்கும், கலாதிகளைந்துங்கூடிப் புசிக்கவேண்டுகையானும், இவையிற்றையொழிந் தொருபொருளையுந் தானாக வறியமாட்டாதாகையானுமென வறிக.

காணுமாளுங் இப்படியறிகிறவான்மா வறியாதாகிற்க
காணுதேற் கா ண்ணுங்காணாது, செவியுங்கேளாது; நின்ற
ணுகண் கேளா பொறிகளுந் தத்தம்விடயங்களைப் பொருந்
செவி. எ-து. தாது. எ-று.

என்பது ஆன்மா குழந்தைப் பருவமாயிருக்கிற அவதரத்தினும் அவத்தைகளைப் பொருந்தின அவதரத்தினும் ஐம்பொறிகளுஞ் சீவிக்கவில்லையாதலாலெனவறிக.

இது ஆன்மா விந்திரியங்களுடனே கூடிநின்று காணுமென்னும் பக்கமு மிந்திரியங்களிலேநின் றறியாதாகில் அறியாதென்னும் விபக்கமுங் கூறியவாறு காண்க.

முன்னர்ச்சூத்திர மிரண்டினுங் கூறியமறுத்துரையெல்லா மிதனுடைய வுட்கிடந்தவாறறிக. அவை "அறிவிச்சைசெயல்களெல்லா" மென்பதனில் "நிகழ்புலன்கரணமெல்லாஞ் - செறிவுற்றங்கறிவுகொள்ள வேணுமோசிவஞர்க்கே". என்பனவற்றாலறிக. சித் - ச—௯, ௬—செ. (௯)

சிவஞானமுனிவர் உரை.

எ-து. உ-ம். எ-னின். உயிர் அங்ஙன மொற்றுமைப்பட்டு நின்று செலுத்துதலும் அவை உயிரையின்றி யமையாமையும் எற்றாற் பெறுதுமென்பாரை நோக்கி ஏதுவை வலியுறுத்துதனுதலிற்று.

இ-ள். அரசு ஆய். எ-து. அரசன் அத்தாணிமண்டபத்தின்வைகித் தன்கீழ்க் கருமஞ்செய்வாரை அவரவர்க்குரிய காரியங்களிற் செலுத்தி ஆளுமாறுபோல,—உளம் ஐம்பொறியை ஆண்டு அங்கு நிற்ப. எ-து. உயிர் ஐம்பொறிகளை அவ்வவற்றிற்குரிய விடயங்களிற் செலுத்தி யாண்டு இலாடத்தானத்தினிற்றலான்,—ஐம்பொறிகள் உள்ளம் அறியாவாம். எ-து. அரசனு லேவப்பட்டோர் ஏவிய கருமமாத்திரையி னன்றி அதிகத்திற் செல்லமாட்டாமைபோல அவ்வைம்பொறிகள் உயிரை யறியமாட்டாவாயின. அற்றேல், ஐம்பொறிகள் உயிரானன்றி யறிதல் அமையாதாயினும் உயிர் ஐம்பொறிகளா னன்றியும் அறித லமையும்போலுமெனின்;—ஐம்பொறியில் காணுதேல் காணுது காணும் உளம் காணுதேல் காணு கண் கேளா செவி. எ-து. ஒருகருமஞ் செய்தற்கண் அரசரும் அமைச்சர்முதலாயினருந் தம்முள் இன்றியமையாத வாறுபோல ஒன்றனை விடயித்தற்கண் உயிரும் ஐம்பொறிகளுந் தம்முள் இன்றியமையா. எ - று.

அன்னவாதல் உயிர் ஐம்பொறியி னீங்கிச் சொப்பனத்தானத்தி னெய்தியவழிக் கண்டுகொள்க.

நிற்பவென்னுஞ் செயவெனெச்சம் மழைபெய்யக் குளநிறைந்தது என்புழிப்போல நிற்றலானெனக் காரணப்பொருட்டா

ய் நின்றது. இவ்வாறுரையாக்கால் இஃதேதுவின் பொருள் வலியுறுப்பதாய உதாரணமாதற்கேலாமை யறிக.

 ரு—கு, முதலதிகரண முடிந்தது.

---

மன்னுசிவன் சந்நிதியில் மற்றுலகஞ் சேட்டித்த
தென்னு மறையி னியல்மறந்தாய் - சொன்னசிவன்
கண்ணு வுளம்வினையாற் கண்டறிந்து நிற்குங்கா
ணெண்ணுன் சிவனசத்தை யின்று. (உ)

இது, பிரகிருதிதானே மூலம் புரியட்டகம் விகிருதியென்னு மூன்றாய், அதுதான் தூலஞ் சூக்கம் பரம் ,என்று சொல்லப்பட்டு சுத்தனாயிருந்துள்ள புருடனுடைய சந்நிதியிலே சேட்டைப்பட்டு யோனிபலவாய் விரிந்தொடுங்குகின்றதொழிந்து ஆன்மாவென்றுங் கன்மமென்றுமுண்டோ வென்போர்க்கு மறுத்து, ஆன்மா தன்னாலே விஷயீகரிக்கின்ற விந்திரியங்கள் ஆன்மாவாலே யறிகின்றேமென்பதனை யறியாதுபோலத் தானு மிப்படிக் கத்தாவால் அறிகின்றதன்னை யறியாதென்னுமிடமும், கத்தாவே யான்மாவுக்கு உபகரிக்கவேணுமென்பதுவுங் கூறுகின்றது.

இ-ள். மன்னுசிவன் சந்நிதியில் மற்றுலகஞ் சேட்டித்த தென்னு மறையி னியல் மறந்தாய். எ-து. நிலைபெற்ற சிவனுடைய சந்நிதியிலே பிரபஞ்சஞ் சேட்டைப்பட்டு வருகின்றதென்று வேதஞ்சொல்லுமென்னு மிலக்கணமு மறந்தாய்.

என்றது வேதத்தை யொருவனறிந்து அறிவிக்க அவன் கண்ணாக வொருவன் அறியவேணுமென்ற வுரையு மறந்தாயென்பதாம். அது, ஆன்மாவுமில்லை கன்மமுமில்லை பிரகிருதிமூன்றுவிதமாய்ப் புருடன்சந்நிதியில் சேட்டைப்படுமென்றாய்? அது தானே சேட்டைப்படாது. ஆன்மாக்கள்செய்த கன்மத்துக்கிடாகச் சேட்டைப்படுத்தவேண்டும்; ஆதலால், வினையுங் கர்த்தாவு முண்டென்றதாம். கர்த்தாவே யான்மாக்களுக்கு அறிவிப்பனாகில் எல்லார்க்கும் அறிவு ஒரு தன்மையாயிருக்கவேணும், அன்றியும் கன்மங்களி லேற்றக்குறைதலுண்டாகில் அக்கன்மந்தானே யூட்டும், கர்த்தா வேண்டாமென்னையாகில்?

சொன்ன சிவன்கண்ணா வுளம் வினையாற் கண்டறிந்து நிற்குங் காண். எ-று.

ஆன்மாக்கள் செய்தகன்மங்களையறிந் தறிவித்து நிற்பனென்று சொன்ன கர்த்தாவைக் காட்டாகக்கொண்டு ஆன்மாக்கள் தத்தம் வினைக்கிடாக வொருவிடயத்தைக் கண்டறிந்து நிற்கும் விசாரித்துப்பார்.

என்றது ஆதித்தன் சந்நிதியில் எல்லாமலரு மொக்கமலராதுபோல எல்லார்க்கும் அறிவொவ்வாதென்றும், பூமியி லிட்டவித்தொழிய வேறொருமுளை முளையாதாற்போலச் செய்த கன்மமொழிந்து பலியாதென்றும்; ஆன்மா வறிவிக்க வறிகையானும், அறிந்தவற்றை மறத்தலானும், அறிகின்றதன்னை யறியாமையானும், தானாகவொன்றை யறியாமையானும், அறியுமிடத்துங் கருவியும்பொருளுங் காட்டுமுதலிய வேண்டுமென்றுங் கூறியதாம். இப்பொருள் "இறைவனேயறிவிப்பானேல்" "அறிந்திடுமான்மாவொன்றை யொன்றினாலறிதலானும்" "கருவியார்பொருளாற் காட்டாற்காலத்தால" என்றார் வழிநூலார். சித் - டு—கு, உ - ௩ - ௪—செ.

என்னுன் சி (உலகமெல்லாந் தனக்குருவமாக எண்பத்
வனசத்தை யி துநான்குநூறாயிரம் யோனிபேதங்களும் த
யின்று. எ-து. னக் கவயவங்களாகவு மிச்சாஞானக்கிரியை
களுட் கரணமாகவும்நின்று, கத்தா அளவி
றந்த ஆன்மாக்களுக்கும் அறிவைக்கொடுத்துச் சேட்டிப்பித்தா
ஞயினும் இவைவயிற்றை ஒன்ருக விசாரியா விப்பொழுது.எ-று.

எனவே காரணகாரணனுகி நிற்பனென்றதாம். "நாரமேய நல்லுயிரனைத்து நாரமனமின்றினநற் - காரச்செய்தியுமன்றே—நாரமாருயிர்க்கல்லதுயி ரதற் குதவுபேருபகாரமுமின்றே" என்னும் ஞானமிர்தத்தினுமறிக. என்றது பிரபஞ்ச மிவன்கண்ணுக்குத் தோன்ருதென்பதுவும், அது ஜடமாகையாலே சிற்சொருபத்தி னில்லாதென்றுஞ் சொல்லியதாம். "உலகமேயுருவமாக யோனிகளுறுப்பதாக". "இறைவன்றன்சந்நிதிக்கண் ணுலகின்றன்சேட்டை" என்முர் வழிநூலார். சித்-டு—௫, எ - ௬—௭.

ஆன்மா கத்தாவாலே இந்திரியங்களிடமாக நின்று காணுமென்னும் பக்கமும், அஃதெத்தாலென்னில் வினைக்கீடாக வென்னு மேதுவும் வந்தவாறுகாண்க. (௨)

---

சிவஞானமுனிவர் உரை.

எ-து. உ-ம். எ-னின். தன்னுலுணரும் இந்திரியங்களை ஈண்டைக்கு உவமை கூறின அவ்விந்திரியங்கட்கு வரும்பயன் அவற்றின் லொர்றித்துக்காணும் உயிர்க்காயவாறுபோல உயிர்க்குவரும் இன்ப துன்பப்பயனும் உயிராஞெற்றித்துக் காணும் முதல்வனுக் காதல்வேண்டுமென்பாரை நோக்கி அங்ஙனமாகாமை கூறி அதனை வலியுறுத்துத லுதலிற்று.

இ-ள். மன்னு சிவன் சந்நிதியின் மற்று உலகம் சேட்டித்தது என்னும் மறையின் இயல் மறந்தாய். எ-து. ஈண்டுக் கூறிய கருதலளவையேயன்றி நிலைபெற்ற முதல்வனது சந்நிதியிற் பிரபஞ்சஞ் செயப்படுகின்றதென்றோதும் வேதப்பொருளையும் அறியாது பிணங்குகின்ற பேதாய்—உளம் சொன்ன சிவன் கண்ணா வினையால் கண்டு அறிந்து நிற்கும் காண். எ-து. உயிராவது தமக்கெனவோர் காரணமின்றித் தன்பொருட்டே அறிவனவாய அவ்விந்திரியங்கள்போலன்றி அவ்வேதத்துள் எடுத்தோதப்படும் முதல்வன் தனக்குக் காட்டாகி நிற்பத் தான்செய்த வினைக்கீடாக ஒன்றனையறிந்து நிற்கும்; இவ்வேறுபாடு அறிவாயாக.—இன்று ஆகலாற் சிவன் அசத்தை எண்ணான். எ-து. அங்ஙனங் காட்டாகி நிற்பினுந் தனது சந்நிதியின் அசத்தெல்லாஞ் சூனியமாகலான் மங்கலவடிவினனாய முதல்வன் அவ்வுயிர்போல் அவற்றை அநுபவியான். எ-று.

இதனுட் சிவனென்றது மன்னுசிவனென்புழிப் பேரின்பத்துக்குக் காரணமென்னும் பொருட்டாய்த் தனது சந்நிதிக்கண் உலகத்தைச் சேட்டிப்பித்தற்குரிய இயைபுணர நின்றது; சொன்னசிவனென்புழி முற்றுணர்வினனென்னும் பொருட்டாய்க் காட்டாதற்குரிய அவை புணரநின்றது; எண்ணான் சிவனென்புழித் தூயதன்மையனென்னும்பொருட்டாய் அசத்தை யெண்ணாமைக்குரிய இயைபுணர நின்றது. ஆகலாற் கூறியது கூறலன்மையுணர்க. அஃது அம்முப்பொருளுடைத்தென்பது சோமசம்பு பத்ததி வியாக்கியாந முதலியவற்றுட் காண்க. சிவதத்துவ விவேகத்துள் மூவகைப்படுத்தோதிய பொருளும் இவையேயாமாறு கண்டுகொள்க.

ஈண்டு உலகமென்றது உயிர்களை.

மறையினியலும் பொருளை மறையினியலென் றுபசரித்தார்.

இரந்தது தழீஇய வெச்சவும்மை விகாரத்தாற் றொக்கது.

மறந்தாயென்பது விளியுருபேற்ற பெயர்.

ஈண்டுச் சந்நிதியென்றது அவிகாரவாதிகள் கூறும் அபிமுக மாத்திரையன்றென்பார் சொன்னசிவன் கண்ணுவென்றார். சிவசத்தி அவ்வக்காரியங்களின் உன் முகமாதலாகிய சங்கற்பமே ஈண்டுச் சந்நிதியெனப் படுமென்பதாம்.

காந்தங்கண்ட பசாசத்தவையே யென்றது ஒருபுடையுவமையாதல் பற்றியே பிறிதன் றென்பது கருத்து.

வினையாலென்றது ஐம்பொறிபோ லன்றி உணர்தற் பயன் உயிர்க்கேயாதற்கேதுக் காட்டியவாறு.

கண்டறிதல் ஒருபொருட் பன்மொழி.

எண்ணல் ஈண்டநுபவித்தன் மேற்று.

இன்றென்பது சாதியொருமை.

அவனெதிர் என்பது அவாய்நிலையாய் வந்தது.

ஆகலானென்பது சொல்லெச்சம். இன்றுதல் 'யாவையுஞ் சூனியஞ் சத்தெதிர்' எனபுழிப் பெறப்படும். இக்கருத்தே பற்றி "மாயை மருவிடான் சிவனவன்க—ணுறைதரா தசேதனத்தால்" என்றார் வழிநூலாசிரியரும். "உன்னுகரத்தேகிடந்தீட முறுவதெல்லா—முன்னுடைய தென்றாய்ரீ யுற்றனையோ—மன்னுயிர்க—ளவ்வகையே காணிங் கழிவதவு மாவதுவுஞ்—செவ்வகையே நின்றசிவன் பால்'; என்றதும் இவ்வியல்பு நோக்கி. சித்-௫—௬, ௬—௭. 'இறைவன்றன்.' திருக்களிற்றுப்படியார்—அ௭.

---

வெய்யோ னொளியி லொடுங்கி விளங்காது
வெய்யோனை யாகாத மீன்போல - வெய்யோனிற்

கண்டுகேட் டுண்டுயிர்த் துற்றறியு மைம்புலனைக்
கண்டுடனாய் மன்னுதலைக் காண்.

இது, கத்தா பிரபஞ்சமெல்லாம் வேறற நிற்கின்ற முறைமையும், ஆன்மாக்கள் திரோதத்தாலே மறைப்புண்டு கேடின்றி நிற்கின்றமுறைமையும், திரோதமும் அருளென்னு முறைமையுங் கூறுகின்றது.

இ-ள். வெய்யோனொளியிலொடுங்கி விளங்காது வெய்யோனையாகாத மீன்போல. எ-து. ஆதித்தனுடைய பிரகாசத்திலே மழுங்கித் தன்னுடைய பிரகாசந் தோன்றாமல் அந்தவாதித்தனல்லவாகிநிற்கின்ற நக்ஷத்திரங்கள் பலவாறுற்போல.

ஆன்மாக்கள் பலவென்பதும், ஆதித்தனைப்போலக் கத்தா ஒருவனென்பதுவுங் கூறினார்.

வெய்யோனில். எ-து. ஆன்மாக்கள் முத்திபெறவேணு மென்னும் விருப்பத்தையுடைய கத்தாவினுடைய திரோதத்தாலே.

கண்டுகேட் டுண்டுயிர்த் துற்றறியு மைம்புலனைக் கண்டு. எ-து. கண்டுங் கேட்டு முண்டுமுயிர்த்து முற்று மறிகின்ற ஐந்துவிடயங்களா லுண்டாகப்பட்ட போகங்களைப் புசித்தறிகின்றே மென்னு முறைமையும் விசாரித்து.

உடனாய் மன்னுதலைக் காண். எ-து. அப்படிக் காட்டு மாயை மறைப்புமாய் வருகின்ற கத்தாவினுடனே பொன்றுபட்டு நிலைபெற்று வருதலை விசாரித்துப்பார். எ-று.

கன்மவொப்புக்களுக் குட்னுய்ச் சாக்கிரத்தானத்திலே பொருந்துதலைப் பார் என்பாருமுளர்.

எனவே, ஆதித்தப்பிரகாசநீங்க நக்ஷத்திரம் பிரகாசிக்குமா போலத் திரோதநீங்க ஆன்மாவினுடைய சொரூபம்பிரகாசிக் குமென்றதாம். அது கன்மம் புசித்தறுமளவு மறைப்புண்டாம், கன்ம சமத்துவம்பிறந்து திருவருளே நின்ருலொழிந்து பிர காசமாகாது, என்பதுவும் கூறியவாறறிக. எனவே, கத்தா ஆன்மாவையுந் தேகத்தையுங்கூட்டிப் பிரித்துக் கன்மம்புசிப் பித்து முத்தியைக்கொடுப்பனென்பதாயிற்று. "தெரிந்து கொண்டொரோவொன்ருக" என்ருர் வழிநூலார். சித்-டு—கு, அ—செ.

ஆன்மா திரோதத்தாலே யிந்திரியங்களிலே நின்று கன்மத் தைப்புசித்து சமத்துவம்பிறந்து சம்பிரதாயம்பெற்ருல்தற்சொ ரூபம் பிரகாசிக்குமென்னும்பக்கத்துக்கு நக்ஷத்திரமு மாதித்த னுஞ்சபக்கமாயினவாறு காண்க. (௩)

---

சிவஞானமுனிவர் உரை.

எ-து. உ-ம். எ-னின். உயிர் அங்ஙனமுணர்த்த வுணருங்கால் முதல்வனின் வேறுநின்றுணருமோ ஒன்ருய் நின்றே யுணருமோ வென்பாரை நோக்கி, அவ்விரண்டியல்பு மின்றி நின்றுணருமாறுணர்த்தி அதனை வலியுறுத்துதல் நுதலிற்று.

இ-ள். வெய்யோன் ஒளியில் ஒடுங்கி. எ-து. ஞாயிற்றி னொளியினடங்கி—விளங்காது. எ-து. அதனின் வேருய் வி ளங்கித் தோன்றுதலின்றி—வெய்யோனை ஆகாத மீன்போல எ-து. அறவா யொழிதலுமில்லாத நாண்மீன்கள் அஞ்ஞாயி ற்ருனே ஒளியுடையவா மாறுபோல,—கண்டு கேட்டு உண்டு உ யிர்த்து உற்று அறியும் ஐம்புலனை மெய் அவனில் கண்டு. எ-து

கண்டும் கேட்டும் உண்டும் உயிர்த்தும் தீண்டியும் அறியப்படு ம் ஐவகை விடயங்களையும் உயிர் மெய்ப்பொருளாகிய முதல்வனால் உணர்ந்து—உடனாய் மன்னுதலைக் காண்: எ-து. வேறாதலும் ஒன்றாதலு மின்றி அவ்விரண்டற்கும் பொதுவாய் அடங்கி உடனாய் நிலைபெறுதலை அறிவாயாக. எ-று.

உவமை யடை பொருளினும், பொருள்வினை உவமையினுஞ் சென்றியையும்.

ஐ சாரியை.

நாண்மீன் முதலியவற்றின் ஒளியெல்லாம் ஞாயிற்றினுடைய ஒளியேயென்பது வேதநூற்றுணிபாகலான் அஃதீண்டைக் குவமையாயிற்று.

உயிரென்னும் எழுவாய் மேலைவெண்பாவினின்றும் வருவித்துரைக்கப்பட்டது.

---

அருளுண்டா மீசற் கதுசத்தி யன்றே
யருளு மவனன்றி யில்லை - யருளின்
றவனன்றே யில்லையருட்கண்ணார் கண்ணுக்
கிரவிபோ னிற்பனு மேய்ந்து. (௪)

இது, கர்த்தா பெத்தமுத்தி யிரண்டினு முபகரிக்கின்ற முறைமையும், திரோதந்தானே அருளாமென்பதுவுங் கூறுகின்றது.

| | |
|---|---|
| இ-ள். அருளுண்டா மீசற்கு. எ-து. | கர்த்தாவுக்குத் திரோதசத்திபாலே மறைத்துக் கன்மங்களைப் புசிப்பிக்கின்ற தொழிந்து ஒருகாலத்து மநுக்கிரக மில்லையோ வென்னில்? அநுக்கிரக முண்டாம் கன்ம சமத்துவத்தே. |

அருசத்தி. — திரோதசத்தியென்றும் அருட்சத்தியென்
ஏ-து. — றுமிரண்டோவென்னில்? அப்படி மறைத்து மலபக்குவஞ்செய்த திரோதசத்திதானே யந்த அருட்சத்தியாம்.

அன்றே.ஏ-து. — அந்தவருட்சத்தி கத்தாவுக் கென்றுண்டானதென்னில்? கத்தா வென்றுள்ளான் அன்றேயுள்ளது.

அருளுண் அநாதியிலே அருளுண்டாகிய
டாமீசற்க கத்தாவுக்கு அந்தத் திரோதசத்
குச்த்திய திதானே யருட்சத்தி யென்பா
ன்றே.ஏ-து. ருமுளர்.

அருளு மவன — சத்தாவு மருளு மிரண்டோ? அந்த அரு
ன்றியில்லை.ஏ-து. — ட்சத்தியுங் கத்தாவையொழிந்து வேறாய் நிற்றலில்லை.

அருளின் றவ — கத்தாவு மநாதியிலே அருளையொழிந்து
னன்றே யில்லை. — வேறாய் நிற்றலில்லை.
ஏ-து.

என்றது, சத்தியுஞ் சிவனில்லையாகிலில்லை; சிவனுஞ் சத்தியில்லையாகிலில்லை யென்றதாம். அது நெருப்பு வெம்மையின்றியில்லை, வெம்மை நெருப்பின்றி யில்லை யென்றாற்போலக் கொள்க. அஃதெப்படியென்னில்?

இரவிபோனி — ஆதித்தனும் பிரகாசமுந் தன்னிலேகூடி
ற்பனு மேய்ந் — த்தித்து நின்றாற்போலக் கத்தாவுஞ் சத்
து. ஏ-து. — தியுடனேபொருந்தி நீக்கமறநிற்பன். அது காணுமா றெங்ஙனேயென்னில்?

அருட்கண்ணா ர் கண்ணுக்கிர விபோ னிற்பன். எ-து. திரோதநீங்கியருளைத் தமக்குத் தாரகமாகப்பெற்றவர்கள் காட்சிக்கு ஆதித்தன் றன்னுடைய பிரகாசத்தாலே யிருளையோட்டிக் காட்சியையுடைய கண்ணுக்குத் தானுந் தோன்றிநின்றாற்போல; தன்னுடைய சத்தியாலே சஞ்சிதகன்மத்தையும்போக்கி மேலு மாகாமியமாய் வரும்வினையும் வாராமற் காத்துத் தன்னையுந் தரிசிப்பிப்பன் எ-று.

அஃதெப்படியென்னில்? ஆன்மாக்க ளொருதேகங்களிலே பொருந்துதலும் போகபோக்கியம் புசித்தலும் கன்மத்துக்கீடாகவொழிந் தில்லையாதலானும், கன்மந்தான் வயிந்தவமென்று சொல்லப்பட்ட நிவிர்த்தி பிரதிட்டை வித்தை சாந்தி சாந்தியாதீதம் என்னும் அத்துவாவிலேயொழிந்து கிடையில்லையாதலானும், விந்துச்சொரூபமாயிருந்துள்ள மகாமாயையையொழிந்து மாயையிலுண்டாகிய தநு கரண புவன போகங்கள் சீவியாதாகையானும், அந்த மகாமாயைதான் அவையிற்றையொழிந்து சீவியாதாகையானும், சஞ்சித கன்மங் கலாசோதனையி லொழிந்துபோகாதாகையானும், கன்மத்துக்கீடான போகங்களைப் புசிக்குமவதரந் திரோதாயியையொழிந்து புசியாதாகையானும், அது நீங்கினவிடத் தருளாய் நிற்கையானு மிவ்வாறு கூறியவாறறிக.

திரோதம் அருட்சத்தியா மென்பது சம்பிரதாயதிட்டியாலறிக.

அருள்பிரகாசித்தாற் சிவன் றன்னைத் தரிசிப்பனென்னும் பக்கத்துக்கு ஆதித்தனும் பிரகாசமுஞ் சபக்கமாயினவாறுகாண்க. "அருளதுசத்தியாகு மரன்றனக்கருளையின்றி" என்றார் வழிநூலார். சித் - டு—ரு, கூ—செ. (௬)

சிவஞானமுனிவர் உரை.

எ-று. உ-ம். எ-னின். அங்ஙனமாயினும் உயிர்கட்குப் பலவேறுவகைப்பட உணர்வு நிகழ்தலின் அஃதுணர்த்தல் வேறுபாட்டாளுயதெனல்வேண்டும், வேண்டவே, நிருவிகாரியென்னுஞ் சுருதியோடு முரணி முதல்வன் விகாரியாவான் செல்லுமென்பாரை நோக்கி: விகாரியாகாமையுணர்த்தி, அதனை வலியுறுத்துத னுதலிற்று.

இ-ள். அருள் ஈசற்கு அன்றே உண்டாம். எ-து. உயிர்கட்குப் பசுத்துவத்தை நீக்கிச் சிவத்துவத்தை விளக்குதற்கணுளதாகிய இரக்கம் முதல்வனுக்கு அநாதியேயுள்ளது.—அது சத்தி. எ-து. அவ்விரக்கம் வேறுபொருளன்று, முதல்வனுக்குளதாகிய சத்தியேயாம்;—அருளும் அவனன்றி இல்லை அருளின்று அவன் அன்றே இல்லை. எ-து. இரக்கமும் அவனும் குணமுங் குணியுமாகலின் அவ்வருளு முதல்வனையின்றி யமையாது, முதல்வனும் அதனையின்றி யமையானுய்—அருட்கண்ணோர் கண்ணுக்கு இரவிபோல் ஏய்ந்து நிற்கும் அரன். எ-து. ஞானக்கண்ணுடையா ருணர்விற்கு ஞாயிறு தன்னொளியோடு தாதான்மியமா யியைந்து நிற்குமாறுபோல் அவ்வருளோடு தாதான்மியமா யியைந்து நிற்பன் முதல்வன்; ஆகலாற் றன்வயத்தனுகிய அம்முதல்வன் விகாரமின்றி நின்றே தனது சத்தி சங்கற்பமாத்திரையான் அனைத்துஞ் செய்தல் கூடும். எ-று.

ஆகலாற் றன்வயத்தனுகிய அம்முதல்வன் விகாரமின்றி நின்றே தனது சத்தி சங்கற்பமாத்திரையான் அனைத்துஞ் செய்தல் கூடுமென்பது குறிப்பெச்சம்.

உம்மை எதிரது தழீஇயது.

இன்றியென்னும் வினையெச்சக் குறிப்பினிகரஞ் செய்யுளாகலின் உகரமாய்த் திரிந்தது.

அன்றே அசை.

இவ்வியல்பு சித்தாந்த நெறியுணர்ந்தார்க்கன்றி விளங்காதென்பார் அருட்கண்ணார் கண்ணுக்கென்றார்.

சத்தியதுண்மையும் அதனியல்பும் 'நீக்கமின்றி நிற்குமன்றே' என்பதனுள் வகுத்துரைத்தமையின் ஆண்டுக் காண்க.

 ௫—௬, இரண்டாமதிகரண முடிந்தது.

---

 ஐந்தாஞ்சூத்திர முடிந்தது.



# ௬—சூத்திரம்.

உணருரு வசத்தெனி னுணரா தின்மையி
னிருதிற னல்லது சிவசத் தாமென
விரண்டு வகையி னிசைக்குமன் னுலகே.

இச்சூத்திர மென்னுதலிற்றோவெனின்? சத்தாகிய சிவனுடைய உண்மையும், அசத்தாகிய பிரபஞ்சத்தினுடைய உண்மையும், கூறுபாடுசெய் தறிவித்தலைக் கருதிற்று.

| | |
|---|---|
| இ-ள். உணருரு வசத்தெனின். எ-து. | அறியப்பட்டவையெல்லாஞ் சத்தல்லவென்கையினால். |
| உணரா தின்மையின். எ-து. | அறியப்படாத தில்லையாதலான். |
| இருதிற னல்லது சிவ சத்தாமென. எ-து. | இந்த விரண்டு கூறுபாடு மில்லாதது சத்தாகிய சிவமென்று. |
| இரண்டு வகையி னிசைக்கு மன்னுலகே. எ-து. | இந்த விரண்டு கூறுபாட்டாலும் நிலைபெற்றவுலகஞ் சொல்லும். எ-று. |

உலகம் என்றது உலகத்துள்ளோரென விடமு மிடத்துநிகழ்பொருளுமாம்.

“உலகமென்ப துயர்ந்தோர் மாட்டே” எனவே கற்றுயர்ந்தோராம்.

அறிவினு ளிதுவென் றறியப்பட்டவையெல்லாம் பொய் யென்றதென்னெனில்? அவை தோன்றி நின் றிறுதலையுண் டாதலால்.

அறியப்படாதில்லையாமென்றதென்னையெனின்? ஆமைமயிர்க் கயிறும் ஆகாயப்பூவு முயற்கோடும்போலு மாதலால். "அறி வுறும்பொருளோவீச னறிவுருதவனோவென்னில்" "ஆவதா டழிவதாகி வருதலால்" "உணராதபொருள்சத்தென்னி னொரு பயனில்லை." என்றார் வழிநூலார். சித் - சூ—ரு, க - உ - ச—செ.

இவற்றிற்குப் பிரமாணம்.

---

சிவஞானமுனிவர் உரை.

இச்சூத்திரத்தின் பிண்டப்பொழிப்பு. தம்முணர்வின் ற மியாகிய முதற்பொருள் அளவைகளானறியப்படும் இயல்பிற் றெனின், அங்ஙனமறியப்படும் பிரபஞ்சம்போல் அழிபொரு ளாகிய அசத்தாம்; எவ்வாற்றானும் அறியப்படாத இயல்பிற்றெ னின், அங்ஙனமறியப்படாத முயற்கோடுபோலச் சூனியப்பொ ருளாம்: ஆகலான் இவ்விரு பகுதியுமன்றி ஒருவாற்றா னறியப் படாமையும் ஒருவாற்றானறியப்படுதலுமாகிய இரண்டுவகையா னுஞ் சிவசத்தாமெனக் கூறுவர் மெய்யுணர்வி னிலைபெற்றுய ர்ந்தோர். எ - று.

உணருருவெனி னசத்தென மாறுக. எனினென்பது முன்ன ருஞ் சென்றியைந்தது.

முற்றும்மைகள் தொக்கன.

அல்லதென்பது வினையெச்சக்குறிப்புமுற்று. அன்றியாமெ ன இயையும்.

ஒருவாற்றானறியப்படாமை பாசஞான பசுஞானங்களான் அறியப்படாமை. ஒருவாற்றானறியப்படுதல் சிவஞானமொன்றானே அறியப்படுதல். பாசஞான பசுஞானங்களான் அறியப்படாமையிற் சிவமாதலும், பதிஞானத்தால் அறியப்படுதலிற் சத்தாதலும் பெறப்படுமென்பார்; இரண்டுவகையிற் சிவசத்தாமென விசைக்குமென்றார். சிவசத்தென்னும் இருபெயரொட்டுப் பண்புத்தொகை வடநூன்முடிபு. சடமாகிய சத்தினீக்குதற்குச் சிவசத்தென்றார். சிவசத்தென்பது சித்துச் சத்தென்னும் பொருட்டு.

எழுவாய் மேலைச்சூத்திரத்தினின்றும் வருவித்துரைக்கப்பட்டது.

இருதிறனு மன்றி இரண்டுவகையானுஞ் சித்தாதலுஞ் சத்தாதலு முடையனாய் நிற்றல் முதல்வனுக் கிலக்கணமென இலக்கணமும் இதனுட் போந்தவாறுணர்க.

முதல்வனுக்குப் பொதுவியல்பு மேற் புணருற்பவ முணர்த்து முகத்தாற் கூறிப் போந்தமையின் இது சொருபலக்கணமெனப்படுஞ் சிறப்பிலக்கணமெனக் கொள்க. அற்றாகலினன்றே இதனை இலக்கணவோத்துண் முதற்கட்கூறாது உண்மையைச் சாரவைத்து இறுதிக்கட்கூறியதூஉமென்க. இன்னும் முதல்வனுக்குளவாகிய சிறப்பியல்புக் குணங்களெல்லாம் இவ்விரண்டனுளடங்கும். அஃதறிந்தடக்கிக்கொள்க. *"தன்னாலே தனையறிந்தாற் றன்னையுந் தானே காணும்" எ-ம். †"உன்னரிய திருவருளை யொழியமல முளதென் றுணர்வரிதா மதனுண்மை தெரிவரிதா முனக்கே" எ-ம். ‡"மாயைமா மாயை மாயா வருமிரு வினையின் வாய்மை—யாயவா றுயிரின் மேவு மருளெனி லொளியாய் நிற்கும்" எ-ம். ஓதியவாற்றால் ஏனைப்பசுபாசங்களுஞ் சிறப்பியல்பு பற்றியுணர்தல் சிவஞானத்தானன்றி அமையாதாயினும் ¶"தீபமெனத் தெரிதரல்—

கொருவி யான்மாவி னுண்மை யுணர்ந்தவர் தமையுணர்ந்தோர்;—தருமிது பசுஞானம்" எ-ம். §"இவைகீழ் நாடலாலே—காதலினு னன்பிரம மென்னு ஞானங் கருதுப்சு ஞானம்" எ-ம். பொது வியல்புபற்றி யோதுதலானும் யானிதனை யறிந்தேன் அறிகின்றிலேனென்றறியும் பாசவுணர்விற்கு அவற்றது பொதுவியல்பு விடயமாதல் கண்கூடாகப் பெறப்படுதலானும், அவை ஒருவாற்றா னுணருருவாதலு முடைமையிற் சிவசத்தாவான் செல்லாமை யறிக, சற்காரிய வாதங் கூறுஞ் சைவசித்தாந்தத்தில் அசத்தென்பது சத்துக்கு மறுதலையன்மையான் அப்பசுபாசங்கள் அங்ஙனமறிப்படும் பொதுவியல்பு பற்றி அசத்தெனப்படுமாயினுஞ் சிறப்பியல்பு பற்றி அசத்தாதல் செல்லாமையிற் சிறப்பியல்பு நோக்குழிவழி அவை சத்தாதற் கிழுக்கின்மையு மறிக. இங்ஙனஞ் செவ்வனே யிறுக்க அறியாதார் அபாவத்தி னியல்பாவது பாவத்திற்கு மறுதலைப்பொருள்போலுமென நையாயிகர் முதலியோர் மதம்பற்றி மயங்கி எல்லாப்பொருளுஞ் சத்தென்னுஞ் சித்தாந்தத்தோடு முரணுமைப்பொருட்டு ஈண்டுச் சத்து அசத்தெனப்பட்டனவும் சித்து அசித்தென்னும் பொருளவாமெனவும், சுத்தம் அசுத்தமென்னும் பொருளவாமெனவும், உரைத்திடர்ப்படுவர். காரியப்பிரபஞ்சம் ஏனைப்பசுபாசங்கள்போலன்றி இருவகையியல்பானுங் காட்சிப்புலனாய் இத்துணைப்பொழுது நிற்குமென நம்மனோரால் அறியவாராது நிலைபெறுவதுபோலத் தோன்றிவிரையக் கெட்டு மறைந்துபோதற் சிறப்புடைமைபற்றி அதுவே ஈண்டு உணருருவசத்தென்றெடுத்துக் கொள்ளப்பட்டது. அசத்தெனவே அசித்தென்பதுந் தானே போதரும்.

* சிவப்பிரகாசம், உண்மை. ௨௨. தன்னறிவதனு.
† " பொது. ௨௬. அன்னியமானவை.
‡ " உண்மை. ௭. மாயைமாமாயை.
¶ சிவஞானசித்தி, நான்காஞ்சூத்திரம். ௨. கருவியாமனமு.
§ " ஒன்பதாஞ்சூத்திரம், ௨. வேதசாத்திர.

அசத்தறியாய் கேணீ யறிவறிந்த தெல்லா
மசத்தாதல் மெய்கண்டா ஞயி-லசத்தலாய்
நீரி லெழுத்து நிகழ்கனவும் பேய்த்தேரு
மோரிலிவை யின்றுமா றெப்பு. (க)

இது, தன்னைச் சிவமாகிய சத்தென்று பொருந்தியிருப்போர்க் கல்லவென்பது கூறுகின்றது.

இ-ள். அசத்தறியாய் பொய்யைப் பொய்யென்று அறியாதவனே நீ கேளாய்.
கேணீ.
ஏ-து.

அறிவறிந்த தெல்லா மசத்து. அறிவினு லிதுவென் றறியப்பட்டவையெல்லாம் பொய்யாம். எ-து.

ஆதல் மெய்கண்டானுயில். அப்படி பொய்யாதலை உண்மையைத் தரிசித்தவ ஞராய்ந்துபார்க்கில். எ-து.

அசத்தலாய். அந்தப் பொய் யல்லாதவனே! எ-து.

இன்றுமாறெப்பு. எ-து. அஃது இல்லையாகு முறைமைக் குவமை.

நீரி லெழுத்து எ-து. நீரின்க ணெழுது மெழுத் தெழுதிய வழியே யழியுமாறும்.

நிகழ் கனவும். எ-து. மெய்யென்னும்படி கையும் மெய்யுந் தீண்டிக் கலந்த கனவில்செய்தி விழித்த கா

லத் தில்லையானவாறும்.

பேய்த்தேரும். கானல் நீரொன்று பார்த்துப் பின்பு நி
எ-து. ரூபித்தவிடத்து நீரில்லையாய்க் கானலான
வாறும்.

ஓரில். எ-து. விசாரிக்கில். எ-று.

அசத்தறியாய் என்றும் அசத்தலாயென்று மிரண்டாகிய தென்னையெனின்? அசத்துடனே கூடிநின்றும் அதனை யறியா தவனேயென்று அறியாமைக்கும், அந்த அசத்தாய்நின்றாலும் அந்தஅசத்தி லொன்றல்லை அசத்தையறிகின்றவனீ என்பதுந் தோன்றக்கூறிற்று ரென்றுகொள்க. எனவே யுபதேசத்தாலொ ழிந் துன்னையு முனக்கு வேறாகிய தேகத்தையும் அறியாயென் றதாம். அஃதெப்படியெனில்? அறிவுக் கறிவாயிருப்பதொன் றுக்கு அறியவேண்டுவதொன் றில்லையாதலானும், அறியவல்ல வா யிருப்பதொன்றுக்கு அறிவில்லையாதலானும், அந்தவத்து வாக்குமனத்துக்கு மெட்டாமலிருப்பதொரு ஞானசொரூபி யாகையானும், உனக்குண்டாகிய வுண்மை ஞானவுபதேசத்தா லொழிந்து பிரகாசியாது; பிரகாசித்தால் அசத்துமல்லவாகி அசத்தையறிபவனுமாவை யென்பதாயிற்று.

விசுவம் பொய்யென்னும்பக்கத்துக்கு நீரிலெழுத்துங் கனவு ம் பேய்த்தேரும் சபக்கமாயினவாறுகாண்க. "மண்டலில்வா ழ்வும் வானத் தரசயன்மாலார்வாழ்வும்" என்றார்வழிநூலார். சித் - ௬—௬, ௩—செ. (௧)

---

சிவஞானமுனிவர் உரை.

அசத்தறியாய் கேணீ யறிவறிந்த வெல்லா
மசத்தாகு மெய்கண்டா னுயின்—

எ-து. உ-ம். எ-னின். ஒருசாரான் அங்ஙனமாயினும் உபலத்திப்பட்டன வெல்லாம் அவ்வாறு அசத்தாமென்றற்குப் பிரமாணமென்னையென்னு நையாயிகரை நோக்கி ஏதுவை வலியுறுத்துத னுதலிற்று.

இ ள். அசத்து அறியாய் நீ கேள். எ-து. அசத்தினியல்பை யறியாத மடவோனே யாமிறுக்கு மிறையை நீ மனம்பற்றிக் கேட்பாயாக—மெய் கண்டான்ஆயின் அறிவு அறிந்த எல்லாம் அசத்து ஆகும். எ-து. சத்தினியல்பை யறிந்தோன் ஆராய்ந்தானாயின் அறிவினாலறியப்பட்டனவெல்லாம் அசத்தேயாம். எ-று.

அறியாயென்பது விளியுருபேற்றபெயர்.

'அசத்தினியல்பை யறிந்தாயாயின் இவ்வாறு பிணங்குவாயல்லையென்பார் 'அசத்தறியாய், என்றும், *"எந்தை தாட்பால் வணங்கித் தலைநின்று கேட்க" என்பார் 'கேணீ, என்றும், உபலத்திக்கு விடயமானவை யெல்லாம் அநுபலத்திக்கு விடயமாதல் ஒருதலையென்பார் 'அறிவறிந்தவெல்லாம்சத்தாகும்,என்றும், சத்தினியல்புணர்ந்தார்க் கன்றி அசத்தினியல்புணரவாராதென்பார் 'மெய்கண்டான்,என்றும், ஆய்தற் கருமைநோக்கி ஆயினென்றுங் கூறினார். * திருஞானசம்பந்தமூர்த்திநாயனார் திருப்பாசுரம். ச'ஆட்பாலவர்.'

அசத்தலாய், நீரி லெழுத்து நிகழ்கனவும் பேய்த்தேரு
மோரினவை யின்றாமா றெப்பு

எ-து. உ-ம். எ-னின். இரட்டுறமொழிந்துகொண்டு சா

ங்கியரை நோக்கி யுரைத்த பொருளை வலியுறுத்துத னுதலி
ற்று.

இ-ள். அசத்து அலாய். எ-து. அசற்காரிய வாதி யல்லா
த அறிவுடையோனே—அவை இன்று ஆம் ஆறு ஒப்பு ஓரின்.
எ-து. அங்ஙனந் தோன்றி மறைவனவாய பிரபஞ்சம் அசத்
தாமாற்றிற்கு உவமையாராயின்,—நிகழ் நீரில் எழுத்தும் கன
வும் பேய்த்தேரும். எ-து. நிகழாநின்ற நீர்மேலெழுத்துங்
கனவிற் காட்சியும் பேய்த்தேருமாம். எ-று.

எனவே, அப்போதுள்ளனவாய நீர்மேலெழுத்து முதலியன
வற்றை அங்ஙனே சடிதியின் மறைந்துபோதற் சிறப்புப்பற்றி
அசத்தென்றல் எல்லார்க்கு மொப்ப முடிந்தமையின், அவ்விய
ல்புடைய பிரபஞ்சத்தையும் அவைபோல் அசத்தென்றல் அமை
யுமென்றவாறாயிற்று.

அசற்காரியவாதியை அசத்தென்றுபசரித்தார்.

நீரிலெழுத்து முதலியன பொய்யென்பாரை மறுத்தற்கு நிக
ழென் றடைகொடுத்தார்: அஃது யாண்டுஞ் சென்றியையும்.

குவ்வுருபு விகாரத்தாற் றொக்கது.

இன்றென்னுமொருமை அப்பண்பின்மே னின்றது.

நீரிலெழுத்துத் தோன்றியபொழுதே மறைந்துபோதற்கும்,
கனாப்பொருள் முடிவுபெறுதலின்றி இடையே மறைந்துபோ
தற்கும், அருஞ் சுரத்தின் முதுவேனிலின் நண்பகற் கடுமை
பற்றித் தோற்றி ஞாயிற்றின் கிரணம் முகிற்படலத்தின் ம
றைந்தவழித் தானு மறைந்துபோவதாகிய பேய்த்தேர் ஒருகா
ரணங்காட்டி மறைந்துபோதற்கும் உவமையாயின.

இவ்வெண்பாவை "இலயித்ததன்னில்,, என்பதுபோல இங்ங

ணம் இருதொடராகவைத்துரைத்து மேற்கோளேதுக்களையும் இரட்டுறமொழிந்துகொண்டு இரண்டதிகரணப்பொருள் கோடல் ஆசிரியர் கருத்தென்பது வழிநூலாசிரியர் *"அசத்தாஞ் சுட்டி யுணர்பொரு ளான வெல்லாம்,, எ-ம். †"உலகினை ய சத்து மென்பர்,, எ-ம். வேறு கூறியவாற்றானு முணர்க. இதனையறியாது இவ்வெண்பாவை ஒருதொடராகவைத் துரைப்பார்க்கு "அசத்தறியாதானே அசத்தலாய்" என்றதனால் ஒருபயன்படாமையும், ஆயின் ஓரினென்று இருகாற்கூறுதலும், அசத்தாகும் இன்றாமென்று இருகாற்கூறுதலுங் கூறியது கூறலென்னும் வழுவாதலுமறிக. இனி ஒருவாற்றானு முணரப்படாதபொருள் சூனிய மென்பது எல்லாச்சமயத்தார்க்கும் ஒப்பமுடிந்தமையின் ஆண்டதிகரணத்திற்குரிய ஐயப்பாடுமுதலியன நிகழாமையான் அதனை வேறெடுத்துரைத்து மேற்கொள்ளவேண்டாவாயினும், மந்தவுணர்வுடையார்க்கு அதன்கண் ஐயநிகழாமைப்பொருட்டு வழிநூலாசிரியர் *"உணராத பொருள்சத் தென்னி லொருபய னில்லை போலும்,, என விடுத்தொழிந்தா ரென்றுணர்க.

சித் - ௬—௫, ௨—செ. 'ஆவதாயழிவ'. ௩—செ. 'மண்டனில்'. ௪—செ.

 ௬—௫, முதலதிகரண முடிந்தது.

---

எண்ணிய சத்தன் றசத்தன்றா மென்றலென்
கண்ணி யுளதென்றன் மெய்கண்டா - னெண்ணி
யறிய விரண்டா மசத்தாதல் சத்தா
மறிவறியா மெய்சிவன் றாளாம். (௨)

இது, சிவன் ஆன்மபோகத்துக்கு மெட்டான், அருள் தாரகமாகநின்று அறியவேணுமென்கின்றது.

| | |
|---|---|
| இ-ள். எண்ணிய சத்தன்றசத்தன்றுமென்றாலென. எ-து. | நிரூபித்தறியப்பட்டதும் அல்லவென்று சொன்னால் அதினாற் பிரயோசநமென். |
| கண்ணியுளதென்றன் மெய்கண்டான். எ-து. | அந்தவத்து வுண்டானதோ வில்லையானதோவென்றாயாகில்? உண்மையைத் தரிசித்தவன் கருதியுண்டென்று சொல்லப்பட்டது. |
| எண்ணியறிய விரண்டா மசத்தாதல். எ-து. | அப்படி யறியப்படாததுமல்ல உண்டென்றவத்துவை யறியும்படியே என்னில்? ஆன்மஞானத்தாலே நிரூபித் தறியவொண்ணாதது தனக்கு வேறாய்ப் பொய்யாதலையு முடைத்தாமாகையால். ஆனாலெப்படி யறிவதென்னில்? |
| சத்தா மறிவறியா மெய் சிவன். எ-து. | வாக்குக்கு மனத்துக்கு மெட்டாதானதொன்றை ஆன்மஞானத்தா லறியாமல் அருளாலே அறிகின்ற வுண்மை சிவமாம். |
| சிவன் றாளாம். எ-து. | அந்த அருட்டானேதென்னில்? சிவனுடைய திருவடியாம். எ-று. |

“தத்துவஞ்சத்தசத்துச் சதசத்துமன்றென்றாலென்” என்றார் வழிநூலார். சித் - சூ—௬, ௫—செ. இது சம்பிரதாயதிட்டி. (௨)

---

சிவஞானமுனிவர் உரை.

எ-து. உ-ம். எ-னின். பரப்பிரமப்பொருள் அவிச்சைவயத்தான் ஞாதாவெனவும் ஞேயமெனவும் பகுக்கப்பட்டு மு

ன்னர்க் கூறப்படுஞ் சாதகங்களி னின்றறியவும்படும், அவிச்சை நீங்கியவழி அப்பகுப்பின்மையாற் சத்தென்றுதல் அசத்தென்றுதல் ஒருவாற்றானும் ஞேயமாமாறின்றிக் கேவலஞானமாத்திரையேயாய் நிற்பதொன்றாகலான் அது கோசரமாமென்றல் பொருந்தாதென்பாரை நோக்கி அஃதனை வலியுறுத்துதலி ற்று.

இ-ள். எண்ணிய சத்து அன்று அசத்து அன்று ஆம் என்றால் என் கண்ணி உளது என்றல். எ-து. பரமார்த்தமாகிய பரப்பிரமப்பொருள் விவகாரத்திற் கருதப்பட்ட சத்துமன்று அசத்துமன்றென்னின் அங்ஙன மொருபொருளுண்டென்றல் யாது பிரமாணங்கருதியோ அதனைக் கூறுவாயாக. பிரமாணமுண்டெனின் அதற்கு அது பிரமேயமெனப்பட்டு ஞேயமாவான் செல்லுமென் றஞ்சிப பிரமாண மில்லையென்பையாயின்,—மெய்கண்டான் எண்ணி அறிய இரண்டு அசத்து ஆம். எ-து. சத்தினியல்பை யுணர்ந்தோன் ஆராய்ந்தறியிற் காட்சிமுதலிய பிரமாணங்கட்கு விடயமாவதூஉம் ஒருவாற்றானும் பிரமாணமல்லாத சூனியமுமாகிய இரண்டும் மேற்கூறியவாற்றான் அசத்தேயாம்.—ஆதல் சத்து ஆம் அறிவு அறியா மெய் சிவன் தாள் ஆம். எ-து. ஆதலாற் சாங்கோக்கிய முதலியவற்றுட் சத்தென்றோதப்படுஞ் சுட்டறிவினால் அறியப்படாத மெய்ப்பொருள் சைவவுபநிடதங்களினுஞ் சைவாகமங்களினும் அந்நியமின்றி நின்றுணரும் அநுபவமாத்திரையிற் கோசரிப்பதென் றோதப்படுஞ் சிவனருளாவதின்றி நீ கூறுஞ் சூனியமன்று எ-று.

அறியவென்னுஞ் செயவெனெச்சம் மழைபெய்யக் குளநிறையும் என்புழிப்போலச் செயினென்னுமெச்சப்பொருட்டாய் நின்றது. முற்றும்மை விகாரத்தாற்றொக்கது.

அசத்தாமென மாறுக.

சத்தாகிய மெய்யெனவியையும். "அடியளந்தான்றாயது" என்றாற்போல அறிவறியாமெய்யென்றது வாளாபெயராய் நின்றது.

சிவன்றாளெனச் சிவசத்தியின்மேல் வைத்து உயர்த்துக்கூறியது உபசாரவழக்கு: "இறைவனார் கமலபாதம்" என்பதுமது. சிவஞானசித்தி சுபக்கம், பாயிரம்—௪—செ.

இதனாற் போந்தபொருள் சத்துமன்றி அசத்துமன்றி ஒருபொருளுண்டெனின் அதற்குப் பிரமாணமென்னை? பிரமாணாதீதமாகிய சூனியமெனிற் சூனியமும் அழிபொருளுமாகியஇரண்டும் அசத்தேயென்பது மேற் காட்டினமையாற் பிரமப்பொருள் அசத்தெனப்பட்டுச் சத்தென்னுஞ் சுருதிகளோடு முரணுமாகலின் அவற்றுட் சத்தென்றோதப்படும் பரப்பிரமப்பொருளாவது உண்மைஞானத்திற் கோசரிப்பதென யாங்கூறுஞ் சிவமேயன்றி நீ கூறுஞ் சூனியமன்றென மாயாவாதியை மறுத்துக் கோசரமென்றதனை வலியுறுத்திய வாறுமென்க.

எண்ணியறிய விரண்டாமசத்தென்பதற்குப் பிறரெல்லாம் வருகின்ற வெண்பாவிற்கூறும் பொருள்படக் கூறியது கூறலாதன் மேலும்ஓரியைபின்றியுரைப்ப.

---

உணர்வ தசத்தாத லொன்றுணரா தொன்றை
உணருநீ தானுணரா யாகி - லுணருருவிற்
றுனிரண்டா மெய்கண்டான் றன்னை லுணர்தலாற்
றுனிரண்டாய்க் காணன் றமி. (௩)

இதுவுமது.

இ-ள். உணர்வதச்ச்து. எ-து. அறியப்பட்டவையெல்லாம் அழிந்துபோவதச மாகையாற் பொய்.

ஆதல். எ-து. ஆகையாலே.

ஒன்றுணராது. எ-து. அறியப்படாத தொருபொருள் சிவம்.

ஆகில். எ-து. அஃதப்படியாகில்.

ஒன்றை யுணருநீ தானுணராய். எ-து. ஒரு பொருளை யறிந்து பிரயோசநங் கொள்ளத்தக்க நீ யதனையறியாயாவை.

என்றது அறியப்பட்டதுமல்ல அறியப்படாததுமல்ல வாகியபொருளை அறியத்தக்கவன் அறிந்த பிரயோசநங்கொள்ளானுகில் அவனு லொருபிரயோசநமு மிலலை. எனவே அறிவா னறியவேணுமென்றதாம்.

உணருருவிற்றுனிரண்டாம். எ-து. நிரூபித் தறியவென்று நினையில் அது தனக்குவேறும்.

அறிவதெப்படியென்னில்?

மெய்கண்டான்றன்னுணர்தலால். எ-து. சற்குருகடாக்ஷத்தாலே சம்பிரதாயசுத்தியுடையனாகி உண்மையைத் தரிசித்தவன் சிவனுடைய அருளாலே யுணர்வனுதலால்

தானிரண்டா சிவனைக் காணுமிடத்துத் தனித்துநின்று அவனை
யக் காணுன்ற வேருகக் காணுன். எ-று.
மி. எ-து

என்றது, அந்நியமாய்நின்று காண்பனென்றதாம். "அறிபொ
ருள்சித்தாய்வேரு மறிவுருப்பொருள் சத்தென்னில்" என்ருர்வ
ழிநூலார். சித்-௬—௬, ௬—௪.

இதவுஞ்சம்பிரதாயதிட்டியாலறிக. (௩)

---

சிவஞானமுனிவர் உரை.

எ-து. உ-ம். எ-னின். பிரகாசித்த பொருளையும் வேரே
ராற்ருன் அறிதுமென வேட்கைசென்றுழி அவ்வாற்ருற் புது
வதாய்ப்பிரகாசிக்கவேண்டுதலிற் பிரகாசித்தினுக்கு பிரகாசிக்
கவேண்டுவதில்லை யென்றல் யாண்டுஞ் செல்லாமையின் வாக்கு
மனுதீதமென்றல் பொருந்தாதென்பாரைநோக்கி அதனைவலியு
றுத்துத னுதலிற்று.

இ-ள். உணர்ப அசத்து. எ-து. நின்னுலறிவனவாய கரு
விகளெல்லாம் மேற்கூறியவாற்ருன் அசத்தாம். அசத்தென
வே அசித்தாதலும் பெறப்படும்.-ஆதல் ஒன்று ஒன்றை உணரா
து. எ-து. ஆகலான் அவற்றுள் ஒருகருவியும் ஒன்ருகிய மு
தற்பொருளை அறியமாட்டாது.—உணரும் நீ தான் உணராய்.
எ-து. அவற்ருனறிந்து வருகின்ற நீதானும் அதனையறியமாட்
டாய்:—ஆயின். எ-து. நீயேயாய்ந்தறிவாயாயின்,—உணரு
ம் உனின் தான் இரண்டு ஆம். எ-து. அவ்வாறுணரப்படும்
பொருள்கள்போல் உணர்கின்ற நின்னின் வேரும்.—மெய்கண்
டான்றன்னுல் உணர்தலால் தான் இரண்டாய்க் காணுன்
தமி. எ-து. உயிர்க்கு அறிவு விளங்கு முண்மையை அறி

ந்தான் தன்னறிவு அச்சிவன்ருளி னடங்கி அதுவாய் நின்று அ
கனைனை அசனையுறியுமாகலான் ஏனைப்பொருள்களை யறியுமா
றுபோல வேருய் நின்றறிவானல்லன் அத்தனி முதற்பொருளை
எ-று.

இகனுற் போந்தது சத்தாகிய சிவம் பாசஞானத்தானுதல்
பசுஞானத்தானுதல் அறியப்படாது; அறியப்படிற்குடமுதலாயி
னபோல உயிரின்வேருய் அவிச்சையான் வருஞ்சுகதுக்கங்களை
ப் பயப்பதன்றி அவிச்சையினீங்கிய நிரதிசய வின்பத்தினைப் ப
பவாதாகலான் அவ்வுண்மையுணர்ந்தோன் ஏனையபோல அச
ந்தாதலின்றித் தனியாய் நின்ற அம்முதற்பொருளை அகனு
ஞெற்றித்து நின்றே காண்பனென னையாயிகர் முதலியோ
ரை மறுத்து வாக்குமனுதீதமாய் நின்றே கோசரமாமென வ
லியுறுத்தியவாருமென்க.

உணர்பவென்பது அகரவீற் றஃறிணைப்பன்மைப் பெயர்ச்
சொல்.

ஒன்றுமென்னும் முற்றும்மை விகாரத்தாற்ருெக்கது.

உனிளென்னும் இன்னுருபு நீக்கப்பொருட்கண் வந்தது. ஒ
றிட்டாமை புறனடையாற் கொள்க. தான் அசை.

---

பாவகமென்ரு னசத்தாம் பாவநா தீதமெனிற்
பாவகமா மன்றென்னிற் பாழுதுவாம் - பாவகத்தை
பாவித்த ருனென்னிற் பாவகமாந் தன்னருளாற்
பாவிப்பது பரமில் பாழ். (௪)

இதுவுமது.

இ-ள். பாவக சிவனைத் தியானிக்குமிடத்து யாவனொரு மென்று வ னொருரூபங்களாகத் தியானிக்கவேண்டு னசத்தா கையில் அது அவனுடைய உண்மையல்ல ம். எ-து. வாம்.

பாவநா தீத தியானங்களைக் கடந்ததொரு தியானமெ டெனிற் பாவக ன்று தியானிக்கில் அதுவுந் தியானத்திலே மாம். எ-து. யொன்றும்.

அன்றென்னிற் பாவிக்கப்படுவ தொன்றல்லவென்னிற் பா ழதுவாம். அது பாழாம்.
எ-து.

பாழாமென்றது பிரயோசநமின்றிச்சூனியமா மென்றதாம். எனவே, முத்தியினுள்ள பொருளு மில்லையென்றதாம்.

பாவகத்தைப் யாதொரு தியானத்தை தியானித்தலே அ பாவித்தல் தா வன்தானென்று பாவிப்பேனென்னில், அவ னென்னிற் பாவ னுடைய பாவகமாம்.
கமாம். எ-து.

என்றது நான்பாவிப்பதன்றி அவன்றான் பாவிக்கின்றானகப் பாவிப்பே னென்றதாம். ஆதலால் அவனுடைய பாவக முன க்குப் பிரயோசனமில்லை யென்றதாயிற்று.

தன்னருளாற் ஆகையாலே சிவனுடைய அருளாலே தி பாவிப்பது பர யாநிக்கின்றதே மேலாகிய பொருள் இயல் மில் பாழ். பாம். அப்படி பாவித்தலில்லாதது பாழா எ-து. ம். எ-று.

என்றது பாவனைகெட்டு பாவிப்பே னென்பையாகில் அது ம்பாழாம் என்றதாம். "பாவிப்பதென்னிற் பாவம்" என்று

ர்வழிநூலார். சித் - ௬—௫, எ—செ.

இதுவும் சம்பிரதாய திட்டியாலறிக. (௪)

---

சிவஞானமுனிவர் உரை.

எ-து. உ-ம். எ-னின். தானே கோசரமாதலன்றித் தன்னாலறிதல் கூடாமையிற் றன்னாலே தனையுணருமென்பது தன்னைப் பற்றுதலென்னும் வழுவாமாகலின், அவ்வாறன்றி வாக்குமனாதீதப்பொருள் யோகநூலிற்கூறுந் தியான பாவனைகளிற் கோசரமாமென்றலே அமைவுடைத்தென யோகமதம்பற்றிக் கூறுவாரைநோக்கித் தன்னாலன்றிக் கோசரமாகாமையை வலியுறுத்துத னுதலிற்று.

இ-ள். பாவகமேல் தான்அசத்து ஆம். எ-து. நீ கூறும் பாவனை ஏனைப்பாவகங்கள்போல மனமுதலியவற்றோடு கூடி நின்று பாவிக்கும் பாவகமெனின், அறிவினாலறியப்பட்ட சுட்டகலான் அப்பொருள் அசத்தாம்:—பாவனாதீதம் எனின் பாவம் ஆம். எ-து. கருவிகளை நீங்கிநின்று பாவிப்பதாகலின் அப்பாவனையைக் கடந்ததெனிற் கருவிகணீங்கியவழி ஒன்றுமறியுமாறின்றிக் கேவலமாமாகலான் அது பாவகமாத்திரையேயன்றிப் பயன்படுமாறில்லை:—அன்று என்னின் பாழது ஆம். எ-து. இவ்விருதிறனுமன்றி அநிர்வசனமாகப் பாவிக்கப்படுவதெனின்? அது சூனியப்பொருளாம்:—பாவகத்தைப் பாவித்தல் தான் என்னின் பாவகம் ஆம். எ-து. அவ்வாறன்றிப் பாவனைக்கெய்தாதபொருளை எய்தியதாக வைத்துப் பாவகஞ்செய்தலெனின் அது போலிப்பாவனையாதலாற் பாவனாதீதம்போலப் பாவனைமாத்திரையேயன்றிப் பயன்படுமாறில்லை. அற்றேல் ஒருவாற்றானும் பாவனைக்கெய்தாத பொருள் பாழாமெனின்;—தன் அருளால் பாவிப்பது பரம். எ-து. அப்பாவங்களை

யொழித்துத் தனது திருவருளாற் பாவிக்கப்படுவதாம் பரம் பொருள்—பாழ் இல். எ-து. ஆகலான் நீ கூறும் பாவனை க்செய்தாமைபற்றிப் பாழாதலில்லை. எ-று. தான் அசை.

பாவகத்தைப் பாவித்தலென்பது "கறைமிடறணியலு மணிந்தன்று" என்றதுபோலக் கொள்க.

மேலைவெண்பாவில் தன்னென்றது தனது சத்தியேயாகலா ல் தன்னைப் பற்றுதலென்னுங் குற்றமாதல் யாண்டையதென விடுப்பார் தன்னருளாற் பாவிப்பதென்றார். தன்னருளை ய றியுமாறும் அதனாற் பாவிக்குமாறும் ஒன்பதாஞ் சூத்திரத் துட் கூறப்படும்.

யோகநூலார் கூறும் பாவனையாவது இந்நான்கனுள் ஒ ன்றாகற்பாலதன்றி வேறின்மையின் நான்கினையுங் கூறி மறுத் தார்.

---

அறியா விரண்டல்ல னுங்கறிவு தன்னா
லறியப் படானறிவி னுள்ளா - னறிவுக்குக்
காட்டாகி நின்றானைக் கண்ணறியா மெய்யென்னக்
காட்டா தறிவறிந்து கண்டு. (௫)

இதுவுமது.

இ-ள். அறியா விரண் டல்லன். — சிவன் ஆன்மாவுக் கறிவாய் நிற்கையினா லே அறிகைக்கு வேறல்லன்.

எ-து.

ஆங்கறிவு தன் — அப்படியாயினும் அவ்விடத்து அறியுங் க

ஞ லறியப்படா ற் றன்னுடைய அறிவா லறியப்படான்.
ன். எ-து.

அறிவி னுள்ளான். எ-து. — அப்படி அறியாமையிருக்கைக்குக் காரணமெனனென்னில்? ஆன்மாவுக் குயிராயுள்ளானதலால். அஃதெப்படியென்னில்?

அறிவுக்குக் காட்டாகி நின்றானை. எ-து. — ஆன்மாவுக்குக் காட்டாகி நின்ற சிவனை.

காட்டா தறிவறிந்து கண்டு. எ-து. — ஆன்மாத் தானறிந்து கண்டு நமக்குக்காட்டாய் நிற்கின்ற தீதென்று பிரித்துக்காட்டமாட்டாது. அஃதென்போலவென்னில்?

கண் ணறியா மெய் யென்ன. எ-து. — கண்ணுக்குயிராகிக் காட்சியைக்கொடுத்து நின்ற ஆன்மாவைக் கண் கண்டு காட்டமாட்டாதான தன்மைபோல. எ-று.

எனவே, அருட்டாரகமாய் நின்றறியவேணுமென்பதாயிற்று. "அந்நியமிலாமையானு மறிவினுண்ணிற்றலானும்" என்றார் வழிநூலார். சித் - ௬—௫, அ—செ.

அந்நியமின்றி யுயிர்க்குயிராய்நின் றுணர்த்துகின்றனென்னும் பக்கத்துக்குக் கண்போலவென்னுஞ் சபக்கங்காட்டியவாறறிக. (௫)

---

சிவஞானமுனிவர் உரை.

எ-து. உ-ம். எ-வின். மேற்கூறிப் போந்த பாவனைகட் கெய்தாத பொருளைத் தன்னருளாற் பாவித்தல்வேண்டாம்; உயிர் பசுத்துவநீங்கிய காலத்துச் சிவனைப்போல முற்றுமுணர்

தன் முதலிய எண்குணங்களுமுடைய தென்று ஆகமங்களுட் கூறுதலின், ஆண்டான்மஞானஞ் சிவஞானத்தோடொப்பதன் றிப் பசுஞானமெனப்படாமையான், அவ்வறிவின் அறியப்படு ங் கோசரப்பொருளென்றலே அமைவுடைத்தென்னுஞ் சிவரா வாதிகளை நோக்கித் தன்னருளாலன்றிக் கோசரமாகாமையை. வலியுறுத்து னுதலிற்று.

இ-ள். அறிய இரண்டு அல்லன். எ-து. சிவாகமங்களின் அத்துவிதங் கூறுதலின் உயிர் தன்னறிவா னறிதற்குத் தன் னின் வேறல்லனுகலானும்.—அறிவின் உள்ளான் ஆங்கு அறிவு தன்னால் அறியப்படான். எ-து. சமமாதலின்றித் தூலசூக் கும முறையாற் றன்னறிவுக்குள்ளு மாய் நிற்றலின் அவ்விடத் துத் தன்னறிவினுல் அறிய வாரானுகலானும்—அறிவுக்குக் கா ட்டு ஆகி நினருனே. எ-து. தன்னறிவுக்கு வியஞ்சகமாய் நி ன்றறிவிக்கும் உயிர்க்குயிராய முதல்வனே—அறிவு கண்டு அறி ந்து காட்டாது. எ-து. ஆன்மஞானமானது தான்கண்டறி ந்து தன்குணியாகிய உயிர்க்குக் கோசரமாமாறு காட்டமாட் டாது.—மெய் அறியாக் கண் என்ன. எ-து. தன்னின் வேறி ன்றித் தனக்குணணிற்றலிற் றன்னுற் காணப்படாது தனக் குக் காட்டாகிநின்ற உயிரை யறியமாட்டாத கண்ணொளி போல். எ-று.

காட்டு முதனிலைத்தொழிற்பெயர்.

அறிவுக்குக் காட்டாகி நின்றுனென்னும் பெயரடையானும் ஓரேதுக் கூறியவாறு.

கண்டறிதல் "குழிந்தாழ்ந்தகண்" என்றுற்போல ஒருபொ ருட்பன்மொழியாய்ச் சிறப்பின்கண் வந்தது.

மெய்யறியாக் கண்போலென இயைத்துரைக்க கண்முதலி

யவற்றை நோக்கி உயிர் சத்துச் சித்தாமென்ற வதனை மெய் யென்றார். கண் ஆகுபெயர்.

கண்ணறியா மெய்யென்பதற்குக் கண்ணையறியாத உடம்பு போலென்றுரைப்பாருமுளர். உடம்பிற்கு அறியுந் தன்மையி ன்மையானும், உடம்பிற்குக் கண் காட்டாதலு மின்மையானும், அஃதீண்டுவமையாதற் கேலாமையின், அது போலியுரையென் றொழிக.

---

அதுவென்னு மொன்றன் றதுவன்றி வேறே
யதுவென் றறியறிவு முண்டா - லதுவென்
றறிய விரண்டல்ல னுங்கறிவு ணிற்ற
லறியுமறிவே சிவமு மாம். (௩)

இதுவுமது.

இ-ள். அதுவெ ன்னுமொ ன்றன்று. — சிவன் ஆன்மாவைவிட்டு நீங்கிநிற்பானொ ருவனல்ல; ஆகலால் அதுவிதுவென்று சுட் டிக் காண்பதொரு பொருளல்ல.

எ-து.

அதுவன்றி வே றே யதுவென் றறியறிவு முண் டால். எ-து. — அப்படி வேறின்றி நிற்பதொன்றாகில் ஆ ன்மாவுஞ் சிவமு மொன்றென்றலாகாதோ வென்னில்? அதுபொருளன்று; வேறாயி ருக்கும்: அஃதெத்தாலென்னில்? அதுவெ ன்று அறிவிக்க அறிவுண்டாதலால் ஒன்றெ ன்று சொல்லுமிடத் தொன்றென்று சொல்லுவா னொருவனு ளனுகையா லிரண்டாமென்பது போலாம்.

அதுவென் ற றிய விரண் டல — அஃதப்படியாகிற் பிறித்துக்காண வேண் டாவோவென்னின்? ஆன்மபோதத்தாற்

லன். எ-து. சுட்டியறிகைக் கிரண்டாய் நில்லான்.

ஆங்கறிவு ணி சிவன் யாவனென்னில்? ஆன்மாவினிட த்ற லறியு மறி த்தே நிற்றலையுமுடையனாகிச் சகலத்தையு வே சிவமு மாம். ம் அறியும் அறிவையுடையவனே சிவனாம். எ-து. எ-று.

உம்மை அசை.

ஆன்மாவுக் கறிவாய்நிற்றலாலே அவனறிவாலறியும் ஆன் மாச்சிவமுமாமென்று பொருளுரைப்பாருமுளர். காண்பானுங் காட்டுவானும்போல யாதொன்றையு மயங்கிநின் றறிகின்ற தே ஆன்மா, அறிவிக்கிறவனேசிவன், அவ னுன்னிடத்திலே நீங் காம லெப்பொழுதும் நிற்கையினாலே நீ யந்தச்சிவமென்று ம யங்கிநினைறதொழிந்து நீசிவனல்லை யென்பதாம். "ஒன்றெனு மதனாலொன்றென் றுரைப்பதுண்டாகையாலே—நின்றனன் வேறாய்" என்றார் வழிநூலார். சித் - ௯—௩, ௯—௪.

இதுவுஞ் சம்பிரதாயதிட்டியாலறிக.

இப்படி யிச்சூத்திரத்தில் மூன்றுமுதலுந் தரிசிப்பித்தவாறு காண்க. (௯)

---

சிவஞானமுனிவர் உரை.

எ-து. உ-ம் எ-னின். அத்தன்மையனாகிய முதல்வனை த் தலைப்பட்ட உயிர் அம்முதல்வனோடு ஒன்றாய்ப் போவதே யாகலின் ஆண்டங்ஙன மறிவதூஉம் அறியப்படுவதூஉமாதல் யாங்ஙனமென்னுஞ் சிவாத்துவிதசைவர் சுத்தசைவரை நோக் கி, ஒன்றாயவழியும் அறிவதும் அறியப்படுவது முண்டென்பது ணர்த்தி அதனை வலியுறுத்துதனுதலிற்று.

இ-ள். அது என்னும் ஒன்று அன்று. எ-து. சத்தாகிய சிவம் ஞேயப்பொருளாய் விசிட்டமாய் நிற்பதென்பது உமக்கு மாகலான் அச்சிவம் இன்னதென்றறிய வாராது அநிர்வசனமாய் நிற்பதொரு நிர்விசேடப்பொருளெனக் கொண்ட மாயாவாதத்தைப்போல அதுவென்று அநிர்வசனமாய்க் கூறப்படுவதொரு சூனியமன்று ஆகலான்—அது அன்றி வேறே அது என்று அறி அறிவும் ஆங்கு உண்டே. எ-து. அந்த ஞேயமாத்திரையேயன்றி அதனின் வேறாக வாக்கு மனாதீதமாய் நிற்பதொருபொருளொன்றறிகின்ற ஞாதாவும் ஆண்டுள்ளதேயாம். அற்றேல் ஒன்றுதல் பெறப்படாதாலெனின்,—அது என்று அறிய இரண்டு அல்லன் அறிவுள் நிற்றல் அறியும் அறிவே சிவமும் ஆம். எ-து. உலகத்துப்பொருள்போல் அதுவென்று சுட்டி யறியுமாறு முதல்வன் தன்னின் வேறல்லனாய் அப்பணைந்த உப்புப்போலத் தன்னறிவின்கண் விரவி வேற்றுமைதோற்றாது நிற்றலான் அறிவிறந்தறிகின்ற அவ்வுயிர் சிவமேயாம். எ-று.

உம்மை சிவமாயுஞ் சிவமாகாமை விளக்கிநின்றது.

அதுவென்னு மொன்றன்றாகலானென ஏதும்பொருள் படக்கொண்டுரைக்க.

அறிவுமென்ற உம்மை இறந்தது தழீஇயது.

அல்லனென்பது முற்றெச்சம். வேறுமுடிபுகோடலிற் பால் வழுவாகாமை யுணர்க.

உண்டேயென்னும் ஏகாரம் தேற்றம்; ஏனையிரண்டும் அசைநிலை. நிற்றல் நிற்றலானென்றவாறு.

இவ்வெண்பாக்களைந்தும் முறையே வாக்குமனாதீதமென்றல் பொருந்தும் கோசரமாமென்றல் பொருந்ாதென்னும் மாயாவாதிகளையும், கோசரமாமென்றல் பொருந்தும் வாக்குமன

ரு தீதமென்றல் பொருந்ாதென்னும் நையாயிகர் முதலியோ ரையும், பாவனைக்குக் கோசரமா மென்னும் பாதஞ்சலரையும், ஆன்ம ஞானத்திற்கே கோசரமாமென்னுஞ் "சுமவாதசைவ ரையும், முத்தியிற் சிவமேயன்றி உயிரொன வேறின்மையின் உயிர்க்குக் கோசரமாமா றியாண்டையதென்னுஞ் சிவாத்துவித சைவர் முதலியோரையும் மறுத்து, வாக்குமனாதீத கோசரமாய் நிற்குமியல்பு வலியுறுத்தி ஒருபொருண்மேல் வந்தவாறு காண்க.

௬—௧, இரண்டாமதிகரண முடிந்தது.

இவ்வாறு நாலாஞ்சூத்திரமுதலிய மூன்றினும் மேற்பிரமாணத்தாற் கூறிப் போந்த பசுபாசபதிகட்கு இலக்கணங் கூறுமுகத்தான் முறையே கேவலஞ் சகலஞ் சுத்தமென்னும் மூன்றவத்தையுங் காட்டப்பட்டன.

இம்மூன்றனுட் கேவலம் மருட்கேவலமும், சகலகேவலமும், பிரளயகேவலமும், விஞ்ஞானகேவலமும், அருட்கேவலமுமென ஐவகைப்படும்.

அவற்றுள், மருட்கேவலமாவது அநாதிகேவலம். சகலகேவலமாவதுசங்கரித்தபின்னர்ப் புனருற்பவத்திற் கேதுவாய்ப்படுங் கேவலம்: ஆண்டுச் சூக்குமவைந்தொழிலுண்டென மிருகேந்திரத்துட்கூறுதலின் அநாதிகேவலத்தோடு இதனிடை வேற்றுமையாமாறு கண்டுகொள்க. பிரளயகேவலமாவது மாயையோடு இயைபின்றி ஆண்டுப்படுங் கேவலம். விஞ்ஞானகேவலமாவது மாயைகன்மங்களென்னும் இரண்டனோடும் இயைபின்றி ஆண்டுப்படுங் கேவலம். அருட்கேவலமாவது தத்துவ சுத்தி முன்னர்ப்படுங் கேவலம். அது துகளறுபோதத்திற் காண்க.

இனிச்சகலமும் சகலத்திற் கேவலம், சகலத்திற் சகலம், சகலத்திற் சுத்தமென மூவகைப்பட்டு ஒரோவொன்று ஐந்துவகைப்படும். அவற்றுட் சகலத்திற்கேவலமைந்தும் "ஒன்றனையா மூலத்து" என்றதனுட்காண்க. சகலத்திற் சகலமைந்தும் "இ

லாடத்தே சாக்கிரத்தை” என்றதனுட்காண்க. சகலத்திற் சுத்தமைந்தும் “யோகிற்றருவதோர் சமாதி” என வழிநூலாசிரியர் தொகுத்தோதியது. சித்தாந்தசாராவலி, யோகபாதத்தின் வகுத்துக்கூறுதலான் ஆண்டுக் காண்க. இனிச் சுத்தமுஞ் சீவன்முத்தி அதிகாரமுத்தி போகமுத்தி இலயமுத்தி பரமுத்தியென் றைவகைப்பட்டுச் சாக்கிரமுதலியபெயர் பெறும்; அவற்றை முன்னர் வகுத்தோதுப. சிவஞானசித்தி, நான்காஞ்சூத்திரம். ௩௬—செ. ‘இருவகை.’

---

 ௬—௯, முடிந்தது.

பொதுவியல்பு—இலக்கணவியன் முற்றிற்று.

பொதுவியல்பு முற்றுப்பெற்றது.



# எ—சூத்திரம்.

யாவையுஞ் சூனியஞ் சத்தெதி ராதலின்
சத்தே யறியா தசத்தில தறியா
திருதிற னறிவுள திரண்டலா வான்மா. (எ)

இச்சூத்திர மென்னுதலிற்றோவெனின், மேலதற்கோர் புறநடை முன்னற்சூத்திரத்திற் கூறிய மூன்று முதலையும் விளங்கக் கூறுபடுத்திக் கூறுதலைக் கருதிற்று.

| | |
|---|---|
| இ-ள். யாவையுஞ் சூனியஞ் சத்தெதிர். எ-து. | சத்தாகிய சிவனுடைய சந்நிதியிலெல்லாஞ் சூனியமாம். |

சூனியம் - பொய். என்றது சத்தின்முன்னர் அசத்துப் பிரகாசியாதாகையானும், விசுவத்திற் பிரயோசநம் அவன்அறிகையில்லை யாகையானு மென்றதாம். ஆனால் விசுவம் நடத்தினமுறைமை யெப்படியென்னில்? இந்திரஞாலங் காட்டுவானுக் கில்லையாய்க் காண்பானுக் குண்டானவாறுபோல வெனவறிக.

| | |
|---|---|
| ஆகலின் சத்தே யறியாது. எ-து. | விசுவம் அப்படியறிந்து பொய்யாய் வருகின்றதாதலாலே சிவ னறியான். |
| அசத்தில தறியாது. எ-து. | விசுவந் தானே சேடமுமாய் அழியுமாகையாலே அறியாது. |

இருதிற னறிவுளதிரண்டலா வான்மா. எ-து. சத்தையும் அசத்தையும் கூறுசெய்தறியும் அறிவையுளதாய்ச் சத்துமல்லவாய் அசத்துமல்லவாய்ச் சதசத்தாய் நிற்கும் ஆன்மா. எ-று.

இதற்குப்பிரமாணம் வருமாறு.

---

சிவஞானமுனிவர் உரை.

சிறப்பியல்பு—சாதநவியல்.

இதன் பிண்டப்பொழிப்பு. மேலைச்சூத்திரத்துட் கூறிப்போந்த இரண்டனுள் வாக்குமனதீதமாய சிவசத்தின் சந்நிதியின் உணருருவாகிய அசத்தெல்லாம் பாழாகலிற் சத்தாகிய சிவம் அசத்தாகிய பிரபஞ்சத்தை அறிதல்செய்யாது; அசத்தாகிய பிரபஞ்சம் அறிவில்லாத சடமாகலிற் சத்தாகிய சிவசத்தை அறிதல் செய்யாது: ஆகலாற் பாரிசேடவளவையான் இருதிறனறிவுளதொன்றுண்டென்பது பெறப்படுதலின், அதுவே சத்தாதற்றன்மையும் அசத்தாதற்றன்மையுமாகிய இரண்டுமன்றிச் சதசத்தாயுள்ள உயிராம். எ-று.

இரண்டனுள் ஒன்றனைப் பிரிக்கின்றமையிற் சத்தேயென்னு மேகாரம் பிரிநிலைக்கண் வந்தது.

அசத்திலதாகலினென்றுரைக்க.

அசத்துச் சத்தையறியாமைக்கும் சத்தெதிர் சூனியமாதலே ஏதுவாதலமையுமாயினும், அசத்தெனப்பட்ட கருவிகண்முத்திநிலையிற் சிவகரணமாய் ஆன்மசந்நிதியையொட்டி முதல்வன்சந்நிதியி னிற்கட்பெறுமென்பாரை நோக்கி வேறுமோரேது கூறினார். இக்கருத்தே பற்றி "சத்தின்மு னிலாமையானுந் தனைக்கொடொன் றுணர்தலானும்" என விரண்டேதுவும் உ

டன்கூறினார் வழிநூலாசிரியரும். சிவஞானசித்தி, ௭—சூ, க—செ. 'அனைத்துஞ்.'

ஏற்புழிக்கோடலான் அறிதலென்றது ஈண்டநுபவ வறிவி ன்மேற்று.

இனைத்தெனவறிந்தபொருட்கு வினைப்படுதொகுதிக்கண் வே ண்டப்படு முற்றும்மை விகாரத்தாற் றொக்கது.

---

அந்நிய மிலாமை யரற்கொன் றறிவின்று
மந்நிய மிலாசத்தைக் காண்குவனே - லந்நியமாய்க்
காணு னவன்முன் கதிர்மு னிருள்போல
மாணு வசத்தின்மை மற்று. (க)

இது, தன்னைச் சத்தாகிய சிவமெனக் கருதினோற்கு அஃ தல்லவென்கின்றது.

இ-ள். அந்நியமிலாமையரற்கொன்று. எ-து. ஆன்மாக்கள் சிவனுக் கந்நிய மில்லாமையிருத்தலாலே வேறல்லவொன்று.

அறிவின்றும். எ-து. எல்லாஞ் சிவனுமாகில் அறிவானுமறி பொருளு மில்லையாம்.

அந்நியமிலாசத்தைக் காண்குவனேல். எ-து. வேறன்றியிலேயிருந்த சிவன்றனே அசத் தினாலே அறிவனென்று நீ சொல்வாயாகில்

அந்நியமாய்க் காணான். எ-து. அசத்தைச் சிவன் வேறாகநின்று காணான். அஃதெத்தாலென்னில் ?

அவன்முன் மா அந்தச்சிவன்முன் மாட்சிமையில்லாத அ
ஞ வசத்தின் சத்தில்லை. அஃதென்போலவென்னில் ?
மை. எ-து.

கதிர்முன் னி ஆதித்தனுடைய சந்நிதியிலே அந்தகார
ருள் போல. நில்லாதாற்போல வென்றதாம். எ-று.
எ-து.

மாட்சிமை-யறிவில்லாமை. மற்று-அசை.

எனவே யறிவானொருவன் அறிவிப்பானைக்கொண்டே யறிபு
ப்பொருளை யறியவேணு மெனபதாயிற்று.

இது, சத்தின்முன் அசத்து நில்லாதென்றதற்குப் பிரமா
ணம்.

சத்தின்முன் னசத்துநில்லாதென்னுந் துணிபொருட்பக்கத்
துக்கு, ஆதித்தனு மிருளும்போலவென்பது சபக்கமாயினவாறு
காண்க. "அனைத்துஞ்சத்தெனனி லொன்றையறிந்திடாது."
என்றார் வழிநூலார். சித் - எ—ரு, க—செ. (௪)

---

சிவஞானமுனிவர் உரை.

எ-து. உ-ம். எ-னின். சுட்டுணர்வின்மையான் முதல்வ
ன் அசத்தையறியானெனின் முற்றுணர்வுடைமைக் கிழுக்கா
மென்பாரை நோக்கி இழுக்கின்மை கூறி ஏதுவை வலியுறுத்து
த னுதலிற்று.

இ-ள் அந்நியம் இலாமை அரற்கு ஒன்று உணர்வு இ
ன்று ஆம். எ-து. தன்னுள் வியாப்பியமான பசு பாசங்க
ளோடு வேற்றுமையின்றி உடனாய்நிற்றலை யுடைய முதல்வனு
க்குச் சுட்டியறியக் கிடப்பதொன்றில்லை. ஆகலான்—அந்நியம்
இலான் அசத்தைக் காண்குவனேல் அந்நியமாக் காணான்.
எ-து. அத்தன்மையனாகிய முதல்வன் அசத்தை யறியனும

வனுயின் அறிந்தாங்கறிவனன்றி நம்மனோர்போல வேருகச்சுட்டியறிவானல்லன்—கதிர்முன் இருள்போல அவன் முன் மாணு அசத்து இன்மைமற்று. எ-து. ஞாயிற்றின்முன் இருட்டுப்போல அம்முதல்வனெதிர் நன்மையில்லாத பிரபஞ்சம் விளங்கி நில்லாதாகலான். எ-று.

எனவே, அசத்தை விடயிப்பதாகிய ஏகதேசவுணர்வு முற்றுணர்வைத் தடுப்பதாகலான், அஃதில்லாமை முற்றுணர்விற்கு மேம்பாடாவதன்றி இழுக்காகாதென ஐயமகற்றிஏதுவை வலியுறுத்தவாறு காண்க.

மாணுமை-வியாபகவுணர்விற்கு விடயமாகாமை.

இன்மை ஈண்டு விளங்காமை குறித்து நின்றது,

மற்று அசை. மற்றுக் காண்குவனேலென மேலேகூட்டி வினைமாற்றின்கண் வந்ததெனினுமமையும்.

உணர்வுங் கதிரும் ஆகுபெயர். கதிர்முன்னிருள் ஈண்டு முனையாமைமாத்திரைக்கு ஒருபுடையுவமையாயிற்றென்பது வழிநூலாசிரியர் "முளைத்திடா தசத்துச் சத்தின் முன்னிருளி... வி முன்போல்,, என்றவாற்ருனறிக. சித்-எ—கூ, க—செ

☞ எ—கூ, முதலதிகரணமுடிந்தது.

---

பேய்த்தேர்நீ ரொன்றுவரும் பேதைக்கு மற்றணைந்தா
பேய்த்தேரசத்தாகும் பெற்றிமையின்-வாயத்ததனை
கண்டுணர்வா ரில்வழியிற் காணு மசத்தின்மை
கண்டுணரா தில்லதெனக் காண். (உ

இது, அசத்தறியுமென்போர்க் கஃதறியா தென்கின்றது.

இது, அசத்திலததியா தென்பதற்குப் பிரமாணம்,

இ-ள். பேய்த்தேர் நீரென்று வரும் | கானலை நீரொன்றுகருதிவருகின்ற அறிவில்லாதவனுக்குக் கிட்டிப்பார்த்தவிடத்து முன்பு தோன்றிய கானல் பொய்யாகு முறைமைபோல.

ப்பதைக்கு மற்ணைந்த பேய்க்கே ரசத்தாகு பெற்றிமையி ர். எ-து.

என்றது இது நீரல்லவா யிருந்தது கானலாயிருந்ததென்று ருதுதலாம். மற்று-அசை.

வாய்த ததனை கண்டுணர்வா ல்வழியிற் கா ழும். எ-து. | வாய்ப்புடைத்தாகிய அந்தவசத்தை அசத்தென்றுகருதியுணர்வாரில்லாதவிடத்து மெய்யென்று கருதும்.

என்றது அது மெய்யாகவும் பிரயோசநமாகவுந் தோன்று மென்றதாம்.

அசத்தின்மை ண்டுணராது. -து. | அறிவார் பிறரில்லை, அசத்துத்தானே யறியுமென்னையாகில்? அந்தவசத்து அறிவில்லாதபடியாலே யொன்றையுங் கண்டறியாது.

இல்லதெனக் ரண். எ-து. | ஆதலாலே அசத்துக் கறிவில்லையென்று விசாரிப்பாயாக. எ-று.

வாய்த்தென்றது அருள் தாரகமாக நின்றென்றதாம். என அருட்டாரகமாமளவுமெய்யாகத் தோன்றுமென்றதாம்

இது, விசுவம் பொய்யென்னுமதற்கு அறிவில்லையென்றும்,

அருட் டாரகமாகநின்று காணுமளவும் மெய்போலத்தோன்றும் அருட்டாரகமானவிடத்துப் பொய்யாமென்றுங் கூறிய துணிபொருட்பக்கத்துக்கு, பேய்த்தேர் சபக்கமாயினவாறு காண்க. (உ)

---

சிவஞானமுனிவர் உரை.

எ-து. உ-ம். எ-னின். அதனை உவமைமுகத்தான் வலியுறுத்துத லுதலிற்று.

இ-ள். பேய்த்தேர் நீர் என்று வரும் பேதைக்கு மற்று அனைந்த பேய்த்தேர் அசத்து ஆகும் பெற்றிமையின். எ-து. பாலைநிலத்தின்கட் காணப்படுவதாய பேய்த்தேரை நீரென்று கருதி அதனையுண்ண வருகின்ற நீர்வேட்கையுடைய மடவோனுக்கு அதனையடுத்தவழித் தன்னாலனையப்பட்ட அப்பேய்த்தேர் நீராதலின்றிப் பொய்யாந்தன்மைபோல,—வாய்த்து. எ-து. குரவன் அறிவுறுக்கும் உபதேசமொழி கிடைத்து—அதனைக் கண்டு உணர்வார் இல்வழியின் அசத்து இன்மைகாணும். எ-து. அவ்வசத்தி னியல்பை ஆராய்ந்தறிவாரின்றி அறியமாட்டாதார் உள்வழி அவர்க்கு அதன்கணறிவுள்ளதாய் மதிக்கப்படுஞ் சத்தாந்தன்மையே காணப்படும்.—கண்டு உணர்வார் இல்லது எனக் காண். எ-து. அவ்வுபதேசமொழி கிடைத்து அதனியல்பை யாராய்ந்தறிய வல்லார்க்கு அவ்வசத்தறிவு அல்லதேயாமென்று அறிவாயாக. எ-று.

மற்று வினைமாற்று. மை பகுதிப்பொருள்விகுதி. இன் உவமவுருபு. வாய்த்தென்பது வாய்ப்பவென்பதன்றிரிவு. வாய்த்தல் நேர்படுதல். ஆண்டைக்கேற்புடைய வினைமுதல் அவாய்நிலையான் வந்தது.

அசத்தின்மையாவது சத்தாந்தன்மை. நான்கனுருபு விகாரத்தாற்றொக்கது. அறிவென்பது அதிகாரத்தான் வந்தது.

☞ எ—கு, இரண்டாமதிகரண முடிந்தது.

---

அருவுருவந் தானறித லாயிழையா யான்மா
அருவுருவ மன்றுகு முண்மை - அருவுருவாய்த்
தோன்றியுட னில்லாது தோன்றாது நில்லாது
தோன்றன் மலர்மணம்போற் றொக்கு. (௩

இது, தம்மைச் சத்தாகிய சிவமெனக்கருதினோர்க்கு ஆன்மவிலக்கணங் கூறுகின்றது.

இ-ள். அருவுருவந்தானறிதலாயிழையாயான்மா. எ-து. [ஆயிழையாய் மகடூஉமுன்னிலை.] இது பரமேசுரன் பரமேசுரிக்கு அருளிச்செய்தது. அருவாகிய சத்தையும் உருவாகிய வசத்தையும் அறிதலையுடையது ஆன்மா.

ஆன்மா வருவுருவ மன்றாகும். எ-து. தானந்த அருவாகிய சத்துமல்ல உருவாகிய அசத்துமல்ல.

உண்மை. எ-து. சத்தியமாகச் சொல்லில்.

அருவுருவாய்த்தோன்றி யுடனில்லாது தோன்றாது நில்லாது. எ-து. தானந்த அருவுருவத்தினுமாகி யுருவத்தினுமாகி யுருவம்போலத் தோன்றாமலுநில்லாது, உருவம்போலத் தோன்றியுநில்லாது, இரண்டினும் வேறன்றிநிற்கும்.

தோன்றன் ம அஃதெப்படியென்னில்? மலரிலே மண

லர் மணம்போ ஞ்செறிந்துநின்றாற்போலுந் தோன்றுதல்; ற்றெக்கு.எ-து. எ-று.

மலரையொழிந்து மணந்தோன்றுதுபோல வான்மாவுந் தனித்துத்தோன்றுதென்பதுவும், மணம் அந்தந்த மலர்களியல்பாய் நின்றாற்போல நின்றநின்றதேகத்தி னியல்பாய் நிற்குமென்பதுவுங் கூறியவாறறிக.

சத்தைக்கூடிச் சத்தாகியும் அசத்தைக்கூடி யசத்தாகியும் நிற்குமெனவே ஆன்மாச் சத்தசத்தென்பதாயிற்று. "சத்தசத்தறிவதான்மா தான்சத்துமசத்துமன்று." என்றார் வழி நூலார். சித் - எ—௬, உ—௭.

ஆன்மா தனித்துநில்லாதென்னும் பக்கத்துக்கு மலருமணமுஞ் சபக்கமாயினவாறுகாண்க. (௩)

---

சிவஞானமுனிவர் உரை.

எ-து. உ-ம். எ-னின். அம்மூன்றனுள் முன்னையதனை வலியுறுத்தி இரண்டலாமையை விளக்குத லுதலிற்று.

இ-ள். ஆய் இழை ஆய் ஆன்மா அரு உருவந்தான் அறிதல் அரு உருவம் அன்று ஆகும். எ-து. நுணுகிய நூல்களை ஆராய்வதாகிய உயிரே சத்து அசத்தென்னும் இரண்டினையும் அறிவதாகலான் அஃதவ்விரண்டுமின்றி அவற்றின்வேறாம். அற்றேல் அவ்விரண்டினையு மறியு முயிர்க்குத் தன்னுண்மையறியப்படுமோ படாதோவெனக் கடாயினார்க்குப் படுமெனிற் றன்னோடுளப்பட மூன்றனையு மறிவதென்னாது அவ்விரண்டனையு மறிவதாயென்றல் பொருந்தாது; படாதெனின் அறியப்படாத பொருள் சூனியமெனப்பட்டு வழுவாமாலெனின் —உண்மை அரு உருவாய்த் தோன்றி உடன் நில்லாது தோன்றுது நில்லாது மலர் மணம்போல் தொகுத் தோன்றல் எ-து. அவ்வான்மா

வினுண்மைத் தன்மை அவ்விரண்டும்போல விளங்கித் தோன்றி அவற்றோடொப்ப நிற்பதுமன்று விளங்காது சூனியமாய் நிற்பதுமன்றாய், மலரின்கண் வாசம் அவ்விருவகையுமன்றி அதன்கணடங்கித் தோன்றுமாறுபோலச் சத்திலும் அசத்திலுஞ் சார்ந்ததன்வண்ணமாய் அடங்கித் தோன்றுவதோரியல்பாம். ஆகலான், அஃதவைபோலத் தனித்தறியப்படுவதொன்றன்றி அவ்விரண்டினையுமறியுமுகத்தான் அறியப்படுவதாம். எ-று.

ஆகலான் அஃதவைபோலத் தனித்தறியப்படுவதொன்றன்றி அவ்விரண்டினையு மறியுமுகத்தான் அறியப்படுவதாமென்பது குறிப்பெச்சம்.

சுட்டுணர்விற்கு விடயமாகாமைபற்றிச் சத்தை அருவென்றும், அதற்கு விடயமாதல்பற்றி அசத்தை உருவென்றுங் கூறினார். உணருருவசத்தென்புழி உருவென்றதும் அதுநோக்கி.

செவ்வெண்டொகை விகாரத்தாற் றொக்கது. தான்அசை.

அறிதலானன்றுருமெனவிசையும்.

இழை நூலாகலான் ஈண்டுச் சாத்திரத்தையுணர்த்திற்று.

ஆய்தல்நுணுகுதல். "ஒய்த லாய்தனிழத்தல்சாஅ—யாவயினுன்குமுள்ளதனுணுக்கம்"என்றார் தொல்காப்பியனாரும்.ஆயிழையாயெனப் பொருளினுணுக்கம் நூன்மேலேற்றப்பட்டது:இரண்டாவது விரித்துரைக்க.தொல்காப்பியம் சொல் உரியியல்-௩௨.

உயிர்க்கு அறியுந்தன்மை யுண்டாகலானன்றே வேதாகமமுதலிய நூல்களுளவாயினவென அதனை வலியுறுத்துவார் ஆயிழையாயான்மாவென அதனையுடம்பொடுபுணர்த்தோதினார். இக்கருத்தே பற்றி "பலகலை யுலகி னிலவுதலானும்,, என்றார் புடைநூலாசிரியரும், இவ்வாறன்றி ஆயிழையாயென மகடூஉமுன்னிலையாக்குவார்க்கு இவ்வுதாரணம் மேலதனை வலியுறுத்

ததற்செழுந்ததன்றாய்க் கூறியதுகூறலென்னும் வழுவாய் முடியுமென்றொழிக.

தேற்றேகாரம் விகாரத்தாற்றொக்கது.

அருவுருவாயென்புழி ஆக்கச்சொல் உவமைப்பொருள் குறித்து நின்றது; "ஆள்வா ரிலிமா டாவேனோ" என்றார்போல.

தொக்குத் தோன்றன மலர்மணம்போலெனக் கூட்டுக.

---

மயக்கம துற்று மருந்திற் றெளிந்தும்
பெயர்த்துணர்நீ சத்தாகாய் பேசி - லசத்துமலை
நீயறிந்து செய்வினைக ணீயன்றி வேறசத்துத்
தானறிந்து துய்யாமை தான். (ச)

(இது, சத்தாதல் அசத்தாதல் ஆகாமற் சதசத்தானவா றெங்ஙனேயென்போர்க்குக் கூறுகின்றது.

இ-ள். மயக்கமதுற்று மருந்திற்றெளிந்தும் பெயர்த்துணர்நீ சத்தாகாய் பேசில். எ-து. ஒருபிணி வந்தடுத்தபொழுது மயக்கத்தைப்பொருந்தியும் அதற்கான மருந்து செய்ய வதனாலே தெளிந்தும் அறிவு பெயர்தலையுடையை யாதலாலே நீ சொல்லுமிடத்து அந்தச்சத்தாகாய்.

பசிவந்துற்றபொழுது மயக்கத்தைப்பொருந்தியும் புசித்தபொழுது தெளிந்தும் அறிவுபெயர்தலையுடையையென்றுமாம். எனவே கத்தா வொருதன்மைத்தான வறிவையுடையர், நீய றிவுபெயர்தலையுடையை, ஆதலால் கத்தாவல்லை யென்றதாம்.

அசத்துமலை. எ-து. ஆனா லசத்தோவெனில்? அசத்துமல்லை, அஃதெத்தாலென்னில்?

நீ யறிந்து செய்வினைக ளீய வன்றி வேறசத்துத் தானறிந்து துய்யாமை தான். எ-து.

நீ யுன்னுடைய வறிவாலே யறிந்துகொண்ட புண்ணியபாவங்களினுடைய பிரயோசகங்களை நீயொழிந் தனக்குவேறாகிய அசத்தானது தானறிந்து சீவியாது. எ-று. தான்-அசை.

எனவே நீ சத்துமல்ல வசத்துமல்ல சதசத்தென்பதாயிற்று.

இது சம்பிரதாயதிட்டியெனவறிக. (௪)

---

சிவஞானமுனிவர் உரை.

எ-து. உ-ம். எ-னின். அங்ஙனமறியுமுயிர் சிவசத்தோடொப்பச் சித்தாகுமென்பாரை நோக்கி உபதேசியாவென்றதனை வலியுறுத்துதனுதலிற்று.

இ-ள். மயக்கமது உற்றும் மருந்தின் தெளிந்தும். எ-து. நின்னறிவை விளக்குதற்குரிய வியஞ்சகமில்வழி ஒருவிடயத்தை இன்னதென்றறியமாட்டாது மயக்கத்தையுற்றும் பசிநோய்க்கு அன்னம்போல அம்மயக்கநோய்க்கு மருந்தாய வியஞ்சகமுள்வழி அம்மயக்கநீங்கி அதனையின்னதென்று நிச்சயித்தும்—பெயர்த்து உணர் நீ பேசில் சத்து ஆகாய். எ-து. இங்ஙனம் மாறிமாறியுணர்ந்து வருகின்ற நீ சொல்லுமிடத்துச் சிவத்தோடொப்ப அறியுஞ் சத்தியுடையாயல்லை. அற்றேல் அசத்தனோவென் போலுமெனின்—நீ அறிந்து செய் வினைகள் நீ அன்றி வேறு அசத்துத் தான் அறிந்து துய்யாமைதான் அசத்தும் அலை. எ-து. வியஞ்சகம் உள்வழியும் நீ முன்னறிந்து செய்தவினைகளை இப்பொழுது நீயேயறிந்தநுபவிக்கவல்லையன்றி நின்னின்வேறாய் அசத்தாகிய பாசம் அறிந்தநுபவிக்கமாட்டாமையான் அதனோடொப்ப அசத்தனுவாயுமல்லை—வேறு. எ-து.

சத்தகுணமுடைய ஆகாயம்போல வியஞ்சகமுள்வழி அறியுமாற்றலுடைமையும் அஃதில்வழி அவ்வாற்றலின்மையுமாகிய இரண்டுமுடைய நீ அவ்விரண்டற்கும் வேறாய்ச் சிதசித்தாந்தன்மையுடையை. எ-று.

மருந்திற்றெளிந்தெனவே மயங்குதல் அஃதில்வழியென்பது பெற்றாம். வியஞ்சகமில்வழித் தலைப்படுவதூஉம் அஃதுள்வழி நீங்கிநிற்பதூஉமாகிய மயக்கம் உண்டியில்வழித் தலைப்படுவதூஉம் அஃதுள்வழி நீங்கிநிற்பதூஉமாகிய இயல்புடைய பசியோடொத்தலின் அதனைப் பசிநோயாகவும், தீர்த்தலொப்புமைபற்றி வியஞ்சகத்தைப் பசிதீர்க்குமருந்தாகவும் உருவகஞ்செய்தார். இஃதேகதேசவுருவகம். மருந்தெனப் பொதுப்பட உருவகஞ்செய்தாராயினும் மறித்து மறித்துவேண்டப்படுமாறு ஈண்டைக்கேற்புடையது பசிநோய் தீர்க்கு மருந்தேயாகலின் அவ்வாறுரைக்கப்பட்டது. அது பகுதிப்பொருள்விகுதி.

உண்மை எண்ணின்கண் வந்தது. அசத்தமென்னுமும்மையிறந்தது தழீஇயிற்று.

தானென்பது முன்னையது எழுவாயுருபு படநின்றது, பின்னையது அசைநிலை.

துவ்வாமை துய்யாமை என மரீஇயிற்று.

சத்தியுடைய பொருள் சத்தம், அஃதில்பொருள் அசத்தமாகலின், அவ்வடமொழிகள் ஈண்டீற்றுக் கெட்டுக் குற்றியலுகரவீறாய் நின்றன: "நாகணையான்?,, "பெற்றொன்று யர்த்த பெருமான்:,, "பேதுசெய்து ;,, "வாது செயத் திருவுள்ளமே,, என்புழிப்போல.

அசித்துமலையென்பது பாடமாயின், மேற்சத்தாகாயென்றதனை இசையெச்சமாகக் கொண்டு சத்தாந்தன்மையேயுடை-

யாயல்லை; அதன்மேலுஞ் சித்தாமாறியாங்ஙனமென்றுரைத்து இயைத்துக்கொள்க. இவ்வாறன்றி ஈண்டுச்சத்தாகாய் அசத்து மலையென்பவற்றை மேலருவுருவ மன்றுகுமென்றதன் பொருள்படக் கொண்டுரைப்பாருமுளர். அவர் ஆண்டேயமைந்து கிடந்தபொருளை மறித்துங் கூறவேண்டாமையும் பெயர்த்துணர் நீயெனவும், அறிந்து துய்யாமையெனவும், அறிவுடைமை அறிவின்மைபற்றிக் கூறும் பொருளவையாதல் செல்லாமையும் நோக்கிலர்.

---

மெய்ஞ்ஞானந் தன்னில் விளையா தசத்தாத
லஞ்ஞான முள்ள மணைதலா - மெய்ஞ்ஞானந்
தானே யுளவன்றே தண்கடநீ ருப்புப்போற்
றானே யுளமுளவாய்த் தான், (௫)

இதுவுமது,

இ-ள் அஞ்ஞானம், எ-து. பாசஞானமாகியவது.

மெஞ்ஞானந் தன்னில் விளையாது. எ-து, சத்தாகிய சிவனுடைய ஞானத்தைப்பொருந்தித் தோன்றாது. அஃதெத்தாலென்னில்?

அசத்தாதல், எ-து. அது பொய்யுமாய்ச் சடமுமாகையால்,

உள்ள மணைதலாம். எ-து. அந்தப் பாசஞானம் பசுஞானத்தைப் பொருந்தித் தோன்றுதலையுடைத்தாம்.

மெய்ஞ்ஞானந் தானேயுள வன்றே. எ-து. சிவனுடைய சுத்தஞான மென்றுளதென்னில்? அநாதியிலேயுளது.

உளமுளவாய் பசுஞானமென்றுளதென்னில்? அதுவு
த்தான். எ-து. மப்படியநாதியே யுளவாம். அஃதென்
போலவென்னில்?

தண் கட னீ குளிர்ந்த கடலும் நீருமுப்பும்போல.
ருப்புப்போற் று எ-று.
ன். எ-து.

என்றது கடலென்றுண்டு அன்றேநீருண்டு, நீரொன்றுண்டு அ
ன்றே யுப்புண்டு, அவைபோலப் பதிஞானமும் பாசஞானமு
மநாதியிலே யுள்ளதென்றவாறு.

கடல் பதி, நீர் பசு, உபபு பாசம். உப்பானது நீரிலே பொரு
ந்திநிற்பதொழிந்து கடலிற் பொருந்தாதானாற்போல் வநாதி
யிலே யொருகாலத் துண்டாயிருக்கப் பாசஞானம் பசுஞான
த்தைப் பொருந்திநிற்கும் பதிஞானத்தைப் பொருந்தாதென்
பதுந் தோன்றியவாறறிக.

சிவனென்றுளான் அன்றே யான்மாவுமுண்டு, ஆன்மாவெ
ன்றுண்டு அன்றேபாசமுமுண்டாயினும், பாசம் ஆன்மாவுட
னேகூடி நிற்பதொழிந்து கத்தாவுடனே கூடிநில்லாதென்னு
ந் துணிபொருட்பக்கத்துக்கு, கடலு நீருமுப்புஞ் சபக்கமா
யினவாறுகாண்க.

"சுத்தமெய்ஞ்ஞானமேனிச் சோதிபாலசத்தஞ்ஞான-மொ
த்துறு"; என்றுர்வழிநூலார். சித் - எ—கு, ௩—செ.

இந்தவைந் துவெண்பாவாலும், சிவன் சர்வஞ்
ஞனுகையாலே யொருகாலத்திலே அசத்தை
யசத்தென்றும் பின்பு சத்தைச் சத்தென்று
மயங்கி அறிதலில்லையாகையாலே சிவனுடை

யஞான மொருபடித்தாயிருக்குமென்பதுவும், கானலை நீரொன்
றும் பின்புகானலென்று மயங்கி யறிந்ததொழிந்து அறி வொ
ருபடித்தாயே யிருந்தாற்போல அசத்தைச்சத்தென்றும் பின்

புத்தை யசத்தென்றும் ஒருவன்மயங்கி யறிந்ததொழிந்து அதுவு மொருவழிபட்டிருக்குமென்பதுவும், அப்படிமருட்டி யறிவித்ததே பாசஞானமென்பதுவும், தெருட்டியறிவித்ததே சிவஞானமென்பதுவும், மருட்டமருணடிந் தெருட்டத்தெருண்டு நிற்கின்றதே பசுஞானமென்பதுவும் கூறி; மூன்றுமுதலையுந் தரிசிப்பித்தவாறுகாண்க. (௫)

சிவஞானமுனிவர் உரை.

எ-து. உ-ம். எ-னின். அம்மயக்கம் அவ்வுயிரோடியையுடைய முதல்வனுக்கு முண்டுபோலுமெனவும் அதுதான் உயிர்க்கு எக்காலத்து வந்ததெனவு நிகழுங்கடாவை விடுக்குமுகத்தான் இரண்டன்பாலு முளதாமாறு வலியுறுத்துதனுதலிற்று.

இ-ள். அஞ்ஞானம். எ-து. மேற்கூறிப்போந்த மயக்கமாவது—மெய்ஞ்ஞானந் தன்னில் அசத்து ஆகல் விளையாது. எ-து. ஒருபெற்றித்தாய அறிவெனப்படுஞ் சிவத்தின்எதிர் கதிர்முன்னிருள்போல நிலையுதலில்லதாகலின் ஆண்டுளதாதலின்றி—மெய்ஞ்ஞானந் தானே உள அன்றே. எ-து அச்சிவம் என்றுள்ளது அன்றே—தான் ஏய் உளம் உளவாத்தான். எ-து. தான் பொருந்துதற்குரிமையுடைய உயிர்களுள்ளனவாக—உள்ளம் அணைதல். எ-து. அவ்வுயிர்களைப் பற்றி நிற்றல்—கண்கடல் நீர் உப்புப்போல் காண் எ-து. தண்ணிய கடலின்கணுளதாதலின்றி அக்கடலிடத்துளதாகிய நீரைப்பற்றி நிற்கு முப்புப்போலென்றறிவாயாக. எ-று.

விளையாதென்னும் வினையெச்சமறை அணைதலென்னுந் தொழிற்பெயரோடு முடிந்தது.

தானேயென்பது கட்டுரைக்கண் வந்தது. தானேயுளமுளவாத் தானென்புழித் தானென்பது முன்னையது எழுவாய் பின்னையது அசைநிலை.

ஏயுளமென்னும் வினைத்தொகை "அறிவறிந்தமக்கட்பேறு" போல நின்றது. ஏய்தற்குரிமையாவது மேற்காட்டினும்.

தண்கடனீருப்புப்போலென்றதனால் முப்பொருள்களும் வியாபக வியாப்பியங்களாய் நிற்குமாறும் பெறப்பட்டது.

இரண்டன்கண்ணும் உயிர்க்கியைபுடைமை கூறவே, இரண்டன்பாலு முளதாதலை வலியுறுத்தவாறு காண்க.

ஈண்டிருதிறனையுமறியுமறிவுளதெனவே இருதிறனாகியசத்து அசத்து எனப்பட்டனவெல்லாம் பிரமேயம், அவற்றையறியுஞ் சதசத்தாகிய உயிர் பிரமாதா, அவ்வுயிரினறிவாகிய சிற்சத்தி பிரமாணம், அவ்வறிவு நிகழ்ச்சி பிரமிதியென்பதூஉம், இருதிறனால் விளங்குமறிவுளதெனவே அவ்விரண்டனுள் அசத்தானறிவு விளங்கும் வழித் தனக்கு வேறாய் நின்று விளக்குவனவாய காட்சியநுமானமுரையெனப்படும் அசத்தாகிய பாசஞான மூன்றும், சத்தானறிவு விளங்கும்வழி அந்நியமின்றித் தனக்காதாரமாய் உடனின்று விளக்குஞ் சிவஞானமுந் தனக்கு வியஞ்சகங்களாகலான் அதுபற்றி அவையும் பிரமாணமென்று உபசரித்துக் கூறப்படுமென்பதூஉம், இருதிறனினு மறிவுளதெனவே ஈரிடத்துங் கேடின்றி அசத்தான் விளங்கி அசத்தை யறிவுழி அசத்தின்பாலும் சத்தான்விளங்கிச் சத்தையறிவுழிச் சத்தின்பாலும் அதுவதுவாய் அழுந்துமென்பதூஉம் பெறுதும். இவ்வாறன்றி வியஞ்சகங்களையே பிரமாணமென்னுந் தார்க்கிகர்முதலியோர் மதங்கள் பொருந்தாமையும் அவ்வியஞ்சகங்களானிகழும் பிரமிதிவேறுபாடும் அவற்றதியல்புகளும் ஈண்டு விரிப்பிற் பெருகும்; பௌட்கரமுதலிய சிவாகமங்களுட் கண்டுகொள்க.

 எ—கு, மூன்றுமதிகரண முடிந்தது.

---

 ஏழாஞ்சூத்திர முடிந்தது.

## அ — சூ த் தி ர ம்.



ஐம்புல வேடரி னயர்ந்தனை வளர்ந்தெனத்
தம்முதல் குருவாய்த் தவத்தினி லுணர்த்தவிட்
டன்னிய மின்மைபி னரன்கழல் செலுமே.

என்பது, சூத்திர மென்னுதலிற்றோவெனின், ஆன்மாக்கள் ஞானத்தைப் பெற்றுணரு முறைமை கூறுகின்றது.

| | |
|---|---|
| இ-ள். ஐம்புல வேடரி னயர்ந்தனை வளர்ந்தென. எ-து. | ஆன்மா செவி மெய் கண் வாய் மூக்கென்னும் வேடருடனே கூடி வளர்ந்து உன்னுடைய வுண்மையை மறந்தாயென்று. |
| தம்முதல் குருவாய். எ-து. | தனக்குப் பிராணனாகி புண்ணின்றுபகரித்த கத்தாவே குருவாய்வந்து. |
| தவத்தினி லுணர்த்த. எ-து. | முன்னர்ச் சனனங்களிலே சாலோக சாமீபசாரூப்பியமாகிய பதங்களையுடையராகப் பத்தி ஞான வயிராக்கியங்களாலே கூடியிருப்பதாயுள்ள சரியைகிரியாயோகங்களைச் சாத்திரமுறைமைகளிலே நிகழ்த்தி அதுநிமித்தமாக மகத்தாகிய ஞானத்தைப் பெறுதற்கு நல்லசார்பிலே வந்தவர்களுக்கறிவிக்க. |
| விட்டு. எ-து. | முன்புநின்ற மருட்சியைவிட்டு. |
| அந்நிய மின் | எக்காலத்து நீக்கமில்லாமையையுடைய |

மையி னரன்க , கத்தாவுடைய திருவருளைப் பெறும். எ-று
ழல் பெறுமே.

எ-து.

அரன்கழல் செலுமே யென்று பாடமாயின் திரோதநீங்கி
ஞானமாய்ச்செல்லுமென்க. "மன்னவன் றன்மகன் வேடரிட
த்தேதங்கி" என்முர் வழிநூலார். சித் - அ—௬, க—௪.

இதற்குப்பிரமாணம்.

---

சிவஞானமுனிவர் உரை.

இச்சூத்திரத்தின் பிண்டப்பொழிப்பு.—உயிர் தான் முன்
னேசெய்துகொள்ளப்பட்ட புண்ணியவிசேடத்தாற் றனக்கு
அந்தரியாமியாய் இதுகாறு முன்னின்றுணர்த்திவந்த பரம்
பொருளே இப்பொழுது குருவடிவமுங் கொண்டெழுந்தருளி
வந்து, சிவதீக்கை செய்து, மன்னவ குமாரனாகிய நீ ஐம்பொ
றிகளாகிய வேடருட்பட்டு வளர்ந்து நின்பெருந் தகைமையை
அறியாது மயங்கி யிடர்ப்பட்டாய்; நின்பெருந்தகைமையாவது
இவ்வியல்பிற்றென் றறிவுறுப்ப அறிந்தமாத்திரையே அவ்வேட
ரை விட்டு நீங்கி, அந்நியமின்றி அநந்நியமாந்தன்மையின்
நிலைபெற்று அம்முதல்வன் றிருவடிகளையணையும். எ-று.

உயிரென்பது மேலைச்சூத்திரத்தினின்றும் வருவித்துரைக்க
ப்பட்டது.

தவத்தினிற் குருவுமாய் வளர்ந்தயர்ந்தனையென வுணர்த்
தவிட்டுச் செல்லுமென இயையும்.

புலன் ஆகுபெயர்.

வளர்ந்தயர்ந்தனையென்பது சூந்துபுகழ்பெற்றுன் என்புழிப்

போலக் காரணகாரியப்பொருட்டாய் நின்றது.

தம்முதலென்றது வேறுமுடிபாகலிற் பால்வழுவின்மையுணர்க.

குருவுமென்ற உம்மை உயிர்க்குயிராய் உண்ணின்றுணர்த்தியதூஉமன்றியென இறந்தது தழீஇயிற்று; சிறப்புமாம்.

அந்நியமின்மை அத்துவிதம். அஃதாவது சேறலைப் பயப்பித்தசாய் ஆண்டுளதாகிய வினையுபு.

அரனென்றது சுட்டுப்பெயர் படநின்றது.

வெண்கொற்றக்குடையும் நவமணிமுடியுஞ் சிங்காசனமும் மன்னவர்க்கேயுரிய சிறப்படையாளமாம்; அதுபோலப் பிரபஞ்சமெல்லாவற்றிற்கும் மூலகாரணமாமியல்பாகிய ஒருபெரு வெண்கொற்றக்குடையும், எவற்றையும் ஒருங்கே ஓரியல்பானறியும் பேரறிவாகிய ஒருபெருஞ் சுடர்முடியும், அங்கங்கே உயிர்க்குயிராய் நின்று எவற்றினையுஞ் செலுத்துமியல்பாகிய ஒருபெருஞ் சிங்காதனமும், பிறரொருவர்க்கின்றித் தனக்கேயுரிமையாகச் சிறந்தமைபற்றிப் பசுக்களுக்குப் பாசங்களையரித்தலான் அரனென்னுந் திருப்பெயருடைய முதல்வனை மன்னவனாகவும், அம்முதல்வனது பேரானந்தப் பெருஞ்செல்வமுழுதுந் தனதேயாகக் கொண்டநுபவிக்குஞ் சுதந்திரமுடைமையும், சித்தெனப்படுஞ் சாதியொருமையும்பற்றி ஆன்மாவை மன்னவகுமாரனாகவும், அவ்வான்மாவை அறிவுப்பெருஞ்செல்வமுழுதையும் ஆறலைத்துக்கொண்டு சிறுமையுறுத்துதலும் விதிவிலக்கை யிழப்பித்து இழிதொழிலினிற்பித்தலுமாகிய இயல்புபற்றி ஐம்பொறிகளை வேடராகவும் உருவகஞ் செய்தார். இஃதேகதேசவுருவகம்.

'ஐம்புலவேடரினயர்ந்தனை வளர்ந்தென' எனவே ஐம்புலவேடரின் வளர்ந்தயர்தலும் அநுவாதமுகத்தாற் பெற்றாம்.

தவஞ்செய்தா ரொன்றுந் தவலோகஞ் சார்ந்து
பவஞ்செய்து பற்றறுப்பா ராகத் - தவஞ்செய்த
நற்சார்பில் வந்துதித்து ஞானத்தை நண்ணுதலைக்
கற்றார்சூழ் சொல்லுமாங் கண்டு. (௧)

இ-ள். தவஞ்செய்தா ரொன்றுந் தவலோகஞ் சார்ந்து. எ-து. எக்காலமுஞ் சரியை கிரியா யோகமாகிய தவங்களைச்செய்யுமவர்கள் தாங்கள்செய்த தவத்துக்கிடாகிய சாலோக சாமீப சாரூபமாகிய வுண்மைபொருந்தி.

சார்ந்து-சார்புடையோரிடத்தே வந்துதோன்றி என்பாருமுளர்.

பவஞ்செய்து பற்றறுப்பாராகத் தவஞ்செய்த நற்சார்பில் வந்துதித்து. எ-து. அந்தமுத்திப்பதங்களினுடைய பற்றுதலையு நீக்குவாராகத் தாந்தாஞ்செய்த தவங்களினுடைய சார்புகளிலே சகத்தையுடையராகிவந்து தோன்றி.

முன்புதவஞ்செய்து சாலோக சாமீப சாரூபமாகிய பிறவியைச்செய்த பற்றுதலைநீக்குவாராக.

ஞானத்தை நண்ணுதலைக் கற்றார்சூழ் சொல்லுமாங் கண்டு. எ-து. சிவஞானத்தைப் பொருந்துதலை வேதாகமங்களைக் கற்றுணர்ந்தோருடைய துணிவு சொல்லும் அதனைத் தரிசித்து. எ-று.

இது சாத்திரதிட்டியால் வந்ததெனவறிக. (௬)

சிவஞானமுனிவர் உரை.

, எ-து. உ-ம். எ-னின். மேற் சரியை கிரியா யோகங்களை ச்செய்தார் அவற்றன் ஞானத்தைக் காணுமுறைமை எவ்வா றென்பாரை நோக்கி அஃதாமாறுணர்த்தி ஏதுவை வலியுறுத் துத னுதலிற்று.

இ-ள். தவம் செய்தார். எ-து. சரியைமுதலியற்வறைச் செய்தார்கள்—என்றும் தவலோகம் சார்ந்து. எ-து. அவ் வத் தவப்புயன்களைப் பயப்பிக்குஞ் சாலோகாதிபதங்களை லுருதலையாக நண்ணி ஆண்டுளவாகிய இன்பங்களை அநுபவித் து,—பற்றுப் பவம் செய்து அறுப்பார் ஆக. எ-து. முன்னு டம்பிறக்கு நாள் அடுத்த வினை காட்டுங் கதிநிமித்தம்பற்றியெ ழுந்த அவாவினை மீள நிலத்தின்கட் பிறந்தநுபவித்து நீக்கிக் கோடற்பொருட்டு—தவம் செய்த நற்சார்பில் வந்து உதித்து ஞானத்தை நண்ணுதலை. எ-து. மீளத் தவஞ்செய்தற்குரி ய உயர்ந்த குலத்தின்கண் வந்து தோன்றித் தவக்குறையான் அவ்விடயப்பற்று முறுகாவண்ணம் அறுத்துத் தத்துவஞான த்தைத் தலைப்படுவாராதலை—கற்றார் சூழ் கண்டு சொல்லுமா ம். எ-து. வீட்டுநூல்களைக் கற்றாரது சூழ்ச்சி அந்நூற் கரு த்துணர்ந்து சொல்லும். எ-று.

தவந்தானகப் பிறிதொன்று தானக இவ்வுலகத்து உடம் பொடு நின்றீட்டிய வினையெல்லாம் அவ்வுலகத்திற் செலுத்தித் தத்தம்போகங்களைப் பயந்தேவிடுமாகலான் அவற்றை ஒருஞா ன்றும் பிறழமாட்டாரென்பார் என்றுந் தவலோகஞ்சார்ந் தென்றார்.

ஆகவென்னுஞ் செயவெனெச்சம் உண்ணவந்தானென்புழிப்

போலத் தற்பொருட்டாய் நின்றது.

பற்றறுதற்பொருட்டு வந்துதித்தெனவே ஆண்டுப் பற்றறச் செல்லாதவழி அவ்வுலகத்து நின்றாங்கே ஞானத்தை நண்ணு வரென்பதூஉம் பெறுதும்.

கற்றாரது சொல்லுதற்றாழில் சூழ்ச்சிமேலேற்றப்பட்டது

ஆம் அசை. நற்சார்பில் வந்துதித்து ஞானத்தை நண்ணு தலென்ற அருத்தாபத்தியான் இழிகுலத்தோர் தத்துவஞான த்துக் குரியரல்லரென்பது பெறப்பட்டது.

---

பசித்துண்டு பின்னும் பசிப்பானை யொக்கு
மிசைத்து வருவினையி லின்ப - மிசைத்த
விருவினை யொப்பி லிறப்பி றவத்தான்
மருவுவனு ஞானத்தை வந்து. (௨)

இது, யாகாதிகன்மங்களைச்செய்து சுவர்க்காதிபோகங்களை யநுபவித்தல் நன்றென்போர்க்கு முத்தியல்லது நன்றல்லவெ ன்பதூஉம், முத்திபெறுவதென்போர்க்குக் கன்மசமத்துவத்தி லேயென்பதுவுங் கூறுகின்றது.

இ-ள். பசித்துண்டு பின்னும் பசிப்பானை யொக்கு மிசைத்து வருவினையி லின்பம். உலகத்தில் மேலாய்வருகின்ற எச்சியாதி கன்மங்களா லுண்டாஞ் சுவர்க்காதியின்பம் பசித்தபொழு துண்டு சிறிதுபொழு து தாகந்தீர்த்திருந்து பின்னையும் பசியை யுடையனாகின்றவனை யொக்கும்.

எ-று.

என்றது சுவர்க்காதியின்பத்தை யநுபவித்தாலு மீண்டு மிக லோகத்தே பிறக்கவேண்டுமென்று கூறியவாறும். "தானமி யாகந்தீர்த்த மாச்சிரமந்தவங்கள்" எனறுர் வழிநூலார். சித்-அ—கூ,உரு—செ.

இப்படிச் சுகதுக்கங்களை யநுபவிக்கிறதொழிந்துகன்மமொ ருகாலத்திற் றொலையாதோ வென்கின்றுயாகில்?

இறப்பி றவத் தால். எ-து. போன சநநங்களிலே செய்த தபோப லங்களினுலே.

இசைத்த இரு வினை யொப்பில். எ-து. புண்ணியபாவங்களிரண்டு மொருகாலத் தே வந்து புசிக்கைக்குச் சமமொத்தவெல் லையிலே.

மருவுவனும் ஞானத்தை வந்து. எ-து. மருட்சிரீங்கி முன்புண்டான ஞானத் தைப் பொருந்துவன். எ-று.

தபோபல மென்றது "புறச்சமய நெறிநின்று மகச்சமயம் புக்கு" என்றுர் வழிநூலார். சித்-அ—கூ, கக—செ. முத்தி விடயம்பலவோ வென்னில் அது "இம்மையேயீரெட்டாண்டு" என்பதனுலறிக. கஉ—செ. கன் மசமத்துவம் என்பதற்கு "மிக் கதொருபக்குவத்தின் மிகுசத்திநிபாதம்" என்றுர் வழிநூலார். உக—செ. "புண்ணியமேனேக்குவிக்கும் பாவங்கீழ் நோக் கும்" என்பது முத்திக்கு ஏதுவாமறிக. ௩க—செ. மருட்சிரீங்கி முன்புள்ளஞானம் பொருந்துவனென்பதற்கு "சூரியகாந்தக்கல் லிடைத்தே" உஅ—செ. எனவே ஞானம்பெற்றே வீடுபெறவே ணுமென்று ராயிற்று. அது "ஞானத்தால் வீடென்றே நான்ம றைகள் புராணம்" என்பதனுலறிக. உஎ—செ. சரிதைகிரி யாயோகங்களாலே ஞானம்பெறவேணு மென்றீர், அவையெ படி யவற்றின்பேறெப்படியென்னில்? "சன்மார்க்கஞ் சக மார்க்கஞ்சற்புத்திரமார்க்கந் தாதமார்க்கமென்று" க அ—செ "தாதமார்க்கஞ் சாற்றிற் சங்கரன்றன் கோயில்" கக—செ.

"புத்திரமார்க் கம்புகலிற்" உ0—செ. சகமார்க்கம்புகலென்டுக்கி" உக—செ. "சன்மார்க்கஞ் சகலகலை புராணவேதம்" உஉ—செ. என்பனவற்றானறிக.

அன்றியுஞ் சிவஞானத்தையுடையோர்க்கு எந்தப்பலனும் பின்பு ஞானத்தைக் கொடுக்குமென்றுமாம். அது "சிவஞானச்செயலுடையோர் கையிற்றானந் திலமளவே செய்திடினும்" என்பதனாலறிக. உகூ—செ.

இது சாத்திர திட்டியானவாறறிக. (உ)

சிவஞானமுனிவர் உரை.

எ-து. உ-ம். எ-னின். சரியை முதலிய தவங்களே தத்துவஞானத்தைக் காட்டுமென யாப்புறத்தோதியதென்னை வேதத்துட் கூறிய வேள்வி முதலாயினவுந் தத்துவஞானத்தைக் காட்டுமென்றல் அமையுமெனப் பாட்டாசாரியன்மதம் பற்றிக் கூறுவாரை நோக்கி ஏதுவை வலியுறுத்துதனுதலிற்று.

இ-ள். இசைத்து வருவினையில் இன்பம். எ-து. ஒருநல்வினைசெய்வான்றொடங்கி அறநூலையாய்வாரது உணர்வின்கண் விடயமாய் வரும்பொழுதே தம்மாற் பெறப்படுங் காமியப்பயன்களை உடன்கூறிக்கொண்டே வருகின்றனவாய வேள்வி முதலிய அறங்களின் பயனாகிய இன்பம்—பசித்து உண்டுபின்னும் பசிப்பானை ஒக்கும். எ-து. முன்னர்ப் பசித்துண்டு பின்னும் பசிப்பானுக்கு அவ்வுண்டியான் வருமின்பத்தை யொக்கும் ஆகலான்;—இசைத்த இருவினை இறப்புஇல் தவத்தால் ஒப்பில். எ-து. ஒருவனுக்கு ஞானத்தைத் தடுத்துப் பந்தமுறுத்துதற்கட் பொன்விலங்கும் இருப்புவிலங்கும்போலத் தம்முட் சமப்படுத்துணரப்படுவனவாகிய அறம்பாவமிரண்டுந் தம்மைப்போல் அநுபவமாத்திரையாற் கெடுதலின்றி மேன்மேன்முறுகி வளர்வனவாய சரியை முதலிய தவங்களானே நோரா

கவொத்தால்,—வந்து ஞானத்தை மருவுவன் ஆம். எ-து.
அத்தவமுதிர்ச்சியுடைமையான் முன்னர்க் கூறப்படு ஞானகுரு
வைத் தேடி வந்து ஞானத்தைத் தலைப்படுவன். எ-று.

வேள்வி முதலாயினவெல்லாம் அழிதன்மாலையவாய காமியங்
களைப் பயப்பனவன்றித் தத்துவஞானத்தைப் பயவாவெ
ற்கு அவற்றை விதித்த நூல்களே சான்றென்பார் இசைத்
து வருவினையென்றும், அவை ஞானத்தைப் பயவாமைமாத்தி
ரையேயன்றித் தீவினைபோல அது நிகழவொட்டாது தடை
செய்து நிற்றலுமுடைமையின் அவற்றது கழிவே ஈண்டைக்கு
க் காரணமாவதென்பார் இசைத்த விருவினை யொப்பிலென்று
ங் கூறினார்.

ஒப்பிலென்னும் வினையெச்சம் மருவுவனென்னும் பிறவினை
முதல்வினை கொண்டது.

தேற்றவேகாரம் விகாரத்தாற் றொக்கது.

ஆம் அசை.

வருதல் இடவழுவமைதி.

பசிப்பாரென்றது ஆகுபெயர். இசைத்தவிருவினை யென
ஞுரின்றெழில் வினைமேலேற்றப்பட்டது. மிசைத்த விருவி
னையெனப் பாடமோதி, இருவினைகளுண் மிக்க விருவினையாகி
ய பிரமக்கொலை பரிமேதவேள்வி போல்வன தம்முள் ஒருங்
கே பயன்றருவனவாய் ஒத்தகாலத்தென் றுரைப்பாருமுளர். அ
ஃது ஈண்டைக்குப் பயன்படாமையுஞ் சித்தாந்தத்துக்கேலா
மையு மறிக.

இசைத்து வருவினையிலின்பம் பசித்துண்டு பின்னும் பசிப்
பானை யொக்குமெனவே, இறப்பிறவத்தான் மருவப்படு ஞா
னம் பசித்துண்டு பின்னும் பசித்தலில்லாத கடவுளர்க்கு அ
வ்வமிழ்த வுண்டியானாய பயனை யொக்குமென்பதூஉம் பெற

ப்பட்டது. படவே, அவ்வமிழ்தவுண்டி கரை திரை மூப்பின்றி நிலைபெறுதலாகிய பெரும்பயனைத் தருதல் மாத்திரையேயன்றிப் பசி தீர்தலாகிய அவாந்தரப் பயனையுந் தருமாறுபோல இறப்பிறவமுந் தத்துவஞானத்தைப் பயத்தல் மாத்திரையேயன்றித் தத்தம் பதமுத்தியாகிய அவாந்தரப்பயனைப் பயத்தலும் அமைவுடைத்தாமாறு கண்டுகொள்க.

அ—கு, முதலதிகரண முடிந்தது.

---

மெய்ஞ்ஞானந் தானே விளையும்விஞ் ஞானகலர்க்
கஞ்ஞான வச்சகலர்க் கக்குருவாய் - மெய்ஞ்ஞானம்
பின்னுணர்த்து மந்தப் பிரளயா கலருக்கு
முன்னுணர்த்துந் தான்குருவாய் முன். (கூ)

இது, விஞ்ஞானகலர் பிரளயாகலர் சகலர்க்குக் கத்தா வுணர்த்துமுறைமை கூறுகின்றது.

இ-ள். மெய்ஞ்ஞானந் தானே விளையும் விஞ்ஞானகலர்க்கு. எ-து. ஆணவமலமொன்றுமுடைய விஞ்ஞானகலர்க்கு மலபாசம் போகத்தக்கவெல்லையுண்ணின்றுணர்த்துகின்ற கத்தா வுணர்த்தத்தானே யுண்மைஞானம் விளையும். சுபாவமென ஞானமுண்டானவருக்கு மொருவனுண்டாக்கவேண்டுகையில் அவன்குருவென்றதாம்.

அந்தப்பிரளயாகலர்க்கு முன்னுணர்த்துந் தான் குருவாய் முன். எ-து. ஆணவமலமுங் கன்மமலமு முடையாராகிய அந்தப்பிரளயாகலர்க்கு உண்ணின்றுணர்த்துகின்ற கத்தா தானே தெய்வகுருவாய் வந்து முன்னின்றுணர்த்துவன்.

அஞ்ஞான வச்சகலர்க் கக்குருவாய்மெய்ஞ் ஞானம் பின்னுணர்த்தும். எ-து.

ஆணவங் கன்ம மாயையென்னு மூன்றுமலமுங் கூடி அஞ்ஞானத்தைப் பொருந்திய வந்தச் சகலர்க்கு மானிடமான திருமேனியைத்தரித்துவந்து மந்தம் மந்ததரம் தீவிரம் தீவிரதரம் என்னுஞ் சத்திநிபாதங்களுக்கிடான முறைமையாலே தீக்கைநடத்திச் சரிதை கிரியாயோகங்களிலே நிறுத்திப் பின்னர் உண்மைஞானத்தை யுணர்த்துவன். எ-று.

விஞ்ஞானகலர் பிரளயாகலர்களை விரிக்கிற் பெருகும், வந்துழிக்காண்க.

சகலர்க்குத் தீக்ஷை முறைமையிலே என்றது, நிவிர்த்தி பிரதிட்டை வித்தை சாந்தி சாந்தியாதீதமென்னுங் கலைகளிலே மந்திரம் பதம் வன்னம் புவனம் தத்துவங்களையடைத்துக் கலாசோதனைப்பண்ணிச் சுத்தனாக்கி மேலுங் கன்மம்ஏருதபடி யுபதேசிப்பனென்பதாம். அவை, "உரைதருமிப்பசுவர்க்கமூணின்மூன்றும்" "பலவிதமாசான்பாச மோசனந்தான்பண்ணும்படி" "பாலரொடு வாலீசர்விருத்தர்பனிமொழியார்" "ஓதியுணர்ந்தொழுக்கநெறி யிழுக்காநல்ல" "அழிவிலாக்கிரியையினாலாதல்" "மந்திரங்கள்முதலைந்து" "கலையந்தில்வியாத்தி" "வித்தையில்மந்திரமிரண்டு" "சாந்தியாதீதகலைதன்னில் மந்திரங்கள்" "மூன்றுதிறத்தணுக்கள் செய்யுங்கன்மங்கட்கு முன்வினையாய்" என வழிநூலார் நூற்செய்தமுறைமையறிக. சித் - அ—சூ, உ - முதல் ௧௦ - வரை.

உத்தமரானவிஞ்ஞானகலரு மத்திமரானபிரளயாகலரும் அதமரானசகலரு மிப்படியென்னு முறைமைகூறி யவர்களுக் குண்ணின்றுணர்த்துகின்ற சத்தரவே யவரவர்செய்திகளறிந்து குருவாவனென்பது சாத்திரதிட்டி.

இசைவிரிக்கின்ற பொருளைத் திவ்வியாகமங்களிலே காண்க.                                                                                (கூ)

---

சிவஞானமுனியர் உரை.

எ-து. உ-ம். எ-னின். ஓரோரிடங்களிற் குருவாய்வந் துணர்த்துதலின்றியும் ஞானநிகழுமாறென்னையென்பாரை நோக்கி அதனை வரைசெய்துணர்த்தி வலியுறுத்துதனுதலிற்று.

இ-ள். விஞ்ஞானகலர்க்குத் தானே மெய்ஞ்ஞானம் விளையும். எ-து. அம்முதல்வன், மூவகையான்மாக்களுள் விஞ்ஞானகலராயினார்க்குத் தன்மையினின்றவாறே தத்துவஞானத்தை விளைவிப்பன்:—அன்றிப் பிரளயாகலருக்குத் தான் குருவாய் முன் உணர்த்தும். எ-து. அவ்வாறன்றிப் பிரளயாகலராயினார்க்கு நாற்றோளும் முக்கண்ணுங் கறைமிடறுமுதலிய உறுப்பிற்றாய் முத்தொழினடாத்தி நின்ற தன்னியற்கை வடிவே குருவடிவாகக் காட்டி முன்னாக நின்று தத்துவஞானத்தையுபதேசித்துணர்த்துவன்:—அஞ்ஞானம் அச்சகலர்க்கு அக்குருவாய்ப் பின் மெய்ஞ்ஞானம் உணர்த்தும். எ-து. அவிச்சையையுடைய சகலராயினார்க்கு அவர் வடிவுபோலும் வடிவுடைய குருவாகி அவ்வடிவின் பின்னாக மறைந்து நின்று தத்துவஞானத்தை யுணர்த்துவன்—முன். எ-து. அவ்வேறுபாட்டை யறிவாயாக. எ-று.

முன்னென்றதனை முன்னைப்பொருளென்றுரைத்து எழுவாயாகக் கோடலுமொன்று.

விளையுமென்பது அரசனெடுத்தவாலயம் என்புழிப்போல விவ்விகுதி தொக்குநின்றது. இவ்வாறன்றி எளிதினடைப்படுதனோக்கி அரிசி தானே அட்டது என்றாற்போல எளிதின் விளைவிக்கப்படுதனோக்கி மெய்ஞ்ஞானந்தானே விளையுமென்று

ரெனினுமமையும். "உண்ணின்றருத்தருளி" என்றார் புடைநூ லாசிரியரும். போற்றிப்பஃறொடை.

ஈண்டு அஞ்ஞானமென்றது அவிச்சையையென்பது சகலர்க்கே அடையா யோதியவாற்றானறிக.

அச்சகலரென்றது தவஞ்செய்தாரென மேலெடுத்துக்கொள்ளப்பட்ட சகலரென்றவாறு.

அக்குரு வென்றது மேற்கோளிற் கூறிப்போந்த குருவென்றவாறு.

தானே விளையும் முன்னுணர்த்தும் பின்னுணர்த்தும் எனவே, விஞ்ஞானகலர்க்குத் தன்மையினும், பிரளயாகலர்க்கு முன்னிலையினும், சகலர்க்குப் படர்க்கையினும், நின்றுணர்த்துமென வரைசெய்தவாறு காண்க. இவற்றுள் முன்னைய விரண்டும் நிராதாரமெனவும், பின்னையது சாதாரமெனவுங் கூறப்படும்.

---

அறிவிக்க வன்றி யறியா வுளங்கள்
செறியுமா முன்பின் வினைகள் - நெறியிற் [டாங்
குறையுடைய சொற்கொள்ளார் கொள்பவத்தின் வீ
குறைவில் சகன்சூழ்கொள் பவர்க்கு (ச)

இது, வேதாகமங்களொழிந்த நூற்கள் நூலல்லவென்கின்றது.

இ-ள். அறிவி ஆன்மாக்கள் யாதொரு பொருளையும் அறி
க்கவன் விக்கவொழிந்தறியாது.
றி யறி
யாவுள ங்கள். எ-து.

செறியுமா மு முன்புசெய்த வினைகள் பின் செறித்து
ன் பின் வினைக வாராநிற்கும்.
ள். எ-து.

என்றது சஞ்சிதகன்மம் தீக்ஷையிலேபோம். பிராரத்தம் புசிக்கவேணுமென்றதாம்.

நெறியிற் கு பதி பசு பாசங்களைக் கூறுமிடத்துத் தி
றையுடையசொ ருந்தக்கூறுதலின்றிக் குறையுடைத்தாகிய
ற் கொள்ளார். சாத்திரங்களைச் சாத்திரமென்று கொள்
எ-து. ளாராய்.

என்றது, குறைவற்றநூல் வேதாகமங்களாதலால் அவை யொழிந்தநூல்களை நூலென்று கொள்ளார்களென்றதாம். எனவே வேதாகமத்தின் வழி வந்த நூல்களோ நூலெ னறதாம்.

குறைவில் சக சர்வஞ்ஞத்துவத்தினும் சர்வகர்த்தத்து
ன் சூழ் கொள்ப வத்தினும் சர்வாநுக்கிரகத்தினுங் குறை
வர்க்கு. எ-து. வில்லாத சகநாதன் அருளிச்செய்யப்பட்ட
வேதாகமங்களைச் சாத்திரமென்று கொண்
டுணர்வார்க்கு.

கொள் பவத் எடுத்த தேகத்திலே முத்திபெறுவன்
தின் வீடாம். எ-று.
எ-து.

வேதாகமம் ஒழிந்த நூலல்லவை "இம்மையே யீரெட்டாண்டெய்தி" என்பதனில் உலோகாயதன்முதலாயினார் கூறும் நூல்கள் நூலல்லவென்பதாம். சித் - அ—கூ, கஉ—செ.

வேதாகமமே நூலென்றுகொள்ளுதல். "ஓதுசமயங்கள்' "அருமறையாக ... " "வேத நூல் சைவ நூலெண்டிரண்

டேநூல்கள்" "சித்தாந்தத்தேசிவன்றன் றிருக்கடைக்கண்சேர்த்தி" என்றவழிநூலாலறிக. ௧௩ - முதல் ௧௫ - வரை.

சர்வஞ்ஞத்துவமும் சர்வகர்த்தத்துவமும் சர்வாநுக்கிரகமுமுடைமை. "இறைவனுவான் ஞானமெல்லா மெல்லாமு தன்மை யநுக்கிரகமெல்லாம்". என்றதனுலறிக. ௧௭—செ.

"அறிவிக்கவன்றியறியாவுளங்கள்." எனவே தனக்கெனவோரறிவில்லை குருவறிவிக்குமுறைமையொழிந் தறியார்கள். என்பதனுற் குருவுஞ் சற்குருவாகவேணும், நூலும் வேதாகமமாகவேணுமென்றதாம்.

இதுவுஞ்சாத்திரதிட்டியெனவறிக. (௪)

---

சிவஞானமுனிவர் உரை.

எ-து. உ-ம். எ-னின். விஞ்ஞாஞகலர் முதலிய மூவர்க்கும் ஓரியல்பா னுணர்த்தாது அவ்வாறு தன்மையினும் முன்னிலையினும் பின்னிலையுமா யுணர்த்துதல் எற்றுக்கெனபாரைகோக்கிக் காரணங் கூறி அதனை வலியுறுத்துத னுதலிற்று.

இ-ள். உளங்கள் நெறியின் அறிவிக்க அன்றி அறியா. எ-து. உயிர்களெல்லாந் தமக்குரிய படிவழியின் வைத்து முதல்வனறிவிக்க அறியுமியல்பினவன்றி ஒன்றுபோல் அறிவிக்கவறியுமியல்பினவல்ல ஆகலான்—குறைவு இல் சகன் சூழ்கொள்பவர்க்கு. எ-து. அவ்வறிவாற் குறைபாடில்லாத சகக்கடவுளது உபதேசமொழியைக் கொண்டுணரு மியல்பினராகிய பிரளயாகலர் சகலர்க்கு—முறைகள் முன் பின் செறியுமாம். எ-து. அவ்வறிவித்தாலறிகலாகிய முறைகள் முன்னிலையினும் பின்னிலையினு நிகழ்வனவாம்—குறைவு உடைய சொல் கொள்ளார் கொள் பவத்தின் வீடு என். எ-து. குறைவில் சகலாகிய குறைவினையுடைய உபதேசமொழி கொண்டுணர

வேண்டாத விஞ்ஞானகலர்க்கு முதல்வனாற் கொள்ளப்பட்ட தன்னுண்மைமாத்திரையின் விடு.பயக்கு முணர்வுண்டென்றறிவாயாக. எ-று.

குறை இன்றியமையாமைப்பொருள்;அது "வினைக்குறைதீர்ந்தாரிற் றீர்ந்தன்றுலகு" என்பதனுட் பரிமேலழகருரையானுமுணர்க. திருக்குறள் ௬௨-அதிகாரம், உ—செ.

பவம், சம்பவம், உண்மை என்பன ஒருபொருட் கிளவி.

விடுபயக்குமுணர்வை வீடென்றும், சூழ்ச்சி பயக்கு முபதேசமொழியைச் சூழென்றுங் காரணகாரியமாக உபசரிக்கப்பட்டன. கொள்பவர் கொள்ளாரென்பனவும் அவை. கொள்ளார்க்கென்னு நான்கனுருபு விகாரத்தாற் றொக்கது. "ஐந்தவித்தானாற்றல்" என்புழிப்போல.

ஆம் விடெனவியையும். வீடாமெனப் பாடமோதுவாருமுளர்.

மேலைவெண்பாவின் முன்னுணர்த்தும் பின்னுணர்த்தும் தானே விளையுமெனக் கூறியவற்றை ஈண்டு நெறியினறிவிக்கவன்றி யறியாவாகலான் அது முன் செறியும் பின்செறியும் பவத்திருமெனக் காரணங் காட்டி வலியுறுத்தினார். இதற்குப் பிறரெல்லாந் தத்தமக்கு வேண்டியவாறே மேலைவெண்பாவோடு இயைபறவுரைத்தார். அல்லதூஉம் அறிவிக்கவன்றியறியாமை உபதேசியாய் என ஆன்மாவின்றன்னியல்பு கூறும்வழிப் பெறப்பட்டதாகலின் அதனை ஈண்டும் புனருத்தியாகக் கூறவேண்டாமையின் மேலது வலியுறுத்துதற் கேற்புடைய அறிவிக்க அறிதற்கட்படும் விசேடமாத்திரையே ஈண்டெடுத்தோதினாரென்றுணர்க. படிவழியின்வைத்தறிவிக்கவன்றியறியாமை "பந்தமும் வீடுந் தெரிபொருட் பனுவற் படிவழி சென்றுசென்றேறி" என்ப [illegible].

இல்லா முலைப்பாலு மேந்திழையார் கண்ணீரு
நல்லா யுளதாமா னீர்நிழல்போ - லில்லா
வருவாகி நின்றானை யாரறிவார் தானே
யுருவாகித் தோன்றானே லுற்று. (௫)

இது, குருவினுடைய திருமேனி மந்திரதேகமுமல்ல மாயா தேகமுமல்லவென நின்றது.

நல்லாய்-மகடூஉமுன்னிலை.

இ-ள். இல்லா முலைப் பாலு மேந்திழையார் கண்ணீரும் உளதாம் போல். எ-து. ஏந்தினவாபரணத்தை யுடையாரிடத்துக் காண்டற்கில்லாத முலைப்பாலுங் கண்ணீரு ஞ் சிநேகத்தானுஞ் சோகத்தானு முண்டாகித் தோன்றினாற்போலவும்.

நீர் நிழல்போல். எ-து. நீரின்கண்ணே பார்த்தநிழல் தோன்றினாற்போலவும்.

போல் என்பதனை இரண்டிடத்துங் கூட்டுக.

இந்த மூன்றுவமை விஞ்ஞானகலர் பிரளயாகலார் சகலர் மூவர்க்கு முருவாய்நின் றுபகரிக்கு முறைமை கூறியதாம்.

இல்லா வருவாகி நின்றானை யாரறிவார் தானே யுருவாகித் தோன்றானே லுற்று. எ-து. கண்டார்க் கில்லையா யரூபசொரூபியாய் நிற்கின்ற சிவ னிப்படி மூன்றுவிதமாகத் திருமேனிகொண்டு வாரானாகில் அவனையா வர்தாம் அறிவார். எ-று.

குருதிபாலாய்த்தோன்றினாற்போல விஞ்ஞானகலர்க்குப் பி ராணனாய்நின்றுபகரித்த தற்சொரூபந்தானே பின்புந் தீவிரதர மாகிய சத்திநிபாதத்தாலே போதித்துப் போதசொரூபனாகி நிற்பனென்றதாம்.

கண்ணீர் பிரளயாகலர்க்கு, அவர்களிடத்தே கலந்து நின்ற சிவன் தீவிரதரமாகிய சத்திநிபாதத்தாலே தெய்வகுருவாய்ப் போதித்துநிற்பனென்றதாம்.

நீர்நிழல் சகலர்க்கு, உயிர்க்குயிராய் நிற்கின்றசிவன் மந்த ம ந்ததரமென்னுஞ் சத்திநி பாதத்தாலே யவர்களைப்போலத் தி ருமேனிகொண்டு வருவனென்றதாம்.

அருவாய்நின்றசிவனே யுருவாகவுங் காணலாமென்னும் பக் கத்துக்கு முலைப்பாலுங் கண்ணீரும் நீரு நிழலுஞ் சபக்கமாயி னவாறுகாண்க.

அருவானவ னுருவுகொள்ளவேண்டிய தென்னெனின்? அரு ளாலேயென்னுமேதுவும் வந்தவாறுகாண்க.

இனிச்சகலராவார் யாவரெனில்? பிரமாமுதல் எறும்பீ றுகவாதலால், திவ்வியசாதியென்றும் மானுடசாதியென்றும் விலங்குசாதியென்று மூன்றுவிதமாவர். சகலர் திவ்வியசாதி க்கு மந்தச் சத்திநிபாதம். மானுடசாதிக்கு மந்ததரமான சத்திநிபாதம். விலங்குசாதிக்கு மந்தரவித்தியான சத்திநிபா தம் இப்படிவேதாகமங்களிலே கூறுமுறைமையறிக. (ரு)

---

சிவஞானமுனிவர் உரை.

எ-து. உ-ம். எ-னின். அம்முத்திறத்துள் ஈண்டைக்கெ டுத்துக்கொண்ட அஞ்ஞான வச்சகலர்க்கக்குருவாதல் ஏனைய போலன்மையின் உபசாரமேயன்றி ஏனையபோலுன்மையாதல்

செல்லாதென்பாரை நோக்கி உண்மையாதலை உவமைமுகத்தான்வலியுறுத்துத் னுதலிற்று.

இ-ள். நல்லாய். எ-து. அறிவால் நன்மையுடைய மாணுக்கனே—ஏந்து இழை பால் முலைப்பாலும் கண்ணீரும் இல்லா உளவாம் ஆல். எ-து. ஏந்திய விழைகளையுடையாட்குக் குழவிமாட்டுளதாகிய அருவாகிய அன்பினைப் பிறரறியுமாறு வெளிப்படுத்தும் அவ்வன்பினுருவாகிய முலைப்பாலுங் கண்ணீரும் அவண்மாட்டுக் குழவியைக் காணுமுன் இல்லாவாய்ப் பின்னுளவாம்' அதுபோல—நீர் நிழல் போல் இல்லா அரு ஆகி நின்றானை ஆர் அறிவார் தானே உரு ஆகி உற்றுத் தோன்றானேல். எ-து. நீரின்கணிழல்போல் உயிர்கண்மாட்டுப் புலப்படுதலில்லாது அருவமாய் நின்ற முதல்வனை யார்தாமறிவார், அவனே குருவடிவாய் வந்து தோன்றி நின்று உணர்த்தானாயின். எ-று.

ஒருவருமில்லையென்பதாம்.

இஃதெடுத்துக்காட்டுவமை.

இன்றியமையாமையுணர்த்துவார் தோன்றானே லாரறிவாரென எதிர்மறைமுகத்தாற் கூறினார்.

பொருளுக்கோதியதனை உவமையினுங் கூட்டி ஏற்குமாறுரைக்க.

முலைப்பாலுங் கண்ணீரும் அன்பை விளக்குமென்பது "சுரந்த திருமுலைக்கே துய்யதிரு ஞானஞ்—சுரந்துண்டார் பிள்ளையெனச் சொல்லச்—சுரந்த—தனமுடையா டென்பாண்டி மாதேவி தாழ்ந்த—மனமுடையா ளன்பிருந்தவாறு." திருக்களிற்றுப்படியார். ௫௪—செ. என்பதனானும், "அன்பிற்கு முண்டோ வடைக்குந்தா ழார்வலர்—புன்கணீர் பூசறரும்."

என்பதனானுமறிக. திருக்குறள்—அ, அதிகாரம் க—செ. அவ்விரண்டும் அன்பின் வடிவே பிறவல்லவென்பது அன்பு நிகழ்தற்குரிய காரணமுள்வழி வெளிப்பட்டு அஃதில்வழி வெளிப்படாத ஒற்றுமைநோக்கிக் கண்டுகொள்க. இவ்வொற்றுமை யுணர்த்துவார் இல்லாவா யுளவாமென்றார்.

இல்லவென்பது முற்றெச்சக்குறிப்பு.

ஆல் அசை. நீர் அகத்தியங்கு முயிர்கட்கு இடங்கொடுத்தலுண்மையான் நீரின் கண் வெளியுண்டென்பதூஉம், உண்டாகவே, ஆண்டு நீருக்கு நிழலுண்டென்பதூஉம், பெறப்பட்டன. அந்நிழல், வேறு நில்லாது நீரோடு விரவி நிற்றலின் நீர்போற் புலப்படாதாயிற்று. அதுபோலச் சிவசைதந்நியமும் யானென்னுமுணர்விற்கு விடயமாய்ப் புலப்படும் ஆன்மசைதந்நியத்தோடு விரவிப் புலப்படாது நிற்பதொன்றென்பார் நீர் நிழல்போலில்லா வருவாகி நின்றானையென்றார்.

 அ—சூ, இரண்டாமதிகரண முடிந்தது.

---

பன்னிறமே காட்டும் படிகம்போ லிந்திரியந்
தன்னிறமே காட்டுந் தகைநினைந்து - பன்னிறத்துப்
பொய்ப்புலனை வேறுணர்ந்து பொய்பொய்யா மெய்ம்
மெய்ப்பொருட்குத் தைவமாம் மேறு. [கண்டான்

இது, ஞானதீக்கையினுடைய பெருமையும் பெத்தமுத்திகளினுடைய நிலைகளுங் கூறுகின்றது.

முன்ன ரைந்துவெண்பாவானுந் தன் முதற்குருவாய்த் தவத்தினுணர்த்தினமைகூறி யைம்புலன்களினானு மயங்கித் தம்மை யுணராமைநின்றது கூறுகின்றது.

இ-ள். பன்னி றமே காட்டும் படிகம் போ லிந்திரியந் தன்னிறமே காட்டுந் தகை நினைந்து. எ-து.

பளிங்கு பல நிறங்களையுங் காட்டுமுறைமைபோல, ஆன்மாவு மிந்திரியங்களினுடைய சொருபங்களைக் காட்டு முறைமையை விசாரித்து.

என்றது, பளிங்கு பலநிறங்களையுங்காட்டித் தன்னுடைய நிறம் வேறாய் நின்றாற்போல, ஆன்மாவுக்குண்டாகியநிற மிந்திரியங்களுடைய நிறமல்ல; வேறாயிருந்ததென்று விசாரிக்கவென்றதாம்.

நினைந்து என்றது, இந்திரியங்களுடனேகூடி யதுவதுவாய்நின்று சீவிக்கின்றமுறைமை யறிதலாம்.

பன்னிறத்துப் பொய்யாய்ப் புலனை வேறுணர்ந்து. எ-து.

அப்படிப் பலகுணபேதமாய்ப் பொய்யாகின்ற விந்திரியங்களை நம்முடைய சொருபத்துக் கிவைவேறென்றுகருதி.

பொய் பொயா மெய்கண்டான். எ-து.

பொய்யைப்பொய்யென்று மெய்யைத் தரிசித்தவன்.

மெய்ப்பொருளுக் கடிமையாம் வேறு. எ-து.

உண்மையாகிய சிவனுக் கடிமையாவோனென்றதாம். (வேறு என்பதற்கு இந்திரியங்களுக்கு வேறுபென்றுமாம்.) இந்திரியக்களைநீங்கத் திருவடியடைவர் எ-று.

எனவே, யான்மா விந்திரியங்களுடனே கூடிநிற்குதல் சிவ

னுடனேகூடிநிற்குத லொழிந்து தனித்துநில்லாதென்பதாம். ஊசலாடினவ னூசற்கயிறற்று லூசலுக்குந்தனக்கும் பூமியே யாதாரமானாற்போல விந்திரியங்கள்கெட்டால் சிவனேயாதாரமெனவறிக. எனவே இந்திரியங்களைநீங்கிக் கேவலசகலமாகிய மயக்கவிகற்பங்களில் தேசம் காலம் இடம் குணம் முதலாயினகருதாமல் நிட்டையடைகவென்றதாம். "அறியாமையறிவகற்றி" "தேசமிடங்காலந் திக்காசனங்களின்றி" "ஞானமதின் ஞானநிட்டையுடையோருக்கு" என்றார்வழிநூலார். சித் - அ—கூ, ௩0 - ௩௩ - ௩௨—செ "பன்னிறங்களவைகாட்டும் படிகம்போலுள்ளம்" என்பதுமறிக. ௩௨—செ

இந்திரியங்களினுடையசொரூபத்துக்கு ஆன்மசொரூபம் வேறென்னுந் துணிபொருட்பக்ஷமும், அஃதெத்தாலென்னில் அவைபொய்யாதலாலென்னு மேதுவும், அஃதென்போலவென்னில் பஞ்சவன்னமும்படிகமும்போல வென்னுஞ்சபக்ஷமுங் காட்டியவாறறிக. (௬)

---

சிவஞானமுனிவர் உரை.

எ-து. உ-ம் எ-னின். அங்ஙனங்காட்டிற்றையே காட்டிநிற்குமாயின், அவ்விந்திரியங்கள் உள்வழித் தம்முதல் குருவுமாயுணர்த்தினும் உணர்தல் செல்லாதுபோலுமென்பாரை நோக்கி உணர்தற் குபாயங்கூறி அதனை வலியுறுத்துதனுதலிற்று.

இ-ள். பல் நிறம் காட்டும் படிகம்போல் இந்திரியந்தன் நிறமே காட்டும் தகை நினைந்து. எ-து. தன்னாற் சாரப்பட்ட பன்னிறங்களி னியல்பே தன்மாட்டுக் காட்டிநிற்கும் பொதுவியல்புடைய படிகம்போலத் தன்னாற்சாரப்பட்ட இந்திரியங்களினியல்பையே சார்ந்ததன்வண்ணமாய்த் தன்மாட்டுவி

ளக்கிநிற்குந் தனது பொதுவியல்பை முன்னர்ச் சிந்தித்தறிந்துகொண்டு பின்பு—பல் நிறத்துப் பொய்ப் புலனை வேறு உணர்ந்து. எ-து. அந்நிறங்கள் படிகத்துக்கு வேறென்றறியுமாறுபோலப் பலவகையியல்புடைய பொதுவியல்பைச் செய்யும் பொறிகளைத் தன்னின் வேறெனத்தெளிந்து—பொய் பொய்யா மெய்கண்டான். எ-து. அவற்றுடைய அப்பொதுவியல்பு பொய்யாயொழியுமாறு தனது சிறப்பியல்பை யுணர்ந்தானாயின்—வேறு மெய்ப்பொருட்குத் தைவம் ஆம். எ-து. அவ்வசத்தாகிய பொறிகளுக்கு வேறாகிய சிவசத்தினதியல்பு தன்மாட்டு விளங்கச்செய்யுமாகலின் அச்சிவசத்துக் கடிமையாம். எ-று.

ஈண்டுப் பொய் மெய்யெனப்பட்டன அப்பொருளவாதல் மேலே காட்டினாம்.

தைவமென்பது தேவனதுடைமை யென்னும் பொருட்டாய வடமொழிப்பகுபதம்.

இதனானே கருவிகளுள்வழிக் காட்டிற்றைக் காட்டிநிற்றலின் அறிதல் செல்லாது அவை நீங்கியவழிக் கேவலமாய் முடியுமாகலிற் றன்னுண்மையறியுமா றியாங்ஙனமென்னுங்கடாவை யாசங்கித்து அவையுள்வழியே தன்னுண்மை யறிதற்கு பாயங்கூறி இதுபற்றி அவை காட்டிற்றைக் காட்டி நிற்றற் கிழுக்கில்லையென வலியுறுத்த வாறுமென்க.

மெய்ப்பொருட்குத் தைவமாமென்றதனால் ... கரணத்திற்குத் தோற்றுவாய் செய்தவாறு.

 அ—கு, மூன்றுமதிகரண ...

சிறைசெய்ய நின்ற செழும்புனலி னுள்ளம்
சிறைசெய் புலனுணர்விற் றீர்ந்து - சிறைவிட்
டலைகடலிற் சென்றடங்கு மாறுபோன் மீளா
துலையிலரன் பாதத்தை யுற்று. (எ)

இது, தேகேந்திரியங்களை வேறென்றுகண்டவன் மீண்டும் பசுகரணமாய்நில்லான் சிவகரணமாய்நிற்பனென்பதுவும், தேகாந்தத்தே திருவடியைப்பெறுகை நிச்சயமென்பதுவுங் கூறுகின்றது.

இ-ள். சிறைசெய்ய நின்ற செழும் புனலி னுள்ளம். எ-து. — அணைகட்ட அந்தவணையிலே கட்டுண்டுநின்ற வெள்ளம்போன்ற வான்மா.

சிறைசெய் புலனுணர்விற் றீர்ந்து. எ-து. — தன்னைச் சிறைசெய்துநின்ற விந்திரியங்களை யுணருமுறைமையாலே யுணர்ந்து நீங்கி

உலைவிலரன் பாதத்தை யுற்று மீளாது. எ-து. — கேடிலாத சிவனுடைய திருவடியைக்கூடி மீண்டுமிறவாது. அஃதென்போலவென்னில் ?

சிறைவிட்டலை கடலிற் சென்றடங்கு மாறுபோல். எ-து. — கட்டுண்டுநின்ற அணையைவிட் டலையையுடைய கடலிலே சென்றடங்குதலையுடையவாறுபோல. எ-று.

கடலிலேசென்று புக்க ஆற்றுநீர் மீண்டும் அதன்வழியேயேறினும் அந்தஉப்புநீராயே ஏறினாற்போல இந்திரியங்களுட

னைகூடிப் பசுகரணமாய்நில்லாது சிவகரணமாய்நிற்குமென்பதாம். எனவே தேகாந்தத்தே திருவடியைப்பெறுவரென்பதாயிற்று.

பசுகரணஞ் சிவகரணமாய்நிற்றலாவது, இந்திரியங்களைத் தற்சொரூபமே சொரூபமாக்கி நிற்பதேநிலை. அந்தநிலைகூடாதாகில் பசுகரணஞ் சிவகரணமாகச் சாக்கிரத்தே யதீதம்வரவிருத்தலாம். "கருவிகழிந்தாற் காணுரொன்றுமெனிற் காணூர்." "இந்நிலைதானில்லையே லெல்லாமீசன்" "சாக்கிரத்தே யதீதத்தைப்புரிந்தவர்கள்" "பன்னிறங்களவைகாட்டு"என்பதனில் "முன்னிறைநீர்சிறைமுறியமுடுகியோடி" என்றும் வழிநூலார் நூலிற்செய்தவாறறிக. சித் - அ—சு, ௬கூ-௬ச-௬ரு-௬எ—செ.

ஆன்மாவைச் சுத்தசலத்தோ டுவமித்தது இந்திரியங்கள் தற்சொரூபமாய்நின்ற அவதரமெனவறிக.

கடலைச் சிவனுக் குவமை நிறைவுகுறைதலின்றி யிருத்தற்கெனவறிக.

இந்திரியங்களைநீங்கிஞல் ஆன்மாச் சிவனைக்கூடி நீங்காதென்னும்பக்ஷத்துக்கு, சிறைவிட்டுநீங்கின வாற்றுநீர் கடலிற்சென்றடங்குமாறு எனபது சபக்ஷமாயினவாறுகாண்க. (எ)

---

சிவஞானமுனிவர் உரை.

எ-து. உ-ம். எ-னின். கருவிகணீங்கினவழி வேறு நில்லாது சிவத்தைத் தலைப்படுமாயின் அவ்வுயிர்க்குங் கருவிகணீங்கிக் கேவலத்தைத் தலைப்பட்ட உயிர்க்குப்போல மீட்சியுண்டுபோலுமென்பாரை நோக்கி அஃதின்ருமாறுகூறி மேலதனை வலியுறுத்துத னுதலிற்று.

இ-ள். சிறை செய்ய நின்ற செழும்புனலின் உள்ளம், எது. ஒருவன் அணையையுயர்த்துக் கட்டி [illegible]செய்ய ஆ

ன்பட்டுத் தடையுண்டு தேங்கி நின்ற ஆற்றுநீர்போலக் கருவிகளாகிய பாசஞானந் தனது வியாபகத்தைத் தடைசெய்ய அதன்கண் ஏகதேசமாயடங்கித் தடையுண்டு நின்றவுயிர்—சிறை விட்டு அலை கடலில் சென்று அடங்கும் ஆறு போல். எ-து. அவ்வணை முறிந்து தடை தீர்ந்தவழி இடையீடன்றிக் கடலின்கண் முடுகிச் சென்று அந்நீரேயாய் அதனு ளடங்கி மறித்து வாராத ஆற்றுநீர்போல—சிறை செய் புலன் உணர்வில் தீர்ந்து. எ-து. கருவிகளாகிய பாசஞானத் தடையினின்று நீங்கியவழி—உலைவு இல் அரன் பாதத்தை உற்று மீளாது. எ-து. தனக்குக் கேடில்லாத சிவபிரானது திருவடியைத் தலைக்கூடி அத்திருவடி நிறைவேயாய் அதன்கணடங்கிப் பின் மீளுதல் செய்யாது. எ-று.

சிறைசெய்யநின்ற செழும்புனலின் உள்ளம் என்றது தொகையுவமம். இன்—உவமவுருபு. நேக்கத்தின் மிகுதி யுணர்த்துவார் செழும்புனலென்றார்.

மலசத்திக்குக் கேடுண்மையின் அதனைத் தலைப்பட்ட உயிர்க்குக் கருவிகளின் மீட்சி கூடும்; சிவசத்திக்கு அஃதின்மையின் அதனைத் தலைப்பட்டவுயிர் அவ்வாறு மீளுதற்கோரியையில்லையென்பார் உலைவிலரன்பாதமென விசேடித்தார்.

அடங்குமென்னும் உவமவினை பொருளினும், மீளாதென்னும் பொருள்வினை உவமையினுஞ் சென்றியைந்தன.

---

எவ்வுருவுந் தானென்னி லெய்துவா ரில்லையா
மிவ்வுருவின் வேறே லிறையல்லன் - எவ்வுருவுங்
கண்போ லவயவங்கள் காணுவக் கண்ணில்லான்
கண்பேறே காணக் கழல். (அ)

இது, ஆன்மாக்கள் சிவனைக் கூடுகின்ற முறைமை கூறுகின்றது.

| | |
|---|---|
| இ-ள். ஏவ்வுருவுந் தானென்னிலெய்து வாரில்லையாம். எ-து. | எல்லா ரூபங்களுஞ் சிவனேயென்னில் அவனைக்கூடுதற் கொருமுதலில்லையாகும். |
| இவ்வுருவின் வேறே லிறையவல்லன். எ-து. | இந்த ரூபங்களுக்கு வேறாய்நிற்பனென்னின் ஏகதேசியுமாய்க் கத்தாவுமல்லவாவன். |

எனவே, சர்வவியாபியென்றதாம். ஆனு லெங்குமாய் நிற்கின்ற சிவனைக் காணவேண்டாவோவென்னில் ?

| | |
|---|---|
| எவ்வுருவுங் கண்போ லவயவங்கள் காணு. எ-து. | எல்லா ரூபங்களையுங் (காணுந்தன்மையுடைய) கண்ணைப்போல நின்ற அவயவங்கள் காணுதுநின்றாற்போலச் சிவனெல்லாரிடத்தினு மொக்கநிற்கினும் ஊனக்கண்ணுடையவர்கள் காணமாட்டார்கள். |

ஞானக்கண்ணையுடையவர்கள் காண்பார்கள் என்பதாம்.

| | |
|---|---|
| அக்கண் ணில்லான் கண்பேறே காணக் கழல். எ-து. | திமிரத்தாலே கண் மறைந்திருந்தவன் அந்தப்படலத்தைக்கீறி நீங்கினபொழுது கண்பெற்றபேறுபோலும் அந்தச்சீபாதங் காட்டக் காணுமாறு. எ-று. |

என்றது அந்தத் திமிரநீங்கினகண் ... ன்றவண்ணமுங் காட்டுகின்ற பிரகாசத்தினுடைய வு... பெற்றுநின்றாற்

போல ஞானதிருட்டியை ஒன்றையுங் காணமாட்டாது. என்றது.

ஆன்மா விந்திரியங்களெல்லாவற்றினுமொக்கநிற்கச்சே கண்ணுக்கே காட்சியுண்டாய் மற்றுள்ள அவயவங்களைப்பெற்றவன் தனக்குப் பிராணனாய்நிற்கின்ற சிவனையுந் தன்னையுங் காண்பனென்றதாம்.

இது, முன்வெண்பாவிற் கடலிலே யாற்றுத்தண்ணீர்சென்று கூடினாற்போல வொன்றாய்விடுமோவென்றவனுக்கு ஆகாதென்பது கூறியதாம். அஃதெங்ஙனேயென்னில்? எங்கும் வியாபித்துநிற்கின்ற வாதித்தப்பிரகாசத்தைத் திமிரத்தாற் காணாதகண் திமிரநீங்கி யந்தப்பிரகாசத்துடனே கூடினவிடத்து வேறுமல்லவாயொன்றுமல்லவாய் நின்றாற்போலச் சிவனுடைய திருவருளைக்கூடி யத்துவிதமாய் நிற்பனென்றதாம்.

சிவன் சர்வவியாபியாய் நிற்பினுஞ் சிலர் காண்பர்கள் யாவருங்காணாரென்னும் பக்ஷத்துக்குக் கண்காண்பதொழிந்து நின்றவவயவங்கள் காணாதுபோலென்பது சபக்ஷமும், ஒன்றாகாது அத்துவிதமாய் நிற்குமென்னும் பக்ஷத்துக்குக் கண்ணிற் பிரகாசமும் ஆதித்தப்பிரகாசமும்போலவென்னுஞ் சபக்ஷமும். இந்திரியநீங்கினவனுக்கு சிவனைக்காணலாமென்னும் பக்ஷத்துக்குத் திமிரநீங்கினகண்போலவென்பது சபக்ஷமாயினவாறுகாண்க. "எங்குந்தானென்னினுமெய்தவேண்டா வெங்குமிலையென்னின்வேறிறையுமல்லன்" என்றார் வழிநூலார். சித் - அ—கு, ௩அ—செ. (அ)

---

சிவஞானமுனிவர் உரை.

எ-து. உ-ம். எ-னின். மீளாதென்று விடுத்தல்வேண்டாம் எல்லாஞ் சிவமாகக் கண்டார்க்கு மீண்டாலென் மீளாக்காலென்னென்னுஞ் சிவாத்துவிதசைவரை நோக்கி அறிவின்

யாதற்கேலாமை கூறி மறித்தும் மீளாமையை வலியுறுத்துத லுதலிற்று.

இ-ள். எவ்வுருவும் தான் என்னின் தாள்எய்துவார் இல்லை. எ-து. உயிருணர்வேயன்றிப் புலனுணர்வுஞ் சிவமேயாமாயின் விசேடமின்மையாற் புலன்வழி ஒழுகுஞ் சகலநிலையைக் கைவிட்டுத் திருவடியைத் தலைக்கூடவேண்டாமையின் ஒருவரும் அதனை எய்துவாரில்லையாய் முடிந்து *"பாசத்தைப் பசுக்கள் விட்டுப் பதியினை யடைய முத்தி" என்னும் வேதாகமங்கள் போலியாய் முடியும்—இவ்வுருவின் வேறேல் இறை யல்லன். எ-து. அது பற்றி முதல்வன் புலனுணர்வாதியையின்றி அதனின் வேறாய் நிற்பன்என்னின் அப்புலனுணர்விற்கு அவனலாகற்பால தொன்றின்மையின் அவன் ஆண்டைக் கிறைவனல்லனெனப்பட்டு முதன்மைக் கிழுக்காய் முடியும். மற்றென்னையோ அதனியல்பென்னின்—எவ்வுருவும். எ-து. உயிருணர்வு போலப் புலனுணர்வுங் கலப்பினாற் சிவமேயாமாயினும் இரண்டுந் தம்முளொப்பனவல்ல—அவயவங்கள் கண்போலக் காணு. எ-து. உயிர்ஐம்பொறிகளினும் ஒப்ப நிற்பினும் அவற்றுண் மெய் வாய் மூக்குச் செவி நான்குங் கண்ணிந்திரியம் ஒளியான் அவ்வான்மபோதத்தோடு விரவிச் சேய்மைக்கண்ணதாகிய விடயத்தையும் வியாபித்தறியுமாறுபோல வியாபித்தறிய மாட்டாவாய்த் தம்மாட்டு வந்த விடயங்களை நின்றுணர்குநின்றியைந் தறிதற்றன்மையவேயாம்.—அக்கழல் அக்கண் இல்லார் கண்பேறே காண். எ-து. அக்கண்ணினது வெற்றிப்பாட்டைக் கண்ணொளி யிழந்தாரது கண்பேற்றின்கட் கண்டறிவாயாக. எ-று. * சித்-பாஞ்சராத்திரி மறுதலை, உரு—செ.

கண்ணும் அவயவங்களும் ஆகுபெயர். கண்பேறேயென ஏழாவது தொகுத்து ஏகாரம் விரித்தார். கழலணிவார்க்கு உளதாகிய வெற்றிப்பாட்டைக் கழலெ[illegible]தார். கழல்

காலணிமணிவடம்.

ஈண்டு வெற்றியாவது ஏனை நான்கிந்திரியங்களையு நோக்கி மேம்படுதல்.

கண்போலவயவங்கள் காணு வக்கண்ணில்லார் கண்பேறே காணக் கழலென்பது முதல்வன் இரண்டினுமொப்ப விரவிநிற்பினும் உயிருணர்வுபோலப் புலனுணர்வு வியாபகவிளக்கமாதலின்றி ஏகதேசவிளக்கமாம். உயிருணர்விற்கு உளதாகிய அம்மேம்பாடு அவ்வியாபகவுணர்வை யிழந்த பசுத்துவமுடையார் மாட்டறியப்படாதாயினும் அவரது பசுத்துவநீங்கிய சிவப்பேற்றின்கணறியப்படுமென்பது தோன்ற நின்றமையின் இஃது தொட்டென்னு மலங்காரம்.

சிவமாயவழியும் புலனுணர்வு ஏகதேச விளக்கமாவதன்றி உயிருணர்வுபோல வியாபகவிளக்கமாதலில்லையெனவே, அதன்கண் மீளுதலிழுகவென்பது பெறப்பட்டது. இதற்குப் பிறரெல்லாம் இயைபின்றியுரைத்தார்.

---

ஐம்பொறியி னல்லையெனு மந்தரங்கச் சிவனை
ஐம்பொறியை விட்டங் கணைசகலன் - ஐம்பொறியி
னீங்கானிர்ப் பாசிபோ னீங்கிமல கன்மம்போம்
நீங்கானி னீங்கு நினைந்து. (௯)

இது, ஞானஉபதேசியாவதற்குமுன்பு கூடிநின்ற மலங்கள் பின்புங்கூடிநிற்குமாகில் அதனாற் பிரயோசனமென்னென்போர்க்கு முன்டவை தானுகமருவிநிற்பன், இப்பொழுது நீங்குகையுங் கூடுகையுமுண்டாகையாற் பிரயோசனமுண்டென்கின்றது.

இ-ள். ஐம்பொறியின — உயிர்க்குயிராய் நின்றுபகரிக்கின்ற சிவன் நீ இந்தவைந்திந்திரியங்களினல்ல வேறென்

...ல்லையெ றுபதேசிப்பன்.
ஆ மந்த
ரங்கச் சிவனை.
எ-து.

ஐம்பொறியை விட்டங் கனை சகலன. எ-து. — அப்படியே யுபதேசிக்கைச்செயு மந்த வைந்திந்திரியங்களையும் நீங்கி யந்தரங்கமான சிவனுடனே கூடுகின்றானில்லை.

என்றது, இந்திரியங்களை வேறென்றும் யானந்தரங்கமென்றும் போதிப்பிக்கச்சே சிவனைக்கூடாமலிருக்கைக்குக் காரணமென்னென்னையாகில்?

ஐம்பொறியி னீங்கான். எ-து. — பிராரத்தகன்மம் புசித்தறுமளவும் அந்த வைந்திந்திரியங்களையுஞ் சடக்கென விட்டு நீங்கான்.

நீர்ப்பாசிபோ னீங்கி மலகன்மம் போம் நீங்கானில் எ-து. — திரோபாவமறைத்துநின்று பிராரத்தகன்மத்தைப் புசிக்குமளவும் அந்த ஞான உபதேசத்தால் பிரயோசனமென்னென்றாயாகில்? நீரிடத்துண்டாகிய பாசி கல்லைவிட்டெறிந்தபொழுது நீங்குமாறுபோல உன்னைவிட்டுநீங்காத சிவனாலே யுன்னைவிட்டுநீங்கி மலமுங் கன்மமும் போம்.

என்றது, சிவனுடைய திருவருளைக் கூடினபொழுது நீங்கும், நீங்கினபொழுது கூடும், கல்விட்டெறிந்தபொழுது நீங்கியும், நின்றபொழுது கூடியும் நிற்குமாறுபோல வென்பதாம்.

நீங்கு நினைந்து. எ-து. — இப்படி மறைப்பது விடுவதாய் வருகின்ற முறைமையை நினைந்து நீ யவையிற்றை நீங்குவாயாக. எ-று.

என்றது, தன்னை வினையைத் தலைவனை நினையவென்றதாம். அஃதெப்படியென்னில்? சிவன்கன்மத்துக் கிடாகத் திரோப வித்துப் புசிப்பிக்கிற முறைமையும், கன்மம் போகம் வருகின்ற முறைமையும், தான் புசிக்கின்றமுறைமையும், திருவருளாலே பார்க்க அதிலழுந்துதலை நீங்கி யாகாமியமேமருமற் றேகாந்தத்தே வீடுபெறுதலுடைத்தாம். எ-று.

சிவனுடைய திருவருளைக் கூடினபொழுது மலமாயாகன்ம நீங்கும் திருவருளை நீங்கினபொழுது கூடும், என்னும் பக்கத்துக்கு, நீரும் பாசியும்போ லென்னுஞ் சபக்கமுங் காட்டியவாறறிக. "பாசிபடுகுட்டத்திற் கல்லினைவிட்டெறியப் படும்பொழுது நீங்குமது" என்றார் வழிநூலார். சித்-அ—கு, நக—செ. (கூ)

---

சிவஞானமுனிவர் உரை.

எ-து. உ-ம். எ-னின். சிறைவிட்டவழி அலைகடலிற்சென் றடங்குநிலையன்றி ஆற்றுலலைகடற்கே பாய்ந்த நீர் அவ்வாற்றான் மறித்தலு முண்மையின் அதுபோல அரன்பாதத்தை யுற்றவுயிருக்கு ஒரோவழி மீட்சியுமுண்டென்பது பெறப்படுதலான் அவ்வழி மீளாமை செல்லாதென்பாரை நோக்கி அம்மீட்சிக்குக் காரணமிதுவென்பதூஉம், அதனை நீக்குதற்குபாயமுங் கூறி வலியுறுத்துதனுதலிற்று.

இ-ள். ஐம்பொறியின் அல்லை எனும் அந்த தர. எ-து. ஐம்பொறிகள்போல ஏகதேசவிளக்கமுடையாயல்லையென்றறிவுறுக்கப்படுஞ் சித்தாந்தமகாவாக்கியத்தைப் பெற்றுடைய மாணவகனே,—அங்கு ஐம்பொறியை விட்டுச் சிவனை அணை சகலன் ஐம்பொறியின் நீங்கான். எ-து. சிறைவிட் டலைகடலிற் சென்றடங்குமாறுபோலென மேற்கூறியவாறே ஐம்பொறிகளானுய புலனுணர்விற்றீர்ந்து சிவன்றிருவடியையுற்ற சகல

ன் அவ்வைம்பொறிகளான் மீளவதனை நீங்குவானல்லன்—நீர்ப்பாசிபோல் நீங்கு மல கன்மம் வரின் நீங்கானை நீங்கு நினைந்து. எ-து. கல்லெறியும் வழி நீங்கிய நீர்ப்பாசி அது விடும் வழிப் பரக்குமாறுபோல, அவ்வணையின்கணீங்கிய மலகன்மமாயைகள் வாதனைவயத்தானிகழு மயர்ச்சிபற்றிவந்து கூடுமாயின் அதுபற்றிப் பொறிவழி மீளாமல் அவ்வழியுந் தன்னைவிட்டு நீங்காத முதல்வனை முன்னர்க் கூறப்படு முபாயங்களினின்று சிந்தித்து அவற்றை நீக்கிக்கொள்ளும். எ-று.

வரினென்றதனால், வருதல் ஒருதலையன்று வாசனையுள் வழியேயென்பதுபெற்றாம்.

நீங்கியென்பது பாடமாயின், நீங்கினவாகிய மலகன்மமெனப் பெயராகவைத்துரைக்க.

சித்தாந்தத்தை அந்தமென்றது தலைக்குறை. தரம் அதன்கண்ணதாய்ச்சிறந்த ஒருவார்த்தை.

அங்கு மேற்கூறியபடி.

ஐம்பொறியை விட்டணைதற்குரியான் இவனென்பதுணர்த்துவார் சகலனென்றார்.

நீங்குமென்னும் மகரஞ் சந்தி நோக்கிக் கெட்டது. நீங்கெனவே பாடங்கொண்டு ஐயென வேறு பிரித்து முன்னிலையேவலாக்கி அதற்கேற்ப நீங்காயெனப் பாடந் திரித்துரைப்பாருமுளர்.

மேற்கூறிய மீளாமையை வலியுறுத்துவார் ஐம்பொறியினல்லையெனு மந்தரசிவனை ஐம்பொறியை விட்டங்கணை சகலனைம்பொறியினீங்கா னென்றும் ஒரோவழியுளதாமாயின், அதற்குக் காரணம் இஃதென்பார் நீர்ப்பாசிபோ னீங்கிமலகன்மம் வரினென்றும், அது நீக்குதற்குபாயங்கூறுவார் நீங்கானை நி

ணைந்து நீங்குமென்றுங் கூறினர். மலகன்மமெனவே, இனம் பற்றி மாயையுங் கொள்ளப்பட்டது.

"மங்கல மென்ப மனைமாட்சி மற்றத—னன்கல நன்மக்கட் பேறு" என்றாற்போல நீங்கா‍னை நீங்கு நினைந்தென்றதனுல் வருகின்ற சூத்திரத்துக்குத் தோற்றுவாய் செய்ததுமாயிற்று.

இம்மூன்றுதாரணங்களும் முறையே திருவடிஞானத்தைப் பெற்றவுயிர் புலனுணர்வின் மீடலில்லையெவும் மீடலிழுக்காமெனவும் ஒரோவழிப் பயிற்சிவயத்தான் மீளவருமாயின் மீளாதவாறு செய்துகொள்ளற்பாற்றெனவுங்கூறித் தாய்தரையேயாமென்னும் ஏகாரப்பொருளை வலியுறுத்தி ஒருபொருண்மல் வேந்தவாறு காண்க.

 அ—சூ, நான்காமதிகரணமுடிந்தது.

---

 அ—சூ, எட்டாஞ்சூத்திரமுடிந்தது.



# கூ — சூத்திரம்.



ஊனக்கண் பாச முணராப் பதியை
ஞானக் கண்ணினிற் சிந்தை நாடி
உராத்துனைத் தேர்த்தெனப் பாச மொருவத்
தண்ணிழலாம் பதிவிதி யெண்ணுமஞ் செழுத்தே.

இச்சூத்திர மென்னுதலிற்றோவெனின், ஆன்மா கன்மங்களுக்கீடான போகங்களினுடைய புசிப்பை யநுபவிக்கையில் அதனை ஞானதிருட்டியாலே நீங்கவேணு மென்னு முறைமை கூறுகின்றது.

இது ஆன்மசுத்தி பண்ணுதலாம்.

இ-ள். ஊனக்கண் பாச முணராப் பதியை எ-து. [ஊனக்கண்-பசுஞானம். பாசம்-பாசஞானம்] பசுஞானத்தாலும் பாசஞானத்தாலும் அறிதற்கரிதாய சிவனை.

ஞானக்கண்ணினிற் சிந்தை நாடி. எ-து. ஞானக்கண்ணாலே தன்னிடத்தே நிற்கின்றபடியை யாராய்ந்து

உராத் துனைத் தேர்த்தெனப் பாச மொருவ. எ-து. ஒருவர் ஊராததாகிவிரைந்துசெல்லுங்கானற்றேரை யொக்கும் பாசமென்று நீங்க.

தண்ணிழலா சிவன் குளிர்ந்த நிழலாவன்,
ம்பதி. எ-து.

விதியெண்ணு ஸ்ரீபஞ்சாக்கரத்தை விதிப்படி யுச்சரிக்கு
மஞ்செழுத்தே. எ-று.
எ-து.

என்றது, பாசஞானத்தாலும் பசுஞானத்தாலும் அறிதற்கரி ய சிவனைத் திருவருளாலே கண்டு நிற்பதே நிலையாவது; அந்தநி லை கூடாமல் விசுவ மேலிட்டதாகிற் கானற்றேர்போல விசுவ ம்பொய்யென்று நீங்க அந்தநிலையாம்: அந்த நிலைமையுங் கூடா தாகிற் ஸ்ரீபஞ்சாக்கரத்தை யுச்சரிக்கவென்றதாம்.

ஊராத்தேர் தண்ணிழலாம் என்றது, விசுவமாகிய வெய்யி லிலேநின் றலைந்தவனுக்கு அது நீங்கக் குளிர்ந்த நிழலா யிருப் பனென்றதாம். "பாசஞானத்தாலும் பசுஞானத்தாலும் பார்ப்பரியபரம்பரனை" என்றார்வழிநூலார். சித்-கூ—சூ, க—செ.

இதற்குப்பிரமாணம்.

---

சிவஞானமுனிவர் உரை.

இச்சூத்திரத்தின் பிண்டப்பொழிப்பு:—குறையுணர்வாகிய பசுவறிவானும் பாசவறிவானும் உணரப்படாத முதல்வனை அவ னது திருவடிஞானத்தாற் றன்னறிவின்கண்ணே யாராய்ந் றிக. அத்திருவடிஞானத்தான் நிலமுதனாதமீறாகிய பாசக்கூட் டம் நின்றுழி நில்லாது பரந்து திரிதற்கண் அதிவேக முடைய பேய்த்தேரினியல்பிற்றாய்க் கழிவதென்றறிந்து நீங்கவே, அப்ப திஞானம் பிறவித் துயராகிய வெப்பத்துக்குக் குளிர்ந்த நிழ லாய் வெளிப்பட்டு விளங்கும்: அவ்வாறு பாசத்தை யொருவி ஞானத்தைப் பெற்று ஞேயத்தைக் கண்டகாட்சி சலியாமை ப்பொருட்டு அப்பொருள் பயக்குந் திருவஞ்செழுத்து அவ்வி

இப்படியறிந்து கணிக்கப்படும். எ-று.

ஊனமென்பது அப்பொருட்டாதல் "ஊனமேற் கிரியைவித்தை" என்பதனுனறிக. சிவஞானசித்தி - சுபக்கம் - க—சூ, சுஒ—செ. "ஞானமேயான".

"நன்று மன்னிது நாடாய் கூறி" என்ருற்போல நாடியென்பது இகரவீற்று முன்னிலையேவல்.

உராத்துனை ஏழாம்வேற்றுமைத்தொகை. உராவென்பது முதனிலைத் தொழிற்பெயர்; பறவாக்குளவி பாயாவேங்கையென்ருற்போல ஒருவராலுரப்படாத வேகத்தையுடைய தேரெனச் செயப்படுபொருட்கண் வந்த பெயரெச்சமறையாகக்கொண்டுரைத்து, "திருந்தார் நன்றென்றேன் றியேன்" என்ருற்போல உராவென்பது குறுக்கல்விகாரமென்பாருமுளர்.

பின் வந்தபதி ஆகுபெயர்.

---

நாடியோ வென்போ நரம்புசிக் கோழையோ
தேடி யெனையறியேன் றேர்ந்தவகை - நாடியரன்
றன்னுலே தன்னையுங் கண்டு தமைக்காணு
மொன்று மெனவறிவா ரின்று. (க)

இது, தன்னையறியுமிடத்துச் சிவனுடைய ஞானத்தாலொழிந் தறிதற்கரிதாகையாற் சிவனையறியுமிடத்து வாக்குச்சுமனது க்கு மெட்டாதவனுகையால் அவனுடைய ஞானத்தாலே தன்னையுங்கண்டு, தான்சுத்தனுகிய அவனையுங் காணவேணுமென்பது கூறுகின்றது.

இ-ள். நாடி முன்பு நானென்று கருதிய எலும்போ யோவெ நரம்போ சீயோ கோழையோ வென் ருரா ன்போ ய்ந்து பார்த்தவிடத் தவையிற்றில் யாதெ

நரம்பு ன் றென்னை யறிகின்றிலேன்.
சீக்கோழையோ
கேடி யென்னைய
றியேன். எ-து.

தேர்ந்த வகை — தெளிந்த கூறுபாட்டாலே யாராய்ந்து நாடி. எ-து.

என்றது, யாதொன்றினுடைய வுண்மையை யறியுமிடத்துச் சிவனுடைய ஞானத்தாலொழிந்து அறிதலில்லையெனுமிடமறிந் தென்றதாம். எனவே, பசுஞானத்தாலும் பாசஞானத்தாலும் யாதொன்றையும் அறியவொண்ணாதென்பதாயிற்று. "வேத சாத்திரமிருதி புராண கலைஞானம் விரும்பசபை வைகரியாதித்திறங்கள்மேலாம்—நாதமுடிவான வெல்லாம் பாசஞான மனுசியான் மாவினை கீழ்நாடலாலே—காதலினா னன்பிரமமென்னுஞானங் கருதுபசுஞான மிவனுடலிற்கட்டுண்—டோதியுணர்ந்தொன் றொன்றாயுற்றிடலாற் பசுவா மொன்றாகச் சிவனியல்பினுணர்ந்திடுவன் காணே" என்பதனாலறிக. சித்-சு—கு, உ—செ.

அரன் றன்னாலே தன்னையுங்கண்டு தமைக்காணு றென்றுமெனவறிவா ரின்று எ-து. — சிவனுடைய வருளாலே சிவனையுங்கண்டு தம்மையு மறியார்களாகி லெந்தப்பொருளை யும்பொருளிது வென்றறிவார்கள் எ-று.

எனவே, ஆகமப்பொருளு மிதுவென் றறியார்களென்றதாம்.

எனவே மனவாக்குக் கெட்டானென்பதுவுங் கூறியவாறறிக.

இது, "கரணங்கள்கெடவிருக்கில் முத்தியாமென்னில்" என் ழவழி நூலானுமறிக. "சிவனையவன்திருவடி ஞானத்தாற்கே

ழ்' என்பதனானுமறிக. சித் - க—சூ, ரு - ௬—செ.
அது சம்பிரதாய திட்டியா லறிவித்தது. (௧)

---

சிவஞானமுனிவர் உரை.

எ-து. உ-ம். எ-னின். கோசரமாதல் பிறிதொன்றாற்பெறப்படாதென்றதென்னை, பசுத்துவநீங்கியவழிச் சுட்டிறந்தறிவதாகிய உயிருணர்வு திருவடிஞானத்தோ டொப்பதாகலின் அதன்கட் கோசரமாதல் அமைவுடைத்துப்போலுமென்பாரை நோக்கி அவ்வுணர்வு விளங்குமாறுணர்த்துமுகத்தான் அவரை மறுத்து ஏதுப்பொருளை வலியுறுத்துதனுதலிற்று.

இ-ள். நாடியோ என்போ நரம்புசிக் கோழையோ தேடினை அறியேன் தேர்ந்த வகை நாடி. எ-து. நாடி முதலியவற்றுள் யான்யார் என்னைத் தேடியுமறிகின்றிலே என்று இவ்வாறு தேர்கின்ற தேர்ச்சியறிவின்கண்ணே இதனைத் தெளிவிப்பதோரறிவு வேறுண்டென ஆராய்ந்துநோக்கி—அரன் றன்றாலே தன்னையுங் கண்டு தமைக் காணார். எ-து. அவ்வாறு காடுங்கால் விளங்கித் தோன்றுவதாய முதல்வனது திருவடிஞானத்தால் முதல்வனையுமுணர்ந்து முதல்வனின் வியாப்பியமாய் நின்று அங்ஙனமறியும் பொருளாகிய தம்மையுமுணர்தலைச்செய்யாதார்—என்னும் என அறிவார் இன்று. எ-து. மற்றெவ்வியல்பினரென்று தம்மையறிய வல்லுநர் இம்முத்திகாலத்து. எ-று.

நாடியென்றது இடை பிங்கலை முதலியவற்றை. நரம்பெனவே யடங்குமேனும் தலைமைபற்றி வேறுகூறினார். சீ-புண்ணீர். கோழை-ஐ.

ஓகாரந் தெரிநிலை. என்றென்பது சொல்லெச்சம். வகை ஆகுபெயர்.

ஒற்றுமைபற்றி அரனதுஞானத்தை அரனென்றுபசரித்தார்.

உம்மை எதிரது தழீஇயிற்று. எவனென்னும் வினாவினைக் குறிப்புப்பெயர் ஈண்டாகுபெயராய் என்னெனமரீஇயிற்று. ஆம் அசை.

நாடியோ என்போ நரம்புசீக் கோழையோ வென்ற உபலக்கணத்தால் ஏனைத் தத்துவ தாத்துவிகங்களினும் அவ்வாறு தெரிதல் கொள்ளப்படும்.

இது தம்மையறியு மாறுணர்த்து முகத்தானே தலைவனையறிந்தபின் அறியப்படுவ தாகிய தம்மறிவு கொண்டு தலைவனையறியு மாறு யாண்டையதென மறுத்து வலியுறுத்த வாறுகாண்க.

---

காட்டிய கண்ணே தனைக்காணா கண்ணுக்குக்
காட்டாய வுள்ளத்தைக் கண்காணா - காட்டிய
உள்ளந் தனைக்காணா வுள்ளத்தின் கண்ணாய
கள்வன்று னுள்ளத்திற் காண். (உ)

இது, சிவனுடைய ஞானத்தாலொழிந்து பசுபாசஞானங்களால் யாதொன்றையும் அறிதற்கரிதாகையால், அப்படியறியும் அவதரம் ஆன்மஞானசொரூபியாய்ச் சுத்தனாவனென்பது கூறுகின்றது.

இ-ள். காட் எல்லாத்தையுங் காட்டின கண் டன்னைக்
டிய க காணமாட்டாது.
ண்ணேத
னைக்கா
ணா. எ-
து.

கண்ணுக்குக் காட்டாயவுள்ளத்தைக் கண்டகாணு. எ-து. தன்னைக் காணமாட்டாததன்றியுந் தனக்குக் காட்டாகிய ஆன்மாவையுங் காணமாட்டாது.

காட்டிய வுள்ளந்தனைக் காணா. எ-து. கண்ணுக்குக் காட்டாய்நின்ற ஆன்மாவுந் தன்னைக்காணமாட்டாது.

உள்ளத்தின் கண்ணாய கள்வனுள்ளத்திற் காண். எ-து. ஆன்மாவுக்குக் காட்டாய் நிற்கின்ற சிவனையுமிப்படி ஆன்மாவினிடத்தே நிற்கின்ற முறையை விசாரி எ-று.

இப்படி சுபாவங்களாற் காண்டற்கரிதாய்த் தன்னாலே தன்னைக் காணவேண்டுகையிற் சிவனைக் கள்வன்தானென்றார். எனவே சிவனுடைய ஞானத்தாலொழிந்து இந்திரியாதிகரணங்களை நீங்கித் தன்னையுங் கண்டு காட்டுகின்ற சிவனையும் காண்பது இல்லையென்றதாம். எனவே சிவனுடைய ஞானந் தாரகமாகநின்று விசுவ மேலிட்டபொழுது நீக்கவேணுமென்பதாயிற்று. "கண்டிடுங்கண் டனைக்காணா" என்றார் வழிநூலார். சித்-கூ, ரு—செ.

இதுவுஞ் சம்பிரதாய திட்டியாலறிவித்தது. (உ)

---

சிவஞானமுனிவர் உரை.

எ-து. உ-ம். எ-னின். எதிர் முகத்து ஒருபொருளைக்கண்ட கண்ணே மறித்து நோக்கியவழி வெளிநிற் புறத்துப்பொருளையுங் காண வல்லும், அதுபோல அங்ஙனந் தேர்ந்தறிதலைச் செய்த உயிரே தெளிந்தறிதலையுஞ் செய்ய வல்லுமென அமையுமென்பாரை நோக்கி அதனது மாட்டாமையை விளக்கி அரன்றன்னு

லே காண்டலே வலியுறுத்துதனுதலிற்று.

இ-ள். காட்டியகண்ணே தனைக் காணு. எ-து. உயிராற் காட்டப்பட்டு ஒருவிடயத்தைக் காண்கின்ற கண்ணானது தன்னியல்பைக் காணமாட்டாது—கண்ணுக்குக் காட்டாய உள்ளத்தைக் கண் காணு. எ-து. தனக்கு அவ்விடயத்தைக் காண்பித்து முதலாய்நிற்கு முயிரையும் அதுகாணமாட்டாது—காட்டிய உள்ளம் தனைக் காணு. எ-து. அதுபோல முதல்வனால் மறைந்துநின் றுணர்த்தப்பட்டு ஒன்றனைத் தேர்ந்துணர்கின்ற உயிர் அவ்வாறே தன்னியல்பையுமறியமாட்டாது. தன்னையுணர்நிற்கு முதல்வனையுமறியமாட்டாது—உள்ளத்தின் கண் ஆய கள்வன் தான். எ-து. அத்தேர்ச்சி யறிவின்கண்ணும் உடனாய்நிற்குங் கள்வன் அம்முதல்வனாகலானே—உள்ளத்தில் காண். எ-து. அவனை அவ்வறிவின்கண்வைத்து காடித் தெளிவாயாக. எ-று.

இது சொற்பொருட் பின்வருநிலை. ஏகாரம் அசைநிலை. “முறைகாக்கு முட்டாச் செயின்” என்றாற்போலக் காணுதென்னுந் துவ்வீறு விகாரத்தாற்றொக்கது.

பின்வந்தவுள்ளம் ஈண்டுத் தேர்ச்சியறிவின்மேற்று. உள்ளத்தின் கண்ணுமென்னுஞ் சிறப்பும்மை விகாரத்தாற் றொக்கது.

தோன்றாது நிற்றல்பற்றிக் கள்வனென்றார். கள்வனென்றது கண்ணுக்கு உயிர் மறைந்து நின்றே காட்டுவதாகலான் அது தன்னையும் உயிரையும் அறியமாட்டாவாயிற்று; அதுபோல முதல்வன் இதுகாறு மறைந்து நின்றே யுணர்த்துதலின் உயிர் தன்னையு முதல்வனையும் அறியமாட்டாதாயிற்றென்பதுபட நின்ற குறிப்புமொழி. உள்ளத்திற் காணவல்லார்க்கு அக்கள்வ

ந் தீர்தலின் தம்மையும் முதல்வனையுங் காண்டல் கூடுமென்ப தாம். "கள்ள ரோடில்ல முடையார் கலந்திடின்-வெள்ளவெ ளியாமென் றுந்தீபற" என்றதும் இக்கருத்துநோக்கி. திருவு ந்தியார். உரு.

கண்ணுக்குக் காட்டாய வுள்ளத்தைக் கண் காணுமென உவ மைக்கோதியவாறு பொருளினும் வருவித்துரைத்துக்கொள்க

இஃதெடுத்துக்காட்டுவமை.

கூ—கு, முதலதிகரண முடிந்தது.

---

நிர்க்குணனாய் நின்மலனாய் நித்தியா நந்தனாய்த்
தற்பரமாய் நின்ற தனிமுதல்வன் - அற்புதம்போல்
ஆனா வறிவா யளவிறந்து தோன்றானே
வானே முதல்களையின் வந்து. (கூ)

இது, தத்துவசமூகம் குணத்திரயங்களை யுடைத்தாகை யாற் சொரூபமாகையானும், துக்கத்திரயங்களினுடைய மய மாகையானும், சுகதுக்கத்தினுடைய தானமாகையானும், யாதொன்றுக்குங் கீழாயிருக்கையானும், ஆன்மா அவையவை யாய் நிற்றலானும், இவற்றை நீங்கத் தற்சொரூபமா மென்கி ன்றது.

இ-ள். நிர்க்குணனாய். சாத்துவிக இராசதந் தாமத மென்னுங் குணங்களை நீங்கி நிற்பானாய், எ-து.

நின்மலனாய். மல மாயா கன்மங்களிற் பொருந்தானாய், எ-து.

நித்தியாநந்தனாய். அழிவில்லாத சுகசொரூபனாய், எ-து.

தற்பரனாய் நி   யாதொருபொருள் மேலாயுள்ளது அப்
ன்ற தனிமுதல்வ   பொருட்கு மேலாயுள்ளவனாய், ஒப்பில்லா
ன். ல்-து.   மல் நின்ற சிவன்;

வானே முத   ஆகாயமுதலாயுள்ள தத்துவ சமூகங்களை
ல்களையில். எ-   நீங்கில்,

அற்புதமாய்.   ஆச்சரியமாய்.
ஈ-து.

ஆனுவறிவாய்.   விட்டுநீங்காத வறிவாய்.
ஏ-து.

அளவிறந்துவ   அளவைப் பிரமாணங்களைக் கடந்து அ
ந்துதோன்றுனே   ப்பாலாயெழுந்தருளி வந்து வெளிப்படா
ஏ-து.   னோ? வெளிப்படுவனே. எ-று.

எனவே, தத்துவசமூகத்தை நீங்கவேணுமென்பதாயிற்று. அ
துகளங்கமா யிருப்பனவற்றைப் பார்த்து அறியுமிடத்துக் கள
ங்கமில்லாதவனாலே யறியவேண்டுகையால் தத்துவரூபம், த
த்துவ தரிசனம், தத்துவசுத்தி, ஆன்மரூபம், ஆன்மதரிசன
ம், ஆன்மசுத்தி, இவை சிவனுடைய வருளாலொழிந் தில்லை
யென்பதாயிற்று. "குறித்தடியினின்றட்டகுணமெட்டுச்சித்
தி" என்றார் வழிநூலார். சித்-௯—௫, ௯—௭.

இது, சம்பிரதாய திட்டியால் விரித்தது. (௧)

---

சிவஞானமுனிவர் உரை.

எ-து. உ-ம். எ-னின். அசத்தை அசத்தென்று கண்டொ
ருவியவழித் தோன்றுவது சூனியமேயன்றிப் பிறிதில்லை போ
லுமென்பாரை நோக்கி, ஞான சொரூபத்தினியல்பு கூறி அத

ணே வலியுறுத்துதனுதலிற்று,

இ-ள். நிர்க்குணன் ஆய். எ-து. அசுத்தப்பிரபஞ்சம்போல முக்குணரூபமாயளவிட்டறியப் படுவானுமல்லனாய்—நின்மலன் ஆய். எ-து. முக்குணங்களைக் கடந்த மிச்சிரப்பிரபஞ்சம்போல மலகன்ம காரியரூபமா யறியப்படுவானுமல்லனாய்—நித்தியானந்தன் ஆய். எ-து. மலகன்மங்களையுங் கடந்த சுத்தப்பிரபஞ்சம்போல அநித்தியாநந்தரூபனாயறியப்படுவானுமல்லனாய்—தற்பரம் ஆய். எ-து. இம்மூன்றனோடுங் கூடிப் பொதுவியல்புபற்றி அவ்வாறுணரப்படும் உயிர்போலன்றி அதற்குமேலாய்—நின்ற தனி முதல்வன். எ-து. இவ்வாறு நிற்றலான் ஒன்றனியல்புபற்றி யறியப்படாத தனிமுதலாகிய இறைவன்—வானே முதல் களையின். எ-து. ஆகாசமுதலிய அசத்தை அசத்தென்றுகண்டொருவியவழி—அளவு இறந்து அற்புதம்போல் வந்து. எ-து, பயின்றறிந்து வருந்தனது சுட்டறிவினளவினைக் கடத்தலான இன்னதென்றறியவாராத சூனியப்பொருள்போலத் தோன்றி—ஆனா அறிவு ஆய்த் தோன்றானோ. எ-து. பின்னர்ச்சுட்டிறந்தறியுந் தன்னறிவின்கணீங்காது நிலைபெறுவதாய் "சோதிக்குட் சோதியாய்" விளங்கித் தோன்றான்கொல்லோ. எ-று. சித் - அ—ரு, கூஅ—செ. 'எங்குந்தா'

தற்பரம் தனக்குப் பரமெனவிரியும். தன்னென்றது உயிரை,

அற்புதம் ஈண்டுச் சூனியத்தின்மேற்று. முதற்கட்சூனியமாய்த்தோன்றினுஞ் சூனியமன்றென்பார் அற்புதம்போல் வந்தென்றார், ஆனாமை நீங்காமை,

ஓகாரம் எதிர்மறை' ஏகாரம் அசைநிலை.

வானே முதலெனவே தோற்றமுறைபற்றி வான் முதலா

கிய பூதங்களும், ஒடுக்கமுறை பற்றி வான்முதலாகிய ஏனைத் தத்துவங்களு மடங்கும்.

நிர்க்குணனாய் நின்மலனாய் நித்தியானந்தனாய்த் தற்பரமா யென்புழி ஆக்கச்சொல் உண்மைகுறித்து நின்றது வடமொழிப் பதம். அறிவாயென்புழி. ஆக்கம் வேறுபாடு குறித்து நின்றது.

ஒற்றுமைபற்றி முதல்வனது ஞானத்தை முதல்வனென் றுபசரித்தார்.

---

சுட்டி யுணர்வதனைச் சுட்டி யசத்தென்னச்
சட்ட வினியுளது சத்தேகாண் - சுட்டி
யுணர்ந்தநீ சத்தல்லை யுண்மையைத் தைவம்
புணர்ந்ததனாற் பொய்விட்டுப் போம். (ச)

இது, ஆன்மாச் சிவரூபகமானவிடத்துச் சிவனுவகொழிந்து சிவன் தோன்றுமென்றதென்னை யென்போற்குச் சர்வத்தை யும் பொய்யென்றுகாண்பது சிவரூபனுமாய்ச் சுத்தனுமாய் நின்ற அவதரமென்பதுவும், அந்த அவதரத்திலன்றி யுண்மை தோன்றாதென்பதுவும், அந்த வுண்மை தோன்றினாலு மந்த வுண்மையினுடைய ஞானமுங் கர்த்தத்துவமு முண்டாகாதென்ப துவுங் கூறுகின்றது.

இ-ள். சுட்டி யுணர்வ தனைச் சு ட்டி யச த்தென்ன எ-து. இதுவிது வென் றறியப்பட்ட வெல்லாப் பொருளையும இது பொய்யா யிருந்த தென் றறிய.

சட்ட வினியு ணது சத்தே கா ண். எ-து. — சடக்கென விப்பொழுதுள்ளதாவ துண் மையாகிய சிவம் அதனை விசாரித்துப்பார்.

என்றது, சிவசொரூபனுமாய்ச் சுத்தனுமாய்நின்று காணும் அவதரத்து அந்தந்த வுண்மையொழிந்து அசத்துத்தோனரு தென்பதாம்.

சுட்டி யுணர்ந் த நீ சத்தல்லை. எ-து. — சிவசொரூபத்தினுடனேகூடிச் சுத்தனுகி அசத்தை யசத்தென்று நீங்கினு மிதுவென் றறியப்பட்ட நீ யந்தச்சிவமாகாய்.

என்றது, சிவனுடைய கர்த்தத்துவமும் பஞ்சகிருத்தியமும் உனக்குண்டாகாது சிவசொரூபனுவையென்றதாம்.

உண்மையைத் தைவம் புண ர்ந்து. எ-து. — இதனுற் பிரயோசனமென் என்கின்றுை யாகில்? அந்தச்சிவனுடனேகூடித் திருமேனியாய் அந்தச்சொரூபத்தைப்பெற்று.

அதனுற்பொ ய்விட்டுப்போம். எ-று. — அந்தவருளாலே பொய்யை நீங்கி நில்.

எ-து.

எனவே, அந்தச்சிவனுடைய ரூபத்தைப் பெறுவதே சிவரூப மென்பதாயிற்று. எனவே யசத்துமேலிட்டால் இது அசத் தென்று நீங்கிற் சிவரூபமென்பதாயிற்று.

இதவுஞ் சம்பிரதாயதிட்டியாலறிவித்தது. (சு)

---

சிவஞானமுனிவர் உரை.

எ-து. உ-ம். எ-னின். வானே முதல் களைந்தவழி அந்

னனந் தோன்றுவதும் வேறென்றெனக் கோடும் ஞானசொரூபமென்றற்குப் பிரமாண மென்னையென்பாரை நோக்கி அதனை வலியுறுத்துத னுதலிற்று.

இ-ள். சுட்டி உணர்வதனைச் சுட்டி அசத்து என்ன. எ-து. ஏகதேசவுணர்வாற் சுட்டி யுணரப்படுவதாய பிரபஞ்சத்தை மேற்கூறியவாறே ஒரோவொன்றாகச் சுட்டி அசத்தென்று கண்டு கழித்துக்கொண்டு சென்றவழி—இனிச் சட்ட உளது சத்தே காண். எ-து. முடிவின்கட் செம்மையே கோசரமாவது யாது அஃது அவ்வசத்தின் வேறாகிய சத்தேயாம்; அதனை யறிவாயாக. அற்றேல் அசத்தின் வேறாய் அங்ஙனந்தோன்றுஞ் சத்தாவது உயிரேயாமென அமையுமெனின்—சுட்டி உணர்ந்த நீசத்து அல்லை. எ-து. இதுகாறும் அசத்தோடு கூடிச் சுட்டியறிந்து வந்த நீ அசத்தின் வேறாய் அங்ஙனந்தோன்றுஞ் சத்தாவாயல்லை. அற்றேல் இச்சுட்டுணர்வு எனக்கு நீங்குவதின்றுபோலுமெனின்,—உண்மையைத் தைவம் புணர்ந்து. எ-து. அசத்தின்வயப்பட்டு நின்று சுட்டியறிந்து வந்த நீ அதனையொழிந்து அங்ஙனந் தோன்றிய சத்தின் வயத்தினையாய் அதனைப் புணர்ந்தால்—அதனால் பொய்விட்டுப் போம். எ-து. அப்புணர்ச்சியானே சுட்டுணர்வாகிய அப்பொதுவியல்பு நின்னைவிட்டு நீங்கும். எ-று.

என்னவென்றது உபசாரவழக்கு.

சட்டவென்பது செப்பமுணர்த்தி நிற்பதோரகரவீற்றிடைச்சொல்; அது சட்டமென இழிவழக்கின் மகரவீறாய் மரீஇயிற்று.

அசத்தைப் பிரித்தமையின் ஏகாரம் பிரிநிலைக்கண் வந்தது. உண்மை சத்தென்பன ஒருபொருட் கிளவி.

சைவமாயென ஆக்கச்சொல் வருவித்துரைக்க.

புணர்ந்தாலென்பது புணர்ந்தெனத் திரிந்தது. உண்மைக் குத் சைவமாதல் புணரினென உருபு மயக்கமாகக் கொண்டுரை ப்பினுமமையும்.

பற்றறக்கழிந்தொழியுமென்பார் விடுமென்னாது விட்டுப்போ மென்றார்.

---

கண்டதை யன்றன் றெனவிட்டுக் கண்டசத்தாய்
அண்டனை யான்மாவி னாய்ந்துணரப் - பண்டணைந்த
ஊனத்தைத் தான்விடுமா றுத்தமனி லொண்கருட
சானத்திற் றீர்விடம்போற் றான். (௫)

இது, ஆன்மாச் சிவரூபனுமாய்ச் சுத்தனுமானவிடத்து ஆன் மபாவ மில்லையென்பது கூறுகின்றது.

இ-ள். கண்ட தைய ன்றன் றெ னவிட்டு. எ-து. இதுவென்று காணப்பட்ட பொருளையெல்லா மிவையல்ல வல்லவென்று நீங்கி.

எனவே, மீட்சிமொழியாற் காணாதபொருளாமோவென்னில்? அதுவுமல்லவென்று கருதியென்க.

கண்டசத்தாய். எ-து. காட்டாய்நின்று தனக்குக்காட்டுகின்ற சிவசொரூபமாய்.

அண்டனையா ன்மாவி னாய்ந் துணர. எ-து. அண்டங்களெல்லாந் தானாய் நிற்கின்ற சிவனைத் தன்னிடத்தே யாராய்ந் தறிந்து.

ஆராய்ந்தறிந் தென்றது தனக்குபகரித்து நிற்கின்ற முறைமை.

| | |
|---|---|
| பண்டணைந்த வூனத்தைத் தான்விடுமா றுத்தமனில். எ-து. | உத்தமகுருவினாலே தனக்காதியிலே பொருந்தின மலமாயாகன்மங்களை நீங்குமுறைமை யெப்படியென்னில் |
| ஒண்கருட சானத்திற் றீர் விடம்போற் றான். எ-து. | னன்றாகியகருடத் தியானத்திலே விடந்திருமாறுபோலும். எ-று. |

இது, இவனவனாகப் பாவித்தலாம். இந்தப்பாவனையே வேதாந்தத்திலு மதுநானென்னும் பாவனையாவது மென்றவாறு.

அது, தற்பதம் தொம்பதம் அசிபதம் என மூன்றும். "கண்டவிவை" என்றார் வழிநூலார். சித்-சூ—சு, எ—செ. அநேககாலமாய் மருவிப்போந்தமையால் நீக்குதற் கரிதென்பது தோன்ற வெனவறிக. அது இப்படிப்பலவெண்பாவிலும் பாச நீங்கவேணுமென்று கூறியது.

சிவசொரூபமானபொழுது மலந்திருமென்னும் பட்சத்துக்குத் தான் கருடனாகியபாவனை முற்றினபொழுது விஷந்திருமென்றுஞ் சுபக்கங்காட்டியவாறறிக. வேம்புதின்ற புழுவுக்குக் கரும்புகொடுத்தாலு மதிற்பற்றுமல் வேம்பே நுகருமாறுபோல் முன்னாவு மப்படிக் கீழாய யோகங்களிலே மேலிட்டுக்கொண்டி ருந்தலை நோக்கியென்பதாம். (ரு)

---

சிவஞானமுனிவர் உரை.

எ-து. உ-ம். எ-வின். அசத்தை அசத்தென்று கண்டொ

ழியுமாறும், ஒழிந்தவழி உண்மையைத் தைவம் புணருமாறும், புணர்ந்தவழி, அதனாற் பொய் விட்டுப் போமாறும், யாங்ஙனமென்பாரை நோக்கி, அவற்றைத் தெரித்துணர்த்தி அதனை வலியுறுத்துதனுதலிற்று.

இ-ள். கண்டதை அன்று அன்று எனக் கண்டு அசத் ஆய் விட்டு. எ-து. சுட்டியுணரப்பட்ட பிரபஞ்சத்தை இது சத்தன்று இது சத்தன்றென ஒரோவொன்றாக வைத்து நோக்கி அசத்தென்றொழித்து—ஆன்மாவின் அண்டனை ஆய்ந்து. எ-து. அவ்வாறு கண்டொழிந்த தன்னறிவின்கண்ணே சுட்டுணர்வின்றி நின்ற கடவுளை ஆராய்ந்து—உணர. எ-து. சோகமெனப் பாவிப்பனாயின்—உத்தமனில் பண்டு அணைந்த ஊனத்தைத் தான் விடுமாறு. எ-து. அப்பாவகத்தான் அத்துவிதமாய் விளங்கித் தோன்று முதல்வனால் அநாதியாய்க் கூடி நின்ற பொதுவியல்பைத் தான் விட்டு நீங்குமாறு—ஒண் கருட சானத்தின் தீர்விடம்போல் தான். எ-து. ஒள்ளிய கருடதியானத்தில் விளங்கித் தோன்றுங் கருடனால் அப்பாவகன் விடத்தைத் தீர்த்துக்கொள்ளுமாறுபோலாம். எ-று.

தானென்பது முன்னையது எழுவாய். பின்னையது அசை. சானம் பாகதச்சிதைவு.

கருடத்தியானமாவது யாதெனிற் கூறுதும்; ஆதிபௌதிகம் ஆதிதைவிகம், ஆத்தியான்மிகம் எனக் கருடன் மூவகைப்படும். பொருடோறும் இவ்வாறு கண்டுகொள்க. அவற்றுள், உலகத்திற் காணப்படுங் கருடன் ஆதிபௌதிககருடன், அதற்கதிதெய்வமாகிய மந்திரம் ஆதிதைவிக கருடன், அம்மந்திரம் இடமாகநின்று மாந்திரிகனுக்குப் பயன்கொடுப்பதாகிய சிவசத்தி ஆத்தியான்மிககருடன் எனப்படும். அம்மூன்றனுள் ஈண்டுக் க

ருடனென்றது கருடனுக்கு அதிதெய்வமாய மாந்திரிகனுள்ளத்தின் அதுபோல்வைத்துத் தியாநஞ்செய்து கணிக்கப்படு மந்திரரூபமாகிய ஆதிதைவிககருடனை. அதனைப்பாவித்தலாவது நாடோறும் பயின்று வந்த பயிற்சிவிசேடத்தால் அம்மந்திரரூபமே தானாக அநந்நியபாவனை செய்து தன்னறிவு அதன் வயத்தாம்படி உறைத்து நிற்றல். அவ்வாறு நின்று அம்மந்திரக்கண்கொண்டு பார்ப்பவே அஃதவ்விடவேகத்தை மாற்றுதல் ஒருதலையாகலின் அப்பாவனை ஈண்டைக் குவமையாயிற்று. புள்ளு விலங்கு மரமுதலியவற்றுக்கெல்லாம் அதிதெய்வ மந்திரமுளதென்பதூஉம், மந்திரங்களைக் கணிப்போன் படிகம்போல மந்திரசொரூபியாவனென்பதூஉம், சர்வஞ்ஞானோத்தர முதலியவற்றுட் காண்க.

இதனானே கருடபாவனை அசத்தியமென்பார் மதம் போலியாயவாறுமுணர்க. அல்லதூஉம், பாவனை போலியாயவழி அது பயன்றருமாறியாண்டையதென்றொழிக.

 கூ—கூ, இரண்டாமதிகரண முடிந்தது.

---

அஞ்செழுத்தா லுள்ள மரனுடைமை கண்டரனை
யஞ்செழுத்தா லர்ச்சித் திதயத்தில் - அஞ்செழுத்தாற்
குண்டலியிற் செய்தோமங் கோதண்டஞ் சாநிக்கி
லண்டனுஞ் சேடனு மங்கு. (கூ)

இது, ஆன்மா வெங்கெந்தப் பொருள்களைக் கருதிற்று அங்கந்தப்பொருள்களாய் நிற்குமாகையாற் பஞ்சாக்ஷரத்தாலே யிப்படி தியாநிக்க, அந்த நிலைமை யெய்துமென்பது கூறுகின்றது.

இ-ள். அஞ்செ பஞ்சாக்கரத்தாலே ஆன்மா சிவனுக்

அஞ்செழுத்தா டிமையாகிய முறைமை யுணர்ந்து.
ுள்ள
மரனுடைமை க
ண்டு. எ-து.

என்றது, சி-ஆகியசிவனும், வா-ஆகியவருளும், ய-ஆகியவான்மாவுக் கொருபுறமாய் நிற்க; ந-ஆகியதிரோதமும், ம-ஆகிய மலமு மொருபுறமாய்நிற்க, தான் நிற்குமுறைமையறிந்து நவ்வையு மவ்வையு நீங்கி, வவ்வே சொரூபமாய்ச்சிவனுக் கடிமையாய் நின்றதனை யுணர்ந்து என்றதாம்.

அரனை யஞ்செ — அப்படியுள்ளசிவனை யஞ்செழுத்தாலே
ழுத்தா லர்ச்சி — ங்கநியாசம்பண்ணி யிதயகமலத்தே பூசி
த் திதயத்தில். — த்து,
எ-து.

அஞ்செழுத் — அஞ்செழுத்தாலே குண்டலித்தானத்தே
தாற் குண்டலியி — யக்நிகாரியம்பண்ணி
ற் செய் தோம
ம். எ-து.

கோதண்டஞ் — புருவமத்தியத்தே தியாநிக்கில்;
சாநிக்கில். எ-து.

அண்டனுஞ் — மேலான சிவஞானசொரூபமா யவ்விடத்
சேடனு மங்கு. — தவனுக் கடிமையுமாம். எ-று.
எ-து.

என்றது, பஞ்சாக்கரத்தினுண்மையைப் பார்க்கவே யஞ்ஞானமாகிய பிரபஞ்சஞ் சீவியாதென்பதுவும் சம்பிரதாய வழக்காற் காட்டியவாறு. "அஞ்செழுத்தாலான்மாவு மரனுடைமை" என்றார் வழிநூலார். சித்-க—சு, அ—செ. (சு)

சிவஞானமுனிவர் உரை.

எ-து. உ-ம். எ-னின். இஃதவ்வாசனையை நீக்குதற்குச் சாதநமாமா றியாங்ஙனமென்பாரை நோக்கி அஃதாமாறு கூறி ஏதுவை வலியுறுத்துத னுதலிற்று.

இ-ள். உள்ளம் அரன் உடைமை அஞ்செழுத்தால் கண்டு. எ-து. உயிர் சிவனுக்குடைமையாதலை அஞ்செழுத்தை உச்சரிக்கு முறையில்வைத்து நோக்கி—இதயத்தில் அரனை அஞ்செழுத்தால் அர்ச்சித்து. எ-து. தன்னுடம்பகத்தே இதயம் உந்தி புருவநடு வென்னு மூன்றனையும் முறையே பூசைத்தானம் ஓமத்தானம் தியாநத்தானமாகக் கருதிக்கொண்டு புறம்பேஞான பூசைசெய்யுமுறைப்படி, இதயபங்கயத்தில் அவ்வஞ்செழுத்தாலமைந்த திருமேனியில் அம்முதல்வனைக் கொல்லாமை ஐம்பொறியடக்கல் பொறைஅருள் அறிவு வாய்மை தவம்அன்பு என்னும் அட்டபுட்பங்கொண்டு அம்மநுவாலர்ச்சனைசெய்து—அஞ்செழுத்தால் குண்டலியின் ஓமஞ்செய்து. எ-து.அத்திருமந்திரத்தானே குண்டலித்தானமான உந்தியில் ஞானவனலை யெழுப்பி அதன்கண் விந்துத்தானத்தமிழ்தமாகிய நெய்யைச் சுழுமுனைநாடி இடைநாடியாகிய சுருக்குச் சுருவங்களா லோமித்து—கோதண்டம் சானிக்கில். எ-து. விந்துத் தானமாகிய புருவ நடுவிற் சிகர வகர யகரங்கண் மூன்றும் முறையே தற்பதப்பொருளுந் துவம்பதப்பொருளும் அசிபதப்பொருளுமா முறைமைநோக்கி அதனாற் சிவோகம்பாவனை செய்வனாயின்—அங்கு அண்டன் ஆம் சேடன் ஆம். எ-து. அப்பாவனைக்கண் விளங்கித்தோன்றுவன், அப்பாவகன் அவனுக்குச் சேட சேடி பாவகத்தால் அடிமையாவன். எ-று.

ஒழித்தலுந் தியானித்தலும் பூசைக் கங்கமெனவறிக. ஞான சொரூபம் விளங்கிய வழியும் பயிற்சிவயத்தான் ஏகதேசப்பட்டுப் புறத்திற் செல்ல நோக்குவதாய தன்னறிவை அங்ஙனமாகாதவாறு மடக்கி அகத்தே ஒரு குறியின்கணிறுத்தி யிட்டவுடும்படி அஞ்செழுத்தோதுமுறையில் வைத்துக் கண்டு நிந்திக்கச் சிந்திக்க அஃது அந்நோக்கத்தைப் பற்றறக் கெடுத்து ஞானசொரூபத்தை இனிது விளக்கிப் பூரணநிலையிற் கொண்டு செலுத்துமாகலின்; இஃது ஈண்டைக்குச் சிறந்த சாதனமாயிற்றென்பது.

---

இந்துவிற் பானுவி ராகுவைக் கண்டாங்குச்
சிந்தையிற் காணிற் சிவன்கண்ணு - முந்தவே
காட்டத்தெரீ யென்னக் கனல்சே ரிரும்பென்ன
வாட்டாறு மோதஞ் செழுத்து. (எ)

இது, அங்கச்சிவனைத் தரிசித்தாலொழிந்து சுத்தனாகானென்பது கூறுகின்றது.

| | |
|---|---|
| இ-ள். இந்துவிற் பானுவி ராகுவைக் கண்டாங்கு. | கண்ணுக்குக் காண்டற்கரிதாகிய ராகு கேதுக்களைச் சந்திரனிடத்தும் ஆதித்தனிடத்துங் கண்டாற்போல, |

எ-து.

| | |
|---|---|
| சிந்தையிற் காணிற் சிவன்கண்ணு முந்தவே. | தன்னிடத்தே சிவனைக்காணில் அந்தச் சிவனருளாலே சோகமெனப்பாவிக்கில் தனக்கு முதலாகிய சிவன் முனையாம். |

எ-து.

கண்ணிடம் என்றது காணுமிடத் தருளேதாராகமாகநின்று காண்டலால், அது காணவென்னும்பொழுது முற்பட்டு நிற்கு மென்றதாம்.

சந்திராதித்தரிடத்து ராகுகேதுக்கள் வேறாய்நின்று ஒரு காலத்தே கூடினாற்போல, ஆன்மாவுஞ் சிவனும் வேறாய்நின் றொருகாலத்தேயோ கூடுவதென்னில்? அது காணுமுறைமைக் குவமை.

இனிவேறறநின்று தோன்றுகிற முறைமைக்குவமை, ஆன் மாக்களுடைய சத்திநிபாதம் - பரிபக்குவம்.

காட்டத் தொ விறகிற்பழைதாகி நிற்கும் அக்கினியென்ன. றீயென்ன. எ-து.

என்றது, அநாதியிலே கூடிநின்ற அக்கினி கடைந்தபொழு து தோன்றினாற்போல ஒருவன் பரிபக்குவமறியுமளவும் ஒன் றிநின்று தோன்றுவனென்றதாம். "விறகிற்றீயினன்பாலின றுநெய்போல் - மறையநின்றுளன்மாமணிச்சோதியா - னுறவு கொண்டுணர்வு" என்றார் ஞானாமிர்தத்தாரும் என்பதனாலு மறிக.

தொல்தீ-தொறீ, இதுகெட்ட சந்தியும் விகாரமும்.

கனல்சே ரிரு ம்பென்ன. எ-து. அக்கினியைச்சேர்ந்த விரும்மை யக்தவக்கினி யுள்ளடக்கிக்கொண்டு தானாகிநின்றது போல.

ஆட்டாளும். எ-து. தானவனுக் கடிமையாவன்.

என்றது, அக்கினியைச்சேர்ந்தபொழுது இரும்பாந்தன்மை போய் அக்கினியேயாய் நின்றாற்போல வான்மாவை யடக்கிச்

சிவனுந் தானாகிநிற்பனென்றதாம்.

இது சிவசொரூபத்தைப் பெறுதற்குவமை.

அடிமையாமென்றது இரும்பு அக்கினியினுள்உள்ளடங்கி நின்றாற்போல நிலைபெற்றவான்மாக்களுங் கூடிநிற்பதெனவறிக.

ஓதஞ்செழுத் து. எ-து. பஞ்சாக்ஷரத்தை ஓதினு லிப்படிகூடுமாகையால் எப்பொழுதும் பஞ்சாக்ஷரத்தை யுச்சரி. எ-று.

இது பஞ்சாக்கரத்தை யுச்சரித்தாற் சிவனைக் காணலாமென்னும் பக்கத்துக்கு சந்திராதித்தர்களும், இராகு கேதுவும் சபக்கமும்; அநாதியிலே வேறறநின்று தோன்றுவனென்ற பக்கத்துக்கு, விறகுந் தீயும் சபக்கமும்: . சிவனைக்கூடிச் சிவசொரூப னாவனென்னும் பக்கத்துக்கு, அக்கினியைச்சேர்ந்த விரும்பு சபக்கமெனவறிக. (எ)

---

சிவஞானமுனிவர் உரை.

எ-து. உ-ம். எ-னின். அங்ஙனம் ஒருகுறியின்கண் வைத்தன்றி முதல்வனைக் காண்டல் செல்லாதவாறும், அவ்வாறு கண்டவழி முதல்வன் தன்மாட்டு விளங்கித் தோன்றுமாறும், தோன்றியவழித் தான் அம்முதல்வனுக் கடிமையாமாறும், உவமையில்வைத்துணர்த்தி அதனை வலியுறுத்துதனுலிற்று.

இ-ள். இராகுவை இந்துவில் பானுவில் கண்டாங்கு. எ-து. அந்தரத்தியங்கு நவக்கோள்களுள் ஏனையபோலக் காணப்படாத இராகுகேதுக்களை உபராகத்திற் சந்திராதித்தர்மாட்டுக்கண்டாற்போல—சிந்தையில் காணில். எ-து. முப்பொருள்கள் யானிதனை யறிந்தேன் அறிகின்றிலேன் என்னு முணர்விற்கு விடயமாகிய பசுபாசங்களோடொப்ப வேறுணரப்படாத

முதல்வனைத் தன்னிதயபங்கயத்தின் அஞ்செழுத்தின் முறையின் வைத்துக் காணுமாயின்,—உந்தவே காட்டாக்கில் சிவன் தோன்றிக் கண் ஆம். எ-து. கோலைநட்டுக் கயிற்றினாற் சுற்றிக் கடையவே காட்டத்தினின்று அங்கி தோன்றுமாறுபோல அம்முதல்வன் ஆண்டுத்தோன்றி அறிவுக்கறிவாய் விளங்கி நிற்பன்.—தான்கனல் சேர் இரும்பு என்ன ஆள் ஆம். எ-து. அப்பொழுது தானும் எரிசேர்ந்த இரும்புபோலத் தனது சுதந்திரத்தை விட்டு அம்முதல்வனுக்கு அடிமையாம்—அஞ்செழுத்து ஓது. எ-து. அகலான் அத்திருவஞ்செழுத்தை விதிப்படி யோதுவாயாக. எ-று.

கேது சாயாக்கிரகமாகலின், வேறுகூறாயினார்.

கண் அறிவு.

தோன்றியாமென வியையும்.

உந்துதல் ஈண்டுக் கடைதன்மேற்று.

காட்டாக்கி வடமொழிச்சிதைவு. இகரம் விகாரத்தாற் றொக்கது.

இன் உவமவுருபு.

ஈண்டும் ஓதஞ்செழுத்து என்றது வலியுறுத்தவாறு.

---

மண்முத லுளமலர் வித்தை கலாரூபம்
எண்ணிய வீசர் சதாசிவமு - மண்ணிக்
கலையுருவா நாதமாம் விந்துவதன் கண்ணும்
நிலையதிலா மச்சிவன்றா ணோர். (௮)

இது, அந்தரியாகமாக விதயகமலத்திலே யிப்படி பூசித்த

லருள்சொரூபனுமாய்ச் சுத்தனுமாவனென்பது கூறுகின்றது.

இ-ள். மண்முதனுளல் நீளமுமாய், ம்.எ-து. இதய கமலத்துக்குத் தண்டெண்விரல் நீளமுமாய், ஐம்பதுகோடி யோசனையகலமும் நீளமுமாய், பிருதிவிமுதலாக மாயையீருகிய தத்துவமுப்பத்தொன்றும்.

இதில் மாயை முட்டெனவறிக.

மலர் வித்தை. எ-து. சுத்தவித்தை எட்டிதழா யெட்டக்கரத்தையுமுடைய தாமரைப்பூவையு முடைத்தாயிருக்கும்.

கலாரூபம். எ-து. இவையிற்றுக்கு நிவிர்த்தி பிரதிட்டை வித்தையென்று மூன்றுகலையு முரூபமாயிருக்கும்.

என்றது, ஆன்மதத்துவ மிருபத்துநாலுக்கும் நிவிர்த்தி, வித்தியாதத்துவ மேழுக்கும் பிரதிட்டை, சுத்தவித்தைக்கு வித்தை எனவறிக.

எண்ணிய வீசர் சதாசிவ முன். எ-து. [முன் என்றது=மேல், அம்மலர்க்கு மேலாகிய காருண்ணியம்] மேலெண்ணப்பட்ட ஈசுரதத்துவமுஞ் சதாசிவமும்.

நண்ணிக் கலையுருவாம். எ-து. இப்படிப் பொருந்தச் சாந்தி சாந்தியாதீதமென்னுங் கலைகளி னுரூபமா யிருக்கும்,

நாதமாம். எ-து. அதன்மே னாதசொரூபமாம்,

விந்து வதன்கண்ணும். எ-து. அந்தவிந்துச்சத்தி யந்தநாதயிடமாக நிற்கும்.

நிலை யதிலா மச்சிவன்றானே ர். எ-து. அந்த ஞானசொரூபியாகிய சிவன் அதில் நிலையாநிற்பன், அவனை யிப்படி தியாநிக்க விவற்று ஞயிராரனசிவன் றேன்றிடுவன். எ-று.

எனவே, இப்படிநிற்க முன்சொன்ன நிலையிலேகூடிச் சுத்த ருவனென்பதாம்.

இப்படி யந்தரியாகமாகிய பூசைசெய வென்றவதனால் பகி ரியாக பூசை செய்யவேணுமென்றில்லை. வேண்டிற்றாகில் செய் என்பது மீட்சிமொழியால் வந்தவாறறிக. எனவே யந்திரி யாகமும் பகிரியாகமும் வேண்டுமெனவறிக. "நாட்டுநிதயத் தானுநாபியினிலடியாய்" "அந்தரியாகந்தன்னை முத்திசாதந மாவறைந்திடுவரதுதானு மான்மசுத்தியாகும்" "புறம்பேயு மரன்". "இந்தனத்தினெரியாலினைப் பழத்தினிரதமெள்ளின் கண்". என்றார் வழிநூலார். சித் - கூ—ரு, கூ - ௧௦ - ௧௧ ௧௨—செ.

இப்படி பலபிரகாரங்களாலுங் கூறிய ஏதுவுந் திட்டாந்தத் தாலும் ஆன்மதத்துவத்துச் சமுதாயத்தை நீங்கிப் பேரின்பத் தைப் பெறவேணுமென வறிக.

இது சாத்திர திருட்டியுஞ் சம்பிரதாய திருட்டியுமெனவறிக.

---

சிவஞானமுனிவர் உரை.

எ-து. உ-ம். எ-னின். தத்துவ முப்பத்தாறுக்கும் மேற்ப ட்ட முதல்வனை இதயபங்கயத்திற்கண்டர்ச்சிக்குமாறு யாங் ஙனமென்பாரை நோக்கி அவ்விதயபங்கத்தினியல்புணர்த்தி அதனை வலியுறுத்துத லுதலிற்று.

இ-ள். மண்ணில். எ-து அவ்விதயபங்கயத்தி னியல்பை அறி யப்புகின்—மண் முதல் நாளம். எ-து. நிலமுதலிய இருபத்து

நான்கு தத்துவமும் உந்தியினின்றுந் தோன்றி எண்விரலளவை த்தாயுள்ள நாளவடிவாம்:—வித்தை மலர். எ-து. வித்தியா தத்துவங்களேழுஞ் சுத்தவித்தையுமென்னும் எட்டுத்தத்துவமு ம் எட்டிதழ்வடிவாம்:—எண்ணிய ஈசர் சதாசிவமும் கலாரூ பம். எ-து. அத்தத்துவங்களுக்கு மேலாகக் கருதப்பட்ட ஈசுர ஞ் சதாசிவமென்னும் இரண்டு தத்துவமும் அறுபத்துநான்கெ னப்படுங் கேசரவடிவாம்.—சத்திகலை உருவாம். எ-து. சத்தித த்துவம் அக்கேசரங்களுக்குள்ளாகிய பொகுட்டுவடிவாம்.—நாதம் அதன் கண்ணும். எ-து. சிவதத்துவம் அப்பொகுட்டிற் காணப்படும் ஐம்பத்தொரு வீசவடிவாம்.—அதில் அச்சிவன் தாள்நிலையாம். எ-து. ஆகலான் அவ்வியல்பிற்றாகிய இதயபங் கயத்தின் முப்பத்தாறு தத்துவமும் ஆசனமாகவுடைய அச்சிவ னது சத்தி நிலைபெறும்—நேர். எ-து. அதனையறிந்து திருவஞ் செழுத்தால் அர்ச்சிப்பாயாக. எ-று.

இதனானே * "அண்டபிண்டமவை சமமாதலால்,, புறத்துக் காணப்படும் முப்பத்தாறு தத்துவமும் அகத்தினிற் சூக்கும மாயுண்டென்பது காட்டி முதல்வனுக்கு இந்நிலையே அந்நிலை யெனத் தெளிவித்தவாறு.

* கோயிற்புராணம், பதஞ்சலிச்சருக்கம். எ௦. "வலங்கை மான்."

வித்தையென்பது இரட்டுறமொழிதலான் அவ்வாறுரைக் கப்பட்டது. சிவஞானசித்தியில் "மூட்டு மோகினி சுத்தவித் தை மலரெட்டாய்,, என்புழி மோகினிஎன்றதூஉம் ஆகுபெய ரான் அதன்காரியமாய் கலாதிகளின்மேனின்றது.

இவ்வாறன்றி நிலமுதலிய முப்பத்தொருதத்துவமெனப்படு ம் எட்டுக்கொத்தும், எண்விரலுளவடிவும், அசுத்தமாயாதத் துவம் நாளத்துக்கும் மலருக்கும் நடுக்கண்டமாகிய கிரந்தியெ

டிவும், அதற்குமேற் சுத்தவித்தையின் வாமைமுதலியவெட்டும் எட்டிதழ் வடிவுமாமென்றுரைப்பாரும்; முப்பத்தொன்றுக்குமேல் அசுத்தமாயை கிரந்தியின் அதச்சதநம், சுத்தமாயை யூர்த்துவச்சதநம் அதற்குமேல் ஈசுரதத்துவத்தில் அனந்தன் முதலியவெட்டும் எட்டிதழ்வடிவம், சதாசிவதத்துவமொன்றுங் கேசரவடிவமெனக் கொண்டு அதற்கியையக் கூட்டி யுரைப்பாரும்: கலாரூபமென்றது பஞ்சகலைகளையெனவும், அஃதியாண்டுங் கூட்டியுரைக்கப்படுமெனவுங் கொண்டு, மண்முதலுளமலரென்பதற்கு மண்ணாகிய நிவர்த்திகலாரூபம் நாளமும், மண்ணைமுதலாகவுடைய ஏனையிருபத்துமூன்றுதத்துவமாகிய பிரதிட்டாகலாரூபம் மலருமெனவும், வித்தையெண்ணிய வீசர் சதாசிவமும் கலையுருவமாமென்பதற்கு வித்தியாதத்துவமாகிய வித்தியாகலாரூபம் கலையெனப்படுங் கேசரமும், சுத்தவித்தையோடு கூடியெண்ணப்பட்ட ஈசுரதத்துவஞ் சதாசிவதத்துவமாகிய சாந்திகலாரூபங் கலைக்குள்ளுருவெனப்படும் பொகுட்டுமாமெனவும், நாதமாஞ்சத்தி யதன்கண்ணாமென்பதற்குச் சிவதத்துவஞ் சத்திதத்துவமாகிய சாந்தியதீதகலாரூபம் பொகுட்டின்கண்ணாகிய வீசமாமெனவும் உரைப்பாருமுளர். இவையெல்லாம் அவ்வவ்வாகமபேதம் பற்றிக் கொள்ளப்படும்.

கலை அறுபத்துநான்காகலான், அறுபத்துநான்காகிய கேசரங்களுக்குத் தொகைபற்றிக் கூறப்படும் ஆகுபெயராயிற்று.

ஈசர் ஆகுபெயர்.

கலையுரு கலைக்குள்ளுருவென உள்ளுருபு விரித்துரைக்க.

அதில் என்புழி அன் சாரியை விகாரத்தாற் றொக்கது.

இது நாளமுதலாக மேனோக்கித்தோன்றும் உலகத்துக் கம

வும்போலாது கண்முதலாகக் கீழ்நோக்கித் தோன்றியதோர் திப்பிய கமலமெனக் கொள்க.

சிவன்று எதிரின்மையாமெனவே சிவன் சத்திக்குமேலாய் நிற்பன் என்பதூஉம் பெறப்படும்.

 ௧—கு, மூன்றுமதிகரண முடிந்தது.

---

 ஒன்பதாஞ்சூத்திர முடிந்தது.

சிறப்பியல்பு - சாதகவியல் முற்றிற்று.



# ௧௦ — சூத்திரம்.

அவனே தானே யாகிய வந்நெறி
ஏகனாகி யிறைபணி நிற்க
மலமாயை தன்னொடு வல்வினை யின்றே.

இந்தச்சூத்திர மென்னுதலிற்றோவெனின், மலமாயாகன்மங்களை நீங்குமுறைமை கூறுகின்றது.

இ-ள். அவனே தானே யாகிய வந்நெறி யேகனாகி. எ-து. சிவன் ஆன்மாவிலே யான்மாவாய் நின்ற முறைமைபோல வான்மாவுஞ் சிவனிடத்திலேயா யேகிபவித்து.

இறைபணி நிற்க. எ-து. முன்பு தன்னுடைய செயலானவெல்லாஞ் சிவனுடைய செயலான முறைமையைக் கண்டு நிற்க.

தன்னுடைய செயலானவெல்லா மிறைவனுடைய செயலென்று நிற்கவென்றுமாம்.

மல மாயைதன்னொடு வல்வினை யின்றே. எ-து. ஆணவமு மாயாமலமுமாகிய விவற்றுடனே மேலு மாகாமியமாகிவரும் வலியவினையு மில்லையாம். எ-று.

என்றது, சிவனுடனே யேகிபவித்து அந்தப்படியே யொழுகிநிற்கவென்றதாம். அது, யான்செய்தேன் பிறர்செயதா ரென்னதியா னென்பதின்றி நிற்கவென்றதாம். அப்படி சொருக்கற்றுநிற்கத் திருவருள்தாரகமாமெனவறிக.

இவையிற்றுக்குப் பிரமாணம்.

சிவஞானமுனிவர் உரை.

இச்சூத்திரத்தின் பிண்டப்பொழிப்பு.—ஞானக்கண்ணாற் காணப்பட்ட அம்முதல்வன் தானுடனாய் நின்றறியவும் வேறு காணப்படுமாறின்றி யானேயறிந்தேனென்னும்படி உயிர்தானேயாய் ஒற்றுமைப்பட்டு உயிரின்வழிநின்ற அப்பெத்தநிலைபோல் ஈண்டு உயிர் அம்முதல்வனோடுடனாய் நின்றறியினுந் தானென வேறு காணப்படுமாறின்றி அவனோடொற்றுமைப்பட்டு அவ்விறைபணியின் வழுவாது நிற்பின், மலமாயையென்னும் இரண்டனோடு வலிய கன்மமலமும் இல்லையாமொழியும் எ-று.

அவனே தானேயென்னும் ஏகாரமிரண்டனுள் முன்னையது பிரிநிலைக்கண்ணும் பின்னையது தேற்றத்தின் கண்ணும் வந்தன.

நெறி உவமவுருபு.

மலமாயையொடு கூடிய வினையென்றாராகலின் இன்றேயென்றார்.

உவமைக்கோதியது பொருளினும், பொருளுக்கோதியது உவமையினுஞ் சென்றியைந்தன.

ஈண்டொற்றுமைப்படுதலாவது, குடமுடைந்தவழிக் குடாகாயமும் ஆகாயமும்போல ஒருபொருளாயொற்றுமைப்படுதலோ, அன்றிக் குற்றியை மகனென்பதுபோல திரிவுக்காட்சியானொற்றுமைப்படுதலோ, அன்றி மண்ணே குடமென்பதுபோல ஒன்றுதிரிந்தொன்றாயொற்றுமைப்படுதலோ, அன்றிவெள்ளையுந் தாமரையும்போலக் குணகுணித்தன்மையானொற்றுமைப்படுதலோ, அன்றித் தீயுமிரும்பும்போல ஒன்றினொன்று விர

வுதலானொற்றுமைப்படுதலோ, அன்றிப் பாலுநீரும்போலப் பி ரிக்கப்படாத சையோகத்தானொற்றுமைப்படுதலோ, அன்றிக் கருடனு மாந்திரிகனும்போலப் பாவனைமாத்திரையா னொற்று மைப்படுதலோ, அன்றிக் காய்ந்தவிரும்பி னீர்போல வொன்றினொ ன்றிலயமா யொற்றுமைப்படுதலோ, அன்றிப் பேயும் பேய்பிடி யுண்டவனும்போல ஆவேசத்தி னொற்றுமைப்படுதலோ, அன் றி இந்தனத்தினெரிபோல விளங்காமையா னொற்றுமைப்படு தலோ, அன்றி ஞாயிற்றினொளியின் விளக்கொளிபோலச் சத் தி கெட்டுநிற்றலா னொற்றுமைப்படுதலோ, அன்றித் தலைவனுந் த லைவியும்போல இன்பநுகர்ச்சிமாத்திரையா னொற்றுமைப்படு தலோ, அன்றி நாட்டாரிருவர்போல நட்புமிகுதியா னொற்று மைப்படுதலோ, அன்றி ஆவும் ஆமாவும்போல ஒப்புமை மாத் திரையா னொற்றுமைப்படுதலோ, என்று அவ்வச்சமய வாதிக ண் மதம்பற்றி நிகழும் இன்னோரன்ன ஐயப்பாடுகளை யெல்லா ம் நீக்குதற்பொருட்டு, அவனேதானே யாகியவந்நெறியென உ வமை யெடுத்துக்காட்டி யோதினார்.

ஈண்டுக் கூறிய ஒற்றுமைக்கட்படு மிபைபாவதென்னையெனி ன் அது வருகின்ற சூத்திரத்திற்பெறப்படும்.

---

நானவனென் றெண்ணினர்க்கு நாடுமுள முண்டாத
லானனவொன் றின்றியே தானதுவாய்-நானெனவொ
ன்றில்லென்று தானே யெனுமவரைத் தன்னடிவைத்[ன்
றில்லென்று தானு மிறை. (க)

ஆன்மபோதஞ் சீவிக்குமிடத்துப்பாசங்களை யொழிந்து சீவி யாது, அப்படிச் சீவிக்குமிடத்து ஆன்மாவும் அவற்றினுடைய சொரூபங்களாயே நிற்குமாதலால் அவற்றினுடைய வுண்மை யைப் பார்க்குமிடத்துச் சிவசொரூபத்தை யொழிந்து பார்த்

து நீங்கவொண்ணுதாகையாற் றன்னுடையபணி யவனுடைய பணியென்னுமிடத்துச் சிவசொரூபமாயே நிற்குமென்பது கூறுகின்றது.

இ-ள். நா ன வனென் றெண்ணி னர்க்கு நாடுமுள முண்டாத ரு னென வொன்றி ன்றியே தா ன துவாய். எ-து.

நா னவனுக்குச்செய்தேன், அவ னெனக்குச்செய்தா னென்று கருதுமவற்கு; கருதத்தக்க ஆன்மபோத முண்டாம். அப்படி ஆன்மபோதஞ் சீவிக்குமாதலாலே சிவன் தானென்கைக்கு ஏகதேசமும் அவ்விடத்தில்லையாய், அந்த வான்மாவிலே ஆன்மாவாய் நிற்பன்.

என்றது, யான் செய்தேன் பிறர் செய்தார் யென்னறியா னென்போற்கு ஆன்மபோதமே சீவித்துநிற்பது, அப்படியான்மபோதஞ் சீவிக்குமிடத்துச் சிவன் ருேன்ருமனிற்ப னென்றுமாம்.

நானெனவொன் றில்லென்று தானே யெனும வனை. எ-து.

யானென வொன்றில்லையென்று மெல்லாஞ் சிவன்ருனே யென்னுமவர்களை.

என்றது, நானும் பிறர்க்குச் செய்யமாட்டேன் பிறருமெனக்குச்செய்யமாட்டார், என்னது மில்லை பிறரதுமில்லை, நான்செய்வது மொன்றில்லை பிறர்செய்வது மொன்றுமில்லை, எனக்குச் செய்வானுஞ் சிவனே யெல்லாஞ் சிவனுடைய செயலேயென்று பிறர்க்குச்செய்வானுஞ் சிவனே எனநிற்கின்றவர்களென்றதாம்

தன் னடிவைத் தில்லென்று

அப்படிச் சிவபோதஞ் சீவித்தலையுடையவர்களைத் தன்னுடைய திருவடியிலே யடக்

தானு மிறை. எ-ம். கிக்கொண்டு யிவனுடைய செயலெல்லா மென்னுடையசெயலென்றும், இவனுக்குச்செய்ய்வதெல்லா மெனக்குச்செய்வதென்றும், அவனுடைய போதமில்லையென்றும் தானாய் நிற்பன் சிவன். எ-று.

"இவனுலகிலிதமகிதஞ்செய்ததெல்லாம்""யான்செய்தேன்பிறர்செய்தாரென்னதியானெனன்னும்" என்றார்வழிநூலார். சித். கO—சூ, க - உ—செ.

இது சம்பிரதாயதிட்டியா லறிவித்ததெனவறிக. (க)

---

சிவஞானமுனிவர் உரை.

எ-து. உ-ம். எ-னின். அங்ஙனம் பகுத்து நின்றுணருமுணர்வை மயக்கவுணர்வென்றதென்னையென்பாரை நோக்கி ஏதுவை வலியுறுத்துத லுதலிற்று.

இ-ள் நான் அவன்என்று எண்ணினர்க்கு நாடும் உளம் உண்டாதல் தான் எனஒன்று இன்றியே தான் அது ஆய். எ-து. யானென்றும் அவனென்றும் ஞாதிரு ஞேயங்களைப் பகுத்துணர்ந்து நிற்பார்க்கும் யானேயென நிற்பார்க்குப்போல அவ்வாறெண்ணுகின்ற உயிருணர்வு முனைத்துத் தோன்றுமாகலான், அவ்வழித் தானென்றொருமுதல் காணப்படுமாறின்றித் தான் அவ்வுணர்வே யாய்—நான் என ஒன்று இல் என்று தானே எனுமவரைத் தன் அடி வைத்து இல் என்று தான் ஆம் இறை. எ-து. இனி யானென்றொருமுதல் காணப்படுமாறில்லையென்றுணர்ந்து முழுவதுந் தானேயெனக் காணுந் தெளிவுடையாரைத் தனது திருவடிவியாபகத்துள் அடங்கி நிற்கச் செய்து அவ்வாறேயாவன் முதல்வன். எ-று.

ஆய் ஆம் எனவியையும். ஆயாமென்புழிச் செய்தனெச்சம் "நள்ளார்க்கு நஞ்சொத்து நட்டார்க் கமிழ் தொக்குமிவன்" என்றாற்போலத் தன்வினையாத லுணர நின்றது.

நாடுமுள முண்டாயவழித் தானிலனாதலும் அஃதில்வழித் தானுளனாதலும் யாங்ஙனம் பெறுதுமெனிற் காட்டுதும்:—தூலவொளியாகிய கண்ணொளியுஞ் சூக்குமவொளியாகிய விளக்கொளியும் அத்துவிதமாய்க் கலந்து நிற்குநிலை உற்று நோக்கவல்லார்க்குப் பிரித்தறிய வாராமையிற் கண்ணொளியாக்காணுங்காற் காணுந்தன்மையே முனைத்துத் தோன்றுமாகலின் அவ்வழி விளக்கொளி இருந்தும் இல்லைத்தானே, அன்றி விளக்கொளியாகக் காணுங்காற் காட்டுந்தன்மையே முனைத்துத் தோன்றுமாகலின் அவ்வழிக் கண்ணொளி இருந்தும் இல்லைத்தானே; இனிக் கண்ணொளியும் விளக்கொளியுமெனப் பகுத்துக் காணப்புகினும் காணுந்தன்மையே முற்பட்டுத் தோன்றுதலின் அவ்வழி விளக்கொளியைத் திரிவுபுலனாக் காட்சிப்படுவதல்லது தெளிவுபுலனாக் காட்சிப்படுமாறில்லை. அதுபோலத் தூலவறிவாகிய உயிருஞ் சூக்குமவறிவாகிய சிவமும் அத்துவிதமாய்க் கலந்து நிற்குநிலையும் பிரித்தறிய வாராமையின் ஆண்டும் இவ்வாறே கண்டுகொள்க.

எண்ணினர்க்கென இறந்தது தழீஇயவெச்சவும்மை சந்திநோக்கி மகரங் கெட்டுநின்றது.

இக்கருத்துப்பற்றியன்றே "கண்ணொளி விளக்கின்சோதி கலந்திடுங் கருத்தொன்றன்றே" எ-ம். † "காண்பானுங் காட்டுவதுங் காண்பதுவு நீத்துண்மை—காண்பார்க ணன்முத்தி காணார்கள்—காண்பானுங்—காட்டுவதுங் காண்பதுவுந் தண்கடந்தைச் சம்பந்தன்—வாட்டுநெறி வாராதவர். " எ-ம். கூறினார் புடைநூலாசிரியரும். * சிவப்பிரகாசம், உண்மை. அ.

கண்ணொளிவிளக்களித்து. † வினுவெண்பா. கக. அற்றேல் இவ்விரண்டனுள் யாது திரிவுகாட்சி யாது தெளிவுகாட்சியெனின்—கண்ணொளியோடு கூடியவழியும் இது விளக்கொளி இது ஞாயிற்றொளி இது திங்களொளியென அவ்வப்பெற்றியவேயாய்க் காணப்படும் விளக்கொளி முதலியவற்றின் காட்சி தெளிவுகாட்சியெனவும், அவ்வொளிகளோடு கூடியவழி அவ்வாறுருபெற்றித்தாய்க் காணப்படாத கண்ணொளியை வேறு காண்டல் திரிவுகாட்சியெனவும், கண்கூடாக விளங்கிக் கிடத்தலின் இவ்வாறே பொருளினும் வைத்துணர்ந்துகொள்க. இவ்வாறன்றி, விளக்கொளிமுன்னர்க் கண்ணொளி சத்தி மடங்கிப்போதலின் அது விளக்கொளியைப்போலக் காட்சிப்புலனாகாதாயிற்றென்னுமோவெனின்; என்னும்: என்னை? கண்ணொளி சத்திமடங்கிற்றாயின் விளக்கொளி காட்சிப்புலனாதல் பிறிதொன்றாற் பெறப்படாமையின். அற்றேல், மின்மினித் துணையாயினுந் தானே விளங்கும் இயல்பில்லாத கண்ணுக்கு ஒளிக்குணமுண்டென்பதற்குப் பிரமாணமென்னையெனின்;—அறியாது கடாயினாய்: ஆகாயத்தின்கண்ணதாகிய சத்தகுணம் வியஞ்சகத்தானன்றித் தினைத்துணையானுந் தானென விளங்குமாறின்மையின் அதுபற்றி எதிரொலிவடிவாய் அவ்வோசையை ஆகாயத்தின் குணமன்று வியஞ்சகப்பொருளின் குணமென்பார் யாருமில்லை. அதுபோலக் கண்ணின்கண்ணதாகிய ஒளியும் வியஞ்சகமுள்வழி விளங்கி அல்லுழி விளங்காமைமாத்திரையே பிறிதில்லையாகலான் அதனைக் கண்ணின் குணமன்றென்றல் அறிவிலாதார் கூற்றேயாமெனவும், அக்கண்ணொளியாவது தன்னை விளக்குதற்குரிய வியஞ்சகப்பொருள் ஏகதேசமாயின் ஏகதேசமாய்விளங்கியும் அது வியாபகமாயின் வியாபகமாய் விளங்கியும் நிற்பதோரியல்பிற்றெனவும் உணர்க. அஃதங்ஙனமாக, "கண்ணொளி விளக்கின் சோதி கலந்திடும்" வ

ன்றதற்குப் பிரமாணமென்னை: ஒருவிடயத்தின் வீழ்ந்த பலகண்ணொளிகட்குத் தம்முள் இயைபில்லாதவாறுபோல ஒருவயிற்பட்ட கண்ணொளிவிளக்கொளி கட்குத் தம்முள் இயைபில்லையென்றலே பொருத்தமுடைத்துப்போலுமெனின்,—அஃதறியாதார் கூற்றேயாமென்றொழிக. என்னை? ஒரு விடயத்தின் வீழ்ந்த கண்ணொளிகள் தம்முள் ஒன்றனையொன்று காணுமாறுமில்லை காட்டுமாறுமில்லை யாகலான், அவை தம்முட் கலத்தற்கு ஓரியைபின்றென்பது ஒக்கும். அவ்வாறன்றிக் கண் விளக்கினைக் காண்டலும் விளக்குக் கண்ணுக்குக் காட்டலுமாகிய இயைபுண்மையானும், இவ்வியைபு தம்முட் பெறப்படாத கண்ணொளி முதலாயின ஈண்டைக்கு உவமையாதல் செல்லாமையானும், இந்திரியங்கள் தத்தம்விடயத்தோடியைந்தன்றிச் சந்நிதிமாத்திரையான் அவற்றையறிதல் செல்லாதென்பது ஆகமங்களுக்கெல்லாந் துணிபாகலானும், அத்தன்மையவாய கண்ணொளி விளக்கொளிகட்குத் தம்முட் கலப்பில்லையென்றல் காண்டல் விரோதமாகலின் இவ்வாறு உவமைக்கோதியனவெல்லாம் பொருட்கண்ணு மாமாறுணர்ந்து உய்த்துணர்த்துக்கொள்க. அற்றேல், ஈண்டெடுத்துக் காட்டிய கண்கள் தம்முள் ஒன்றனையொன்று காணுமாறின்மைபோல, உயிர்களுந் தம்முள் ஒன்றனையொன் றறியுமா றில்லைபோலுமெனின்; அறியாது கூறினாய்: கண்கள் தம்முள் ஒன்றுமொன்று காணப்படுமா றில்லையென்றது விளக்கும் விடயமுங் காணப்படுமாறுபோல வேறிறைபந்து தனிப்பொருளாய்க் காணப்படுமா றில்லையென்ற துணையேயன்றிப் பிறிதின்மையின், விளக்கொளியைக் கண்காணுங்கால் அதுவதுவாய் நின்று காணும் பெற்றித்தாய்த் தன்னையும் அவ்விளக்கொளி வண்ணமாய்க் காண்டலுண்டென்பது கண்கூடாக அறியக்கிடத்தலின், ஏனைக்கண்களையும் அவ்வாறு காண்டலமையுமாகலான் அதுபோலத் தம்முட் டனித்தியைபி

ல்லாத உயிர்களுஞ் சிவத்தோடியைந்து நின்று தம்மையும் பி றவுயிர்களையும் இவ்வாறுணர்தல் அமைவுடைமையானென்ப து "நாடியரன்—றன்னாலே தன்னையுங் கண்டு தமைக்காணு ரென்று மெனவறி வார்." எ-ம். * "தன்னாலே தனையறிந்தா ர்—றன்னையுந் தானே காணுந் தானதுவாகி நின்றே." எ-ம். * சிவப்பிரகாசம் உண்மை. உஉ. "தன்னறிவதனு" "அறிவறிவ டங்கி—மன்னிட வியாபியாய வான்பயன்ருன்றும்" எ-ம். "எ ன்னையுங் கண்டேன் பிறரையுங் கண்டே னின்னிலையனைத்தை யுங் கண்டேனென்னே—நின்னைக் காணு மாந்தர் தம்மையுங் காணுத் தன்மை யோரே" எ-ம். பிறண்டும் இவ்வாறுதும் அ நுபவமுடைய தேசிகர் திருவாக்குக்களானும் இவ்வுண்மை யு ணர்ந்துகொள்க.

 சഠ—கு, முதலதிகரண முடிந்தது.

---

நாமல்ல விந்திரிய நம்வழியி னல்லவழி
நாமல்ல நாமு மாறுடைமை - யாமென்னி
னெத்தநுவி னின்று மிறைபணியாக் கில்லைவினை
முற்செய்வினை யுந்தருவான் முன். (உ)

இது, இந்திரியங்களு நம்மதல்ல, நாமுஞ் சுதந்திரமுடை யோமல்ல, நம்முடைய செயலெல்லாஞ் சிவன்செயல் என்பா ர்கு மேல் வினை யேருதென்கின்றது.

| | |
|---|---|
| இ-ள். நாமல்ல விந்திரியம். எ-து. | இந்திரியங்கள் யாவையு நாமல்ல. |
| நம்வழியி ன | இந்திரியங்கள் விடயத்தின்மேற் செல்லு |

ல்லவழி. எ-து. இன்றசெலவும் நம்முடைய செயலல்ல.

நாமல்ல மா மும். எ-து. — நாமு நமக்கென வொரு சுதந்தரமுடையமல்ல.

அரனுடைமை யாமென் னின். எ-து. — சிவனுடைய வடிமையாவே மென்று சொல்லிட.

எத்தநுவி னின்று முற்செய் வினையுந் தருவா ன் முன். எ-து. — நாமெநதெந்தத் தேகத்தையெடுத்தே மங்கந்தத் தேகத்தே தானு மெம்முடன் கூடி நின்று முன்புசெய்த வினைகளை யறிந்து புசிக்குமிடத்துக் கூட்டுவானுடைய வருளேதாரகமாக நில்.

இறை பணி யாக்கு. எ-து. — நீ செய்யுஞ் செயலெல்லா மிறைவன் செயலென்றுவை.

இல்லை வினை. எ-து. — மே லாகாமியகன்ம மேரு. எ-று.

நாமல்ல விந்திரிய நம்வழியி னல்லவழி - நாமல்ல நாமுமரனுடைமை-யாமென்னி, லில்லைவினையென்றும்; அப்படிநிற்கக்கூடாதாகில், முன்னெத்தநுவினின்று முற்செய்வினையுந்தருவா னிறைபணியாற் கில்லைவினை என்றும், பொருளுரைப்பினுமாம்.

இல்லைவினை என்பதனை யிப்பொருட் கிரண்டிடத்துங் கூட்டுக. "இந்திரியமெனைப்பற்றி நின்றே" என்றார்வழிநூலார். சித் - க0—கு, ௩—செ. எனவே, முன்புசெய்தவினைகள் தான்செய்தாளுகவும் பிறர்செய்தாராகவும் கூறுதலால் ஏதியது, அப்படியின்றித் தாந்தாஞ்செய்த கன்மங்களைப் புசிக்குமிடத்து

ச்சிவனேகூட்டிப் புசிப்பிக்கையா லவன்செயலைக்கண்டு நிற்கப் பிராரத்தம் புசிக்கிறதொழிந்து மேலைக்கு வினையேறாதென்றது.

இதுசம்பிரதாயதிட்டியாலறிவித்தது. (உ)

---

சிவஞானமுனிவர் உரை.

எ-து. உ-ம். எ-னின். உடம்பொடு நிற்பார் நுகர்தற்கு வேண்டப்படும் பிராரத்தவினையும் அதுபற்றியேறும் ஆகாமியவினையும் ஒருதலையானுண்மையின், இறைபணி நிற்றல்பற்றி அவை பிரவேசியாவென்றல் அமைவுடைத்தன்றுபோலுமென்பாரை நோக்கி ஏதுவை வலியுறுத்துதனுதலிற்று.

இ-ள். இந்திரியம் நாம் அல்ல. எ-து. வினைகளை நுகர்தற்கும் ஈட்டுதற்குங் கருவியாகிய இந்திரியங்கள் மாயேயமாவனவன்றி யாமாவனவல்ல—நம் வழியின் அல்ல. எ-து. அவை தொழிற்படுதலும் முதல்வன்வயத்தானன்றி நம்வயத்தானல்ல—வழிநாம் அல்ல. எ-து. வினைநிகழ்ச்சிக்கு வாயிலாகிய விடயாதிகளும் அவ்விந்திரியங்கள்போலமாயேயமாவனவன்றி யாமாவனவல்ல. அவை சேட்டித்தலும் முதல்வன்வயத்தனவன்றி நம்வயத்தனவல்ல—நாமும் அரன் உடைமை. எ-து. அவற்றோடியைந்துநின்று வினைகளை யீட்டுதற்கும் நுகர்தற்கும்வினைமுதலாகிய யாமும் ஞானச்செய்திகளை முதல்வன் விளக்கியவழி விளங்கி அல்வழி விளங்குமாறின்மையான், அம்முதல்வன் வயத்தராவேமல்லது சுதந்திரராவேமல்லேம்— ஆம் என்னில். எ-து. என்றிங்ஙனம் பசுபாசங்களதியல்பை உள்ளவாறுணர்ந்து செய்வனவெல்லாம் அவனருளின் வழி நின்றுசெய்யுஞ் செயலாகக் கண்டுகொண்டிருப்பாராயின்,—இறைபணியார்க்கு எத்தறுவின் நின்றும் வினை இல்லை. எ-து. இவ்வடிமைத் திறமுடையார் எவ்வுடம்பினின்று எவ்வினைகளைச் செய்யினும் அவ

ர்க்கு அவை பந்தமாதலில்லை—முன் செய்வினையும் தருவான் முன். எ-து.' அவ்வாகாமியவினையை அவினாபாவமாய் உடன் கொண்டு வருவதாகிய பிராரத்தவினையுந் தன்னைக் கூட்டுவிக்கு முதல்வன் சந்நிதியின் உடலூழாய்க் கழியும். எ-று.

நம் வழியினல்லவென்பது வழியென்பதனோடு கூட்டியுரைத்துக்கொள்ளப்படும்.

மகனன்று குற்றியென்றாற்போல அன்மைச்சொற்றழுவப்படும் பொருண்மேனின்றது. "அன்மைக் கிளவி வேறிடத் தானும்" என்பதோத்தாகலின்.

நின்றும் உம்மைசிறப்பு; ஏனையும்மைகள் இறந்தது தழீஇயின.

சஞ்சிதவினை தீக்கைசெய்த மாத்திரையே எரிசேர்ந்த வித்துப்போலக் கெட்டொழிதலின், ஈண்டு முற்செய்வினை யென்றது ஏற்புழிக்கோடலாற் பிராரத்தவினை மேற்றாயிற்று.

தருதல் இடவழுவமைதி.

கழியுமென்பது சொல்லெச்சம், உடலூழாயென்பது அவாய்நிலையான் வந்தது.

---

சார்ந்தாரைக் காத்த றலைவர் கடனாதல்
சார்ந்தாரைக் காத்துஞ் சலமிலனாய்ச் - சார்ந்தடியார்
தாந்தானாச் செய்துபிறர் தங்கள்வினை தாங்கொடுத்த
ஆய்ந்தார்முன் செய்வினையு மாங்கு. [ல்

இது, சிவன் பக்ஷபாதியல்ல வென்கின்றதும், சிவன்செய

லொழிந்து வேறுசெயலில்லை யென்பாற்கு மேல்வினை யேறு தென்பதுங் கூறுகின்றது.

இ-ள். சார்ந்தாரைக் காத்த றலைவர் கடனாதல். எ-து. அடைந்தவர்களை யஞ்சவென்றிரக்ஷிக்கை கத்தாவுக்கு முறைமையாதல். அதனாலே,

சார்ந்தாரைக் காததுஞ் சலமிலனாய். எ-து. அடைந்தவர்களை யிரக்ஷித்து (மடையாதவர்களை யிரக்ஷியாதிருப்பினு மவர்களுடன்) வெறுப்பின்றி யிருப்பன்.

உம்மை-எதிர்மறை.

எனவே, யவரவர் கன்மங்களைப் புசிப்பிக்கின்றான், கன்மந் துலையொத்துத் தன்னையடைந்தோரையிரக்ஷிக்கின்றா னென்பதாயிற்று.

சார்ந்தடியார் தாந் தானாச் செய்து. எ-து. தன்னையடைந்த வடியார்களைத் தன்னுடைய சொரூபமேயாக்கி.

பிறர்தங்கள் வினை தாங்கொடுத்தல். எ-து. தன்னையடையாத பிறருடைய வினைகளைப் புசிக்கும்படி கொடுத்தலை

ஆய்ந்தார்முன் செய்வினையு மாங்கு. எ-து. ஆராய்ந்தவர்களிடத்து மேற்செய்யும் வினையில்லையாம்; அவ்விடத்து. எ-று.

அவ்விடத்தென்றது பிராரத்தகன்மம் புசிக்குமிடத்து. அதாவது, என்னுடையசெயலெல்லா முன்னுடையசெயலேயெ

ன்று நீ யென்னுடையவிடத்தேநின்று செய்விக்கிருய் செய்வி ன்ருயென்று, தன்பணியறுக்கவென்றவாம்.

பிறர்தங்கள்வினை தாங்கொடுத்தலென்பதற்கு, பிறர்வினை யாற் பிறர்க்குத் தாங்கள் வினையாற் றமக்குப் பிறர்கொடுத்த லென்று பொருளுரைப்பினுமாம் "சலமிலனுய்ஞானத்தாற்ற னை" என்ருர்வழிநூலார். சித் - கo—சு, ச—௪௪.

இது, சம்பிரதாயதிட்டியா லறிவித்தது. (௩)

---

சிவஞானமுனிவர் உரை.

எ-து. உ-ம். எ-னின். இறைபணியார்க்கு உளவாகிய முற் செய்வினை ஏனையோர்க்குப்போலன்றித் தருவானமுன்ருயொ ழியுமாயின், அங்ஙனம் இருவேறு வகைப்படச்செய்யு முதல்வ ன் நடுவுநிலைமையின்றிக் கோட்டமுடையனெனப்பட்டு வழு வாம்போலுமென்பாரை நோக்கி வழுவன்மை கூறி அதனை வ லியுறுத்துத னுதலிற்று.

இ-ள். சார்ந்தாரைக் காத்தல் தலைவர் கடன் ஆதல் சார்ந்தா ரைக்காத்தும் எ-து. தம்மாட்டு அடைக்கலமெனச் சார்ந்தா ரை அவர்க்கு வருமேதத்தை நீக்கிக் களைகணுய்நின்று காப்ப து தலைமைக்குண முடையராயினுர்க்குக் கடமையாகலான், மு தல்வன் ஏனையோரை யொழித்துத் தன்னைச் சார்ந்தாரை அ ங்ஙனம் பாதுகாப்பானுகியும்—சலம் இலன் ஆய். எ-து. அது பற்றிக் கோட்டமுடையனல்லனுய்—சார்ந்து அடியார் தாம் தான் ஆச்செய்து பிறர் தங்கள் வினை தான் கொடுத்தல். எ-து. தன்னைச்சார்ந்து தன்னடித்தொழில் செய்வார் தன்போல் ஆ காமியவினைத்தொடக்கிலராகச் செய்து பிறர்க்கு வருமாகா மிய வினையை அவர்க்குக் கொடுப்பானுகலான்,—ஆய்ந்தார் மு

ன்செய்வினையும் ஆங்கு. எ-. அவ்விருதிறத்தோர் மாட்டும் நு ணுகி வந்து கூடுவதாய பிராரத்தவினையும் அவ்வாறே செய்வோ ர் செய்திக்குத் தக்க பயனாய் இருவேறுவகைப்பட்டுச் செய் வன். எ-று.

இறைபணியார்க்கில்லை வினை முற்செய்வினையுந் தருவான் முன்னென்றதுபற்றி ஏனையோர்க்கு நியதி செய்தூட்டி இறை பணியார்க்கு வினையின்றாகச் செய்தல் இறைவனுக்கு நடுவுநி லைமையன்றென்பாரை நோக்கி, அதனை உடன்பட்டே அமை திகூறுவாராய், சார்ந்தாரைக் காத்தறலைவர் கடன் எனப்ப ழமொழியெடுத்துக்காட்டி, இஃதவ்வாறு நடுவன்மையுமன்றெ ன வலியுறுத்துவார், சார்ந்தடியார் தாந்தானுச்செய்து பிறர் தங்கள் வினை தான் கொடுத்தல் எனவேறுவமையெடுத்துக்கா ட்டினார். சார்ந்தடியார் தாந்தானுச்செய்து பிறர் தங்கள்வி னைதான் கொடுத்தலுண்டென்பதூஉம், அது கோட்டமின்று ந டுவு நிலைமையே யாமென்பதூஉம் ஏனைச் சமயத்தார்க்கும் ஒப் பமுடிந்தமையின, அஃதீண்டைக் குவமையாயிற்று.

உம்மை சிறப்பின்கண் வந்தது.

சலம் வஞ்சனை; அஃது ஈண்டுக் கோட்டத்தின்மே னின் றது.

சார்ந்தென்னும் வினையெச்சம் அடியாரென்னும் வினைக்கு றிப்பு முற்றுப்பெயர் கொண்டது. சார்ந்தவென்னும் பெயரெ ச்சத்தகரந் திரிந்து முடிந்ததெனினு மமையும்.

பின்வந்த தாமுந் தானும் அசை.

ஆதல் கொடுத்தலென்புழி ஆனுருபு விரித்துரைக்க.

தானுச்செய்தென்புழி ஆக்கம் உவமவுருபின்பொருள் குறி த்துநின்றது.

பிராரத்தவினை அதிசூக்குமமாய் வருவதாகலின் அதனியல்பறிதல் அறிதென்பார் ஆய்ந்தார் முன் செய்வினையு மென்றார்.

உம்மை இறந்தது தழீஇயிற்று.

ஆர் வினைத்தொகை. ஆய்தல் அப்பொருட்டாகல் மேற்காட்டினும்.

---

இங்குளி வாங்குங் கலம்போல ஞானிபால்
முன்செய்வினை மாயை மூண்டிடினும் - பின்செய்வினை
மாயையுடனில்லாது மற்றவன்றன் மெய்ப்பொருளே
யாய வதனாலுணரு மச்சு. (ச)

இது, சஞ்சிதவினை தீக்கையிலே போம், பிராரத்தம் புசிக்கவேண்டும், மேலாகாமிய மேறுது ஞானவான்களுக் கென்கின்றது.

இ-ள். இங்குளி வாங்குங் கலம்போல ஞானிபால் முன் செய்வினை மாயை மூண்டிடினும் பின்செய்வினை மாயையுடனில்லாது. எ-து.

தீக்கையாலே சஞ்சிதகன்மங்களைப் புசிக்கப்பட்ட ஞானியிடத்தே பெருங்காயத்தை யொருபாத்திரத்தே நிறுத்திட்டுவைத்து அந்த நிறைக்கொக்க வாங்கிவிட்டாலு மதினுடைய நாற்ற மதனிலே நின்றாற்போல, முன்பு செய்ததா யிந்தத்தேகத்துக்கமைத்த பிராரத்தம் புசிக்கின்றதொழிந்து பின்புசெய்யுங் கன்மமு மதற்கேற்ற தேகமும் பொருந்தி மீண்டும் புசித்தற்கு பிராரத்த முண்டாகா. அஃதெத்தாலென்னில் ?

மற்றவன்றான் [மற்று-அசை.] அந்தஞானிதான் சிவ மெய்ப் பொருள் சொரூபமேயாய் நின்றவதனால். ளேயாயவதனா
ல். எ-து.

உணருமச் சத உன்றையுணருமளவிற் சிவகரணமாய்நின் னால். எ-து. றுணருமேகிபவித்தால். எ-று.

அதனாலென்பதனை யிரண்டிடத்துங் கூட்டுக.

இப்படி இந்த மூன்றுவெண்பாவாலும் ஆகாமியகன்மங்களை நீக்குமுறைமை கூறியவாறறிக. எனவே, தேகாந்தத்தே முத்தியென்பது கூறினாராயிற்று. "இங்குத் தங்கிப்போம்பாத் திரமுங் குலாலன்வினை தவிர்ந்த சக்கரமுங் கந்திந்துச்சுழலு மா" என்றார்வழிநூலார். சித் - ௧0—சூ, ௬—செ. 'அங்கி'

சஞ்சிதந் தீக்கையாலேபோம், போனாலும் பிராரத்தம் நிற்கும்,அதுபுசிப்பற்றவெல்லையிலே வீடுபெறுமென்னும்பக்கத்துக்கு;பெருங்காயம்வாங்கினர் பாத்திரமு மதனாற்றமு மதுதகர்ந்தா லந்தனாற்றம் வேறொன்றிற்றோற்றுமென்பதுவும் சபக்கமாயினவாறறிக. (௪)

---

சிவஞானமுனிவர் உரை.

எ-து. உ-ம். எ-னின். இறைபணி நிற்பார்க்குப் பிராரத்த வினை தாக்குதலுண்டென்பதற்கு "தினைத்துணையேனும்பொறேன் றுயராக்கையின் றிண்வலையே." என்றற்றொடக்கத்தான் அவர் கூறுந் திருவாக்குகளே சான்றாகலின், அஃதவர்க்குச் செய்வோர்செய்திப் பயனை யொழியுமென்றல் அமையாமையின் அஃதுண்டாகவே அதுபற்றி நிகழும் ஆகாமியமும் பிறவிக்கு வித்தாய் நிலைபெறுதலுண்டுபோலுமென்பானை நோக்கி ஆ

ண்டுப் பிராரத்தவினை தாக்குதற் கேதுக் கூறி அதுபற்றிச் செய்வோர்செய்திப் பயனுயொழிதற்கு இழுக்கில்லையென வலியுறுத்துத னுதலிற்று.

இ-ள். இங்குளி வாங்கும் கலம்போல. எ-து. தன்பால் வைத்தெடுக்கப்பட்டொழிந்த பெருங்காயத்தினின்றும் அதன் வாசத்தை வாங்கிக்கொள்ளும் பாசனத்தின்கண் அவ்வாசம் மங்கிப்போய் மெலிதாய்க் கந்திக்குமாறுபோல—ஞானிபால் முன் செய் வினை மாயை மூண்டிடினும். எ-து. இறைபணி நிற்கும் தத்துவஞானிக்குப் பயிற்சிவயத்தான் ஒரோவழி நாடுமுள முண்டாதலும் உண்மையின், அதுபற்றிப் பிராரத்தவினையும் அதற்கு வாயிலாகிய உடம்புமுதலிய மாயையும் மங்கிப்போய் வாசனைமாத்திரையாய் மெலிதாய் வந்து மூளுமாயினும்—பின்செய் வினைமாயையுடன் நில்லாது. எ-து. அம்மூட்சிபற்றி ஒருதலையா னிகழ்வதாகிய ஆகாமியவினை மேலைக்குவிதாய் நிலைபெற்று முறுகுதலின்றித் தனக்கு வாயிலாகிய மாயையத்தோடு கெட்டொழியும்—அவன் தான் மெய்ப்பொருளே ஆயவதனுல் மற்று அச்சு ஊரும். எ-து. இறை பணிநிற்கும் அவன் சத்தாயுள்ள சிவமேயாயவதற்குல் ஒரோவழி அவ்வாசனைபற்றிப் பிறழவரினும் பிறழவொட்டாது அவ்வச்சினையே நோக்கி நிற்பனுகலான். எ-று.

ஒளி இருளைத் துரக்குமாறுபோல அவ்வுணர்வு அவ்வாகாமியத்தைத் துரக்குமென்பதாம். "தொல்லையில் வருதல்போலத் தோன்றிரு வினையதுண்டே—லல்லொளி புரையுஞானத் தழலுற வழிந்துபோமே" எனப் புடைநூலாசிரியரோதிடதூஉம் அது. சிவப்பிரகாசம் உண்மை. ௩௧ "எல்லையில்...

உளி ஐந்தாம்வேற்றுமை யுருபுபட நின்றது. "ம... ன் மரபுளி வழாஅ—வந்தணர் வேள்வி" என்றூர்யே...

றுகரக்கேடு இலேசாற்கொள்க.

வாங்குதற்குச் செயப்படுபொருள் அவாய்நிலையான் வந்தது.

மூண்டிடினுமெனவே, மூளுதல் ஒருதலையன்றென்பது பெற்றும்.

மாவை ஆகுபெயர்.

மற்று வினைமாற்றின்கண் வந்தது.

தானென்பது அநுவதித்தற்கண் வந்த இடைச்சொல்.

பிறழ விடாமைபற்றி மெய்ப்பொருளை அச்சாக உருவகஞ்செய்தார்.

---

நண்ணனல் வேவாத நற்றவர் தம்மினும்
பண்ணமர் மாச்செலுத்தும் பாகரினும் - எண்ணி
யரனடி யோர்பவ ராம்புலனிற் சென்று
மரநடி னீங்கா ரதற்கு. (ரு)

இது, ஞானிகள் விடயங்களிலேபட்டு மயங்காரகளென்பது கூறுகின்றது.

இ-ள். நண்ணனல் வேவாத நற்றவர் தம்மினும். எ-து. அக்கினிக்குள்ளேயிருந்தாலு மிருக்கின்ற நெருப்பில்வேகாத நல்ல அக்கினித்தம்பனையுடைய தபோதனரைப்போலவும்

பண்ணமர் மாச்செலுத்தும் பாகரினும். எ-து. பண்ணியமைந்த நல்லபுரவியைச் செலுத்துகின்ற பாகரைப்போலவும்

என்னீ யர பதிபசுபாசத்தை யாராய்ந்துணர்ந்து ப ணடி யோர்பவு தியினுடைய திருவடிநீழலொழிந் தொரு ர். எ-து. நிழலில்லையென்று நினைப்பவர்.

ஐம்புலனிற் ஐந்துவிடயங்களிலே சென்றார்களாயி சென்று மரண னு மதனிலே மயங்கி ஞானவிரங்குலைந்து டி நீங்கா ரதற் பதியுடைய திருவடியை நீங்கார்கள். எ-று. கு. எ-து.

எனவே, திருவடியே தாரகமாக நிற்பார்க்கு வினையேறாதெ ன்றும், இந்திரியங் கைகடந்துசெல்லாதுமீளுமென்பதுவுங் கூறி யபக்கத்துக்கு, அக்கிநித்தம்பனையுடையோரும் புரவிசெலுத் துவோருஞ் சபக்கமாயினவாறறிக. எனவே, ஞானவீர ரொ ப்படியிருந்தாலு மவர்க ளிந்திரியங்களிற் படாரென்றதாம். "அங்கித்தம்பனைவல்லாற்கனல்சுடாதாகும்", "நாடுகளிற்புக் குழன்றுங்காடுகளிற்சரித்தும்". என்றார் வழிநூலார். சித் - கo—கு, கூ - ரு—செ. ஓர்பவர் நீங்கா ரைம்புலனிற்சென் றும் நற்றவர்போலவும் பாகர்போலவு மெனவறிக. (ரு)

---

சிவஞானமுனிவர் உரை.

எ-து. உ-ம். எ-னின். முன் செய்வினை மாயை மூண்டவழி யும் அந்நிலையிற் பிறழாத அவ்வச்சிவேயே யுணர்ந்து நிற்றல் யா ங்ஙனமென்பாரை நோக்கி உவமைமுகத்தான் அதனை வலியுறு த்துத லுதலிற்று.

இ-ள். நண் அனல் வேவாத நற்றவர் தம்மினும் பண் அமர் மாச் செலுத்தும் பாகினும். எ-து. அங்கித்தம்பனத்தால் நண் ணனல் வேவாமைக் கேதுவாகிய நற்றவமுடையார் அவ்வனலு ட் இடப்பினுந் தந்திறனினீங்காத வாறுபோலவும், பண்ணுதல

மரப் பரிமாவூர்தற்குரிய பாகனூல் கற்றுவல்லார் அப்பரிமாவி ன் வேகத்துட்படினுந் தந்திறனினீங்காதவாறுபோலவும்—எ ண்ணி அரன் அடி ஓர்பவர். எ-து. ஐம்புலன்களில் அகப்படா மைக்கு உபாயம் யாதென்றெண்ணி முதல்வன் றிருவடியாகிய அச்சையுணரவல்லார்—ஐம்புலனில் சென்றும் அதற்கு அவர் தி றன் நீங்கார். எ-து. முன் செய்வினை மாயை மூட்சிபற்றி ஐவ கைப்பட்ட விடயங்களிற் சென்றாராயினும் அதனால் அவர் த ந்திறலிற்றீர்ந்து பந்தத் தொடக்குறுவாரல்லர். எ-று.

பொருள்வினை உவமையினுஞ் சென்றியைந்தது.

நண்ணனல் கீழ்நீர்போல முன்பின்னாகத் தொக்க ஆறும் வேற்றுமைத்தொகை. நள்ளனல் நண்ணனலென மரீஇயிற்று; "நீணுலகெலாம்," என்றாற்போல. தம்மால் நண்ணப்படும் அன லென்றுரைப்பினு மமையும். திருநாவுக்கரசுநாயனார் "கோயி ற் குறுந்தொகை—ச.

பண்ணுதல் கதிப்பித்தல்.

இன்னிரண்டும் உவமவுருபுகள்.

உம்மை எண்ணும்மை. சென்றுமென்னு மும்மை சிறப்பு.

அதற்கென்பது உருபுமயக்கம்.

---

சுதசத்தா மெய்கண்டான் றன்னு ளுணரி
னிதமித்தல் பாசத்தி னின்றிக் - கதிமிக்
கெரிகதிரின் முன்னிருள்போ லேலாவசத்தி
னருகணையார் சத்தணைவா ரங்கு. (சூ)

இ-து, ஞானவான்களிடத்து மாயாகன்ம மேலிடாதென் கின்றது கூறுகின்றது.

இ-ள். சத்சத்தா மெய்கண்டான். இது சத்தினுடைய வுண்மை இது அசத்தினுடைய வுண்மையாமென்றுகண்டு நாமிவையிரண்டினுமல்ல சதசத்தாயிருந்தேமென்றுதம்மைத் தரிசித்தவர்.
எ-து.

எனவே, பதிபசுபாசங்களைத் தரிசித்தவ ரென்பதாயிற்று.

தன்னுணரில். எ-து. யாதொரு பொருளையு மான்மபோதத்தாலே யுணராமற் சிவபோதத்தாலே யுணர்வராகில்.

இகமித்தல் பாசத்தினின்றி. எ-து. ஆணவமலத்தாலே விரதிக்கின்றது மில்லையாம்.

ஏலாவசத்தின் பொருகணையார். எ-து. பொய்யாகிய மாயாகாரியத்தினும் பொருந்தார்.

சத்தணைவாரங்கு. எ-து. எப்பொழுதுஞ் சிவனைக்கூடிச் சிவசொரூபமாயிருப்பர்.

ஆகலாலே யவர்களிடத்து மலமாயாகன்மம் பொருந்தாது. அஃதென்போலவென்னில்?

கதிமிக் கெதிர்கதிரின்முன் னிருள்போல். எ-து. செலவிலேமிகுந்து உட்டணம்பொருந்திய வாதித்தன்முன் அந்தகாரமில்லாதாணற்போல. எ-து.
எ-து.

சத்தணைவாரங்கு என்பதற்கு பாசமேலிட்டதாகிற் சடக்கெனச் சிவசொரூபத்தே கூடுவதென்பாருமுளர். எனவே

ஞானத்திலே நிற்குமளவு மஞ்ஞானம் பொருந்தா தென்பதா யிற்று.

மலமேலிடாது மாயாகாரியஞ் சீவியாதென்றது, ஆதித்தன முன் னிருளும்நில்லாது விளக்கும் பிரகாசியா தாறுற்போல வெனவறிக.

ஞானத்திலே நிற்குமளவும் பாசமேலிடாதென்னும் பக்கத் துக்கு, ஆதித்தன்முன் அந்தகாரம் நில்லாதென்னும் சபக்கமு ம், ஆதித்தன் நீங்கியவிடத்து இருள்மேலிடுமாறுபோல ஞா னத்தை நீங்கியபோது பாசமேலிடுமென்னும் விபக்கமுங் கா ட்டியவாறு காண்க. (க)

---

சிவஞானமுனிவர் உரை.

எ-து. உ-ம். எ-னின். சார்ந்ததன் வண்ணமாய்ச் சதசத்தெ னப்படு மியல்புடையார் அரனடியோரினும் ஐம்புலனிற் சென்று ழி அவற்றிற் றொடக்குண்ணாது திறலுடையராதல் யாங்ஙனமெ ன்பாரை நோக்கிச் சார்ச்சிக்கப்படும் விசேடங்கூறி அதனை வ லியுறுத்துத லுதலிற்று.

இ-ள். சதசத்து ஆம் மெய்கண்டான் சத்து அருளில் காணி ல். எ-து. தன்னாற் சாரப்படுவனவாகிய சத்தினும் அசத்தினு ம் அதுவதுவாதல்பற்றிச் சதசத்தென்னுந் தன்னுண்மையையு ணர்ந்தோன் சத்தாகிய முதல்வன் றிருவருளாலல்லது ஒன்றை யுங் காணாய் அவ்வருளின் வழி நின்று காணுமாயின்—பாச த்தில் இதமித்தல் இன்றி. எ-து. அவ்வழிப்பாசமாகிய அசத் தின் இதஞ்செய்த லின்மையால்—சத்து அணைவார் கதம் மி க்கு எரி கதிரின் முன் இருள்போல் ஆங்கு ஏலா அசத்தின் அரு கு அணையார். எ-து. சத்தாகிய முதல்வனைத் தலைப்பட்டு நிற்பா ர் சீற்றமிக் கெரியாநின்ற சுடரின்முன்னர் அந்தகாரம்போலச்

சத்தெதிர் தனது சத்தி யேற்கமாட்டாத அசத்தாய ஐம்புலனின்மாட்டெய்தி நிற்பரல்லர். எ-று.

வேறுமுடிபாகலின் ஒருமைப்பன்மை மயக்கமின்மை யுணர்க.

அருளினென்னும் இன்னுருபு ஏதுப்பொருட்கண் வந்தது.

இதமித்தல் பெயரடியிற் பிறந்த வினைப்பெயர். இதஞ்செய்தல் பற்றுச்செய்தல்.

இன்றியென்னுஞ் செயவெனெச்சக்குறிப்புக் காரணப்பொருட்டாய் நின்றது.

இன்மைக் கேதுகூறுவார் கதமிக் கெரிகதிரின் முன்னிருள்போலேலா வசத்தென்றார். கதமிக் கெரிகதிரென்றது ஒப்புமை பற்றிய உபசாரவழக்கு. "எல்லை யில்லவ னெரிதுள்ளி னுலெனவெகுண்டான்" என்பதனானும் ஒப்புமையாத லுணர்க.

இதனாற் போந்தது, சத்தும் அசத்துந் தம்முட் சமமல்லவாகலான் அரனடியோர்பவர் ஐம்புலனிற் சென்றாலும் அதுபற்றி அவர் திறனீங்காரென மேலது வலியுறுத்தவாறு மென்க.

ஏகனாகிநிற்றலான் மலமின்றாதலும் இறைபணி நிற்றலான் மாயை வினைகளிலவாதலும் பெறப்பட்டமையின், மலமாயைதன்னொடு வல்வினையின்றே யென்பதனை வேறோரதிகரணமாக வைத் தோதாராயினார்.

☞ கo—சூ, இரண்டாமதிகரண முடிந்தது

---

☞ பத்தாஞ்சூத்திரமுடிந்தது.



## கக—சூத்திரம்.



காணுங் கண்ணுக்குக் காட்டு முளம்போல்
காண வுளத்தைக் கண்டு காட்டலின்
அயரா வன்பி னரன்கழ றருமே.

இச்சூத்திரமென்னுதலிற்றோவெனின்? பரமேசுரனுடைய திருவடியைக் கூடுமுறைமை கூறுகின்றது.

| | |
|---|---|
| இ-ள். காணுங் கண்ணுக்குக் காட்டு முளம் போல். எ-து. | காட்சியையுடைய கண்ணுக்குக் காட்டுகின்ற வான்மாப்போல. |
| காண வுளத்தைக் கண்டு காட்டலின். எ-து. | சிவன் ஆன்மா தேகத்தைநீங்கிச் சுத்தனனவிடத்து ஆன்மாவைத் தானுங்கண்டு தன்னையுங் காணக் காட்டுதலாலே. |
| அயரா வன்பி னரன் கழ றருமே. எ-து. | அத்தன்மையை மறவாத அன்பினையுடைத்தாகத் தன்னுடைய திருவடியைக் கூட்டும். எ-று. |

என்றது, முத்தான்மாக்க ளிந்திரியங்களை நீங்கித் திருவருளைத் தாரகமாகநின்று காணுமுறைமைபோ லவ்விடத்து மிந்திரியாதிகளை நீங்கித் திருவருளை தாரகமாகநின்று சீவன்முத்தரானவர்க ளென்றதாம். எனவே, இவ்விடத்துஞ் சிவனுடைய திருவடியைக் கூடிச் சிவாநுபவத்தைப் பெற்றிருப்பர்க

என்பதாயிற்று. "காயமொழிந்தாற்சுத்தனாகியான்மாக் காட்டக்கண்டிருந்ததன்மையுடையகண்ணுக்— கேயுமுயிர்காட்டிடக்கண்டிடுமிதுபோல்" என்றார் வழிநூலார். சித் - கக—ரு, க—செ.

இதற்குப்பிரமாணம்.

---

சிவஞானமுனிவர் உரை.

இச்சூத்திரத்தின் பிண்டப்பொழிப்பு.—காட்டக்காணுந்தன்மையுடைய கண் உருவத்தைக் காணும்படி அதனோடொருங்கியைந்து நின்று காட்டி அவ்வுருவத்தைக் காண்கின்ற ஆன்மாப்போல அறிவிக்க அறியுமியல்பையுடைய அவ்வான்மா விடயத்தை யறியும்படி முதல்வன் அதனோடியைந்து நின்று அறிவித்து அறிந்து வருதலான், அவ்வத்துவித நிலையை மறவாது கடைப்பிடித்துச் செய்யும் அன்பானே அம்முதல்வன் திருவடியாகிய சிவானந்தாநுபூதியைத் தலைப்படும். எ-று.

காணுமென்னும் உவமையடை பொருளினும், கண்டென்னும் பொருள்வினை உவமையினும் சென்றியைந்தன. காணுமென்பதனை ஈரிடத்துங் கூட்டுக.

"வியர்த்து வெகுளார்விழுமியோர்" என்பதுபோலக் கண்டு காட்டவெனபது மாறிவைத்துரைக்கப்பட்டது.

இக்கருத்து நோக்கியன்றே, இதனைவிரித்துக் கூறுவான் புகுந்த வழிநூலாசிரியர் "காட்டிக் கண்டிடுமா போலக் காட்டிக்கண்டிடுவன்"- என்றதூஉமென்க. சித்-கக—ரு, க—செ.

அயராமைக்குச் செயப்படுபொருள் அதனையென்றெடுத்துக் கொள்க. அயராவன்பென்றது அயராமையானாகிய அன்பென

"ஆறுசென்ற வியர்" போல நின்றது. அது "இத்தையாயு மறிவுடையனு யன்புசெய்ய" என வழிநூலாசிரியர் 'கூறியதனானு முணர்க' சித், ௧௧—சூ, ௧—செ. "காயமொழி".

உள்ளத்தையென்பது உருபுமயக்கம்.

அறிவிச்சைசெயல்களி னிகழ்ச்சியாகிய அயராமையும் அன்பும் செலவும முறையே காரணகாரியங்களாய் அவ்வொருபொருண்மேல் ஒருங்கு நிகழுமென்பார் அயராவன்பினரன்கழல்செலுமே யென்றார்.

இஃதென்சொல்லியவாறோவெனின்; உயிரை யின்றியமையாதகண் உருவத்தைக் காணுங்கால் உயிரினதுணர்வு கண்ணொளியெனத் தானென வேற்றுமையின்றி உடனாய் விரவி நின்று கண்ணுக்குக் காட்டியவதனைக் கண்கண்டதென்றுங் கண்ணையதிட்டித்து நின்ற உயிர் கண்டதென்றும் பகுத்தறிய வாராது இரண்டன் காட்சியும் ஒன்றனையொன்று விடாது அத்துவிதமாகி ஒருங்கே நிகழுமாறுபோல, முதல்வனையின்றியமையாது உயிர் ஒருவிடயத்தை யறியுங்காலும் முதல்வனது சிற்சத்தி ஆன்மசிற்சத்தியெனத் தானென வேறின்றி உடனாய் விரவி நிற்ப முதல்வனும் அவ்வாறு விரவிநின்று ஆன்மாவிற்கு அறிவித்ததொன்றனை அவ்வான்மா அறிந்ததென்றும், அதனையதிட்டித்து நின்ற தானறிந்தானென்றும் பகுத்தறிய வாராது, இருவரையறிவும் ஒன்றனையொன்று விடாது அத்துவிதமாய் ஒருங்கே நிகழுமாறு செய்துவரும் இவ்வுபகாரம் பெத்தமுத்தியிரண்டினும் ஒருபெற்றித்தாய் உண்மையின் ஏகனாகியிறைபணிநிற்குமுயிர். முதல்வன் அங்ஙனம் அத்துவிதமாய் உபகரித்து நிற்குமுரிமையை நோக்குமாயின் நோக்குந்தோறும் நோக்குந்தோறும் அப்பொருட்கட் செல்லுமிச்சை அடங்காது மீதூருமாகலின் அவ்வழி அவ்விச்சையே தானாகவிளங்கித் தோன்று

ம் பேராநந்தத்தை அநுபவிக்கப்படுமென அறிவிச்சைசெயல்கள் மூன்றுங்கண்டு விடயிக்குமாறுணர்த்தி அதீதநிலை யியல்பு கூறியவாறுமென்க. அத்துவிதமாவது பேதப்பொருளிரண்டுந் தம்முள் அபேதமாதற்குரிய சம்பந்தவிசேடம். இக்கருத்தேபற்றி "அறிவொளிபோற் பிறிவருமத்துவிதம்." என்றார் புடைநூலாசிரியரும். சிவப்பிரகாசம், பாயிரம். எ. "புறச்சமயத்தவர்" அங்கியும் ஒன்றிற் றங்கிநின்றல்லது தன்றொழி னடத்தாதாகலின், அதுபோல முதல்வனும் உயிரையதிட்டித்து நின்று எத்தொழிலுஞ் செய்வனென்றுணர்க. உயிர் ஒன்றனையறிதல் முதல்வன் உடனின்றறிதலையின்றி அறிவித்தன் மாத்திரையான் அமையாதென்பது "தொண்டனேன் விளையுமாநினையே" "விரும்புமாவிரும்பே" "தொடருமாதொடரே" "நுகருமா நுகரே" என்றிவ்வாறு முத்திநிலைபற்றியோதிய திருவாச்குக்களானுமறிக. திருமாளிகைத்தேவர் திருவிசைப்பா, கோயில். கக. ௧௦. கூ. எ. இவ்வியல்புநோக்கியன்றே "அறிவானுந்தானே யறிவிப்பான் றானே" என்றோதிய அம்மை "அறிவா யறிகின்றானே" எனவுமோதியதூஉமென்க. காரைக்காலம்மையார், "அற்புதத்திருவந்தாதி." முன்னறிதல் அறிவித்தற்பொருட்டெனவும் பின் அறிவாயறிதல் விடயத்தில் அழுந்துவித்தற்பொருட்டெனவுங் கொள்க. இதனையீண்டு வைத்தார் அத்துவிதநிலை இனிது விளங்குதற்கு.

இவ்வாறன்றிக் காணுங்கண்ணுக்குக் காட்டுமுளம்போற் காணவுள்ளத்தைக் கண்டு காட்டலென்பதற்குக் காட்டுமுபகாரமுணர்த்தன்மாத்திரையே கருத்தென்றுரைப்பாருமுளர். இதனைக் கண்ணழித்துரைப்புழி அவனும் அவற்றது விடயத்தை யுணருமெனக் காணு முபகாரமாத்திரையே எடுத்துக்கொண்டுரைத்தல் ஆசிரியர் கருத்தன்றாகலானும், காணுமுபகாரங் காட்டு

ருபகாரத்தின் பின்னர்த்தாய் நிகழுமென்பது உணர்ந்துகோட ற்பொருட்டுஅதுவும் உடன்கூறப்பட்டதன்றிவேறின்மையானு ம், அவ்வாறன்றென்பார்க்கு ஐந்தாஞ்சூத்திரத்துட்பெறப்பட் டதனை ஈண்டுக்கூறுதல் புநருத்தியாய் முடியுமாகலானும, அவ ருரைப்பனவெல்லாம் போலியுரையென்றொழிக. அற்றேல், மு தனூலிற் பதினொராஞ்சூத்திரத்துட் காட்டுவனென்பது மா த்திரையேயன்றிக் காண்பனென்பது கூறிற்றில்லையாலெனின்; அறியாது வினவினாய்: ஆண்டுக் காட்டுவானுமென்றவும்மை கா ண்பானுமாமெனா எதிரது தழீஇநிற்றலின், கூறுமை யாண்ட டதென்றொழிக. அவ்வும்மைக்குப் பொருள் காணமாட்டாதா ர் பாடம்வேறாக ஓதுப.

---

ஐந்தையு மொக்க வுணரா தவற்றுணர்வ
தைந்தும்போ னின்றுணரு மாதலா - லைந்தினையு
மொன்றொன்றாப் பார்த்துணர்வ துள்ளமே யெவ்வுலகு
மொன்றொன்றாப் பார்க்கு முணர்ந்து. (க)

இது, சிவனுஞ் சீவனுஞ் சொரூபமொன்றென்னில் சாயுச்சிய மோனாலும் அடிமை உண்டென்பதுவும், கலந்தவிடத்தும் அத்து விதமாயிருக்குமென்பதுவும், பெத்தமுத்தியிரண்டினுஞ் சிவன் பிரேரிப்பனென்பதுவும், சிவனுடைய சர்வஞ்ஞத்துவமும் பஞ் சகிருத்தியமு மிவனுக்கில்லை என்பதுவுங் கூறுகின்றது.

இ-ள். ஐந்தை பஞ்சவிடயங்களையு மொருகாலத்தே யு யுமொக் றியாதா யவற்றுடனே கூடிநின் றறிகின்ற க வுண வான்மா.
ரா தவ
ற்றுணர்வது.
எ-து.

ஐந்தும்போ ஐந்திந்திரியங்களையும்போல் நின்று சிவ
வின் றுணரும், னாலே யறியும்.
எ-து.

ஆதலால். எ- அதனாலே.
து.

ஐந்தினையு மோ பஞ்சவிடயங்களையு மோரொன்றாகப் பா
ன்றொன்றாப் பா ர்த்தறிவது ஆன்மாவே.
ர்த்துணர்வ து
ள்ளமே. எ-து.

எவ்வுலகு மொ எல்லாப்பொருளையுஞ் சிவ னொருகாலத்
ன்னொன்றாப்பார் தே யறிந்து பார்த்திருப்பன். எ-று.
க்கு முணர்ந்து.
எ-து.

என்றது, ஆன்மா விந்திரியங்களுடனேகூடி யிந்திரியங்களை விடயீகரிக்க அந்தந்த விடயங்களை யதுவதுவாய்நின்று சீவிக்கின்ற அவதரத்தி லிந்திரியங்கள் விடயீகரிக்க யாஞ் சிவனாலே யவற்றை யறிகின்றேமென்ப தறியாதிருந்தாற்போலச் சிவனருளுடனேகூடிக் கலந்தவிடத்தும் அறியாதிருக்கவேணு மென்பதாம்.

எனவே, முத்தியினும் அந்நியமாயிருந் தநுபவிக்கவேணு மென்பதாயிற்று. ஆதலாலே யடிமையுமாயிற்று.

சிவ னெல்லாவற்றையு மொருகாலத்தே யுணர்ந்து பார்த்திருப்பனென்றதனால் சர்வபிராணிகளுக்கும் வேறறக் காட்டாகிற்பனாதலாலே யாவ ரொருவர் யாதொன்றை யுன்னினார்களாந்தவுன்னினவற்றைத் தானறிந்து அவரவர்செயற்கேற்ற நு

ன்மைகளைச் செய்வனுரையாலே யப்படி வேறறச் சிவாநுப வத்தை யளித்துநிற்ப னென்றதாம். எனவே சிவஞானத் தாலே சிவனைத் தரிசித்தவர்கள் சிவனையொழிந்து வேறொன் று பாரார்களென்பதாம்.

அப்படி யிருப்பரேயிருப்பது, அல்லது ஒன்றொன்றாகப்பா ர்த்துணர்வது ஆன்மாவினுடைய அறிவாமென்பதாயிற்று.

இப்பொருள் "பரஞானத்தாற்பரத்தைத்தரிசித்தார் பர மே பார்த்திருப்பர்பதார்த்தங்கள்பாரார்பார்க்க—வருஞான ம்பசுஞானம்". என்றார் வழிநூலார். சித்-கக—சூ, உ—செ.

இது, சம்பிரதாயதிட்டியா லறிவித்தது. (க)

---

சிவஞானமுனிவர் உரை.

எ-து. உ-ம். எ-னின். அவனும் அவற்றது விடயத்தை யு— னின்றுணருமாயின் அவற்றோடு அவனிடையறிதற் கட்டும் வே ற்றுமை இல்லைபோலு மென்பாரை நோக்கி வேற்றுமையுங்கா ட்டி அதனை வலியுறுத்துத னுதலிற்று.

இ-ள். உள்ளம். எ-து ஆன்மாவாவது—அவற்று ஐந்தும் போல் நின்று உணர்வது உணரும் ஆகலான். எ-து. சுவை யொளியூறோசை நாற்றமென்னுமைந்தினும் ஐம்பொறிபோல் அ துவதுவாய்ச் செறிந்து நின்று உணர்தற்பாலதனை உணருந்த ன்மைத்தாகலான்—ஐந்தையும் ஒக்க உணராது ஐந்தினையும் ஒ ன்று ஒன்று ஆய் பார்த்து உணர்வது. எ-து. அவ்வைம்புலன் களையும் ஒருங்கேயுணரமாட்டாது அவ்வைந்தினையும் ஒரோ வொன்றாயறிந் தநுபவிப்பதாம்—ஒன்று எவ்வுலகும் ஒன்றாய் உணர்ந்து பார்க்கும். எ-து. அதுபோலச் சார்ந்ததன்வண்ண மாய்ப் பலதிறப்படுதலின்றி என்றுமொரு பெற்றித்தாகிய சி

வம் எல்லாவுயிர்களுடைய எல்லாவிடயங்களையும் பொதுவகையா னொருங்கேயுணர்ந்து அவ்வுயிர்களுடனின்று சிறப்புவகையானுமறியும். எ-று.

இது சொற்பொருட்பின்வருநிலை.

சிவத்தைப் பிரித்தமையின் ஏகாரம் பிரிநிலைக்கண்வந்தது.

ஒன்றென்பது குறிப்பேதுவாய்நின்ற பெயர்.

---

ஏகமாய் நின்றே யிணையடிக ளொன்றுணரப்
போகமாய்த் தான்விளைந்த பொற்பினன் - ஏகமா
யுள்ளத்தின் கண்ணானை யுள்குவா ருள்கிற்றை
உள்ளத்தாற் காணாதே யற்று. (௨)

## இதுவுமது.

| | |
|---|---|
| இ-ள். ஏகமாய் நின்றே யிணையடிக ளொன்றுணரப் போகமாய்த் தான் விளைந்த பொற்பினன். எ-து. | தன்னுடைய திருட்டியுடனே யேகமாய் நின்று தான்காட்டினதன்மை யொன்றையுங் கண்டுணரப் பேரின்பமாய் விளைந்த சிவன். |

அது, ஞாதிரு ஞான ஞேயங்களுங்கூறி ஞேயத்தழுந்தல் கூறினார்.

| | |
|---|---|
| ஏகமா யுள்ள | சர்வவியாபியாய் ஆன்மாக்கள் யாவைத் |

த்தின் கண்ணு கும் வேறறக்காட்டாய் நிற்கின்றவன்.
ஞன். எ-று.

உள்குவா ரு நினைந்தார் நினைந்த நினைவுகளை.
ள்கிற்றை. எ-று.

உள்ளத்தாற் தன்னுடைய வருளாலே காணுதிருப்ப காணுஞே வுற் ஞே தானு மதிமேல கூடிநின்று. எ-று.
று. எ-று.

எனவே பெத்தமுத்திக ளிரண்டினுஞ் சிவனேநின்று பிரேரிப்பிக்கின்றவ னென்பதுவும், அவனையொழிந்து ஆன்மாக்க ளெவ்விடத்து மொன்றையறிந்து செய்யமாட்டாதென்பதுவும், பக்குவப்பட்ட ஆன்மாக்களுக்குத் தோன்றி மற்றவற்குத் தோன்றுமற் காட்டாய்நிற்கின்று னென்பதுவுங் கூறிய தாயிற்று. "எவ்விடத்துமிறையடிமையின்றி யமைந்தொன்றையறிந்தியற்றிடாவுயிர்கள்" என்றார் வழிநூலார். சித்-கக—கூ, எ—செ.

இதுவுஞ் சம்பிரதாயதிட்டியாலறிக. (௨)

---

சிவஞானமுனிவர். உரை.

எ-து. உ-ம. எ-னின். ஆன்மா ஐம்பொறியை விடயிப்புழிப் போல முதல்வனை விடயிப்புழியும் முதல்வன் அவ்வாறுடனின்று தன்னைத் தான் விடயிப்ப னெனின் ஆன்மாச்சிரயமென் னுங் குற்றமாகலின் அது பெறப்படாமையான் அவனும் அவ ற்றது விடயத்தையுணருமென்றல் யாண்டுஞ் செல்லாதென்பாரை நோக்கி ஆண்டும் அவ்வா றுணர்தலுண்டென்ப துணர்த்தி அதனை வலியுறுத்துத லுதலிற்று.

இ-ள். ஒன்று ஏகம் ஆய் நின்றே இணை அடிகள் உணரத் தான் போகம் ஆய் விளைந்த பொற்பினன்.எ-து. முதல்வனைச் சார்ந்தவழி அவ்வண்ணமேயாய் ஒருபெற்றிப்பட்ட ஆன்மா, அவனோடொற்றுமைப்பட்டு நின்று அவனதடியிணைகளையுணரவே, தான் அவ்வான்மாவுக்குப் பரபோகமாய் மேன்மேல் விளைகின்ற பொலிவினையுடையனாகலானும்,—உள்ளத்தின்கண் ஏகம் ஆய் ஆனான். எ-து. அங்ஙனமுணருங்கால் அவ்வான்மஞானத்தினிடத்து ஏகமாய்விட்டு நீங்காதவனாகலானும்;—உள்குவார் உள்கிற்றை உள்ளத்தான் உற்றுக் காணானோ. எ-து. கருதுவார் கருதிய பொருளாகிய தன்னை அவரறிவோடு கூடி நின்றறியான்கொல்லோ. எ-று.

போகமாய்த் தான் விளைந்த பொற்பினன், ஏகமாயுள்ளத்தின் கண்ணானன், என்னும் பெயரடைகள் எதுப்பொருளவாய் நின்றன; யாண்டுஞ்சேற லுணர்த்துதற்கு.

உள்குவாருள்கிற்றையென்றார் "வேண்டுவார் வேண்டியதே யீவான்" என்றாற்போல.

ஆனுருபு உடனிகழ்ச்சிப்பொருட்கண் வந்தது. ஓகாரம் எதிர்மறை.

ஆன்மாக்கள் முதல்வனை விடயிக்குங்கால் அவற்றது விடயமாகிய அவன் தன்னாலும் உடனின்றுணரப்படுவன், உள்குவாருள்கிய பொருளாகலின்,

மேலைவெண்பாவிற் கூறிப்போந்த ஐம்புலன்போலவென்று அநுமானவளவை காட்டுவார் 'உள்குவாருள்கிற்றை யுள்ளத்தானுற்றுக் காணானோவென்றும், உள்குவாருள்கிற்றுதல் ஈரிடத்துமொக்குமென்பார் 'ஏகமாய்நின்றே யிணையடிகளொன்றுணரப் போகமாய்த் தான்விளைந்த பொற்பினன்' என விடயித்த

ற்கட்படுமியல்பும்; 'ஏகமாயுள்ளத்தின் கண்ணுனான்' என அறி வுவிளங்குதற்கட்படுமியல்பும் எடுத்தோதினார்.

பரபோகமாயென்னுது போகமாயென்றதும் ஒப்புமை யி னங்குதற்பொருட்டு. சேற்றுநிலமிதித்துச் சென்றானுக்கு அந் நிலம்போலப் பரபோகவிளைவு செயற்கைப்பொருளாய் நிற்ற லின்; ஆக்கமுங் காரணமும் அடுத்து வந்தது. இணையடிகளு ணருந்தோறும் போகம் மேன்மேல் விளைதல் "புணர்ந்தாற் புணருந்தொறும் பெரும்போகம் பின்னும்புதிதாய்—மணந் தாழ் புரிகுழலா ளல்குல்போல வளர்கின்றதே" எனவும் அ ப்பொருண்மேல் வைத்தோதிய திருவாக்கானுமறிக. திருச்சி ற்றம்பலக்கோவையார்—கூ. "உணர்ந்தார்க"

தெளிவுபற்றி விளைந்தவென இறந்தகாலத்தாற் கூறினார்

கண் கண்ணாடியினின்றுந் தன்னை விடயித்தாற்போல முத ல்வன் ஆன்மாவுடனின்று தன்னை விடயித்தல் பொருத்தமு டைமையின், ஆன்மாச்சிரயமென்னுங் குற்றம் இன்னோரன் னவற்றிற் கெய்தாதென்றுணர்க. கண்ணாடிக்குள்ளாகத் தோ ன்றுவதுபோலும் எதிர்விம்பமாவது விம்பமேயன்றி வேறன் றென்பது சிவாகம நூற்றுணிபென்க.

இதனுள் அவனும்அவற்றது விடயத்தையுணருமென உணர்வே பற்றியோதினாரேனும் சித் - க—கூ, கூஉ—செ. "எத்திற ஞானமுள்ள தத்திற மிச்சைசெய்தி." என்பவாகலின், அவ ற்றிற்கும் இஃதொக்கும்: ஒக்கவே, பெத்தமுத்தியிரண்டினும் ஆன்மா விடயிக்கப்படும் விடயங்களை முதல்வன் உடனின்றுவி டயிப்பனென்பதூஉம், பெத்தத்தின் அவனிவனாய் நின்று விட யித்தலின் விடயங்கள்அவனுக்கன்றி இவனுக்காயின் முத்தி யின் இவனவனாய்நின்று விடயித்தலின் அவனொழிந்த விடய

ங்களெல்லாம் இவனுக்கின்றி அவனுக்காயினவென்பதூஉம் இனி துவிளங்கும். இம்முறைமை நோக்கியன்றே உலகத்துள் ஒன்றனை ஈவாரும் ஏற்பாருஞ் சிவார்ப்பணமெனக் கருதாதவழி க் குற்றமென்று ஆகமங்களோதிபதூஉம். சித்-உ—சூ, உ௫—செ. "யாதொரு தெய்வங்கொண்டீ ரத்தெய்வ மாகி யங்கே—மாதொரு பாகனார்தாம் வருவர்" என்றதூஉம், அவ்வுண்மை யறிந்தவழி சிவஞானபோதம் - க௦—சூ, உ - வெண்பா, 'நா மல்ல' "எத்தநுவி னின்று மிறைபணியார்க் கில்லைவினை—மு ற்செய்வினை யுந்தருவான் முன்."எ-ம். திருவுந்தியார்-௩௩—செ. "பெற்றசிற் றின்பமே பேரின்பமாய்." எ-ம். திருக்களிற்று ப்படியார், எ௬—செ. "உடம்புடைய யோகிகடாமுற்றசிற்றி ன்ப—மடங்கத்தம் பேரின்பத் தாக்கிற்". எ-ம். "காணுங் கர ணங்களெல்லாம் பேரின்பமெனப்—பேணு மடியார். எ-ம். "எல் லாஞ் சிவமாயிருந்ததே." எ-ம். இவ்வாறோதியதூஉமென்க.

 கக—சூ, முதலதிகரண முடிந்தது.

---

அருக்கனேர் நிற்பினு மல்லிருளே காணார்க்
கிருட்கண்ணே பாசத்தார்க் கீசன் - அருட்கண்ணாற்
பாசத்தை நீக்கும் பகலலர்த்துந் தாமரைபோல்
னேசத்த றம்பா னினைந்து.

இது, சிவனெவ்விடத்து நிறைந்துநிற்பனுகில் யாவருங் காணவேண்டாவோ வென்பார்க்கு அவனிற்கின்ற முறைமை கூறுகின்றது.

இ-ள். அருக்க ஆதித்தன் முன்னேவந்து நின்றானாயினு னேர் நி மிராக்காலத் திருளையொத்திருக்குங் குரு

ற்பினும உடராயினார்க்கு.
ல் விரு
ளே காணார்க்கு.
எ-து.

கண்ணுக்குக்காணார் அந்தகாரம் அதுபோல

இருட்கண் சிவனெவ்விடத்து நிறைந்துநின்றருளுகினு
ணே பாசத்தாற் ம் பாசபெந்திகளுக்குத் தோன்றுமலிற்பண்-
ஙீசன். எ-து.

இருட்கண் மறைத்தல்.

நினைந்து நேச தன்னையுள்ளபடி யுணர்ந்து சிவனேசத்
த்த றம்பால். எ- தை வைத்தவர்களிடத்து.
து.

அருட்கண்ணு ஞானதிருட்டியைக்கொடுத்து அதனு
ற் பாசத்தை நீ லே பாசத்தாலங்களை நீக்குவன்.
க்கும். எ-து.

பாசத்தாலநீங்கவே தான்தோன்றுவனென்பது மீட்சிமொ
ழியாயிற்று. அஃதென்போலவென்னில்?

தாமரை யலர் பக்குவப்பட்ட தாமரைப்பூவை யலர்த்
த்தும் பகல்போ து மாதித்தனைப்போல. எ-று.
ல். எ-து.

எனவே, பக்குவப்படாதபூவை யலர்த்தானென்னு மீட்சி
மொழியாற் பக்ஷபாதியல்லவென்பது கூறினார்.

பகலலர் ஆதித்தன் அலர்த்துகைக்கு
த்துந்தாம ப் பக்குவப்பட்ட தாமரைப்பூப்
ரை போ போ லென்னப்பட்ட நேசத்தை
னேசத்தா யுடையவர்க ளென்பாருமுளர்.
ர். எ-கு.

சிவன் சர்வவியாபியாய் நிற்கச்சே பாசத்திலேநிற்கிறவர்கள் காணுறொன்னும் பக்கத்துக்கு ஆதித்தனும் அந்தகனும் சபக்கமாயினவாறும், பக்குவான்மாக்களைத் தன்னருளாலே யுணர்த்தித் தோன்றிநிற்பனென்னும் பக்கத்துக்குத் தாமரைப்பூவும் ஆதித்தனும் சபக்கமாயினவாறறிக. "எங்குந்தானிறைந்துசிவனின்றானுகி லெல்லாருங்காணவேவேணுந்தானென்னில்" என்றார் வழிநூலார். சித் - கக—௬, அ—செ. (௩)

---

சிவஞானமுனிவர் உரை.

எ-து. உ-ம். எ-னின். அரன் கழல் சேறல் உடம்பினீங்கிய பின்னன்றி உடம்புடையவழியுங்கூடுமாயின் அது ஞாயிற்றினொளிபோல மருங்குள்ளார்க்குப் புலனாதல் வேண்டுமென்பாரை நோக்கி, அது கூடாமையுங் கூடுமாறும் உவமைமுகத்தா னுணர்த்தி ஏதுவை வலியுறுத்துத னுதலிற்று.

இ-ள். அருக்கன் நேர் நிற்பினும் காணார்க்கு அல் இருளே. எ-து. ஞாயிறு எல்லார்க்கும் ஒப்ப நிற்பினும் அது காட்சியுடையார் கண்ணுக்கன்றி அஃதில்லாதார்கண்ணுக்கு இரவின் கண்ணதாகிய இருளேயாம். அதுபோல—ஈசன் பாசத்தார்க்கு இருட்கண்ணே. எ-து. முதல்வன் எங்கணும் ஒப்ப நிற்பினும் மலநீங்கிய முத்தர்க்கன்றி அஃதுடையார்க்கு அவன் அம்மலத்தின்கண்ணே யாவன். சீவன்முத்தரும் ஏனையோர்போல் உடலுடைமையிற் பாசத்தாராகலின் வேற்றுமையின்றாலெனின்,—பகல் அலர்த்துந் தாமரைபோல். எ-து. ஏனைத் தாமரைகளோடொப்ப ஒருங்கு நிற்பினும் பக்குவமுடைய தாமரையைக் கூம்புதலை நீக்கி அலர்த்தா ஞாயிறுபோல—நேசத்தில் தன்னுணர்ந்தார் பேர் அருட்கண்ணால் பாசத்தை நீக்கும். எ-து. ஏனையோர்போல் உடம்போடு நிற்பினும் பருவமுடையராய்ப்

பத்தியினாற் றன்னைமறவாதுணர்வார்க்கு முதல்வன் தனது திருவருட்பார்வையாற் பாசத்தை நீக்கி அறிவை யலர்த்தும் ஆகலான், உடம்புள்வழியும் அவர் பாசத்தாரல்லர். எ-று.

ஆகலான் உடம்புள்வழியும் அவர் பாசத்தா ரல்லரென்பது குறிப்பெச்சம்.

ஏகாரந் தேற்றம்.

திணிந்தவிருளையென்பார் அல்லிருளென்றார்.

மலத்திற்குக் கண்ணாவது அறியாமை.

காலும் பகலும் ஆகுபெயர்.

அருக்கன் எடுத்துக்காட்டுவமை.

தன்னையென்னும் இரண்டனுருபு விகாரத்தாற் றொக்கது.

ஏழாம்வேற்றுமைப்பொருட்கண்வரு நேர் என்பது உருபுமயக்கமாய் நான்காவ துணர்த்திற்று.

நீக்குதலும் அலர்த்துதலும் ஏனையிடத்துஞ் சென்றியைதலின், ஈரிடத்துஞ் செயப்படுபொருளேற்பன வருவிக்கப்பட்டன.

---

மன்னு மிருளை மதிதுரந்த வாறன்பின்
மன்னு மரனே மலந்துரந்து - மன்னி
வலித்திரும்பைக் காந்தம் வசஞ்செய்வான் செய்தல்
சலிப்பில் விகாரியலன் றான். (௯)

இது, பரமுத்தித்திசையிலே மலநீங்குமுறைமை கூறுகின்றது.

இ-ள். மன்றுமிருளை மதி துரந்தவாறு. எ-து. நிலைபெற்ற விருளை மதி யோட்டு முறைமைபோல.

அன்பின் மன்னு மரனே மலந் துரந்து. எ-து. அநாதியிலே தன்னிடத்து நிலைபெற்று நிற்கின்ற கத்தா தன்னுடைய காருண்ணியத்தினாலே ஆணவமலமுதலாயினவற்றை யோட்டி.

வலித் திரும்பைக் காந்தம் வசஞ்செய்வான் செய்தல் மன்னி. எ-து. காந்த மிரும்பை வலித்துத் தன்னுடைய வசமாக்கிக்கொள்ளுந் தன்மைபோலத் தன்னுடைய வசமாக்கிக் கொள்ளுதலைப்பொருந்தி.

சலிப்பில் விகாரியலன் றான். எ-து. அப்படிச் செய்யுமிடத்துச் சலநமும் விகாரமு முண்டாகாதோ வென்னின்? சலித்து மிலனாகி விகாரமுமிலனாகி யிருப்பன். எ-று.

மதி யிருளைத்துரந்தாற்போல மலந்துரப்ப னென்பது மலமாயாகன்மங்கள் அநாதியாயிருந்து அவையழியுமோவென்பார்க்கு பக்குவமாயினார்க்கு அவை நீங்கிநிற்கும், கெடாது, என்பது கூறினார். அஃதெங்ஙனேயென்னில்? இருணிலைபெற்று நிற்கச்சே மதிவர நீங்கினாற்போல முதல்கெடாமல் மேவிடாமல் நிற்குமென்பதாயிற்று. "ஆணவந்தானுதியந்தமடையாதாகு மடையிலந்தவான்மாவுமழியுமென்னில்" "நெல்லுக்குத்தவிடுமிகளநாதியாயே நெல்லைவிட்டுநீங்கும்" "இரும்

பைக்காந்தம்வலித்தல்போ லிசைத்தங்குயிரா." என்றார் வழிநூலார். சித் - கக—ரு, ரு - சு - கஉ—செ.

மலமாயாகன்ம மழியாமனிற்கச்சே பக்குவற்கு நீங்கிநிற் குமென்னும் பக்கத்துக்கு மதியு மிருளுஞ் சபக்கமாயினவா றும், பாசத்தைநீங்கத் தன்னிடத்தேகூடிக்கொண்டு சலிப்பு ம் விகாரமுமின்றி யிருப்பனென்னும் பக்கத்துக்கு, இரும்புங் காந்தமு மென்னுஞ்சபக்கமுங் காட்டியவாறுகாண்க. (அ)

---

சிவஞானமுனிவர்உரை.

எ-து. உ-ம். எ-னின். நேசத்திற் றன்னுணருஞ் சீவன்முத் தர்க்குப் பாசத்தை நீக்கி அறிவை யலர்த்துதல் பரமுத்தியின ன்றி இல்லையென முரணிக்கூறும் வாதிகளைநோக்கிப் பாசத் தை நீக்கி அறிவையலர்த்து முறைமை இவ்வாறென்றுணர்த்தி அதனை வலியுறுத்துத லுதலிற்று.

இ-ள். அன்பின் மன்னும் அரனே மன்னும் இருளை மதி தூ ந்தவாறு மலம் துரந்து. எ-து. உயிரைத் தானுக்கிக்கோடற்க ணுளதாகிய இச்சைமிகுதியான், அவ்வுயிரோடும் அநாதியே நி லைபெறுமுதல்வன்கண்ணின்க ணிலைபெறும் இருளைப் பிறைமதி நாடோறுஞ் சிறிது சிறிதாக நீக்கிப்போட்டுமாறுபோல், அவ்வு யிரின் கண்ணதாகிய மலசத்தியை அவ்வப்பருவந்தோறுஞ் சி றிது சிறிதாகச் சோபாநமுறையி னீக்கிப் பற்றறத் துரந்து— காந்தம் இரும்பைத் தன்னின் வலித்து வசம் செய்வான் செ ய்தல் சலிப்பு இல். எ-து. காந்தக்கல் இரும்பைத் தன்கணீர் த்துத் தன்வசமாகச்செய்தல்போல மலம் அங்ஙனந் துரக்கப் படுந் தோறும் அம்முறையே அச்சத்தி பதிவித்து உயிரைத் த ன்கண் வலித்துக்கொண்டு தன்வசமாகச்செய்து வருஞ்செய்

கையின் அவனுக்கு ஒருஞான்றுஞ் சலிப்பில்லை—விகாரி அலன் தான். எ-து. அங்ஙனஞ் சலியாது செய்து வருதல்பற்றி விகாரியாவானுமல்லன்· காந்தம்போலத் தனது சந்நிதிமாத்திரையிற்செய்யும் அம்முதல்வன். எ-று.

மதிபென்றது ஏற்புழிக்கோடலான் ஈண்டு வளர்பக்கத்திற் றிங்களின்மேற்றாயிற்று. "அந்த வருளுனக்கிங் காதாரமாயல்லி—லிந்து வெனவெறித் திட்டு" என்றதும் அது.

மலந் தூரத்தல் உயிரின்செயலாவதன்றென்பதுபட நின்றமையின் ஏகாரம் பிரிநிலைக்கண்வந்தது.

வான் பான் பாக்குக்கள் தொழிற்பெயர் விகுதியுமாமென்பது "கரப்பாக்கறிந்து" என்பதனானுணர்க.

உவமபுவுருபு விரித்துரைக்க.

சலித்தல் வேசறுதல்.

செய்தற்கண்ணென்ன ஏழனுருபு விரித்துரைக்க.

மதிதுரந்தவாறு மலந்துரந்தென்றவிதனானே மலநீங்குவது பின்னென்பார்மதம் மறுக்கப்பட்டவாறு காண்க.

சோபானமுறையி னீக்குதலானன்றே, சத்திநிபாதஞ்சிவபுண்ணியமுதலாயின நால்வேறுவகைப்பட்டதூஉம், அவற்றுள்ளும் ஒரோவொன்று நன்னான்காய்ப் பதினாறுவகைப்பட்டதூஉம், அவற்றுள்ளும் ஒரோவொன்று பலவேறுவகைப்பட்டு விரிந்ததூஉமென்க.

---

நசித்தொன்றி னுள்ள நசித்தலா லொன்றாநசித்திலதே லொன்றாவ தில்லை - நசித்துமலம்

அப்பணைந்த வுப்பி னுளமணைந்து சேடமாய்க்
கப்பின்று மீசன் கழல். (௫)

இது, பரமமுத்தித்தசையில், மூன்றுமுதலினு மொன்றுங்கெடாமல், முன்புபோல நிற்பதுஞ் செய்யாமல் நிற்குமுறைமை கூறுகின்றது.

இ-ள். நசித்தொன் றினுள் ளநசித்தலா லொன்று. எ-து. — சிவனுடைய சொரூபத்தைப்பெற்றுக் கூடுமிடத்து ஆன்மா கெட்டுக் கூடுமென்னிற் கெடுமாகிற் கூடுகைக்கு முதலில்லையாம்.

எனவே, கெடாமற்கூடுவ தில்லையாமோ வென்னில்?

நசித்திலதேலொன்றுவ தில்லை. எ-து. — கெடுவதுமில்லையென்னில் வேறுமாய்ச் சாயுச்சியமில்லையாம்.

எனவே, கெட்டுக்கூடுவதுமில்லை, கெடாதாகிற் கூடுவதுமில்லையென்றார். ஆனாற் கூடுந்தன்மை யெப்படியென்னில்?

நசித்து மலம். எ-து. — மலமானது கெட்டு

அப்பணைந்த வுப்பி னுளமணைந்து சேடமாய்க் கப்பின்று மீசன் கழல். எ-து. — நீருடனகூடிய வுப்புப்போல ஆன்மாச் சிவனைக்கூடி யடிமையாய் வேறறவிருக்கும். எ-று.

மலத்தினுடைய நீக்கத்தை யிவ்விடத்துக் கெடுமென்றார்

அவ்விடத்து பதனுடைய சேட்டிப்பில்லை யாதலாலெனக்கொள்க.

அப்பணைந்த வுப்புப்போல வென்றது, நாழியுப்பும் நாழிநீருங் கூடினவிடத்து நாழியாய் நீக்கவொண்ணுதாய் மிகுதியாகாம னிற்குற்போல, வான்மாவுஞ் சிவனைக்கூடி நீக்கமற்று மிகுதியாகாம லிருக்குமென்றதாம். இது, கெட்டுக்கூடினதோ கூடிக்கெட்டதோ வென்னில்? கெட்டுக்கூடிற்றுமில்லை, கூடிக்கெட்டதுமில்லை, அவையிரண்டு மொருமாத்திரத்தே யாமென்பதுதோன்ற அப்பணைந்தவுப்பென்முர். "சென்றணையுநிழல்போலச்சிவனிற்பனென்னில்" "செம்பிரதகுளிகையினுற்களிம்பற்றுப்பொன்னுய்" "சிவன்சீவனென்றிரண்டுஞ்சித்தொன்றுமென்னிற்" இரும்பைக்காந்தம்வலித்தாற்போல் "என்பதினில்" "அப்பணைந்தவுப்பேபோல்" என்முர்வழிநூலார். சித்-கக—சூ, கூ-கo-கக-கஉ—செ.

"பசுபதியாதிப் பண்ணியபனுவல்—மதியோர்பெறுவா ரன்றதுவேனை—யொன்ெருன்றுயினல்லதையிரண்டொன்ற-தென்றுமாகா தெவனெனினுவது—கெட்டதுவாத லதுவாய்க்கெட்டல-தொட்டுவதிவனே வின்றேகெட்ட—தாதருனேயமாக்காணுமேவா—தமக்குமதுவாசக்கெடுமேனியினு —பின்னர்க்கெடு வதியாதென்றேவியா—கொளக்கிடையீடாவதழிந்தாய்த்—கன்றுயழிந்ததுமன்றுமொழிந்தவை — யிரண்டுமோர்மைத்தேயெழுந்ததிபாவகை— யென்னிற்செழுந்திரட்காரிருளிரிய—நாறிக் கதிர்வாழேரொளிவிள்ள—மெய்திற்றன்றுங்கெய்தியபின்ன—ரிருளறவிரிந்தசெய்தி—செப்பினிலைமையறத்தெளிமதி—யிவனுஞ்சிவனியது" என்றஞானமிர்தத்தானுமறிக.

சிவனுமான்மாவும் வேறறக்கலந்து மிகுதியின்றி யிருக்குமென்னும்பக்கத்துக்கு, நீருமுப்பும் சபக்கமாயினவாறுகாண்க.

சிவஞானமுனிவர் உரை.

எ-து. உ-ம். எனின். உயிருக்குக் குணம்போல அநாதியாயுள்ள சகசமலம், அவ்வுயிரின் வேறாய்த் தூரக்கற்பாலதன்றாகலின்; மலந் தூரந்தென்றது அமையாதென்னும் படாணவாதசைவரை நோக்கி அருத்தாபத்தி யளவையான் அதனை வலியுறுத்துத னுதலிற்று.

இ-ள். நசித்து ஒன்றின் உள்ளம் நசித்தலால் ஒன்றா நசித்திலதேல் ஒன்று ஆவது இல்லை. எ-து. அரன்கழல் செல்லுங்கால் அதனை ஆன்மாக் கெட்டொன்றுமோ, கெடாதொன்றுமோ வெனக் கடாயினார்க்கு; கெட்டொன்றுமெனின், ஆன்மாக்கெட்டுப்போகலான் ஒன்றமாட்டாது கெடாதொன்றுமெனிற் கெடாதவழி இருபொருளாய் நிற்றலின் ஒன்றாமாறில்லை: ஆகலான் அருத்தாபத்தியளவையானே—அப்பு அணைந்த உப்பின் மலம் நசித்து உளம் ஈசன் கழல் அணைந்து சேடம் ஆம். எ-து. உப்புத் தனது கண்டிப்புநீங்கி நீரின் ஒன்றாமாறுபோலத் தனது சகசமலங் கெட்டொழிய ஆன்மா அரன்கழலையொன்றி அவ்வரன்கழற்குச் சேடமாம்—கப்பு இன்று ஆம். எ-து. அங்ஙனஞ் சேடமாகிய ஆன்மாவுக்கு மீளக் கவர்ச்சியில்லை. எ-று.

ஒன்றாதென்னுந் துவ்விகுதி விகாரத்தாற் றொக்கது.

பின் வந்த நசித்தென்பது செயவனெச்சத்திரிவு.

யாதொன்று யாதொன்றன்பொருட்டேயாய்த் தனக்கெனச் சுதந்திரமின்றிநிற்கும் அஃததற்குச் சேடமென்பதறிக. "அவையுடைமை யாளாகா மங்கு" எனவோதுதலின், ஏனைப்பசுபாசங்கள் முதல்வனுக்குப் பொதுவகையாற் சேடமாமாயினும்

ம் இதுபோலச் சிறப்புவகையாற் சேடமாதலின்மையின் இதனை வேறெடுத்தோதினர்.

முத்திநிலை கூறி முடிந்தமையின் இறுதிக்கட் கப்பின்றுமென அவினுவிருத்தியுங் கூறினர்.

---

பொன்வாண்வெங் கொண்மூவிற் புக்கொடுங்கிப் போயகலத், தன்வாளே யெங்குமாந் தன்மைபோல்- முன்வாள், மலத்தின் மறைந்துள்ள மற்றுலகை யுண்டும், மலத்திரித்துச் செல்லும் வரத்து. (சு)

இது, சீவன் முத்தித்தசையும் பரமுத்தித்தசையுங் கூறுகின்றது.

இ-ள். உள்ள ஆன்மாம். எ-து.

முன் வாள் மலத்தின் மறைந்து. எ-து. தன்னுடைய வறிவினுடைய பிரகாசம் மலங்களிலே மறைப்புண்டு.

மற்றுலகை யுண்டு. எ-து. பிராரத்தகன்மத்தைப் புசித்து.

மலத் திரித்துச் செல்லும்வரத்து. எ-து. அப்படி மறைத்துப் புசிப்பித்த மலங்களைநீங்கிச் சிவனுடனே கூட்டும் பெருமை மலத்திரித்தலென்.

இரிதல்=கெடுதல்.

பொன் வாள் வெங் கொண்மூவிற் புக்கடங் ஆதித்தன் பிரகாசம் வெவ்விய மேகத்திலே புகுந்து பிரகாசமழுங்கி யதுநீங்கிப்போகத் தன்னுடைய பிரகாச மெவ்விடத்துமா

கிப் போயகலத் யின்ற தன்மைபோலும். எ-று,
தன்வாளேயெங்
குமாங் தன்மை
போல். எ-து.

என்றது, ஆதித்தன் பகற்காலத்திற் பிரகாசமுமின்றி யிராக்காலத்திருளுமின்றி நடுவே மேகமறைக்க வொருதன்மையாய் மக்கிநமாயிருந்த தன்மைபோல, சீவன் முத்தராயினோர் நேரே சிவப்பிரகாசமுமின்றி நேரேதிரோதாயினுடைய மறைப்புமின்றிப் பிராரத்துவகன்மம் புசித்துத் தேகாந்தத்தே முகில் நீங்கிப் பிரகாசமிருந்தாற்போலச்சிவசொரூபத்தைக் கூடிக்கலந்து வேறறநிற்ப ரெனவறிக. "தெரிவரியமெய்ஞ்ஞானஞ்சேர்ந்தவாறே சிவம் பிரகாசிக்குமிங்கேசீவன்முத்தராவர்". என்றார் வழிநூலார். சித்-கக—கூ, ௪—௪.

சீவன்முத்தர் நேரே சிவப்பிரகாசமுமாகாமல் பாசத்தினுமழுந்திடாமல் நடுவேயோரவதாமாய்த் தேகாந்தமளவுநின்று போகம் புசித்துப் பின்பு சிவனைக்கூடுவர்களென்னும் பக்கத்துக்கு, மேகத்திலே மறைந்துபோ மாதித்தன் சமக்கமாயினவாறறிக.

இந்தப்பதினொரு சூத்திரத்தானு மூன்றுமுதலும் உருபதரிசநசுத்தி ஞேபத்தழுந்தல்கூறி, மேல்அணைந்தோர்தன்மை கூறுகின்றார். (௯)

---

சிவஞானமுனிவர் உரை.

எ-து. உ-ம். எ-னின். நான்காஞ்சூத்திரமுதல் இதுவரையிற் கூறிப்போந்த கேவலசகல சுத்தமென்னும் முத்திறத்தவத்தைகளினும் ஆன்மாத் தன்னியல்பிற்குக் கேடின்றியே நிற்குமென்பது உவமையின் வைத்துக்காட்டி, மேலதனை வலியுறுத்துத லுதலிற்று.

இ-ள். பொன் வாள் முன் கொண்மூவிற் புக்கு. எ-து ஞாயிறு காலைப்போதின் முகிற்படலத்துண் மறைந்து—ஒடுங்கி. எ-து. அம்முகிற்படலம் ஒருபுடைநீங்கியவழித் தன்னொளி ஏகதேசமாய் ஒடுக்கித்தோன்றி—போய் அகல எங்கும் தன் வாளே ஆம் தன்மைபோல். எ-து. அம்முகிற்படலம் பெருங்காற்றுண்டியுண்டு முழுவதும் விட்டொழிந்தவழி எங்கணுந் தன்னொளியேயாய்த் தோன்றும் பெற்றிபோல—உள்ளம் முன் வாள் மலத்துள் மறைந்து. எ-து. ஆன்மா அநாதியே தன்னறிவு மலத்துண் மறைப்புண்டு கேவலப்பட்டு—மற்று உலகை உண்ணும். எ-து. பின்பு கருவிகளோடு கூடி ஏகதேசமாய் அறிவு விளங்கி ஐம்புலன்களை விடயிக்கும்—மலத்து இரித்து வரத்துச் செல்லும். எ-து. பின்பு அம்மலத்தை முதல்வனருளாற் பற்றறக் களைந்து வியாபகமாய் அறிவு விளங்கி அவனது சீபாதத்தையணைந்து சுத்தப்படும். எ-று.

தன்மையென்றூர் கொண்மூவிற் புக்குழியுங் கேடின்மையின்.

ஏகாரந் தேற்றத்தின்கண் வந்தது.

பின் வந்த வாள் ஆகுபெயர்.

வினைமாற்றின்கண் வந்த மற்றென்னுமிடைச்சொல் மலத்திரித்தென்பகனேடிணைபந்து. சாரிடையுள்வழித் தனனுருபு நிலையாதல் இலேசாற் கொள்க.

உவமைவினைகள் பொருளினுஞ் சென்றியைந்தன.

அறிவு மறைந்தும் ஒடுங்கியும் மறைப்பு நீங்கியே எங்குமாம் நிகழ்ந்தன் மாத்திரைக்கே பொன்வாளுவமையென்பார், உலகையுண்ணும் வரத்துச் செல்லுமென வேற்றுமையும் உடன் கூறினார்.

மலநசித்தலாவது தனது மறைத்தற் சத்தி மடங்கிக் கிடப்பதன்மாத்திரையே பிறிதன்றென்பதூஉம் உவமையாற்பெறுதும்.

 கக—சூ, இரண்டாமதிகரண முடிந்தது.

---

 பதினோராஞ்சூத்திர முடிந்தது.



## கஉ—சூத்திரம்.



செம்மலர் நோன்றாள் சேர லொட்டா
வம்மலங் கழீஇ யன்பரொடு மரீஇ
மாலற நேய மலிந்தவர் வேடமு
மாலயந் தானு மரனெனத் தொழுமே.

இச்சூத்திரமென்னுதலிற்றோவெனின், மனவாக்குக்கெட்டாதசிவனைச் சிந்தித்துக் கண்டு வழிபடுமுறைமை கூறுகின்றது.

இ-ள். செம்மலர்நோன்றாள் சேர லொட்டா வம்மலங் கழீஇ. எ-து. சிவந்தகமலம்போன்ற வலிய ஸ்ரீபாதத்தைக் கூடவொட்டாத அந்தமலத்திரயங்களையும்போக்கி.

திரோபவிக்குமிடத்து அஃதொழிய வேறொன்றுமில்லையென்னும்படி திரோபவித்து, மீண்டுமநுக்கிரகிக்குமிடத்துத் தானொழிந் தில்லையென்னும்படி யநுக்கிரகிக்குமாதலால் நோன்றாள் என்றார்.

அன்பரொடு மரீஇ. எ-து. அப்படி மும்மலங்களையு நீங்கச் சீவன்முத்தராயினருடனே கூடி

மாலற நேய மலிந்தவர் வே மயக்கமறச் சிவனளவிலே சிவஞான மிகுந்தவர்களுடைய திருமேனியையும், திருக்

டமு மாலயங் கோயில்களையும், சிவனெனக்கண்டு வழி-டு
தாலு மரனெனு மென்க. எ-று.
த் தொழுமே
எ-று.

என்றது, நிட்டையிலேகூடி யநவரதமுமிருத்தலே மிகுந்த
து, அதுகூடாதோர் நிட்டையுடையோருடனேகூடி மலத்திர
யங்களையு நீங்கினவர்களாயுள்ள வேடத்துள்ளோரை வழிப
ட்டுத் திருக்கோயில் தண்டன்பண்ணுகவென்றதாம். மும்ம
லங்களையு நீங்கவென்றதாயிற்று.

இந்தத்திருமேனிகளை வழிபடவே மும்மலத்தையுணர்த்துமா
தலாலே, அசிந்திதனுகியகர்த்தாவைச் சிந்திதனுகக்கண்டு வழிப
டவேண்டுதலிற் கூறினர்: "செங்கமலத்தாளிணைகள்" என
ருர்வழி நூலார். சித்-கஉ—சூ, க—செ.

இதற்குப்பிரமாணம்.

---

சிவஞானமுனிவர் உரை.

இச்சூத்திரத்தின் பிண்டப்பொழிப்பு.—அபராவன் பின்னன்
கழலையார்ந்த சீவன்முத்தனுவான் செங்கமலமலர்போல விரிந்
து விளங்கிய முதல்வனது நோன்றாளை அணையவொட்டாது அ
யர்த்தலைச் செய்விக்கும் அவ்வியல்பினையுடைய மும்மலமுழுக்
கை ஞானநீராற் கழுவி, அங்ஙனம் அயராவன்பு செய்யு மெய்ஞ்
ஞானிகளோடு கலந்து கூடி மலமயக்க நீங்குதலான் அன்புமி
க்குடைய அவரது திருவேடத்தையுஞ் சிவாலயத்தையும் முத
ல்வனெனவே கண்டு வழிபட்டுவாழும். எ-று.

எழுவாய் மேலைச்சூத்திரத்தினின்றும் வருவிக்கப்பட்டது.
சீவன் முத்தனென்பது ஏற்புழிக்கோடலாற் பெறுதும்.

நோன்றாள் வினைத்தொகை. நோன்றல் பொறுத்தல். "எடுத்துச் சுமப்பானை" என்றார் புடைநூலாசிரியரும்.

கழீஇயென்றது குறிப்புருவகம்.

மாலறநேய மலிந்தவரென்றது அம்மலங்கழீஇ யன்பரோடு மரீஇயினாரென்னும் பொருட்டு சுட்டுப்பெயர் மாத்திரையாய் நின்றது.

நேயமலிதல் கூறவே, வழிபாடும் பெறப்படும்.

தான் அசை.

அம்மலங் கழீஇயென்றதனால் அறிவு வியாபரிக்குமிடமும், அன்பரோடு மரீஇயென்றதனால் இச்சை வியாபரிக்குமிடமும், தொழுமென்றதனாற் செயல் வியாபரிக்குமிடமும், பெறப்பட்டன. படவே, சீவன்முத்தர்க்கு அறிவிச்சைசெயல்கள் ஏனைவிடயங்களிற் செல்லாவென்பதூஉம் பெறப்பட்டது. இம்மூன்றும் பிரிப்பின்றி ஓரிடத்தொருங்குநிகழ்வனவாகலின், விடயவேற்றுமையின்மையு முணர்க.

தொழுகவென்னாது தொழுமென்றமையின், இஃதிணைந்தோரது தன்மையென்பது பெற்றாம். அற்றாகலினன்றே இதனைச் சாதனவோத்தின் வையாது ஈண்டு வைத்தாரென்பது. இனித் தொழுமென்றதனை இரட்டுறமொழிந்துகொண்டு விதிப்பொருள்பட நின்ற முன்னிலையேவலாக்கியு முரைத்துக் கொள்க. என்னை? செல்வப்பெருக்கமுடையார்க்கு உணவாகிய ஆன்பால் உடம்புநோயின்றி வளர்ச்செய்யும் மருந்துமாதல் போல, இவ்வழிபாடு மலவாசனை சிறிதுந்தாக்குதலின்றிச் சிவாநந்தம் மேன்மேல் வளர்ச்செய்யுஞ் சாதனமாதலுமுடைமையின், கண்ணழித்துரைபற்றி விதியாகவைத்துரைத்தலும் அதுபற்றி.

புண்ணிய பாவம் பொருந்துமிக் காமியமும்
மண்முதன் மாயைகாண் மாயையுங் - கண்ணிய
வஞ்ஞானங் காட்டுமா லாணவமு மிம்மூன்று
மெய்ஞ்ஞானிக் காகா விடு. (க)

இது, மலத்திரயங்க ளுள்ளளவும் ஞானங்கூடாதாகையால் அவற்றை நீங்கவேணுமென்கின்றது.

இ-ள். புண்ணியபாவம் பொருந்துமிக்காமியமும். எ-து. கன்மமலமாவது புண்ணியபாவங்களாகிய போகங்களைப் பொருந்தும்.

மண்முதன் மாயைகாண் மாயையுங் கண்ணிய. எ-து. மாயாமலமும் பிருதிவிமுதலாகிய பொய்மையை மெய்யாகக்கருதி மயங்க மயக்குதலைசெய்யும். -

அஞ்ஞானங் காட்டுமா லாணவமும். எ-து. ஆணவமலம் பொய்யாகியவற்றிலே சுபத்தையடையப்பண்ணும்.

ஆல் - அசை.

இம்மூன்று மெய்ஞ்ஞானிக் காகாவிடு. எ-து. இந்த மூன்றுமலங்களுடனே கூடி நிற்றல் உண்மை ஞானிக்கு ஆகாவாதலால் இவை நீங்கிநில். எ-று.

என்றது, அநவரதமு நிட்டைபுரியவேணு மென்றதாம்.

இது, சம்பிரதாய திட்டியாற் காட்டியது. (க)

சிவஞானமுனிவர் உரை.

எ-து. உ-ம். எ-னின். அவை அஞ்ஞானத்திற் கேதுவாய் வந்து நுழையுமாறும், அஃது அவர்க்காகாமையுந் தெரித்துணர்த்தி; ஏதுவை வலியுறுத்துத னுதலிற்று.

இ-ள். புண்ணிய பாவம் பொருந்தும் இக்கான்மியமும். எ-து. புண்ணியபாவப்பயனும் புண்ணியபாவகாரணமாயும் பொருந்துகின்ற இக்கன்மமலமும்—மண் முதல் மாயை காண் மாயையும். எ-து. நிலமுதல் மோகினியீறாகக் காணப்படுகின்ற இம்மாயாமலமும்—கண்ணிய அஞ்ஞானங் காட்டும் இவ்வாணவமும். எ-து. சுட்டியறிவதாகிய விபரீதவுணர்வைப் பயக்கும் இவ்வாணவமலமும்—இம்மூன்றும் மெய்ஞ்ஞானிக்கு ஆகா விடு. எ-து. இம்மலங்கண் மூன்றும் மெய்யுணர்வுடைய உனக்காகாமையான் அவற்றை விடுத்தொழிவாயாக. எ-று.

எல்லாமலங்களும் பற்றறத்துடைத்து மெய்யுணர்ந்து நிட்டைகூடினார்க்கு உடம்பு நிற்குமளவும் பிராரத்தவினை அவ்வுடம்பைப் பற்றி நிற்றலான், அஃது அவர்க்கு ஒரோவழி வாசனைவயத்தான் இங்குளி வாங்குங் கலம்போல வந்து தாக்கும்; அவ்வழிப், * "பிற்செயாதநுபவிப்பதின்று" ஆகலின் அது சார்வாக விருப்பு வெறுப்புக்கள் உளவாம்; அவை உளவாகவே, பரமே பார்த்திருப்பார்க்கு நிலமுதலிய ஏகதேசப்பொருள் காட்சிப்படும்; படவே, அவற்றைச் சுட்டியறிவதாகிய விபரீதவுணர்வு மேற்பட்டு மெய்யுணர்வைக் கீழ்ப்படுத்துப் பிறவிக்கு வித்தாம்: இவ்வாறிம்மூன்றும் அறிவற்றம்பார்த்து இம்முறையானே வந்து தலைப்படுமெனக் காட்டிக் கூறுவார் கன்மமாயை யாணவமென்றிம்முறையின் வைத்து அவ்வக்காரி

நிகழ்ச்சிகளை யெடுத்தோதிச் சுட்டிக்கூறினார். * சி.த்.௨—ரு
௧—செ.

இகரச்சுட்டு இடையினும் வந்திலையும்.

புண்ணியபாவமென்றது உபசாரம்.

முன் வந்த மாயை முப்பத்தொராறென்னு முறைமைக்க
கின்ற தத்துவத்தையுணர்த்தி விடாதவாகுபெயராய்த் தன்
னயிருகவுடைய வினைத் தத்துவங்களையுந் தழீஇயிற்று.

காண்மாயை செயப்படுபொருளோடு முடிந்த வினைத்தொ
கை.

இவை சிவபோகப் பெருவாழ்வையிழப்பித்தலின் மெய்ஞ்
ஞானிக்காகாவாயின. மேன்மேன் முறுகுவனவாய இவற்றை
தோன்றும்பொழுதே துடையாக்கால் "களைகுநர் கை
கொல்லுங் காழ்த்த விடத்து" என்னு முறைமைத்தாய் முடி
மென்பதுபற்றி விடுமென ஈண்டும் வலியுறுத்தப்பட்டது. வி
தலாவது, அவை அம்முறையானிகழ்ந்தவழி இவ்வஞ்ஞான
ஏகதேசக்காட்சியானாயதெனவும், அக்காட்சி விருப்புவெ
றுப்புக்களது தோற்றத்தானாயதெனவும், அத்தோற்றமும் பி
ராரத்த வினைநுகர்ச்சிக்கட்சென்ற தற்போதத்தாலாயதென
வும், அறிந்து அங்ஙனஞ் செல்வதாகிய தற்போதம் மூளையா
வாறு பரிகரித்துச் சிவஞானத்துளடங்கிச் சுவாநுபவம் சு
வாநுபூதியாம்படி ஞானநிலையில் உறைத்துநிற்றல்.

மாயைகன்மங்கள் அஞ்ஞானங்காட்டுதல் ஆணவமலச் சா
வானாய செயற்கையென்பதுணர்த்துதற்கு, மூன்றற்கும் பொ
துவாக ஏதுவுட் கூறிப் போந்தவதனை ஈண்டாணவமாத்தி
ரைக்கே சிறந்தெடுத்தோதினார்.

 ௧௨—ரு, முதலதிகரண முடிந்தது.

மறைப்பித்துத் தம்மை மலங்களில் வீழ்க்குஞ்
சிறப்பிலார் தந்திரத்துச் சேர்வை - மறைப்பித்துப்
பத்த ரினத்தாய்ப் பரனுணர்வி னாலுணரு
மெய்த்தவரை மேவா வினை. (௨)

(இது, அன்பரோடுமரீஇ என்றதற்குப் பிரமாணம்.)

இது, ஆன்மா அனாத்தமஞ்சட்போலப் பற்றினத்தைப்பற்றுமென்பது கூறுகின்றது.

இ-ள். மறைப்பித்துத் தம்மை மலங்களில் வீழ்க்குஞ் சிறப்பிலார் தந்திரத்துச் சேர்வை மறைப்பித்து. எ-து. திருவருளில்லாத பெத்தான்மாக்கள் மலங்களிலேவிழுந்து தம்மையும் பாசத்தையுஞ் சிவனையும் அறியாமலிருக்கின்றவர்களாகையாலே, தம்மைச்செறிந்தவர்களையு முண்மையைப்பிறப்பித்து, மலங்களிலே விடுதலைச்செய்யும்; சிறப்பிலார் தம்முடையவிட்டத்துக் கூடியிருத்தலை மீளவிடுத்து

பத்த ரினத்தாய். எ-து. பத்தர்களுடைய கூட்டமாய்

பரனுணர்வி னாலுணரு மெய்த்தவரை மேவா வினை எ-து. சிவஞானத்தாலே யுணராநின்ற உண்மை ஞானிகளை ஆர்ஜநமாகியவினை கூடாதென்பதாயிற்று.

சிவஞானிக ளெப்பொழுதுஞ் சிவஞானத்தையே பிரகாசிப்பார்களாதலாலே அடைந்தவர்கள் வினையுநீக்குவர்க ளென்பதா

யிற்று. அது, "ஆன்மா மருவினதொன்றிலே மருவுமாதலா லெனவறிக." "ஈசனுக்கன்பில்லா ரடியவர்க்கன்பில்லார்" என்றார்வழிநூலார். சித்-௧௨—சூ, உ—செ.

இதுவுஞ்சம்பிரதாயதிட்டி. (உ)

---

சிவஞானமுனிவர் உரை.

எ-து. உ-ம். எ-னின். அஞ்ஞானத்தை யுணர்த்து மவரோடு இணங்காமைமாத்திரையேயமையும் சிவபத்தர்களோடிணங்குதல் எற்றுக்கென்பாரை நோக்கி, அதனை வலியுறுத்துத லுதலிற்று.

இ-ள். தம்மை மறப்பித்து மலங்களின் வீழ்க்கும் சிறப்பு இலார் தம் திறத்துச் சேர்வை அற. எ-து. முதல்வன் காட்டியுங் கண்டும் உபகரித்து நிற்கும் அத்துவிதநிலையை மறவாது கடைப்பிடிக்குந் தமது ஞானக்கண்ணை யிழுப்பித்துத் தீய நெறிக்கட் கொண்டு சென்று மலங்களாகுயபிறவிக்குழியில் விழ்வித்துத் துயருறுத்துவாராகிய அன்பில்லார் கூற்றிலே தொன்றுதொட்டுப் பயின்று வந்த சேர்ச்சி யறும்படி— பத்தர் இனத்துப் பித்து ஆய்ப் பரன் உணர்வினால் உணரும் மெய்த்தவரை. எ-து. அம்மறவியைமாற்றி ஞானக்கண்ணை யுதவிப் பிறவிச்குழியினின்றுமெடுத்து நன்னெறிக்கட் செலுத்தி வாழ்விக்குஞ் சிவபத்தரது கூற்றிலே பேரன்புடையராய் அவ்வன்பு சார்பாக விளங்குஞ் சிவஞானக்கண்ணால் அந்நிலை கடைப்பிடித்துணரப் பெற்ற மெய்த்தவராயினாரை— வினை மேவா. எ-து. எல்லாவநத்தங்கட்கும் மூலமாய் வந்து சிறப்பில்லார் தந்திறத்துச் சேர்வையைப், பயப்பிக்கும் பிராரத்தவினைகள் வாதியா. எ-று.

மறப்பித்துத் தம்மை மலங்களின் வீழ்க்குஞ் சிறப்பில்லாரு

ன மேற்சொல்லிய பொருளையே அநுவதித்து விரித்தோதினார்; அதனெதிர்மறை முகத்தாற் சிவபத்தரது பெருந்தகைமையுணர்ந்துகோடற் பயனோக்கி.

மலம் ஆகுபெயர்.

வீழ்க்குமென்றது உருவகங்குறித்து நிற்றலின், அவ்வாறுரைக்கப் பட்டது.

எல்லாவற்றினும் அன்பு சிறந்தமையின் அதனைச் சிறப்பென்றார். பித்துப்போறலின், அன்பு பித்தெனப்பட்டது.

ஏனைத் தவங்களெல்லாம் மெய்யாதலின்றி மலநடையாய்ப் போதலின், பரனுணர்வினாலுணருந் தவமொன்றே மெய்த்தவமெனப்பட்டது.

வினை பால்பகாவஃறிணைப்பெயர். சிவபத்தர் மாட்டன்புடையராய் மனஞ்சொற் செய்கைகளான் அவர்வழி நிற்பார்க்கு உலகியலுணர்வு மாறிச் சிவாநுபூதியுணர்வே மேம்பட்டு நிகழும்: அது நிகழவே பௌதிக வுடம்பைப்பற்றி வரும் பிராரத்த வினைகள் அவர்க்கு நுகர்ச்சியாதல் செல்லாமையின் வாதிக்கமாட்டா: மாட்டாதொழியவே, அவை பற்றுக்கோடாக நிகழுஞ் சிறப்பில்லார் தந்திறத்துச் சேர்வை டற்றறக் கெடுமென்பார் சேர்வையறப் பித்துப்பத்தரினத்தாய்ப் பரனுணர்வினாலுணரு மெய்த்தவரை மேவா வினையென்றார். எனவே, வீட்டுணர்வை நிலைபெறுத்துஞ் சிவபத்தர்களோடிணங்கினாலன்றி வினை பற்றுக்கோடாகத் தொன்றுதொட்டுப் பயின்று வந்த சிறப்பில்லாரிணக்கம் அறுமையின், அவ்விணக்கம் ஒருதலையான் வேண்டுமென வலியுறுத்தவாறாயிற்று.

☞ இரண்டாமதிகரண முடிந்தது.

தன்னுணர வேண்டித் தனதுருவைத் தான்கொடுத்துத்
தன்னுணரத் தம்மு ளிருத்தலாற் - றன்னுணரு
நேசத்தர் தம்பா னிகழுந் தநிநெய்போற்
பாசத்தார்க் கின்றாம் பதி. (௯)

இது, திருவேடத்தாரிடத்தே சிவன் பிரகாசித்துநிற்பனாத லா லவர்களைச் சிவனாக வழிபடவேணுமென்கின்றது.

இ-ள். தன்னுணரவேண்டித் தனதுருவைத் தான்கொடுத்துத் தன்னுணரத் தன்னு ளிருத்தலால். எ-து. [தன் பதி-தத்துவாதீதனாயிருக்கின்ற சிவன்] தன்னை யாவரு மறிதலை விரும்பித் தன்னுடைய திருமேனியைத் தனதுபத்தர்களிடத்தேகொடுத்துத் தன்னாலே யாவர்க ளியா தொன்றையு மறியும்படி யவர்களுடைய வுயிர்களுக்குயிரா யெழுந்தருளியிருப்பனாதலால்.

தன்னுணரு நேசத்தர் தம்பா னிகழுந் தநி நெய்போல். எ-து. தன்னையுணருகின்ற பத்தர்களிடத்தே தயிரின் நெய்போலத் தோன்றுவன்.

பாசத்தார்க் கின்றாம் பதி. எ-து. பாசபந்திகளுக்குப் பாலின் நெய்போலத் தோன்றுதலில்லையா யிருப்பன். எ-று.

எனவே, எங்கு மொக்கநிற்பன் தயிரில்நெய்போலப் பத்தர்களிடத்துத் தோன்றிநிற்பனாதலால் அவர்களைச் சிவனாகவே

வழிபடுவது நன்றென்றாயிற்று. சிவன் திருவேடத்தாரிடத்தே தோன்றிநிற்பனென்னும் பக்கத்துக்கு, தயிரின்நெய் சபக்கமாயினவாறுகாண்க. "அறிவறிவான்றனையறியவாக்கையாக்கி யங்கங்கேயுயிர்க்குயிராயறிவுகொடுத்து" எனருர் வழிநூலார். சித்-சஉ—ரு, ௩—செ. (௩)

---

சிவஞானமுனிவர் உரை.

எ-து. உ-ம் எ-னின். திருவேடத்தின் இறைவன் பிரகாசமாய் நிற்குமாறு யாங்ஙனமென்பாரை நோக்கி அதனை வலியுறுத்துத லுதலிற்று.

இ-ள். பதி. எ-து. அசிந்திதனாய் நின்ற பரம்பொருளே—தன் உணர வேண்டி. எ-து. உலகத்துள்ளார் தன்னை யறிதற்பொருட்டு—தனது உருவைத்தான் கொடுத்து. எ-து. திருநீறு கண்டிகை முதலிய திருவேடமாகிய தனது திருவடிவத்தைத் தன்னன்பர்க்குக்கொடுத்தலானும்—தன் உணர.எ-து. அவ்வன்பர் தன்னைச்சிவோகம்பாவனையால் அறியச் செய்தலானும்—தன்னுள் இருத்தலால். எ-து. அங்ஙனம் ஒரு குறியின்கணின்றுணருமவரைத் தனது வியாபகத்துள்ளாக இருத்தலானும்—தன் உணரும்நேசத்தர் தம்பால் ததி நெய்போல் நிகழும். எ-து. குறியுமிறந்து நின்று பின்னை யுள்ளவாறுணருமவர்மாட்டுத் தயிரின்கண்ணதாகிய நெய்போல விளங்கித்தோன்றும்—பாசத்தார்க்கு இன்று ஆம். எ-து. அவ்வியல்பில்லாத பாசக்கட்டுடையார் மாட்டுப் பாலின் கண்ணதாகிய நெய்போல விளங்காதுநிற்கும். எ-று.

செய்தென்பது சொல்லெச்சம்.

இருத்தல் அல்லீற்றுப் பிறவினைத்தொழிற்பெயர்.

கொடுத்துச் செய்திருத்த லாணிகழுமென வினையும்.

தன்னுணருநேசத்தரெனப் பெயரடையானும் ஒரேதுக் கூறப்பட்டது. தன்னையென்னுமிரண்டனுருபு விகாரத்தாற் றொக்கது.

உணர்தலை மூவிடத்தோதுதலின் இஃதிங்ஙனம் வேறு வேறுரைக்கப்பட்டது.

பாசத்தார்க்கென்பது உருபுமயக்கம்.

இன்மை ஈண்டு விளங்காமைகுறித்து நின்றது.

---

கண்டதொரு மந்திரத்தாற் காட்டத்தி லங்கிவே
றுண்டல்போ னின்றங் குளதாமாற் - கண்டவுருத்
தானதுவா யன்றானன் றானதுவாய்த் தோன்றானோ
தானதுவாய்க் காணுந் தவற்கு. (௪)

இது, திருக்கோயில் வழிபடுதல் கூறுகின்றது.

இ-ள். கண்டவுருத் தானதுவாயன்றானன் எ-து. காணப்பட்ட வடிவுகளெல்லாந் தானாகியிருந்தவையல்லவாகி நிற்கின்ற சர்வவியாபியாய சிவன்.

காட்டத்திலங்கிவேறுண்டல்போனின்றங்குளதாமால். எ-து. காட்டத்திலக்கினி வேறாக வுண்டானபடி யல்லவானார்போல வெங்கும் வியாபித்துநின் றொருவன் தனக்கு வேண்டினபொழுது பிரார்த்தித்தவிடத்தே கடைய வந்து தோன்றினாற்போல.

கண்டதொரு மந்திரமூர்த்தமாகக் கண்டதொரு மூர்த் மந்திரத்தால். தமாதலால் அந்தந்தவிடத்திலே. எ-து.

நானதுவாய் அந்தஞானமே திருமேனியான ஆநந்தரு த்தோன்றுஞே. பியாய்த் தோன்றுமவிருப்பனே. எ-து.

(ஓ-எதிர்மறை) தோன்றுவனென்பதாம்.

தானதுவாய் அந்தச் சிவசொரூபந் தானுகிநின்று காணு காணுந் தவர்க் ந்தபோதனர்க்கு. எ-று. கு. எ-து.

எனவே, திருக்கோயிலுள்ளிருக்குந் திருமேனியை மந்திரமூ ர்த்தமாகக்கண்டு தற்பாவனையாற் பாவிக்க அந்தபாவனையிற ந்த சொரூபந் தானுமென்றவாறு. "திருக்கோயிலுள்ளிருக்கு ந்திருமேனிதன்னைச் சிவனெனவேகண்டவர்க்குச் சிவனுறைவ ன்" என்றார்வழிநூலார். சித்-கஉ—கு, ௪—செ.

மந்திரமூர்த்தமான சிவலிங்கத்தே தற்சொரூபத்தைக் கா ணலாமென்னும் பக்கத்துக்கு, காட்டமுமக்கினியுஞ் சபக்கமா யினவாறுகாண்க. (௪)

---

சிவஞானமுனிவர் உரை.

எ-து. உ-ம். எ-னின். சங்கமவடிவிற்குக் கூறிப்போந்த இ யல்பில்லாத தாவரவடிவின் மந்திரசாந்நித்திய முள்வழியன் றிப் பிரகாசமாய் நிற்றல் பெறப்படாதென்பாரை நோக்கி, சிவாலயத்தினிடத்தும் இறைவன் பிரகாசமாய் நிற்றலை வலியு றுத்துத னுதலிற்று.

இ-ள். காட்டத்தின் அங்கி வேறு உண்டல்போல். எ-து. வி றகிற்றீ கடைகோலாற்கடைந்தழி வேறாய் விளங்கும், அல்லு

ழி விளங்குவதன்றூற்போல—கண்ட உருத் தான் அது ஆய் அன்று ஆனுன். எ-து. உயிர்கட்குப் புத்திமுத்தி யளித்தற்பொருட்டுக் காணப்பட்ட தாவர வடிவின்கட் கலப்பினுல் அதுவே தானுய் அதுவன்றி வேறு பொருளுமா மியல்புடைய முதல்வன்—கண்டது ஒருமந்திரத்தான் நின்று அங்கு உளது ஆம் ஆல். எ-து. அதுவே தானுகக் காணுதார்க்குத் தம்மாலறியப்பட்டதொரு மந்திரசாந்நித்தியமில்வழி அவ்வடிவின்கண் விளங்காது நின்று அஃதுள்வழி விளங்கித்தோன்றும்பொருளாம்.—அது தான் ஆய்க் காணும்தவர்க்கு அது தான் ஆய்த் தோன்றுனே. எ-து. அவ்வாறன்றி அவ்வடிவே அவனுகக் காணட்டுறு உண்மைத்தவமுடையார்க்கு அப்பெற்றியனேயாய் விளங்கித் தோன்றுன் கொல்லோ. எ-று.

காணுதார்க்கென்பது சொல்லெச்சம்.

மந்திரத்தாலென்னும் பொருளைக்கேற்ப உவமையினும் வருவித்துரைக்கப்பட்டது.

உண்டாதல் ஈண்டு விளங்குதன்மேற்று.

ஆல் அசை. ஆனுனென்பது பெயர். ஓகாரம் எதிர்மறை.

பொருண்மைபற்றி உளதெனவும் அன்றெனவும் கூறினுர்.

தானதுவாயன்றானெனன்னும் பெயரடையான் அவரவர் பாவனைக்கேற்ப விளங்குதற்கேதுகூறியது. தானதுவா யன்றுதல் சங்கமவடிவிற்குமொக்குமேனும், தாவரவடிவின்கண் நிகழுங் கடாவை இதனுனன்றி நீக்கலாகாமையின் ஈண்டுக் கூறினுர் இஃதிரிடத்து மொக்குமென்பது முன்னர்ப் பெறப்படும்.

 சஉ—சூ, மூன்றுமதிகரண முடிந்தது.

அதுவிது வென்ற ததுவல்லான் கண்டா
லதுவிது வென்றதுவு மல்லான் - பொதுவதனி
லத்துவித மாத லகண்டமுந் தைவமே
யத்துவிதி யன்பிற் றொழு. (௫)

இது, சிவனுக்குப் பூசைசெய்தல் கூறுகின்றது. அஃதாவது, நாடிநரம்புமுதலாயினவற்றைத் தானென்றுவருமான்மாவை யல்லவாயிருக்கச்சே இவற்றுக்குச் செய்கிறவுபகாரம் ஆன்மாவுக்காகின்ற முறைமைபோலச் சிவனாகின்ற தற்சொரூபனு மிவ்விடங்களிலே யப்படியாகியுமா யில்லவுமாய் நிறைந்துநிற்றலென்றது. இந்தச் சிவலிங்கத்துக்குச்செய்கின்ற வுபசாரமும் அவனுக்காமாகையாற் பூசைநமஸ்காரங்கள் செய்யவேண்டுமென்றதாம்.

| | |
|---|---|
| இ-ள். அதுவிது வென்ற ததுவல்லான். எ-து. | அதுவல்ல விதுவல்லவென்று நீக்கப்பட்ட தேகமுதலாயினவுமல்லன். |
| கண்டா லதுவிதுவென்றதுவு மல்லான். எ-து. | விசாரித்துப்பார்க்கில் அதுவல்ல விதுவல்லவென்று தேகமுதலாயினவற்றைப் பிரித்து நீக்கப்பட்ட ஆன்மாவுமல்லன், |
| பொதுவதனி லத்துவிதம். எ-து. | பொதுவாக அவ்விரண்டினு நிறைந்துநின்று அவற்றைச் சேட்டிப்பித்து நிற்பன். |
| ஆதல். எ-து. | ஆகையாலே |

அகண்டமுந் சர்வமுஞ் சிவமயமாம்.
தைவமே. ஏ-து.

ஏகாரம்-தேற்றம்.

அத்துவிதி ய அப்படி யந்தச்சிவலிங்கத்தினும் வேறற
ன்பிற் றொழு. க்கலந்து நிற்பன், அவனைச் சிவ நேசித்து
எ-து. ப் பூசைநமஸ்காரஞ் செய். எ-று.

இது, சம்பிரதாயதிட்டியாலறிவித்தது. (௫)

---

சிவஞானமுனிவர் உரை.

எ-து.,உ-ம். எ-னின். முதல்வனுக்கு அவ்வியல்பு எல்லாப் பொருட்கண்ணு முண்மையின், அவற்றுள் இவ்விடங்களின்மாத்திரையே வழிபாடு விதித்தலென்றுக்கென்பாரைநோக்கி, அதனை வலியுறுத்துத னுதலிற்று.

இ-ள். கண்டார்க்கு. எ-து. முதல்வன் உயிர்ப்பொருள் உயிரில் பொருளெல்லாவற்றினும் நிற்குநிலைமை யறியப்பெற்றோர்க்கு—அது இது என்றது அல்லான். எ-து. கண் அருக்கன்போல் அதுவும் இதுவுமெனப் பக்கிளைத்தோதப்பட்ட பேதநிலைமையனு மல்லனாய்—அது என்றது அல்லான். எ-து. உடலுயிர்போல் அதுவேயென்றோதப்பட்ட அபேதநிலைமையனு மல்லனாய் அது இது என்றதையும் அல்லான். எ-து. குணகுணிபோல் அதுவாகிய இதுவென்று பக்கிளைசயாமலோதப்பட்ட பேதாபேத நிலைமையனுமல்லனாய்—பொதுவதனில் அத்துவிதம் ஆதல் அகண்டமுந் தைவமே. எ-து. அறிவொளிபோல் அம்மூன்றற்கும் பொதுமையான அத்துவிதநிலைமையனாதலான் எல்லாப் பொருளும் அவன் வடிவேயாமாயினும்—அத்துவிதி அன்பின் தொழு. எ-து. அவற்றுள்ளும் அன்பு விளையுமிடத்தின் வழிப

டுவாயாக அவ்வத்துவித சித்தாந்தத்தைப் பெற்றுடையோய். எ - று.

அது விதுவென்றது முன்னையது உம்மைத்தொகை; பின்னையது இருபெயரொட்டுப் பண்புத்தொகை.

அல்லானென்பதனை மேலுங் கூட்டி, என்றதென்பதனை அதுவென்றதனோடுங் கூட்டியுரைக்க. அல்லானென்பது முற்றெச்சக்குறிப்பு.

என்றதை ஐயீற்றுடைக்குற்றுகரம். உம்மை இறந்தது தழீஇயிற்று. பொதுவதென்னுமது பகுதிப்பொருள் விகுதி. தைய மென்னுஞ் சொல்லியல்பு மேலேயுரைத்தாம். ஏகாரந்தேற்றம். ஆயினுமென்பது சொல்லெச்சம். அன்பு ஆகுபெயர். ஏழாவது விரித்துரைக்க.

“திருக்கோயிலுள்ளிருக்குந் திருமேனி” யினன்றி “எங்குமு ருக்காணவொண்ணாத பான் முலைப்பால் விம்மி யொழுகுவது போல் வெளிப்பட்டருளுவ தாகி அடிப்பட்டுவருமன்புவிளை யாட்டமைவின் ஆண்டுச்செய்யும் வழிபாடே அத்துவிதஞானத்தை நிலைபெறுத்தற் பயத்ததென்பார் அத்துவிதமாதலகண்டமுந் தைவமேயென அநுவதித்து அத்துவிதியன்பிற்றொழுமென்று ர். அத்துவிதியென்னும் அன்னைவிளி பயனுணர நின்ற குறிப் பப்பெயர். இதனானே விதிக்குப் பயன்கூறியதூஉ மாயிற்று இனி அது இதுவென்பன அருவுருவாகிய திருமேனியெனக்கொ ண்டு அதற்கியையவுரைப்பாருமுளர். அவர், அன்பிலென்றதனை ஏதுப்பொருட்கண் வரும் ஐந்தனுருபேற்ற இயற்பெயராக வை த்துரைப்ப.

வினையா லசத்து விளைதலான் ஞானம்
வினைதிரி னன்றி விளையா - வினைதீர
ஞானத்தை நாடித் தொழவே யதுநிகழு
மானத்தா லன்பிற் றொழு. (௬)

இது, வழிபாட்டாலொழிந்து வினைநீங்காதென்கின்றது.

இ-ள். வினையாலசத்து விளைதலான். எ-து. யாதொருவினையைச் செய்யுமிடத்து அந்தவினையினாலே அஞ்ஞானம் விளைந்து வருமாகையால்.

என்றது, மனவாக்குக்காயத்தாலொழிந்து ஒருவினையுங்கூடாது. அந்தவினையைச்செய்யுமிடத்து யான்செய்தேன் பிறர்செய்தாரென்னதியானென் றொழியவாராதாகையால் யானெனதென்ப துள்ளவளவும் வினைநீங்காதென்பதாயிற்று.

ஞானம் வினைதிரினன்றி விளையா. எ-து. அப்படியாகியவினை நீங்கினாலொழிந்து உண்மைஞானம் விளையாது.

வினைதீர ஞானத்தைநாடித் தொழவே யதுநிகழும். எ-து. அந்தவினையைத்தீரத் திகழ்ந்தஞானத்தினையாய்ந்தறிந்து வழிபட வந்தச்சிவப்பிரகாசந்தோன்றும்.

ஆனத்தாலன்பிற் றொழு. எ-து. ஆகையாலன்பினையுடையாய், சிவபத்தரையுஞ் சிவலிங்கத்தையு மன்பினாற் கண்டு வழிபடுக. எ-று.

அப்படி வழிபட்டுவரவே தேகாந்தமளவும் பிராரத்தகன்ம

ம் புசிக்கவேணும், புசிக்குமிடத்து யானெனதென் றொழிய வாராது, அதுவருமளவும் வினையேறும், அந்தவிடை ஞானத்தி லேநின்று நீக்கவேண்டும், அந்தஞானத்தினிற்ற லெட்பொழு துங் கூடாதாகையாற் றொண்டர்களையும் சிவலிங்கத்தையும் வழிபட வந்தவினையேறுதென்றதாம்.

ஞானத்தைநாடி என்றது கன்மம் புசித்தற்கு வருகின்றமு றைமையு மிந்திரியங்கள் விடயீகரிக்கின்ற முறைமையுந் தான் அதுவதுவாய் நிற்கின்ற முறைமையுங் கத்தா புசிப்பிக்கின்ற முறைமையு மாராயவென்றதாம்.

இது சம்பிரதாயதிட்டியாலறிவித்தது. (௬)

---

சிவஞானமுனிவர் உரை.

எ-து. உ-ம். எ-னின். அசத்தாயுள்ள வன்னபேதங்களை அ சத்தென்று கண்டொருவவே, ஞானசொருபம் உளதாய் அத் துவிதத்தையுணர்த்துமாகலான், அதன்பொருட்டு வழிபாடு வே றுவிதித்தல் எற்றுக்கென்பாரை நோக்கி, அதனை வலியுறுத்து த னுதலிற்று.

இ-ள். வினையால் அசத்து விளைதலான் ஞானம் வினைதீரி ன் அன்றி விளையா. எ-து. உடம்பின் கண்ணதாகிய பிராரத் த வாசனை உயிர்க்குத் தாக்குவதாயுள்ள துணையும், அதனான் வ ரும் விருப்பு வெறுப்புக்களும், அவை பற்றிக் காட்சிப்படும் மண் முதன் மாயைகளும், அவைபற்றி நிகழும் விபரீதவுணர்வுமாகி ய அசத்துக்கள் ஒருவிய வழியும் வந்துகூடி மேம்படுவனவாக லான்; அவ்வளவிற்கெல்லாம் மூலமாகிய பிராரத்தவாசனை ப ற்றறக் கழிந்தாலன்றி, அவ்வசத்தைக் கீழ்ப்படுத்து மெய்யுண ர்வு மேம்படுதல் கூடாதாகலின்—வினை தீர ஞானத்தை நாடி

த் தொழவே அது நிகழும். எ-று. அவ்வாசனை பற்றறக் கழிக ற்பொருட்டு அம்மெய்யுணர்வுடையாரை நாடி வழிபடவே அ வ்வினை நீங்கி மெய்யுணர்வு மேம்பட்டு நிகழும்—ஆனத்தால் அ ன்பின் தொழு. எ-று. ஆகலான் அன்பினால் அவரை வழிபடுவா யாக. எ-று.

அசத்தைபொருவியவழி உளதாகிய ஞானசொரூபம் நிலைபெ றுதல் அவ்வசத்தினது விளைவிற்கு வேராகிய வினைத்தீர்வி ன்கண்ணதாகலான், அவ்வினை வேரறுத்து மெய்யுணர்வை நி லைபெறுத்துதற்பொருட்டு அதனை அங்ஙனநிலைபெறுத்தினார்மா ட்டுச் செய்யும் வழிபாடு ஒருதலையான் வேண்டப்படுமென்ப தாம். அற்றேல், அதன்பொருட்டு ஸ்ரீ பஞ்சாக்கரத்தை விதிப் படியுச்சரிக்கவென்றவதுவே அதற்கமையுமெனின்,—அஃதொ க்கும். அவ்வுச்சரிப்பும் இவ்வழிபாட்டையின்றி யமையாதெ ன்க. அற்றாகலினன்றே, ஆண்டஞ்செழுத் தாலெனவும், மண் முதலுளமெனவும், அகத்து வழிபாட்டை உடன் கூறியதூஉ மென்பது.

வினையாதென்னுந் துவ்விகுதி விகாரத்தாற்றொக்கது.
பின் வந்த ஞானம் ஆகுபெயர்.
ஆனதனாலென்பது ஆனத்தாலென மரீஇயிற்று.

---

தன்னை யுணர்த்தித் தான்றனைச் செய்தானைப்
பின்னை மறத்தல் பிழையலது - முன்னவன்றான்
தானேதா னாச்செய்துந் தைவமென் றுந் தைவமே
யானாற் றொழுகை வலி. (எ)

இது, தானவனானபின்பு வழிபா டென்னென்போர்க்கு அ து வேணுமென்பதவும், ஆசாரியனே சிவன் அவனை யெவ்விடத் துங் காணவேணுமென்பதுவுங் கூறுகின்றது.

இ-ள். தன்னை யறிவித்துத் தான் ருனைச் செய்தானை. எ-து.
ஒன்றையு மறியாமலிருந்த வான்மாவைத் தன்னுடையவருளினாலே யாணவ மாயை காமியமென்னு மூன்றையுந் தரிசிப்பித்து, தன்னைத்தரிசிப்பித்து, தன்னுடைய சொரூபமே சொரூபமாகநிறுத்திய குருபரனைச் (சிவனென்றுங் குருவென்றுந் திருவேடமென்றுங் கூறியவாறறிக.)

பின்னை மறத்தல் பிழை. எ-து.
அவன் தானானபின்பு தேகமுள்ளளவு மறக்கின்றது பாதகமாம்.

அலது. எ-து.
இதுவல்லதும்,

முன்னவன்ருன் ருனேதானச் செய்துந் தைவம். எ-து.
அப்படிக் குருமூர்த்தமாகிய சிவன்ருன் தன்னுடையசொருபமே யிவனுக்குச்சொருபமாகச் செய்தவிடத்தும் அடிமையாவன் ருே நிற்கின்ருன்.

தைவ மென்றுந் தைவமேயானல். எ-து.
என்றுந் தைவமேயாம். அதனாலே எவ்விடத்தும் அடிமையேயானல்

தொழுகைவலி. எ-து.
இவ்விடத்து மடிமையாய்நின்று தொழுகையேயன்ருே தனக்குப் பலமாவது. எ-று

எனவே, சிவனுடைய சொரூபமானவிடத்தும் பெறுவானுங் கத்தாவு மடிமையு முண்டென்னுந் துணிவும் இவ்விடத்து மப்படி யடிமையாய் நீங்காமனின்று வழிபடவேணுமென்பதவுங் கூறினாராயிற்று. "பரம்பிரமமிவனென்றும்பரசிவன்ருனென்றும்." என்ருர்வழிநூலார். சித்-கஉ—ரு, எ—செ.

இது சம்பிரதாயதிட்டியாலறிவித்தது. (எ)

சிவஞானமுனிவர் உரை.

எ-து. உ-ம்: எ-னின். அங்ஙனம் பயன்பற்றி விதிக்கப்படு ம் வழிபாடு வேள்வி முதலியனபோலப் பயன் வேண்டாமை யாகுதல், பின்னர்ச் செய்து பெறுதுமென்றுதல், ஒரோவழி யொழியவும் படுங்கொல்லோவென்பாரை நோக்கி; அதுசெய் யாவழிப்படுங் குற்றமும் செய்தல் கடமையாமாறும் உணர்த் தி விதித்தலை வலியுறுத்துத னுதலிற்று.

இ-ள். தன்னை அறிவித்துத் தான் தான் ஆச் செய்தானைப் பி ன்னை மறத்தல் பிழை அலது. எ-து. தன்னுண்மையை அறிய மாட்டாது குருடாய்க் கிடந்த உயிர்க்குப் பலவாற்றானும் அ தனைத் தெரித்துணர்த்தி எத்தனையுமெளிய அவ்வுயிரை எத் தனையுமரிய தானாம்வண்ணஞ் செய்தளித்த பெரியதோருதவி யை அதன் பின்னர் மறக்குமாயின், அஃது இதற்குமுன் அறி யாமையான் மறந்த குற்றம்போலத் தீர்திறனுடையதோர் கு ற்றமன்றாகலானும்—முன்னவனே தானே தானச் செய்தும் தைவம் என்றும் தைவமே மானே தொழுகை வலி. எ-து. முதல்வன் அங்ஙனந் தான்றானேயாகச் செய்தாலும் இதுகா றுந் தனக்குச் சுதந்திரமின்றி முதல்வனது உபகாரத்தையின் றியமையாதாய் அடிமையாகிய உயிர் எக்காலத்தும் அவ்வா றடிமையேயாமாகலானும், தான்றானச் செய்தளித்த அப்பெரி யோனை வழிபடுதலே அவ்வுயிர்க்கு வலியாவது. எ-று.

தமதுமுதற்றனே குருவாகலிற் றன்றானச் செய்தானையெ ன்றும், முன்னை மறந்த குற்றம் அறியாது நிகழ்ந்ததாகலிற் கழுவப்படும் இஃத்துபோற் கழுவப்படுவ் தன்றென்பார் பின் னை மறத்தல் பிழையலதென்றுங் கூறினார். பின்னை மறத்த லென்பதனாற் முன்னை மறத்தல் பெறப்பட்டது. "எந்நன்றி

கொன்றார்க்கு முய்வுண்டா முய்வில்லை செய்ந்நன்றி கொன்ற மகற்கு" என்னுங் கருத்து நோக்கிக் கூறியதூஉமாம். திருக்குறள்-௧௧—அதிகாரம்-௰—குறள்.

அலதுமெனப் பாடமோதி இது பிழையாதலன்றியுமென்றுரைப்பாரு முளர்.

ஏகாரம் முன்னையது அசைநிலை; பின்னையன தேற்றம்.

செய்தாலென்பது செய்தெனத் திரிந்தது.

உம்மை சிறப்பின் கண் வந்தது.

தான்றானுச்செய்தல் எதனையெதனைப் பற்றினும் அதுவதுவாமுயிர் தன்னையறிந்தவழி எண்குணங்களானிறைந்துதன்வண்ணமாகச்செய்தல். அங்ஙனஞ்செய்தவழியும் "உயிர்தானுஞ் சிவாநுபவ மொன்றினுக்கே யுரித்து" என்பார் சைவமென்றுஞ் சைவமேயென்றார். சித்-௧௧—௬, ௰—செ. "செம்பிரத." சைவமென்னுஞ் சொல்லியல்பு மேலே யுரைத்தாம்.

மானையென்னும் இரண்டனுருபு விகாரத்தாற்றொக்கது. மானென்பது வடசொற்றிரிபு. சுட்டு வருவிக்க.

வலிதருவதனை வலியென்றுபசரித்தார்.

இவ்வுதாரணங்கண் மூன்றானும், வழிபாட்டிற்கும் இடத்து நிகழ்பொருண்மாத்திரையேயன்றி இடவிசேடமும் பெறல்வேண்டுமென அதனை வலியுறுத்துமுகத்தானே, முறையே சிவலிங்கத்தையுஞ் சிவபத்தர் வேடத்தையுஞ் சிவதேசிகர்களையும்அறிந்து வழிபடுமாறு கூறப்பட்டது.

---

சிவமென்னு மந்தர சிந்தைநேர் நோக்கப்
பவமின்றாங் கண்வா சகத்திற் - சிவமுண்டா
மொன்று மிரண்டு மலத்தார்க்கிங் கொண்குருவா
லின்றிந்நூன் மும்ம மலர்க்கு. (அ)

இது, சிவனையுங் குருவையுஞ் சாத்திரத்தையு மொன்றாகநி
னைந்து வழி படவேணுமென்கின்றது.

இ-ள். சிவமெ சர்வான்மாக்களுக்கும் பிராணனாகியுள்
ன்னு ம ளாரென்னுஞ் சிவன்
ந்தரன்.
எ-து.

சிந்தை நேர் நின்றநிலையிலே திருவுளத்தடைக்கப் பிற
நோக்கப் பவ வியில்லையாகும் சிவம் பிரகாசிக்குமொரும
மின்றும் சிவமு லத்தையுடைய விஞ்ஞானகலர்க்குப் பார்க்க
ண்டா மொன் ப்பவமின்றும்.
றுமலத்தார்க்
கு. எ-து.

கண்வாசகத் திருநயனங்களாலேபார்க்கப் பிறவியி
தில் பவமின்றும் லையாகும் சிவம் பிரகாசிக்குமிரண்டுமலத்
சிவமுண்டா மிர தையுடைய பிரளயாகலர்க்குச் சகத்திலொ
ண்டு மலத்தா ண்குருவாய்ச் சிந்தைநேராகப் பார்க்க
ர்க்கு. ஒண்குருவா
ல்சிந்தைநேர்நோ
க்க. எ-து.

இன் றிந்நூ இப்பொழுது சகத்திலே யவர்களைப்போ
ல் பவமின்றுஞ் லத் திருமேனிகொண் டொள்ளிய ரூபனாகி
சிவ முண் டா வந்து திருவுளத்தடைக்கத் திருநயனங்க
மொன்று மிரண் ளாலே பார்க்க வினியசாத்திரங்களாயினவ
டுமலத்தார்க்கு. ற்றையுணர்த்தப் பிறவியில்லையாகுஞ்சிவம்பி
எ-து. ரகாசிக்கும் மூன்று மலத்தையுடைய சகல
ர்க்கு. எ-று.

நூலென்றது நூலையுணர்த்தவென்பதாம்.

பவமின்றாஞ் சிவமுண்டா மென்பதனை யெவ்விடத்துங்கூட்டுக.

சகலர்க் கெல்லாம்வேண்டுமென வறிக. "பரம்பிரம்மிவனென்றும்பரசிவன்றானென்றும் பரஞானமிவனென்றும்." என்றார்வழிநூலார். சித்-கஉ—கூ, எ—செ.

இதுசம்பிரதாயதிட்டியாலறிவித்தது. (அ)

---

சிவஞானமுனிவர் உரை.

எ-து. செ-ள் எ-னின் இங்ஙனஞ் சிவாகமத்துண்ஞானபாதப்பொருளெல்லாவற்றையும் பொது உண்மையென்றிருவகைப்படுத்துப் பிரமாணவியல் இலக்கணவியல் சாதனவியல் பயனியலென நான்கியலாக வைத்துப் போதிப்பதாகிய இச்சிவஞானபோதநூலைக் கோடற்குரிய அதிகாரிகளாவார் இவரென்ப துணர்த்துத னுதலிற்று

இ-ள். சிவம்என்னும் அந்த தர. எ-து. தான்றானச்செய்தவாற்றாற் சீவனென்னு மியல்பினீங்கிச் சிவமென்றோதப்படும் வேதாந்தத்தெளிவாகிய சித்தாந்தத்தையுடைய மாணவகனே, ஒன்றும் இரண்டும் மலத்தார்க்கு. எ-து. ஒன்றுமிரண்டுமாய மலங்களையுடைய விஞ்ஞானகலர்க்கும் பிரளயாகலர்க்கும்—சிந்தைநேர் நோக்கக் கண் வாசகத்தின் பவம் இன்று ஆம். எ-து. முறையே அறிவின்கணின்று அருட்பார்வையானேக்குதலானும் தேவகுருவாய் முன்னின்று செய்யுந் திருநோக்கம் பரிசம் வாக்கெனப்படுந் தீக்கையானும் பிறவிக்கேதுவாய பசுத்துவநீங்கிச் சிவத்துவம் விளங்குமாகலான்—மும்மை மலர்க்கு இங்கு ஒண்குருவால் இன்று இந்நூல். எ-து. அவரின் வேறாகிய மும்மலமுடையவர்க்கே உரித்து இவ்வுலகத்தறுப

வமுடைய தேசிகராற் போதிக்கப்படும் இச்சிவஞானபோத நூல். எ-று

அந்தம் வேதாந்தம், அந்ததரஞ் சித்தாந்தமாகலின், அதனைப் பெற்ருராது பெருமைகூறுவார் சிவமென்னு மந்ததரவென்ருர்.

என்னுமென்புழிப் படு சொற் ருெக்குநின்றது. சிந்தை-அறிவு. கண்ணுருபு விரித்துரைக்க.

நேர் நோக்குதல் முன்னை மருட்பார்வையை மாற்றி அருட்பார்வையா னோக்குதல். நோக்க நோக்குதலானென்க.

கண் வாசகங்களைக் கூறவே இனம் பற்றிப் பரிசமும் உடன் கொள்ளப்படும்.

பவம் ஆகுபெயர்.

இந்நூல் அநுபவமுடைய தேசிகனாலன்றி விளங்காதென்பார் ஒண்குருவாலென்ருர்.

போதிக்கப்படுமென்பது அவாய் நிலையான் வந்தது.

இன்றிந்நூலென்பது இந்நூலென்னும் பொருட்டு. இக்காலலத் துரைக்கப்படு நூலெனினுமமையும். அது "தானுரைத்தானின்று" என வருகின்ற வெண்பாவாற் கூறியவாற்ருனுமறிக.

முப்மையென்றது ஈண்டெண்ணின் மேனின்றது, "தெரிமாண்டமிழ்மும்மைத் தென்னம்பொருப்பன்" என்புழிப்போல.

 நான்காவது புறனடை முடிந்தது.

---

 பன்னிரண்டாஞ்சூத்திர முடிந்தது.

 சிறப்பியல்பு - பயனியன் முற்றிற்று.



நூன் மரபு.

## தனியன்.

எந்தை சனற்குமர னேத்தித் தொழுமியல்பா
னந்தி யருள்செய்த ஞானநூல்-சிந்தைசெய்திப் [
போதுரைத்தான் மெய்கண்டான் பூதலத்தோர் தா
வேது திருட்டாந்தத்தா லின்று.

இது, நூன்முறைகூறுகின்றது.

இ-ள். எந்தை சனற்குமரனேத்தித் தொழுமியல்பான். எ-து. — எம்முடைய சுவாமியான சநற்குமா வான் தோத்திரங்கண் முதலாயின தொழுகமுறைமையாலே.

நந்தி யருள்செய்த ஞான நூல். எ-து. — ஸ்ரீ நந்திதேவநாயனார் அவருக் கரு செய்த ஞானநூலை.

அது பன்னிரண்டு கிரந்த சித்திரமும்.

சிந்தைசெய் திப்போதுரைத் தான் மெய்கண் டான் பூதலத் தோர் தாமுண ர. எ-து. — யாம்பெற்றதெல்லாம் யாவரும்பெறு ன்பது திருவுள்ளத்தடைத்து இப்பொ அருளிச்செய்தான் தமிழ்நூலாகப் பூ தோ ரறியும்படி அசத்தை யசத்தெ நீக்கிச் சத்தைத் தரிசித்தவன்.

...பக்ஷம் - ஏது— ...ந்தங்களாலிப்
...பொழுது. எ-று.

...பரமேச்சுரன் நந்திகேச்சுரதே... கருளிச்செய்ய
...சநற்குமாரபகவானுக் கருளிச்செய்... தப்பரம்பரையி
...மெய்கண்டதேவநாயனார்க் கருளிச்செய்ய, அவ ரிப்படித்
...கவருளிச்செய்தாரென்றதாம்.

இவ் வுரையாசிரியர் பெயர் முதலிய.

...சொல் லுண்மைச் சிவஞான போதம்
...ணர்ந்த பாண்டிப் பெருமா - னருமறையின்
...ந் சுவேதவந மெய்கண்டான் பேருளா
...ங் துரையெழுதி னான்.

...ளாம் மெய்கண்டான் முண்டகத்தா ளேபரவப்
...ரும் பாண்டிப் பெருமானார் - சொற்ற
...ாலை மான்கானீர் காட்டளவை யீட்டின்
...ப்பாலைக் கேளா முனம்.

..., அகண்டபரிபூரணமாய்ச் சொரூபத் தழுந்துதலாம்,
...விரிக்கிற் பெருகும். இவ்வாறு மகாவாக்கியமுறையாற்
...

...ரிய செஞ்சொற் சிவஞான போதத்
...பொருளி னமுதங் - கருதிற்
...யுமுண்மைப் பாண்டிப்பெருமாள் - பரிவாற்
...னபோதந் தெரியவுரை செய்தான்
... ளிசனுணரத் தான்.

சிவஞானபோதவுரை முற்றும் முற்றிற்று.



உ

## சிவஞானபோத விருத்தியுரை.

### சிவஞானமுனிவர் சிற்றுரையிற் கூறியுள்ள மெய்கண்டதேவர் தோத்திரம்.

சிறியவாடியிற் பெரியமால்வரைப் பொருள்செறிந்தாங்
கறிவுநூல்களின் முடிபெலாமகத்தடக் கியதோர்
நெறியினீடிய நிகழ்சிவஞான போதத்தைக்
குறியதிந்தமி ழாலுரைகுரவனைப் பணிவாம்.

நூலினை யறிந்தார்போன்று நுண்ணுணர் வுடையார்போன்று, மாலினைத் தவிர்ந்தார்போன்றும் வழியறிந் தடைந்தார் போன்று, மேலெனத் தத்தங்கோளே விதந்துரைக்கின்றார் நந்தி, சாலவன் றருளுநூலின் றலைப்படா வுள்ளத்தாரே.

மூன்று மலங்கெடுத்து மூலமா மப்பொருளுந்
தோன்ற வருளுந்தன் றொண்டர்க்கிங் - கான்றமைந்தோர்
கைகண்ட தன்றே கடன்ஞாலத் தெப்பொருட்கு
மெய்கண்ட தேவன் விரைத்தாள்.

